# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

நான்காம் மடலம் - மூன்றாம் பாகம்

## தெ - தௌ

Vol. IV - Part - III


பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2004

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

நான்காம் மடலம் - மூன்றாம் பாகம்

தெ - தௌ

Vol. IV - Part - III

பு.ஏ. இராமையா இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

மேற்பார்வையாளர்

முனைவர் சா. கிருட்டினமூர்த்தி
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட
இயக்கக வெளியீடு

2004

**செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித்திட்ட இயக்கக வெளியீடு - 12**

முதற் பதிப்பு : 2004

A Comprehensive Etymological Dictionary of the Tamil Language, Vol. IV, Part - III



விலை : உருபா 300/-

குறியீட்டெண் : **Colon No. P.J1-J, 314" K.M4**

வெளியிட்டோர் : செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

அச்சீடு : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

நூல் கிடைக்குமிடம் : உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்
சி.பி.டி. வளாகம், தரமணி
சென்னை - 600 113

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்
சி-48, முதல் தளம்,
தமிழ்நாட்டு வீட்டுவசதி வாரிய அலுவலக வளாகம்
அண்ணாநகர், சென்னை - 600 040

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி
# A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

**Vol. IV - Part - III**

**நான்காம் மடலம் - மூன்றாம் பாகம்**

**(தெ முதல் தெள வரை)**

## பதிப்புக் குழு

திரு. **பு.ஏ. இராமையா** இ.ஆ.ப.,
அரசு செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை

திரு. **தா. சந்திரசேகரன்** இ.ஆ.ப.,
அரசு சிறப்புச் செயலாளர்,
தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறை
மற்றும்
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)
செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

## மேற்பார்வையாளர்

முனைவர் **சா. கிருட்டினமூர்த்தி**
இயக்குநர், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்

## கூர்ந்தாய்வாளர்

புலவர் **த. சரவணத் தமிழன்**

## தொகுப்பாளர்கள்

திரு. **முத்து. பிச்சை**
முனைவர் **மு. கண்ணன்** (பகுதிப்பொறுப்பாளர்)
முனைவர் **பா. வெற்றிச்செல்வன்**
முனைவர் **ச. செந்திலாண்டவன்**
முனைவர் **இரா.கு. ஆல்துரை**
திரு. **கா. இளமுருகு**
திரு. **ச.கி. கணேசன்** (ஓவியர்)

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்ட இயக்ககம்

**ஜெ ஜெயலலிதா**

முதலமைச்சர்




தலைமைச் செயலகம்
சென்னை-600 009.

22.12.2004

## அணிந்துரை

'ஒண்டமிழ்த்தாய் சிலம்படியின் முன்னேற்றம் ஒவ்வொன்றும் உன் முன்னேற்றம்' என்னும் வைர வரியில் தமிழின் முன்னேற்றமே தமிழர் முன்னேற்றம் என்பதை எடுத்துக் காட்டினார் பாவேந்தர் பாரதிதாசன் அவர்கள்.

பாவேந்தர் பணித்தபடி, ஒல்லும் வகையில் எல்லாம் அந்த ஒண்டமிழை வளர்க்க உற்ற பணி புரியும் நற்றமிழ் அரசே தமிழ் நாடு அரசு.

காலத்தை வென்று நிற்கும் நம் கன்னித் தமிழை இந்திய அரசின் ஆட்சி மொழியாக ஆக்குவதற்கும், உயர்தனிச் செம்மொழியாம் தமிழ் மொழியின் ஒப்பற்ற இலக்கியமாகவும், உலக சிந்தனையின் உச்சமாகவும் விளங்கும் திருக்குறளைத் தேசிய இலக்கியமாக ஆக்குவதற்கும், இடையறா முயற்சிகளை எடுத்து வருகிறது எனது அரசு. அனைத்து மாணவரும் தமிழைப் பயில வேண்டும் என்பதற்காக மழலையர் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை அறிவியல் தமிழைக் கற்பிக்க ஏற்பாடு செய்ததும் எனது அரசே.

வளர்ந்து வரும் அறிவியலுக்கு ஈடு கொடுக்கும் வகையிலும், இலக்கண இலக்கிய மரபுகளைப் பேணிக் காக்கும் முறையிலும் மொழியின் சொல்வளத்தை அறிந்து கொள்வதும், பெருக்குவதும் இன்றியமையாததாகும். இப் பயன்பாட்டு நோக்கில் 'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி' (A comprehensive Etymological Dictionary of Tamil Language) நூல்களை உருவாக்கும் திட்டம் தோற்றுவிக்கப்பட்டது. இப் பணியின் தனித் தன்மை கருதி, பன்மொழிப் புலமையும், ஆய்வு நுட்பமும், தமிழ்ப் புலமையும், ஒருங்கே அமையப் பெற்றிருந்த மொழி ஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்களை இயக்குநராகக் கொண்டு இத் திட்டம் தொடங்கப்பட்டது. பைந்தமிழ் அறிஞர் பாவாணர் அவர்கள் 'தனித் தமிழ் இயக்கம்' கண்ட மறைத்திரு மறைமலை அடிகளார் வழியில் தமிழ் ஆய்ந்து தமிழே உலக முதன்மொழி என்பதை உலகுக்கு உணர்த்தியவர் ஆவார்.

அவர் தொடங்கி வைத்த செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டம், அருந்தமிழின் வளர்ச்சிக்கு அடிப்படையான தலையாய பணிகளில் ஒன்றாகும் என்பதைக் கருத்திற் கொண்டு எனது அரசு இத் திட்டத்திற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. இத் திட்டம் தொடங்கப்பட்ட நாளிலிருந்து 6 பகுதிகள் மட்டுமே முடிக்கப்பட்டிருந்தன. இவற்றில் 'அ' முதல் 'ஔ' வரையிலான எழுத்துக்களில் அமையும் சொற்கள் பற்றிய விளக்கங்கள் இடம் பெற்றுள்ளன. தற்பொழுது 'ச' வரிசையில் மூன்று பகுதிகளும் 'த' வரிசையில் மூன்று பகுதிகளும் ஆக மேலும் 6 பகுதிகள் முடிக்கப்பட்டு வெளியிடப் பெறுவதை அறிந்து நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன்.

இயல், இசை, நாடகம் எனும் முத்தமிழோடு இந்த யுகத்தின் நான்காவது தமிழாகிய 'அறிவியல் தமிழ்' வளர, அறிவியலைத் தமிழில் கூறுவதற்கான சொற்களைக் கண்டறிய வேண்டியது இன்றியமையாததாகும். அதற்காக ஏற்கெனவே தமிழில் உள்ள சொல்வளத்தை அறியவும், புழக்கத்தில் இல்லாத சொற்களைப் புதுப் பயன்பாட்டிற்குக் கொண்டு வரவும், புதிய சொற்களை உருவாக்கவும், சொற்களின் வேர்களை ஆராய்ந்து புதியன படைக்கவும் இன்றைய தமிழ் வளர்ச்சியின் உடனடித் தேவையை நிறைவு செய்வதாக செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகர முதலி நூல் மடலங்கள் அமைகின்றன.

இம் மடலங்கள் தமிழின் அழிவிலாச் சொத்தாக விளங்கும் என்பது உறுதி.

இப் பகுதிகள் வெளிவர அயராது உழைத்த அறிஞர் பெருமக்களையும், அலுவலர்களையும் நான் மனமாரப் பாராட்டுகிறேன்.

**வாழ்க தமிழ்!**
**வளர்க தமிழ்ப் பணி!**

**ஜெ ஜெயலலிதா**
**தமிழக முதலமைச்சர்**

மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர்

டாக்டர் செல்வி ஜெ ஜெயலலிதா



சி.வி. சண்முகம்
கல்வி மற்றும்
வணிக வரித்துறை அமைச்சர்



தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

## அணிந்துரை

"ஒரு மொழிக்குட்பட்ட சொற்களை ஆராயும் சொல்லாராய்ச்சியும் பல மொழிகளை ஒப்பு நோக்கும் மொழியாராய்ச்சியும் மேனாட்டாரிடமிருந்து நாம் அறிந்தவை.

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே (தொல்.சொல்.எச்.1)

என்று தொல்காப்பியர் காலத்திலேயே சொல்லாராய்ச்சியும் மொழியாராய்ச்சியும் ஓரளவு தமிழ்நாட்டிலிருந்ததேனும் விரிவான முறையிலும், நெறிப்பட்ட வகையிலும் சொன்னூலும் (Etymology), மொழிநூலும் (Philology) நாம் பெற்றது மேலையரிடமிருந்தே". இது, மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் அவர்கள் தம் சொல்லாராய்ச்சிக் கட்டுரைகள் என்ற நூலைச் சேலத்திலிருந்து 1948-இல் வெளியிட்டபோது, அந்நூலில் அவரே எழுதிய முகவுரை. ஆகப் பல்லாண்டுகளாகச் சொல்லாராய்ச்சியிலேயே தம்மை ஆட்படுத்திக் கொண்டு, நுணுகி நுணுகித் துருவித் துருவிப் பார்த்ததன் தெள்ளிய வெளிப்பாடுதான் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி. அதன் வாயிலாகத் தமிழின் சொல்வளத்தை நாம் அறிகின்றோம். அத்துடன் நில்லாது தொன்றுதொட்டு இன்று வரையுமுள்ள பண்பாடு, நாகரிகம், வரலாறு ஆகியவற்றையும் அறிய முடிகிறது.

தமிழ் பிறமொழியின் கலப்பில்லாமல் தனித்தியங்கும் ஆற்றலுடைய தன்னிகரில்லா மொழி என்று உலக மொழியறிஞர்களெல்லாம் ஒப்புக் கொள்கின்றனர். செந்தமிழின் நீண்ட நெடிய சொல்வள வரலாற்றில் சொல்லும் பொருளும் பெருகியுமுள்ளன; அருகியுமுள்ளன! வழக்கிழந்த சொற்களை மீட்பதற்கும், அனைத்துச் சொற்களையும் காப்பதற்கும் அகரமுதலிகள் இன்று வழிவகுக்கின்றன.

இலக்கியச் சொல்லாட்சிகள் முதலாக இன்றைய பேச்சு வழக்குச் சொல்லாட்சிகள் ஈறாக அனைத்தையும் உள்ளடக்கிச் சொற்களின் வடிவம், பொருள், பிறப்பு போன்றவை பற்றிய தேவையான செய்திகளுடன் விளக்கமுற உரைப்பவையாக இருப்பவையே செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் மடலங்கள்.

மொழிஞாயிறு தேவநேயப் பாவாணரின் நூற்றாண்டு விழா கண்ட நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய தலைமையில் அமைந்த அரசு, அவரின் தனித்தமிழ்ப் பற்றினைப் பேணிக் காத்திடவும், அவர் காட்டிய நெறிமுறைகளின்படி அகரமுதலி மடலங்கள் வெளிவரவும் ஆக்கமும் ஊக்கமும் அளித்து வருகிறது. தமிழகத்தை முன்னேற்றப் பாதையில் கொண்டு சென்று இந்தியாவிலேயே தலைசிறந்த முதன்மை மாநிலமாக மாற்றிடச் சூளுரைத்துச் செயற்பட்டு வரும் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களின் சீரிய வழிகாட்டுதல்படி தமிழக அரசு முனைந்து பீடுநடை போடுகின்றது.

'செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலியின் எஞ்சிய பகுதிகள் யாவும் நான்காண்டுக்கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப்படும்' எனச் சட்டப்பேரவையில் அறிவித்தபடி 'ச'கர மடலத்தின் 3 பகுதிகளும், 'த'கர மடலத்தின் 3 பகுதிகளும் இப்போது ஒருசேர வெளிவருவது, மிகவும் மகிழ்ச்சிக்குரியதாகும். முன் எப்போதும் இல்லாதவாறு 6 பகுதிகள் ஒருசேர முடிக்கப்பெற்று வெளியிடப்பெறுவது அருஞ்சாதனையே! அதற்கு முதற்காரணம் நம் **புரட்சித் தலைவி மாண்புமிகு முதலமைச்சர் அம்மா** அவர்களே என்பது மறுக்க முடியாத உண்மை. 6 பகுதிகள் சீரிய முறையில் வெளிவர அரும்பங்காற்றிய தமிழ் வளர்ச்சி - பண்பாடு மற்றும் அறநிலையத்துறைச் செயலாளர் திரு. பு.ஏ. இராமையா இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பொறுப்பு இயக்குநர் திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப., அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் மற்றும் அகரமுதலித் தொகுப்பாளர்களுக்கும் என்னுடைய பாராட்டுகள். இதேபோல மற்றப் பகுதிகளையும் விரைந்து முடித்து வெளியிடத் தொடர்ந்து பாடுபடுமாறு கேட்டுக்கொள்கிறேன்.

31.8.04

சென்னை

**சி.வி. சண்முகம்**
கல்வி மற்றும்
வணிக வரித்துறை அமைச்சர்

பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.,
அரசு செயலாளர்



தமிழ் வளர்ச்சி-பண்பாடு
(ம) அறநிலையத்துறை
தலைமைச் செயலகம்
சென்னை - 600 009

# அணிந்துரை

"கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே வாளொடு
முன்தோன்றி மூத்த குடி" (பு.வெ.மாலை)

என்று தமிழ்க்குடி பாராட்டப்பெறும். அவ்வகையில் எத்திசையும் புகழ்மணக்க இருந்த பெருந்தமிழணங்கின் சீரிளமைத்திறம் வியந்து தம்முடைய வாழ்நாள் பணியாகச் சொல்லாராய்ச்சியை மேற்கொண்டவர் மொழிஞாயிறு ஞா. தேவநேயப் பாவாணர் அவர்கள்.

முதல் மாந்தன் தோன்றிய இடம் குமரி; உலக முதன் மொழி தமிழ். என்ற கோட்பாட்டில் திளைத்து, அக்கோட்பாட்டின் அடிப்படையில் தம் ஆராய்ச்சியை அமைத்து முதன்மொழியாகிய தமிழின் சொற்பிறப்பாய்வைத் துருவித்துருவியாய்ந்து மிகத் துல்லியமாக வேர் விளக்கம் கண்டவர் பாவாணரே.

இப்பெருமகனாரைப் போலத் தனித்தமிழ் ஆய்வுக் கருத்துகளை இதுவரை எந்தவோர் அறிஞரும் வழங்கிடவில்லை; பெருஞ்சித்திரனார் கூறுவதைப்போலத் "தமிழ்த் துறைக்கு அவர் தொண்டு புதியது; தமிழர்க்கு அவர் கருத்துகள் மயக்கறுப்பன; மேனாட்டார்க்கு அவர் நூல்கள் வியப்பளிப்பன; அவர் எடுத்துக் கொண்ட முயற்சி அரியது. தொல்காப்பியர் காலத்திற்குப் பின் தமிழ் தன்னை நிலைப்படுத்திக் கொள்ளும் ஒட்டுமொத்த முயற்சிக்குப் பாவாணர் என்றே பெயரிடலாம்". இவ்வுரைக்கு ஏதும் மறுப்புரையுண்டோ?

**"கதிர்தரு ஒளியென மொழிதரு மலையே!**
**முதிர்முகி லெனவே வேர்பொழி விளைவே**
**தமிழ்ச்சுட ரணிதலைப் பாவா ணர்தான்**
**தமிழ்மகள் பெறுதவப் பேரறிவாளன்!**

வேர்ச்சொல் வாய்வின் வித்தகன்! மொழியின்
போர்ப்படைத் தலைவன்! புலமைப் புதையல்!
தலைவ! நீதரும் ஒளியே பாதை
விலைமதிப் பில்லா வெற்றியைத் தருமே!''

என்றொரு பாவலர் பாடியதற்கேற்பப் பாவாணர் பெரும்புகழ் பெற்ற அமுதப்படையல்!

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி 12 மடலங்களில் 31 தொகுதிகளாக வெளியிடத் திட்டமிடப்பட்டதாகும். கடந்த 28 ஆண்டுகளில் 6 தொகுதிகள் மட்டுமே வெளிவந்துள்ள நிலையில், சுணக்கமுற்றிருந்த அகரமுதலித் திட்டத்திற்கு மாண்புமிகு முதலமைச்சர் அவர்கள் புதுத்தெம்பு ஊட்டியதன்விளைவாய், எஞ்சிய 25 தொகுதிகளை நான்காண்டுக் கால வரம்பெல்லைக்குள் வெளிக்கொணரப் பணிகள் முடுக்கிவிடப்பட்டன. அதன் வெளிப்பாடே இப்போது 'ச' மற்றும் 'த' மடலங்களின் 6 தொகுதிகள் ஒருசேர வெளிவருகின்றன. இது ஓர் அரும்பெருஞ் செயல் என்றால் மிகையாகாது.

இத்தொகுதிகளில் காட்டப்பெறும் தமிழ்ச் சொற்களின் விரிவும் விளக்கமும் நம்மை வியப்பிலாழ்த்துகின்றன. எடுத்துக்காட்டிற்கு ஒன்றிரண்டினைக் குறிப்பிட விரும்புகிறேன்.

'ச'கர மடலத்தின் முதற்பகுதியில் (ச, சா) வரும் **'சக்கரம்'** என்ற சொல்லிற்கு 27 வகையான பொருள் விளக்கங்கள் தரப்பட்டுள்ளன. அதுமட்டுமல்லாது இலக்கிய மேற்கோள்களும் வேர் விளக்கமும் அருமையாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன.

**சருக்கு - சருக்கரம் - சக்கரம்** (வே.க. 239)

அதேபோல் **'சத்தம்'** என்ற சொல்லுக்கான விளக்கமும் அருமை.

சாத்து = பண்டங்களைக் கொண்டு விற்கும் வணிகர் கூட்டம். சாத்துவண்டிக்குக் கொடுக்கும் கூலி சாத்தம் எனப்பட்டது. வண்டிச்சாத்தம் = வண்டிக்கூலி. சாத்தம் - **சத்தம்** ஆயிற்று.

அடுத்து, இரண்டாவது தொகுதியில் (சி-சூ), 'சிலை' என்ற சொல்லிற்குக் காட்டப்பட்டுள்ள விளக்கம் அழகுற அமைந்துள்ளது. 'சீரகம்' என்ற சொல்லிற்குப் பொருள் - வேர் விளக்கம் - விரிவுப் பொருள் காட்டியிருப்பது திகைக்க வைக்கிறது.

**சீர் - சீரம் - சீரகம்**

உலகில் முதன்முதலாகச் சிறந்த முறையில் சமையல் தொழில் தொடங்கியதும் அதற்குச் சீரகத்தைப் பயன்படுத்தியதும் தமிழகமே! என்பதற்குச் சான்றுகள் பல உள.

"சிறுபிள்ளை இல்லா வீடும், சீரகம் இல்லாத கறியும் செவ்வையாயிரா" என்பது தொன்று தொட்டுவரும் பழமொழி.

சீரகக்கோரை, சீரகச்சம்பா, சீரகவள்ளி என்பன ஒப்புமை பற்றிப் பெயர்பெற்ற நிலைத்திணை வகைகள். பொன்னளவையிற் சீரகம் என்பது ஓர் அளவு.

**5 கடுகு = 1 சீரகம்; 5 சீரகம் = 1 நெல்**

**"அளவிற்கும் நிறையிற்கும் மொழிமுதலாகி**
**உளவெனப் பட்ட வொன்பதிற்றெழுத்தே**
**அவைதாம்**
**கசதப வென்றா நமவ வென்றா**
**அகர உகரமோ டவையென மொழிப"** **(தொல்.எழுத். 170)**

என்னும் தொல்காப்பிய எழுத்ததிகார நூற்பா உரையில் கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை என்று இளம்பூரணரும், 'கழஞ்சு, சீரகம், தொடி, பலம், நிறை, மா, வரை, அந்தை, இவை நிறை' என்று நச்சினார்க்கினியரும் கூறியிருத்தலையும் நோக்குக.

**செரி - செரியகம் - சீரகம்**

என்றுமாம். வடவர் மூலம் காட்டும் வகை. ஜீரக - ஜீரண; ஜ்ரு - ஜீரண, ஜ்ரூ - கிழமாக்கு, கட்டுக்குலை, கரை, செரிக்கச் செய். ஜ்ரு என்பது கிழ என்னும் தென்சொற்றிரிபே (வ. மொ. வ.153).

அடுத்து, மூன்றாம் தொகுதியில் (செ - சௌ) 'செம்பியன்' என்ற சொல்லின் பொருள் விளக்கம் சிறப்புடையதாயிருக்கின்றது. அதைப்போலச் 'செஞ்சம்' என்ற சொல்லுக்கு அளிக்கப்பட்டுள்ள பொருள் விளக்கமும் சிறப்பாயுள்ளது. செஞ்சு - செம்மை, செவ்வை, நிறைவு, செஞ்சு - செஞ்சம்.

அடுத்து, 'த்'கர மடலத்தின் முதற் தொகுதியில் (த, தா) 'தமிழ்' என்ற சொல்லுக்குக் காட்டப்பெற்றிருக்கும் விளக்கம் விரிவானதாகவும் பொருத்தமானதாகவும் நுட்பமானதாகவும் அமைந்துள்ளது. அதைப்போலத் 'தா' என்னும் சொல்லுக்கும் அருமையான விரிவான விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது, 'தா' என்ற சொல் தந்தை என்பதனையும் குறிக்கும் என்று நிறுவியிருப்பது ஆராய்ச்சியாளரின் சான்றாண்மையைக் காட்டுகிறது.

அதே மடலத்தின் இரண்டாவது தொகுதியில் (தி-தூ) 'திறம்' என்ற சொல்லுக்கும், 'துடி' என்ற சொல்லுக்கும் தரப்பட்டுள்ள விளக்கங்கள் பயனுடையவையாகும்.

மூன்றாவது தொகுதியில் (தெ-தௌ), 'தெரு' என்னும் சொல்லின்கீழ், முடுக்கு சிறுசந்து; சந்து தெருவின் கிளை; தெரு சிறுவீதி; மறுகு போக்குவரத்து மிகுந்த பெருந்தெரு அல்லது வீதி; ஆவணம் கடைத்தெரு; அகலுள் அகன்ற மறுகு; சாலை பெருவழி; சந்தி மூன்று தெருக்கள் கூடுமிடம்; சதுக்கம் நான்கு தெருக்கள் கூடுமிடும் என்ற வகையில் பதிவு செய்துள்ளமை பாராட்டுக் குரியதாகும்.

அடுத்து, 'தொல்காப்பியர் காலம்' என்னும் தலைப்பின்கீழ்க் காட்டப்பட்டுள்ள சான்றுகள் ஆய்வாளர்களுக்கு மிக்கப்பயனுடையனவாகும். இந்த ஆறு தொகுதிகளிலும் தேவையான சொற்களுக்குப் பொருத்தமான பட விளக்கங்கள் கொடுக்கப்பட்டிருப்பதும் அழகுக்கு அழகு சேர்ப்பதாயுள்ளது.

செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் திட்டப்பணிகள் விரைந்து நடைபெற பலவகையிலும் பெரிதும் ஆக்கமும் ஊக்கமும் அளித்துவரும் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கும், **மாண்புமிகு கல்வி அமைச்சர்** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன். அரசு அறிவித்தவண்ணம் 6 தொகுதிகளை ஒருசேர அணியமாக்கி வெளியிடும் பணியைச் சிரமேற்கொண்டு செவ்விய முறையில் வெளிவர அரும்பணியாற்றிய தமிழ் வளர்ச்சி பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசு சிறப்புச் செயலாளரும் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலித் **திட்டப்பொறுப்பு இயக்குநருமான திரு. தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,** அவர்களுக்கும், அகரமுதலி மேற்பார்வையாளராகச் செயற்பட்ட உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், அகரமுதலித் திட்டப் பணியாளர்கள் மற்றும் கூர்ந்தாய்வுப் புலமையாளர்களுக்கும் எனது மனமுவந்த பாராட்டுகள். பாராட்டுகளைப் படிக்கற்களாகக் கொண்டு தொடர்ந்து நன்கு உழைத்து எஞ்சிய தொகுதிகள் அனைத்தையும் அரசு விரும்பிய வண்ணம் வெளிக்கொணர வேண்டுமென விழைகிறேன்.

**சென்னை** | **பு.ஏ. இராமையா**

*23-10-2003* | அரசு செயலாளர்

தா. சந்திரசேகரன், இ.ஆ.ப.
இயக்குநர் (முழுக்கூடுதல் பொறுப்பு)



செந்தமிழ்ச் சொற்பிறப்பியல்
அகரமுதலித் திட்ட இயக்ககம்
சென்னை - 600 008

## பதிப்புரை

தமிழிலக்கியம் தென்னிந்திய மொழிகளின் இலக்கியக் காலத்தைக் காட்டிலும் பழைமையானது; வடபுல இலக்கியக் காலத்தோடு பொருந்தி நிற்பது; உலகத்தின் மிகப் பழைமையான இலக்கியங்களோடு ஒப்ப வைத்து நோக்கும் தன்மை சான்றது என்றாலும் அஃது எவ்வளவுக் காலப் பழைமையுடையதென்பது இதுகாறும் உணரப்படாமலேயே யுள்ளது. இக்காலப் பழைமையைக் காட்டுவதற்குரிய வரலாற்றுச் சான்றுகள் எதுவும் கிடைப்பதில்லை. தொல்பொருள் சான்றுகளும் கல்வெட்டுச் சான்றுகளும் தமிழின் பழைமையை ஈராயிரமாண்டுகள் வரை எடுத்துச் செல்கின்றன. அதற்குமேல் செந்தமிழின் தொல் பழைமையை இலக்கியச் சான்று கொண்டே அறியவியலும்; இன்னும் சிறப்பாகச் சொல்லப்புகின் 'மொழி' வழியாகவே அறியவொண்ணும்.

இத்தன்மையைத் தெற்றெனவும், தெளிவாகவும் அறிந்திருந்த மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர் சொல்லாராய்ச்சி மூலமாகவே தமிழின் பழைமையை விளக்கினார். மொழியாராய்ச்சி அதிலும் குறிப்பாகச்சொல்லாராய்ச்சிதான் தமிழின் தொன்மையான நிலையைக் காட்டுவதற்கு சிறந்த சான்றாகத் திகழ்கிறது. ஆகையால் சொல்லாராய்ச்சியை மொழி அகழ்வாராய்ச்சி என்று குறித்தார்.

இன்று கிடைக்கும் கழக இலக்கியங்களெல்லாம் இரண்டாயிரமாண்டுகளுக்குமேல் பழைமையானது என்றும், பழந்தமிழின் பண்பாட்டுப் பதிவாம் தொல்காப்பியம் ஈராயிரத்தைந் நூறாண்டிற்கு மேல் பழைமையானதென்றும் அறிஞர்கள் குறித்துள்ளனர். இவ்விலக்கியங்கள் யாவும் தொடக்க நிலையினதான இலக்கியங்களாக இல்லை. இவை நன்கு வளர்ந்தநிலை இலக்கியங்களாகவே இருக்கின்றன. அவ்வாறாயின் இவற்றிற்கு முன் பெருந்தொகையினவான இலக்கிய இலக்கணங்கள் இம்மொழியில் இருந்திருக்க வேண்டும்.

அவற்றின் படிநிலை வளர்ச்சியாகத்தான் கொள்ள வேண்டும். இன்று கிடைக்கும் இலக்கிய இலக்கணங்களின் காலத்திற்கு முன்பு பன்னெடுங்காலமாக இலக்கிய இலக்கணங்கள் இருந்திருக்க வேண்டும். அதற்குமுன் பல நூறு ஆண்டுகள் தமிழ் வெறும் பேச்சு மொழியாக இருந்திருக்க வேண்டும். அந்தப் பழங்காலத்துத் தமிழின் இயல்பான நிலையை அறிவதற்குப் பெருமளவில் உதவுவது பாவாணர் காட்டும் சுட்டடிக் கொள்கை வழியிலான வேர்ச்சொற்களேயாகும்.

வண்ணனை மொழியியலடிப்படையில் வேர் காண்பது சொல்லின் பகுதிவரைதான் செல்லமுடியும். அதற்குமேல் வேர்மூலம் காண்பதற்குத் தேவநேயரின் சுட்டடிக் கொள்கையால் மாத்திரமே இயலும்.

தெய்வம் என்னும் சொல்லைத் தெய் + அம் என்ற அளவில் பிரிக்கலாம். இதற்குமேல் வேர் சொல்வதற்கு வண்ணனை மொழியியலில் வழியில்லை. ஆனால் மொழிஞாயிறு தேவநேயப் பாவாணர், தெய்வம் என்னும் சொல் 'தீ' என்னும் சொல்லிலிருந்து பிறந்தது என்று காட்டி,

| | | |
|---|---|---|
| தீதல் | = | எரிதல், கருகுதல் |
| தீத்தல் | = | எரித்தல், கருக்குதல் |
| தீ → தீய் → தீய்தல் | = | தீதல், தீத்தல் = தீய்த்தல் |
| தீ → தீவு → தீவம் | = | விளக்கு |

இனி,

தேய் → தீய் → தீ என்றுமாம்.

தேய் → தேயு = நெருப்பு (பிங்.)

தேய் → தேய்வு → தேவு = 1. தெய்வம் (பிங்.) 2. தெய்வத் தன்மை.

தேவு → தேவன் = கடவுள், அரசன், கணவன், தலைவன்.

தேவி = தெய்வ மகள், அரசி, தலைவி.

தேய்வு → தெய்வு → தெய்வம் என்று விளக்குவார்.

பண்டையுலகில் நெருப்பே தெய்வமாகவும் தெய்வ வடிவங்களாகவும் கொள்ளப் பெற்றதென்று பழங்காலத்துப் பண்பாட்டு நிலையைச் சுட்டி அதற்குச்

சுள் → சுர் → சுரம் → சுரன் = தேவன்

என்பதைச் சான்றாகக் காட்டுவார்.

குறிஞ்சி மக்கள் முருகனைச் 'சேயோன்' (சிவந்தவன்) என்றது நெருப்பு வடிவம் பற்றியே.

GK. theos, L. deus என்று ஒப்புநோக்கு காட்டிச் செல்வார். சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி தெய்வம் என்னுஞ் சொல் 'தைவ' என்னுஞ் சொல்லிலிருந்து வந்ததென எளிதாய் மூலங்காட்டி விட்டது.

திராவிட மொழிகளான மலையாளம் (தெய்வம், தெய்யம்), தெலுங்கு (தேவுடு), கன்னடம் (தேவரு) போன்ற மொழிகளில் இச்சொல் நன்கு வழக்கூன்றியுள்ளது. இச்சொல்லினடியாய்ப் பிறந்த கூட்டுச் சொற்களும் வழக்காற்றிலுள்ளன. தமிழில் பெருவழக்காய்ப் புழங்குமிச் சொல், தன் இன மொழிகளில் பரவலாய்க் காணுமிச்சொல் வடமொழிச் சொல்லான 'தைவ' என்பதனின்று வந்ததெனக் கூறின் எங்ஙனம் ஒப்பமுடியும். பாவாணர் ஆய்வு நெறியின்படி தமிழ் ஒரு இயன்மொழியாய் இருப்பதால் தமிழில் தான் இவ்வாறாக நுணுகி வேர் காண்பது இயலும்.

தமிழ் பல வளங்களிலும் தனித்தன்மையுடையது. இத்தனித் தன்மைகளைப் பல சான்றோர்கள் தம் நுண்மாண் நுழைபுலத்தால் கண்டறிந்தியம்பியுள்ளனர். இவை அனைத்திலும் தனித்தன்மையுடையதாய்த் தேவநேயரின் ஆய்வு திகழ்கின்றது. தம் வாணாள் முழுமையும் மொழித் திறத்தின் முட்டறுக்கும் பெரும் பணியிலீடுபட்டிருந்த மொழிஞாயிறு பாவாணர் தமிழ் திராவிடத்திற்குத் தாயாயிருக்குந் தன்மையையும், ஆரியத்திற்கு மூலமாயிருக்குந் தன்மையையும் விளக்கிக்காட்டி ஞாலமுதன்மொழி தமிழே என நிறுவிச் சென்றார்.

பழைமைக்குப் பழைமையாய் மட்டுமின்றிப் புதுமைக்கும் புதுமையாய் விளங்கும் பொலிவு செந்தமிழின் தனித் தன்மையாகும். பல்வேறு காலக் கட்டங்களில் பல்வேறு தாக்குதல்களுக்குள்ளான போதிலும் இன்றளவும் இளமை குன்றாமலிருப்பது நந்தமிழின் நனி சிறந்த தனித்தன்மையாகும். ஆகையால் தமிழ்மொழியின் சிறப்புகளை ஆராய்வோர் அதன் இன்றைய நிலையையும் ஆராய வேண்டிய கட்டாயத்திற்குள்ளாவது தவிர்க்கவியலாததாகும். இன்றைய வழக்கில் பல சொற்கள் மருவி வந்துள்ளன; பல சொற்கள் தம் வடிவுசிதையா மூலத்தோடு வழக்கிலுள்ளன. அவையனைத்தையும் உள்ளடக்கி ஆய்வு செய்வதே பாவாணரின் ஆய்வு நோக்கமாகும்.

தமிழின் தனித்தன்மையை ஆய்வு செய்வதற்கென்றே இறைவன் என்னைப் படைத்தா னென்று பறைசாற்றிக் கூறிய இப்பெருந்தகையின் பெயருக்குரிய வேர் விளக்கத்தைத் தேவநேயர் என்னும் உருப்படியிற் காணலாம்.

அப்பெருந்தகை வடித்தளித்த வழித் தடத்தில் செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலியின் அடுத்தடுத்த பகுதிகள் அணி வகுத்து வருகின்றன. அந்த வரிசையில் தெ முதல் தௌ வரையிலான இப்பகுதி வெளி வருவதற்குத் துணையாய் நின்றோர் பலர். அகரமுதலித் திட்டம் சிறப்பாகச் செயற்படவும், 6 தொகுதிகள் ஒருசேர வெளிவரவும் முழுமுதற் காரணமாய் விளங்கும் **மாண்புமிகு முதலமைச்சர்** அவர்களுக்கும் அப்பெருந்தகையின் தானைத் தளபதியாய் நின்றியங்கி வழி நடாத்திச் செல்லும் **மாண்புமிகு கல்வியமைச்சர் செ. செம்மலை** அவர்களுக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்ளக் கடமைப்பட்டுள்ளேன். அகரமுதலித் திட்டத்திற்குப் பலவகையிலும் அறிவார்ந்த அறிவுரைகள் வழங்கிப் பணிகளை முடுக்கிவிட்ட எம்துறையின் **செயலர் திருமிகு பு.ஏ. இராமையா** இ.ஆ.ப., அவர்களுக்கும் அகரமுதலி மேற்பார்வையாளராகச் செயற்பட்டு ஒத்துழைப்பு நல்கிய உலகத் தமிழாராய்ச்சி நிறுவன இயக்குநர் முனைவர் சா. கிருட்டினமூர்த்தி அவர்களுக்கும், கூர்ந்தாய்வுப் புலமையாளர்களான முனைவர் ந. அரணமுறுவல் மற்றும் புலவர் இறைக்குருவனார் ஆகியோர்க்கும் அயராதுழைத்த அகரமுதலித் திட்டத் தொகுப்பாளர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சென்னை **தா. சந்திரசேகரன்**

**15-10-2003**

# செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் பேரகரமுதலி

## A COMPREHENSIVE ETYMOLOGICAL DICTIONARY OF THE TAMIL LANGUAGE

# தெ

**தெ** *te*, 'த்' என்ற மெய்யெழுத்தும் 'எ' என்ற உயிரெழுத்தும் கூடிய கூட்டெழுத்து; the syllable formed by adding the short vowel 'e' to the consonant 't'.

*[த் + எ - தெ]*

**தெக்கணம்**[1] *tekkaṇam*, பெ. (n.) 1. தெற்கு; south. "தெக்கண மலையகச் செழுஞ்சே றாடி" *(சிலப். 14:81)*. 2. வலப்பக்கம் (சூடா.); right side.

ம. தெண்ண

*[தக்கு + அணம் → தக்கணம். தக்கு = தாழ்வு. தக்கணம் → தெக்கணம்]*

த. தக்கணம் → Skt. dakṣina

**தெக்கணம்**[2] *tekkaṇam*, பெ. (n.) இந்தியாவில் விந்தியத்தின் தென்பகுதி; southern part of India. "தெக்கணமும் அதிற் சிறந்த திராவிடநல் திருநாடும்" *(மனோன். வாழ்.)*.

*[தக்கணம் → தெக்கணம்]*



**தெக்கணாம்பட்டி** *tekkaṇām-patti*, பெ. (n.) தெக்கணாமட்டி பார்க்க; see *tekkaṇā-matti*.

**தெக்கணாமட்டி** *tekkaṇā-matti*, பெ. (n.) 1. மூடன்; simpleton, fool. 2. சோம்பேறி; lazy fellow.

*[தெக்கணம் + மட்டி. தக்கு = தாழ்வு, தக்கணம் → தெக்கணம். மட்டி = மடையன், மூடன்]*

**தெக்கணாமுட்டி** *tekkaṇā-mutti*, பெ. (n.) தெக்கணாமட்டி பார்க்க; see *tekkaṇā-matti*.

*[தெக்கணாமட்டி → தெக்கணாமுட்டி]*

**தெக்கம்பாக்கு** *tekkam-pākku*, பெ. (n.) இளம்பிஞ்சைப் பக்குவம் செய்த பாக்கு; seasoned areca-nut.

*[தெக்கம் + பாக்கு. தக்கு - தாழ்வு, இளமை. தக்கு → தக்கம் → தெக்கம்]*

**தெக்கித்திநோய்** *tekkitti-nōy*, பெ. (n.) தெற்கத்தி நோய் பார்க்க; see *teṟkatti-nōy*.

*[தெற்கத்திநோய் → தெக்கித்திநோய் (கொ.வ.)]*

**தெக்கு**[1]**-தல்** *tekku-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. கொள்ளுதல்; to receive, take. "தெக்குநீர்த் திரைகள் மோதும்" *(தேவா. 839, 2)*. 2. கொழித்தல்; to winnow. தெக்கிய மாவைத் தின்னலாம் (உ.வ.).

ம. தெக்குக; க. தெகெ, தெகு; தெ. திடியு, திடுசு; து. தெகுனி; கொலா. திப்; நா. திவ்வ

*[தக்கு → தெக்கு. தக்கு → வளைதல், தாழ்தல்]*

**தெக்கு**[2] *tekku-*, பெ. (n.) தெற்கு (பிங்.); south. "சலவரைத் தெக்கா நெறியே போக்குவிக்குஞ் செல்வன்" *(திவ்.பெரியாழ். 4, 2, 3)*.

ம. தெக்கு; க. தெங்க, தெங்கன், தெங்கு; து. தெனுகாயி, தென்காயி; குட. தெக்கி

*[தெற்கு → தெக்கு]*

**தெகட்டாதமூலி** *tegaṭṭāda-mūli,* பெ. (n.) *பிரமியிலை;* leaf of hissop plant; diabetis plant *(சா.அக.).*

*[தெகட்டாத + மூலி. திகட்டு → தெகட்டு]*

**தெகிட்டு** *tegiṭṭu,* பெ. (n.) *1.* தெவிட்டுகை; surfeit. *2.* கக்கலுணர்வு *(வின்.);* vomitting sensation.

ம. தெகிட்டு

*[திகட்டு → தெகட்டு → தெகிட்டு]*

**தெகிடி** *tegiḍi,* பெ. (n.) *1.* சூது விளையாட்டு *வகை;* a game in gambling. *2. புரட்டு;* fraud, deception.

*[நெகிழி → நெகிடி → தெகிடி]*

**தெகிழ்-தல்** *tegil-,* 3 செ.கு.வி. (v.i.) *1.* விளங்குதல்; to be manifest; to shine. "தெகிழ்ந்த மாதவத் தேசினான்" *(விநாயகபு. 59:29).* 2. வாய்விடுதல்; to blossom, open, as the mouth. "தேங்கயத் தணிமலர் தெகிழ்ந்த நாற்றமும்" *(சீவக. 1440).* 3. நிறைதல் *(திவா.);* to be full. "துணர் தெகிழ்ந்துக்க நனையுள்" *(மாறனலங். 261, உதா. 651).*

*[திகழ் → தெகிழ்]*

**தெகிள்**[1] *tegil,* பெ. (n.) *புனலிக் கொடி;* hog creeper *(சா.அக.).*

மறுவ. கொடிப்புன்கு

**தெகிள்**[2] *tegil,* பெ. (n.) *மென்மை;* soft.

*[நெகிள் → தெகிள்]*

**தெகிள்உளி** *tegil-uli,* பெ. (n.) மென்மையான குழைவு உளி; chisel which is soft.

*[தெகிள் + உளி]*



**தெகுட்டல்** *teguṭṭal,* பெ. (n.) *மரத்தில் தோன்றும் குறைபாடு;* defect appears in the tree.

**தெகுட்டி** *teguṭṭi,* பெ. (n.) தேட்கொடுக்கி; scorpion sting plant *(சா.அக.).*

*[தேள்கொடுக்கி → தேகொடுக்கி. தேகொடுக்கி → தெகுட்டி (கொ.வ.)]*

**தெகுட்டிகை** *teguṭṭigai,* பெ. (n.) தெகுட்டி பார்க்க; see *teguṭṭi (சா.அக.).*

*[தெகுட்டி → தெகுட்டிகை]*

**தெகுட்டு-தல்** *teguṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தெவிட்டுதல்; to cloy, glut. *"மாளாமையாலுந் தெகுட்டாமையாலும்" (ஈடு. 6.7, ஜீ).*

*[தெவிட்டு → தெகுட்டு-]*

**தெகுடாடு-தல்** *teguḍāḍu-,* 5 செ.கு.வி. (v.i.) திண்டாடுதல்; to struggle or strive hard. *"தெகுடாடா நிற்கிற என்னாலே" (திவ். திருவாய். 7, 9, 10, இருபத்து நாலாயிரப்படி).*

*[தெகிடி → தெகுடி → தெகுடு. தெகுடு + ஆடு]*

**தெகுப்பூச்சி** *tegu-p-pūcci,* பெ. (n.) தெள்ளுப் பூச்சி; small wingless jumping insect feeding on human and other blood, flea *(சா.அக.).*

*[தெகு + பூச்சி]*

**தெகுள்-தல் (தெகுடல்)** *tekul-,* 12 செ.கு.வி. (v.i.) *1.* நிறைதல் *(பிங்.);* to be full. *2.* பெருகுதல் *(யாழ்.அக.);* to increase, overflow.

*[திகழ் → தெகுள்]*

**தெகுளம்** *tegulam,* பெ. (n.) *1.* நிறைவு; fullness. *2.* பெருக்கம்; abundance *(சா.அக.).*

*[தெகுள் → தெகுளம்]*

**தெகுளவம்** *tegulavam,* பெ. (n.) மருதுமேற் புல்லுருவி; a parasite grown on murdah tree *(சா.அக.).*

**தெங்கங்காய்** *tengaṅ-gāy,* பெ. (n.) தேங்காய்; coconut. "தெங்கங்காய் போலத் திரண்டுருண்ட பைங்கூந்தல்" (யாப்.வி. 95, பக்.372).

ம. தெக்கன்காய், தெங்ஙன்காய்; பட. தெங்கெ

*[தென் → தென்கு → தெங்கு. தெங்கு + அம் + காய்]*

**தெங்கணம்** *teṅganam,* பெ. (n.) ஒரு நாடு; a country.

*[தக்கணம் → தங்கணம் → தெங்கணம்]*

**தெங்கநாடு** *teṅga-nāḍu,* பெ. (n.) கடல் கொண்ட தமிழ்நிலப்பகுதியுள் ஒன்று; an ancient province in the Tamil land, said to have been submerged by the sea. "ஏழ்தெங்க நாடும்" *(சிலப். 8: 1, உரை).*

*[தெங்கு + நாடு]*

**தெங்கம்** *teṅgam,* பெ. (n.) தெங்கு[1],1 பார்க்க; see *teṅgu[1],1.* "தெங்கங்களு நெடும் பெண்ணையும் பழம்வீழ் மணற் படப்பை" *(தேவா. 846, 3).*

*[தெங்கு → தெங்கம்]*

**தெங்கம்பழம்** *teṅgam-paḻam,* பெ. (n.) தென்னை நெற்று; mature coconut. "நாய்பெற்ற தெங்கம்பழம்" *(பழ.).*

*[தெங்கு + பழம்]*

**தெங்கிட்டம்** *teṅgiṭṭam,* பெ. (n.) தெகுட்டி பார்க்க; see *teguṭṭi.*

*[தேள்கொடுக்கி → தேங்கொடுக்கி → தெகுட்டி. தெகுட்டி → தெங்குட்டி → தெங்கிட்டி. தெங்கிட்டி → தெங்கிட்டம்]*

**தெங்கிதம்** *teṅgidam,* பெ. (n.) தெகுட்டி பார்க்க; see *teguṭṭi (சா.அக.).*

**தெங்கின்எண்ணெய்** *teṅgin-eṇṇey,* பெ. (n.) தேங்காயெண்ணெய் பார்க்க; see *teṅgā-y-eṇṇey (சா.அக.).*

*[தெங்கு + இன் + எண்ணெய். 'இன்' வேற்றுமையுருபு]*

**தெங்கின்கற்கண்டு** *teṅgiṉ-kaṟkaṇḍu,* பெ. (n.) தென்னஞ் சாற்றினின்று காய்ச்சி இறக்கும் கற்கண்டு; sugar candy prepared from the sweet sap or juice of coconut tree.

*[தெங்கு + இன் + கற்கண்டு]*

**தெங்கின்குருத்து** *teṅgiṉ-kuruttu,* பெ. (n.) தென்னையின் குருத்து; tender leaves or shoot of coconut palm *(சா.அக.).*

*[தெங்கு + இன் + குருத்து]*

**தெங்கின்மது** *teṅgiṉ-madu,* பெ. (n.) தென்னங் கள் பார்க்க; see *teṉṉaṅ-kaḷ (சா.அக.)*

*[தெங்கு + இன் + மது]*

**தெங்கின்வெல்லம்** *teṅgiṉ-vellam,* பெ. (n.) தென்னஞ் சாற்றினின்று காய்ச்சி உண்டாக்கும் வெல்லம்; jaggery prepared from the juice or sap of coconut palm *(சா.அக.).*

*[தெங்கு + இன் + வெல்லம். 'இன்' வேற்றுமையுருபு]*

**தெங்கு**[1] *teṅgu,* பெ. (n.) 1. தென்னை; coconut-palm. "தெங்கி னிளநீ ருதிர்க்கும் வளமிகு நன்னாடு" *(புறநா. 29).* தேன் வார்த்து வளர்த்தாலும் காஞ்சிரம் தெங்காகுமோ *(பழ.).* 2. போர்ச் சேவலின் தன்மை குறிக்கும் குழூஉக் குறியுளொன்று; quality of a fighting cock, a slang term. "தெங்குக்குத் தெங்கு வெல்லுமெனக் கோழிகளின் நிறமறிந்து விடுதல்" *(பு.வெ. 12, வென்றிப். 6, உரை).*

ம. தெங்கு; க., து. தெங்கு; குட. தெங்கிமர; பட. தெங்கெ மொர

*[தில் → தெல் → தென். தென் → தென்னை = பெரும்பாலும் கோணி வளரும் மரம். தென் → தென்கு → தெங்கு (வே.க. 144)]*

**தெங்கு**[2] *teṅgu,* பெ. (n.) தித்திப்பு; sweetness.

*[தீம் → தெம் + கு - தெம்கு → தெங்கு]*

**தெங்கூர்** *teṅgūr,* பெ. (n.) தஞ்சாவூர் மாவட்டத்திலுள்ள ஓர் ஊர்; a village in Tanjavur Dt. "வித்தன் றாழ் பொழில் றெங்கூர் வெள்ளியம் குன்றமர்ந்தாரே" *(தேவா. 229-2).* ஞான சம்பந்தராலும், திருநாவுக்கரசராலும் பாடல் பெற்ற ஊர். இவ்வூரை மர அடிப் படையிலான ஊர் என்று இரா.பி. சேதுப்பிள்ளை குறிப்பிடுகின்றார்.

*[தெங்கு + ஊர்]*

**தெங்கெண்ணெய்** *teṅgeṇṇey,* பெ. (n.) தேங்காயெண்ணெய் பார்க்க; see *teṅgā-y-eṇṇai (சா.அக.).*

பட. தெங்கெண்ணெ

*[தெங்கு + எண்ணெய்]*

**தெச்சி** *tecci,* பெ. (n.) தெட்சி பார்க்க; see *teṭci.*

ம. தெச்சி

*[தெட்சி → தெச்சி]*

**தெசலம்** *tešalam,* பெ. (n.) தெசவம் பார்க்க; see *tešavam.*

*[தெசவம் → தெசலம்]*

**தெசவம்** *tešavam,* பெ. (n.) *மாமரம் (மலை.);* mango tree.

**தெசனி** *tešaṉi,* பெ. (n.) 1. மஞ்சள்; country turmeric. 2. பெருங்குரும்பை; browstring hemp.

**தெசி-த்தல்** *teši-,* 4 செ.குன்றாவி. (v.t.) கைவிடுதல்; to abandon. "சிகை நூறெசித்துச் செபங்கள் பண்ணி" *(பாடு. 71, சந்நியாசம், 1).*

*[தெளி → தெசி]*

**தெட்சி** *teṭci,* பெ. (n.) வெட்சி; scarlet ixora.

*[தெள் + சி - தெள்சி → தெட்சி]*

**தெட்ட** *teṭṭa,* பெஎ. (adj.) 1. *முற்றிய;* ripe, mellow. "தெட்டபழஞ் சிதைந்து" *(திவ். பெரியதி. 3,4,8).* 2. தெளிவான; clear, plain. "மால்கரி தெட்ட மதப்பசை கட்டின" *(கம்பரா. சரபங்க.8).*

**தெட்டங்காசச்செடி** *teṭṭaṅ-kāša-c-ceḍi,* பெ. (n.) ஒட்டுப்புல்; sticking grass *(சா.அக.).*

மறுவ. நடந்தாரைத் தொடர்ந்தான்

**தெட்டத்தெளிய** *teṭṭa-t-teḷiya,* வி.அ. (adv.) தெள்ளத்தெளிவாக; plainly, obviously *(யாழ்ப்.).*

**தெட்டத்தெளிவு** *teṭṭa-t-teḷivu,* பெ. (n.) மிகத்தெளிவு; plainly, obviously *(சா.அக.).*

*[தெள்ளத் தெளிவு → தெட்டத் தெளிவு]*

**தெட்டத்தெறி-த்தல்** *teṭṭa-t-teṟi-,* 4 செ.கு.வி. (v.i.) இரண்டாய் முறிதல்; to break asunder snap in twain.

*[தெட்ட + தெறி-.]*

**தெட்டத்தெறிப்பான்** *teṭṭa-t-teṟippāṉ,* பெ. (n.) ஒரு வசைச் சொல்; a term of abuse.

*[தெட்டத்தெறி → தெட்டத்தெறிப்பான்]*

**தெட்டரசர்** *teṭṭarasar,* பெ. (n.) வெல்லப்பட்ட மன்னர்; vanquished kings. "பூம்புயத்துத் தெட்டரச கூட்டந் திறைகொணர வீற்றிருந்தான்" *(பாரத. வெண். 209).*

*[தெட்டு + அரசர்]*

**தெட்டல்** *teṭṭal,* பெ. (n.) 1. கொள்ளையிடல் *(யாழ்.அக.);* misappropriation. 2. *ஏமாற்றுகை;* trick, fraud, deception.

*[தெட்டு → தெட்டல்]*

**தெட்டவர்** *teṭṭavar,* பெ. (n.) தெளிந்தவர்; clear sighted persons, men of unclouded vision. "பரமஞானம் போய்த் தெட்டவ ரல்லரேல்" *(கம்பரா. மந்திர. 20).*

**தெட்டி**[1] *teṭṭi,* பெ. (n.) வஞ்சிப்பவள்-ன்; deceitful person. "அணைமீதிற்றுயில் பொழுதே தெட்டிக ளவரேவற் செய்து" *(திருப்பு. 777).* தெட்டிப் பறிப்பாரை எட்டிப் பறிப்பான் *(பழ.).* 2. யானை *(அக.நி.);* elephant.

**தெட்டி**[2] *teṭṭi,* பெ. (n.) வணிகன் *(அக.நி.);* merchant.

*[செட்டி → தெட்டி]*

**தெட்டு**[1]**-தல்** *teṭṭu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. வஞ்சித்தல்; to deceive, cheat, defraud, swindle. "தெட்டிப் பொருள் பறித்த பாவம்" *(பணவிடு. 340).* 2. பறித்தல்; snatch.

**தெட்டு**[2] *teṭṭu,* பெ. (n.) 1. வஞ்சனை; deception, cheating. "தெட்டிலே வலியமட மாதர்வாய் வெட்டிலே" *(தாயுமலைவளர். 2).* 2. பறிக்கை *(யாழ்.அக.);* snatching by force.

**தெட்டு**[3]**-தல்** *teṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) நிறைதல்; to be sufficient.

*[தெள் → தெட்டு]*

**தெட்டு**[4] *teṭṭu,* பெ. (n.) யானைக் கணையம் *(வின்.);* wooden partition between two elephants to prevent their fighting.

**தெட்டுண்(ணு)-தல்** *teṭṭuṇ-,* 13 செ.குன்றாவி. (v.t.) கவர்ந்துண்ணப்படுதல்; to be satched and devoured. "தெட்டுண்டபோன் முழுத் திங்களென் றேக்கறும் . . . செம்பாம்பு" *(குமர. பிர. முத்துக். பிள்ளை. 54).*

*[தெட்டு + உண்ணு-.]*

**தெட்பம்** *tetpam,* பெ. (n.) *1.* தெளிவு *(யாழ்.அக.);* clearness. *2.* மூதறிவு *(திவா.);* ripe wisdom. *3.* முதிர்ச்சி *(பிங்.);* maturity, ripeness. *4.* மனத்தேற்றம்; presence of mind, courage. "சயந்த ணங்க ணிருந்தனன் றெட்ப மெய்தி *(கந்தபு. இந்திரன்கரந். 32).*

*[தெள் → தெண் → தெட்பு → தெட்பம்]*

**தெடாரி** *tedāri,* பெ. (n.) கிணைப்பறை; a drum of tabor of the agricultural tract. "தெடாரித் தெண்கண் டெளிர்ப்ப வொற்றி" *(புறநா. 368).*

*[தடாரி → தெடாரி]*

**தெண்** *ten,* பெ. (n.) தெளிவு; clarity.

*[தெள் → தெண்]*

**தெண்டக்குற்றம்** *tenda-k-kurram,* பெ. (n.) தெண்டந்தீர்வை பார்க்க; see *tendan-tīrvai* (தெ.க.தொ. 335).

*[தெண்டம் + குற்றம். தண்டம் → தெண்டம் (கொ.வ.)]*

**தெண்டகை** *tendagai,* பெ. (n.) *1.* நெருக்கிடை; pressure, urgency. *2.* தேவை; necessity.

*[தெள் → தெண்டு → தெண்டகை]*

**தெண்டகைக்குத்தேவை** *tendagaikku-t-tēvai,* பெ. (n.) வேண்டாவெறுப்பு *(வின்.);* un willingness.

*[தெண்டகைக்கு + தேவை]*

**தெண்டந்தீர்வை** *tendan-tīrvai,* பெ. (n.) ஒறுப்பாக விதிக்கும் வரி; penal tax. "தெண்டந் தீர்வை கொடுத்தபின்" *(கட்டபொம்மு. ப.28).*

*[தெண்டம் + தீர்வை. தண்டு → தண்டம் → தெண்டம்]*

**தெண்டம்** *tendam,* பெ. (n.) தண்டம்; punishment, penalty. "தெண்டங் கொள்ளா வறப்பய னருத்துவாரின்" *(இரகு. ஆற்று. 13).*

ம. தெண்டம்; Skt. danda

*[தண்டு → தண்டம் → தெண்டம் (கொ.வ.)]*

**தெண்டல்தெரிசல்** *tendal-terišal,* பெ. (n.) தெளிவு இல்லாமை; not clear. "தெண்டல் தெரிசலாகக் கிடக்கிறது *(நெல்லை).*

*[தெண்டல் + தெரிசல்]*

**தெண்டன்** *tendan,* பெ. (n.) தண்டன்; obeisance. "எதிர்தெண்டனாக விழுந்தெழுந்து" *(சேக்கிழார் பு. 429).*

*[தண்டன் → தெண்டன் (கொ.வ.)]*

**தெண்டனிடு-தல்** *tendan-idu-,* 18 செ.குன்றாவி. (v.t.) தண்டனிடுதல்; to do homage by prostration. "அடியேன் றெண்டனிட்ட விண்ணப்பம்" *(தனிப்பா. i, 401, 19).*

ம. தெண்டனிடுக

*[தெண்டன் + இடு-. தண்டன் → தெண்டன் (கொ.வ.)]*



**தெண்டனை** *tendanai,* பெ. (n.) தண்டனை; punishment.

*[தண்டனை → தெண்டனை (கொ.வ.)]*

**தெண்டாயுதம்** *tendāyudam,* பெ. (n.) கதுவாழை; fissured plantain *(சா.அக.).*

*[தண்டு → தெண்டு + ஆயுதம்]*

**தெண்டி[1]-த்தல்** *tendi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* ஒறுத்தல்; to chastise, punish. "தெலுங்கப்ப நாரணன் றெண்டிக்க" *(தனிப்பா. i, 83, 165).* *2.* வற்புறுத்துதல்; to insist, press.

ம. தெண்டிக்குக

*[தண்டி → தெண்டி]*

**தெண்டி[2]-த்தல்** *tendi-,* 4 செ.கு.வி (v.i.) வருந்தி முயலுதல் *(யாழ்.அக.);* to make efforts, take pains.

*[தண்டி → தெண்டி]*

**தெண்டி**[3] *teṇḍi,* பெ. (n.) இரப்பாளி (இ.வ.); beggar.

ம. தெண்டி

*[தண்டு → தெண்டு. தெண்டு → தெண்டி]*

**தெண்டிக்கரைசல்** *teṇḍi-k-karaišal,* பெ. (n.) தெற்கிலிருந்து வடக்கு நோக்கிச் செல்லும் கரையையொட்டிய நீரோட்டம் (மீனவ.); current runs from the south to north direction and near the bank.

*[தெண்டி + கரைசல்]*

**தெண்டிதெம்மாஒள்ளி** *teṇḍi-temmā-oḷḷi,* பெ. (n.) தென்மேற்காய்ச் செல்லும் நீரோட்டம் (மீனவ.); current which runs through south west direction.

*[தென் + தி - தென்தி → தென்றி → தெண்டி. தெண்டி + தெம்மா + ஒள்ளி. தெண்டி - தெற்கு.*

*தெற்கு + மேற்கு - தென்மேற்கு → தெம்மாக்கு → தெம்மா.*

*தெம்மா - மோனை நோக்கி வந்த எதிரிடை மரபிணை மொழி.*

*நல்லி → நள்ளி → ஒள்ளி.*

*நல்லி - நீரோடை]*

**தெண்டிமேமுறி** *teṇḍi-mēmuṟi,* பெ. (n.) தென்கிழக்காய்ச் செல்லும் கடல் நீரோட்டம் (மீனவ.); current runs through south east direction.

*[தெண்டி → மேமுறி]*

**தெண்டில்** *teṇḍil,* பெ. (n.) ஓணான் (இ.வ.); blood sucker.



*மறுவ. ஓணத்தான்*

ம. தெண்டல்; க. தொண்டெ; தெ. தொண்ட; கொண். டொண்டொ

*[தெண்டு[1] → தெண்டில் (தலையை அடிக்கடி மேற் கிளப்பும் ஓணான்) (மு.தா. 73)]*

**தெண்டிரை** *teṇḍirai,* பெ. (n.) கடல் (பிங்.); sea. "தெண்டிரை எறிவி காட்ட தேம்விழி மகரயாழின்" (கம்பரா.).

*[தெள் → தெண் + திரை.*

*திரை = அலை, அலை பாயும் கடல்]*

**தெண்டிவெள்ளம்** *teṇḍi-veḷḷam,* பெ. (n.) தெற்கிலிருந்து வடக்குமுகமாகச் செல்லும் கடல் நீரோட்டம் (மீனவ.); current which runs from south to north direction.

*[தென்றிசை வெள்ளம் → தெண்டிசை வெள்ளம் → தெண்டி வெள்ளம்]*

**தெண்டு**[1]**-தல்** *teṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. கிளப்புதல்; to raise up; to move with a lever. 2. மிண்டுதல் (யாழ்.அக.); to attack, assail.

*[துள் → தெள். தெள் + து → தெண்டு]*

**தெண்டு**[2]**-தல்** *teṇḍu-,* 5 செ.கு.வி. (v.i) நரம்பு வலித்தல் (யாழ்.அக.); to affect the joints, limbs, as cramp.

*[திமிண்டு → நெண்டு → தெண்டு]*

**தெண்டு**[3]**-தல்** *teṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) இரத்தல் (இ.வ.); to beg.

ம. தெண்டுக

*[தண்டு → தெண்டு]*

**தெண்டு**[4] *teṇḍu,* பெ. (n.) 1. கோல்; staff, club, cudgel. 2. கற்றை; dense, mass. "குளிர்சடைத் தெண்டும்" (திருவிசைப். கருவூ. 3, 7).

*[தண்டு → தெண்டு]*

**தெண்டு**[5] *teṇḍu,* பெ. (n.) தெண்டில் பார்க்க; see *teṇḍil.*

*[தெண்டில் → தெண்டு]*

**தெண்டு**[6] *teṇḍu,* பெ. (n.) வேண்டுகோள்; request.

*[தண்டு → தெண்டு]*

**தெண்டு**[7] *tendu*, பெ. (n.) மனத்தைத் துளைக்கும் ஐயம்; suspicion which agitate one's mind.

*[தென் → தெண்டு]*

**தெண்டுக்கி** *tendukki*, பெ. (n.) கல்லாட்டன்; celycine (சா.அக.).

**தெண்டுச்சலாகை** *tendu-c-calāgai*, பெ. (n.) சித்தர்களின் அறுவை மருத்துவத்திற்குப் பயன்படும் 26 கருவிகளிலொன்று; a blunt probe one of the 26 surgical instruments or appliances contemplated in Siddhars science (சா.அக.).

*[தெண்டு + சலாகை]*

**தெண்டுதடி** *tendu-tadi*, பெ. (n.) சுமைமிகுந்த பொருள்களை மேலே கிளப்புங் கம்பி (வின்.); lever.

*[தெண்டு[4] + தடி]*



**தெண்டுபூக்கொடி** *tendu-pū-k-kodi*, பெ. (n.) கொட்டைக் கரந்தை; Indian globe thistle (சா.அக.).

*[தெண்டு + பூ + கொடி]*

**தெண்டை** *tendai*, பெ. (n.) தெண்டகை பார்க்க; see *tendagai* (செ.அக.).

*[தெண்டகை → தெண்டை]*

**தெண்டைக்குத்தேவை** *tendaikku-t-tēvai*, பெ. (n.) தெண்டகைக்குத்தேவை (வின்.) பார்க்க; see *tendagaikku-t-tēvai*.

*[தெண்டகைக்குத் தேவை → தெண்டைக்குத் தேவை]*

**தெண்ணர்** *tennar*, பெ. (n.) அறிவிலிகள்; senseless or dense persons, fools. "தேசனைப் புகழார்சிலர் தெண்ணர்கள்" (தேவா. 1207,1).

*[தென் → தெண் → தெண்ணு → தெண்ணர்]*

**தெண்ணீர்** *tennīr*, பெ. (n.) தெளிந்த நீர்; clear water flowing from sediment water free from noxious substances (சா.அக.).

ம. தெண்ணீர்

*[தென் + நீர்]*

**தெண்மை** *tenmai*, பெ. (n.) 1. தெளிவு (குறுந். 96); clearness, lucidity, transparency. 2. அறிவின்தெளிவு; clearness of intellect. "தெண்மையுடையார்" (பு.வெ. 8, 12, உரை).

*[தென் + மை - தெண்மை]*

**தெத்தபடம்** *tetta-padam*, பெ. (n.) எரிபட்ட துணி; burnt cloth. "தெத்த படமானேண்டி தீயிரும்பீனீரானேன்" (பட்டினத்துப். பக். 244).

*[தீய்த்த - தெத்த + படம் (கொ.வ.)]*

**தெத்தம்**[1] *tettam*, பெ. (n.) தத்தம் (கொ.வ.) பார்க்க; see *tattam*.

*[தத்தம் → தெத்தம்]*

**தெத்தம்**[2] *tettam*, பெ. (n.) ஞாயிறு இருக்கும் விண்மீனிற்கு முந்திய விண்மீன்; the naksatra previous to that where the sun is (செ.அக.).

**தெத்தாபகாரம்** *tettāpakāram*, பெ. (n.) தானங் கொடுத்ததைக் கவர்கை; taking back a gift once made, revocation of a gift.

*[தெறு → தெற்று → தெற்றா → தெத்தா + அபகாரம்]*

**தெத்தாபகாரி** *tettāpakāri*, பெ. (n.) தானஞ் செய்த பொருளைக் கவர்வோன்; one who takes back his gift. "தெத்தாபகாரிகளாகிய கொடிய பாவிகளொடு" (சித். மரபுகண். பக்.17).

*[தெத்தாபகாரம் → தெத்தாபகாரி]*

**தெத்து[1]-தல்** *tettu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தெற்று-தல் பார்க்க; see *terru-*. "தடிகொடு தெத்தி" (திருப்பு. 602)

*[தெற்று → தெத்து*
*ஒ.நோ.: கற்று → கத்து; பற்று → பத்து]*

**தெத்து**[2]**-தல்** *tettu-*, 5 செ.குன்றாவி. (v.i.) திக்குதல்; to stammer (சா.அக.)

[தெற்று → தெத்து-.]

**தெத்து**[3] *tettu*, பெ. (n.) 1. வேலி; hedge of bamboo or thorns. 2. மூலை; corner.

[தெற்று[2] → தெத்து-.]

**தெத்து**[4] *tettu*, பெ. (n.) தத்துப்பிள்ளை; adopted son. "இனிதுறு தெத்துமைந்தன்" (காசிக. சிவ. அக். 15).

[தத்து → தெத்து]

**தெத்து**[5] *tettu*, பெ. (n.) ஏமாற்று (இ.வ.); deception.

[தெற்று[3] → தெத்து]

**தெத்து**[6] *tettu*, பெ. (n.) பருமல்; yard-arm in a vessal or dhoney.

**தெத்துப்பல்** *tettu-p-pal*, பெ. (n.) ஒன்றின் மேலோன்று வளர்ந்து இடறும்படிச் செய்யும் பல்; teeth arising from other teeth irregularly thus affecting the speech (சா.அக.).

[தெற்று + பல்,
தெற்று → தெத்து. தெத்துப்பல் = இடறிய பல்]

**தெத்துமாற்றிப்போடு-தல்** *tettu-māṟṟi-p-pōḍu-*, 20 செ.குன்றாவி. (v.i.) ஏறுவாசி வைத்துச் சுவர் கட்டுதல்; to break joint in building walls.

[தெத்து + மாற்று + போடு-.]

**தெத்துமாற்று** *tettu-māṟṟu*, பெ. (n.) வஞ்சகம்; tricks; lies; chicanery. தெத்துமாற்று தெசை மாற்றில் கெட்டிக்காரன் (பழ.).

[தெத்து + மாற்று]

**தெத்துவாய்** *tettu-vāy*, பெ. (n.) திக்கிப் பேசும் வாய்; stammering mouth (சா.அக.).

மறுவ. திக்குவாய்

[தெற்று → தெத்து. தெத்து + வாய்]

**தெத்துவாயன்** *tettu-vāyaṉ*, பெ. (n.) திக்கு வாயன்; stammerer.

[தெத்து + வாயன்.
தெற்று → தெத்து]

**தெத்துவாளி** *tettu-vāḷi*, பெ. (n.) ஏமாற்றுக் காரன்; cheat. "அவன் சரியான தெத்துவாளி; கடன் வாங்கினால் திருப்பித் தரமாட்டான் (நெல்லை).

[தெற்று[5] → தெத்து + ஆளி]

**தெத்தேயெனல்** *tettē-y-eṉal*, பெ. (n.) ஓர் ஒலிக் குறிப்பு; onom. expr. of singing. "தெத்தேயென முரன்று" (தேவா. 747, 1).

[தெத்தே + எனல்]

**தெந்தன** *tendaṉa*, பெ. (n.) தெந்தனா பார்க்க; see *tentaṉā*.

**தெந்தனம்**[1] *tendaṉam*, பெ. (n.) கவலையற்ற தன்மை; carelessness. "தெந்தனவென்றே திரிந்ததுண்டேயோ" (அருட்பா. vi, பிள்ளைப் பெரு. 98).

ம. தெந்தனம்

[தெந்தனவெனல் → தெந்தனம்]

**தெந்தனம்**[2] *tendaṉam*, பெ. (n.) 1 சோம்பல்; laziness. 2. தாழ்ச்சி; delay "கருணை பொழிய இன்னந் தெந்தனமா" (கனம் கிருஷ்ணையர், 65).

**தெந்தனமடி-த்தல்** *tendaṉam-aḍi-*, 4 செ.குன்றாவி. (v.i.) 1. வீணே திரிதல்; to loaf, loiter about. 2. வேலையை உழப்புதல் (இவ.); to shirk work.

[தெந்தனம் + அடி-.]

**தெந்தனவெனல்** *tendaṉa-v-eṉal*, பெ. (n.) தெந்தனம் பார்க்க; see *tendaṉam*.

**தெந்தனா** *tendaṉā*, பெ. (n.) தாளச் சொற்கட்டு (சங்.அக.); set syllables used in marking time in music.

**தெத்துக்கி** *tettukki*, பெ. (n.) வெள்ளைப்புனை; cuspidate-leaved calycine croton (சா.அக.).

**தெப்பக்கட்டை** *teppa-k-kaṭṭai*, பெ. (n.) 1. வண்டியச்சுக்கோத்த மரம் (இ.வ.); wooden shaft over the axle of a cart. 2. மிதவை; raft, logs of a raft. 3. கிணற்றடியில் வைத்துக் கட்டும் மரச்சட்டம் (இ.வ.); protecting wooden frame at the bottom of a well. 4. ஏற்றமரத்தில் நீர்ச்சாலைக் கட்டவுதவும் மரக்கட்டை; wooden piece for attaching a bucket to a picotah.

[தெப்பம் + கட்டை]

**தெப்பக்குளம்** *teppa-k-kuḷam*, பெ. (n.) தெப்பத் திருவிழா நடைபெறும் தடாகம்; tank attached to a temple in which the deity is floated on rafts during festival. "தெப்பக் குளங் கட்டித் தேர்மண்டபங் கட்டி" (குற்றா.குற. 91, 4).

ம. தெப்பக்குளம்

[தெப்பம் + குளம்.
தெப்பம் = மிதவை]

**தெப்பத்திருநாள்** *teppa-t-tiru-nāḷ*, பெ. (n.) தெப்பத்திருவிழா பார்க்க; see *teppa-t-tiruviḻā*.

[தெப்பம் + திரு + நாள்]

**தெப்பத்திருவிழா** *teppa-t-tiruviḻā*, பெ. (n.) தடாகத்திற்கோயிற்றிருமேனியைத் திருக்குளத்தின் மீது எழுந்தருளப் பண்ணிக் கொண்டாடும் திருவிழா; floating festival in which a deity of a temple is taken on rafts in a tank.

[தெப்பம் + திருவிழா]



**தெப்பம்**[1] *teppam*, பெ. (n.) மிதவை (திவா.); raft, float.

ம. தெப்பம்; க., து., பட. தெப்ப; தெ. தேப, தெப்ப; Mar. tāphā, tarāphā; Pkt. tappa; Skt. tarpa, talpa.

**தெப்பம்**[2] *teppam*, பெ. (n.) தணக்கு பார்க்க; see *taṇaku* (சா.அக.).

**தெப்பமரம்** *teppa-maram*, பெ. (n.) நுணா என்னுங் கொடி; small ach root (சா.அக.).

**தெப்பல்** *teppal*, பெ. (n.) தெப்பம்' பார்க்க; see *teppam*[1].

[தெப்பம் → தெப்பல்]

**தெப்பலகரு** *teppala-karu*, பெ. (n.) வெள்ளைக் கருக்கட்டை; a white species eagle wood. (சா.அக.).

**தெப்பலங்கெட்டவன்** *teppalaṅ-keṭṭavaṉ*, பெ. (n.) உடல்நலிந்தோன் (இவ.); weak-bodied person.

[துப்பு + பலம் + கெட்டவன். துப்பலங் கெட்டவன் → தெப்பலங்கெட்டவன்]

**தெப்பை** *teppai*, பெ. (n.) தெப்பம் பார்க்க; see *teppam*.

[தெப்பம்' → தெப்பை]

**தெம்பல்** *tembal*, பெ. (n.) மழையால் வயல் இறுகுகை; hardening of ploughed land after heavy rain.

**தெம்பாங்கு** *tem-pāṅgu*, பெ. (n.) 1. ஒருவகைச் சந்தனம் (சங்.அக.); a kind of sandal paste. 2. தெம்மாங்கு பார்க்க; see *temmāṅgu*.

[தென் + பாங்கு → தென்பாங்கு → தெம்பாங்கு]

**தெம்பு** *tempu*, பெ. (n.) 1. உடல் வலிமை; physical strength. தெம்பு கெட்ட பயலிடம் தும்பைக் கொடுக்காதே (பழ.). 2. துணிபு; daring, bravery. "தெம்பை நானொற்று காண்பேனோ" (இராமநா. உயுத். 81). தெம்பிருந்தால் மோதிப்பார் (உ.வ.). 3. செருக்கு (அகங்காரம்); arrogance, pride. "சொம்புந் தெம்புங் குடியென வளர்தரு கொடியவர்" (திருப்பு. 609). 4. சுறுசுறுப்பு; energy, enthusiasm. "அந்த வேலையைச் செய்ய எனக்குத் தெம்பாயிருக்கிறது".

[எம்பு → தெம்பு]

**தெம்புறம்** *tempuṟam*, பெ. (n.) தென்புறம் பார்க்க; see *teṉ-puṟam* (சா.அக.).

[தென் + புறம் = தென்புறம் → தெம்புறம் (கொ.வ.)]

**தெம்மாங்கு** *temmāṅgu*, பெ. (n.) தென்னாட்டில் நாட்டுப்புறத்தார் பாடும் இசைப் பாட்டுவகை (கொ.வ.); a kind of ditty peculiar to the rustics of Southern India.

[தென்பாங்கு → தெம்மாங்கு]

**தெம்மாடி** *temmāḍi*, பெ. (n.) ஒன்றுக்கு முதவாதவன் (உ.வ.); senceless person, fool,

incompetent person. "தெம்மாடித்தனமா இருக்காதே" (மதுரை.)

ம. தெம்மாடி; தெ. திம்மரி, திம்மடு

**தெம்மாண்டி** *temmāṇḍi*, பெ. (n.) தெம்மாடி பார்க்க; see *temmāḍi*.

*[தெம்மாடி → தெம்மாண்டி]*

**தெம்முனை** *tem-muṉai*, பெ. (n.) போர்க்களம்; the front line of battle; battle field. "தொலையாக் கற்பநின் றெம்முனை யானே" (பதிற்றுப். 80. 17).

*[தெவ் + முனை.*
*தெவ் = பகை. தெவ் + முனை – தெவ்முனை → தெம்முனை]*

**தெம்மேலு** *temmēlu*, பெ. (n.) தென்மேற்கு (மீனவ.); south west.

*[தென் → தெம் + மேல். மேல் → மேலு]*

**தெய்**[1] *tey*, பெ. (n.) கொலை (பிங்.); killing.

*[தேய் → தெய்]*

**தெய்**[2] *tey*, பெ. (n.) தெய்வம் (பிங்.); the deity.

*[தேய் → தெய்]*

**தெய்தெய்** *tey-tey*, பெ. (n.) தாளக் குறிப்பு; set syllables used for marking time in singing and dancing.

*[தைதை → தெய்தெய்]*

**தெய்தெய்யெனல்** *tey-tey-y-eṉal*, பெ. (n.) 1. சினத்தால் ஆடுதற் குறிப்பு (கொ.வ.); expr. of dancing in rage. தெய்தெய்யென்று குதிக்கிறான். 2. மாடுகளைச் செலுத்தும் ஒலிக்குறிப்பு; onom. expr. of driving bullocks (செ.அக.).

*[தெய் + தெய் + எனல்]*

**தெய்ய** *teyya*, பெ. (n.) தெய்யோ பார்க்க; see *teyyō*. "சொல்லினித் தெய்ய யாந்தெயு மாறே" (அகநா. 220).

**தெய்யோ** *teyyō*, பெ. (n.) ஓர் அசைநிலை; poetic expletive. "வாரா யாயின் வாழேந் தெய்யோ" (ஐங்குறு. 239).

*[தெய் → தெய்யோ]*

**தெய்வஆவி** *teyva-āvi*, பெ. (n.) தூய ஆவி; holy spirit.

*[தெய்வம் + ஆவி]*

**தெய்வஏனம்** *teyva-ēnam*, பெ. (n.) அருட்டன்மையுடைய ஏனம்; divine vessel or bowl, believed to become full with food whenever needed.

*[தெய்வம் + ஏனம்]*

**தெய்வக்கட்டாடி** *teyva-k-kaṭṭāḍi*, பெ. (n.) தெய்வங்கொண்டாடி பார்க்க; see *teyvaṅ-koṇḍāḍi*.

*[தெய்வம் + கட்டாடி]*

**தெய்வக்கண்ணோர்** *teyva-k-kaṇṇōr*, பெ. (n.) மெய்யறிவுடையவர்; persons having perfect spiritual knowledge. "ஓரனுத் தெய்வக் கண்ணோ ருணர்குவர்" (மணிமே. 27: 146).

*[தெய்வம் + கண்ணோர்]*

**தெய்வக்கணம்** *teyva-k-kaṇam*, பெ. (n.) தேவக் கூட்டம்; celestial host. "மன்பெருந் தெய்வ கணங்களி னுள்ளேன்" (மணிமே. 21:120). 2. தேவக்கணம் பார்க்க; see *tēva-k-kaṇam*.

*[தெய்வம் + கணம்]*

**தெய்வக்கம்மியன்** *teyva-k-kammiyaṉ*, பெ. (n.) தேவத்தச்சன்; celestial architect. "முழுவதும் வல்ல தெய்வக்கம்மியர் தம்மால்" (திருவாலவா. 26,11).

ம. தெய்வக்கம்மியன்

*[தெய்வம் + கம்மியன்]*

**தெய்வக்கரி** *teyva-k-kari*, பெ. (n.) இறையைச் சான்றாய்க் கொள்ளுகை; God as witness.

*[தெய்வம் + கரி. கரி பார்க்க]*

**தெய்வக்கல்** *teyva-k-kal*, பெ. (n.) தெய்வவுரு அமைத்தற்குரிய சிலை; stone used for making idols. "இமைய மால்வரைத் தெய்வக் கல்லும்" (மணிமே. 26:89).

*[தெய்வம் + கல்]*

**தெய்வக்கலா** *teyva-k-kalā*, பெ. (n.) அரிசந்தனம்; red sandal wood (சா.அக.).

**தெய்வக்களை** *teyva-k-kaḷai*, பெ. (n.) தெய்வீக ஒளிவீசும் அழகு (சோபை); devine radiance, as of the countenances of saints.

*[தெய்வம் + களை]*

**தெய்வக்கற்பனை** *teyva-k-kaṟpaṉai*, பெ. (n.) தெய்வக் கட்டளை; divine order or injunction, especially as uttered by an oracle. 2. விதி (உ.வ.); fate.

*[தெய்வம் + கற்பனை]*

**தெய்வக்காப்பு** *teyva-k-kāppu*, பெ. (n.) பாட்டுடைத் தலைவனைத் தெய்வங் காக்க வென்று கூறும் பிள்ளைத்தமிழ்ப் பகுதி (திவா.); a section in pillai-t-tamil in which gods are invoked to protect the hero of the poem.

*[தெய்வம் + காப்பு]*

**தெய்வக்கிளவி** *teyva-k-kiḷavi*, பெ. (n.) 1. தெய்வீகப் பேச்சு; divine speech. "திப்பிய முறைக்குந் தெய்வக் கிளவியின்" (மணிமே. 7:97). 2. வடமொழி; Sanskrit, as the language of the gods. "தெய்வக் கிளவியிற் றெய்வங் கூறும்" (மணிமே. 21:46) (செ.அக.).

*[தெய்வம் + கிளவி]*

உலக வழக்கற்றதும் அரைச்செயற்கைக் கலவை மொழியுமான வடமொழியைத் தெய்வக் கிளவி என செ.அக. குறித்திருப்பது ஆரியக் குறும்பு.

**தெய்வக்குஞ்சரி** *teyva-k-kuñjari*, பெ. (n.) தெய்வயானை பார்க்க; see *teyva-yāṉai*.

*[தெய்வம் + குஞ்சரி]*

**தெய்வக்குற்றம்** *teyva-k-kuṟṟam*, பெ. (n.) நேர்த்திக் கடனை நிறைவேற்றாமையால் அல்லது வழிபாட்டு நெறிமுறைகளைப் பின்பற்றாமையால் தெய்வங்கட்குண்டாகுஞ் சினம் (உ.வ.); divine displeasure as due to non-performance of enjoined rites.

*[தெய்வம் + குற்றம்]*

**தெய்வக்குறை** *teyva-k-kuṟai*, பெ. (n.) தெய்வக் குற்றம் பார்க்க; see *teyva-k-kuṟṟam*.

*[தெய்வம் + குறை]*

**தெய்வங்கொண்டாடி** *teyvaṅ-koṇḍāḍi*, பெ. (n.) தெய்வம் பேய் முதலியவற்றால் உணர்வேற்றப் பட்டு ஆடுபவர் (நாஞ்.); a person possessed by a deity, evil spirit etc.

*[தெய்வம் + கொண்டு + ஆடி]*

**தெய்வங்கொள்கை** *teyvaṅ-koḷkai*, பெ. (n.) கடவுள் உண்டென்னுங் கொள்கை; theistic belief. "குலனொரு தெய்வங் கொள்கை" (நன்பாயி. 26).

*[தெய்வம் + கொள்கை]*

**தெய்வச்சகாயம்** *teyva-c-cagāyam*, பெ. (n.) தெய்வத்துணை பார்க்க; see *teyva-t-tuṇai*.

*[தெய்வம் + சகாயம்]*

**தெய்வச்சங்கற்பம்** *teyva-c-caṅgaṟpam*, பெ. (n.) நேர்ந்துகொள்(ளு)-தல் பார்க்க; see *nērndu-koḷ(ḷu)-*.

**தெய்வச்சாட்சி** *teyva-c-cāṭci*, பெ. (n.) தெய்வக்கரி பார்க்க; see *teyva-k-kari*.

*[தெய்வம் + சாட்சி]*

Skt. sāksin → த. சாட்சி

**தெய்வச்சாட்சியாய்** *teyva-c-cāṭci-y-āy*, பெ.எ. (adv.) உறுதி கூறும்போது வழங்குவதும் கடவுள் சாட்சியாக என்று பொருள் படுவதுமாகிய தொடர்; a term of swearing, meaning before God, with God to witness.

*[தெய்வம் + சாட்சியாய்]*

**தெய்வச்சாயல்** *teyva-c-cāyal*, பெ. (n.) தெய்வக்களை பார்க்க; see *teyva-k-kaḷai*.

*[தெய்வம் + சாயல்]*

**தெய்வச்சித்தம்** *teyva-c-cittam*, பெ. (n.) நேர்ந்துகொள்(ளு)-தல் பார்க்க; see *nērndukoḷ(ḷu)-*.

*[தெய்வம் + சித்தம்]*

**தெய்வச்சிந்தனை** *teyva-c-cindanai*, பெ. (n.) இறையூழ்கம்; divine meditation, contemplation of the deity.

*[தெய்வம் + சிந்தனை]*

**தெய்வச்சிலையார்** *teyva-c-cilaiyār*, பெ. (n.) தொல்காப்பியச் சொல்லதிகாரத்துக்கு உரை எழுதியவர்களுள் ஒருவர்; a commentator on solladikāram of Tolkāppiyam.

**தெய்வச்சிலையான்** *teyva-c-cilaiyāṉ*, பெ. (n.) திருப்புல்லாணியிற் கோயில் கொண்டுள்ள திருமால்; Viṣṇu as worshipped at Tiruppullāṇi "தெய்வச் சிலையாற் கென் சிந்தைநோய் செப்புமினே" (திவ். பெரியதி. 2, 4, 3).

**தெய்வச்சுரபி** *teyva-c-curabi,* பெ. (n.) காமதேனு (சங்.அக.) celestial cow.

*[தெய்வம் + சுரபி]*

**தெய்வச்செயல்** *teyva-c-ceyal,* பெ. (n.) *1.* தெய்வத்தின் செய்கை; providential occurrence, act of God. "துரந்தான் றெய்வச் செயலன்ன கணையை" (கம்பரா. அதிகாய. 194). *2.* தற்செயல்; chance. தெய்வச் செயல் இருந்தால் செத்தவனும் எழும்புவான் (பழ.).

*[தெய்வம் + செயல்]*

**தெய்வச்சோதனை** *teyva-c-cōdaṉai,* பெ. (n.) கடவுளின் நோட்டம்; trial of a person by God, subjecting him to suffering or hard treatment (செ.அக.).

*[தெய்வம் + சோதனை]*

Skt. šodhana → த. சோதனை

**தெய்வஞ்செப்பு-தல்** *teyvañ-ceppu-,* 7 செ.கு.வி. (v.i.) துணைவேண்டிக் கடவுளை வழிபடுதல்; to invoke the aid of the God. "பகை பெருமையிற் றெய்வஞ் செப்ப" (பதிற்றுப். 82, 1).

*[தெய்வம் + செப்பு]*

**தெய்வஞானம்** *teyva-ñāṉam,* பெ. (n.) தெய்வத்தைப் பற்றிய அறிவு; spiritual knowledge. "தெய்வ ஞானந் திறப்படக் காட்டி" (பெருங். இலாவாண. 11, 134).

*[தெய்வம் + ஞானம்]*

Skt. jñāna → த. ஞானம்

**தெய்வத்தச்சன்** *teyva-t-taccaṉ,* பெ. (n.) தெய்வக்கம்மியன்; the celestical architect. "தெய்வத்தச்சனைப் புகழ்துமோ" (கம்பரா. ஊர்தேடு. 18).

*[தெய்வம் + தச்சன்]*

**தெய்வத்தரு** *teyva-t-taru,* பெ. (n.) *1.* வானுலக மரம்; celestial tree. "தெய்வத்தரு வளரும் பொழிற்புறவம்" (தேவா. 145, 2). *2.* தேவதாரு பார்க்க; see *tēvatāru.*

*[தெய்வம் + தரு]*

**தெய்வத்தலம்** *teyva-t-talam,* பெ. (n.) கோயில் (இ.வ.); temple.

*[தெய்வம் + தலம்]*

**தெய்வத்தன்மை** *teyva-t-taṉmai,* பெ. (n.) கடவுளின் இயல்பு; divine nature, godliness.

*[தெய்வம் + தன்மை]*

**தெய்வத்தானம்** *teyva-t-tāṉam,* பெ. (n.) கோயில்; temple. "தெய்வத் தானமோ டவ்வழி யொழிய" (பெருங். உஞ்சைக். 43, 177).

*[தெய்வம் + தானம்]*

**தெய்வத்தீர்வை** *teyva-t-tīrvai,* பெ. (n.) தெய்வத்தின் தீர்ப்பு (யாழ்.அக.); divine judgment.

*[தெய்வம் + தீர்வை]*

**தெய்வத்துணை** *teyva-t-tuṇai,* பெ. (n.) கடவுளின் துணை; God's help.

*[தெய்வம் + துணை]*

**தெய்வத்துந்துமி** *teyva-t-tundumi,* பெ. (n.) தேவலோக முரசு; celestial drum. "சங்குந் தெய்வ துந்துமியுந் தழங்க" (பிரபுலிங். விமலை. 32).

**தெய்வத்துவம்** *teyva-t-tuvam,* பெ. (n.) கடவுட்டன்மை (யாழ்.அக.); godhood, godliness.

**தெய்வத்துவனி** *teyva-t-tuvaṉi,* பெ. (n.) (சமணம்) தேவர் அருகற்குச் செய்யுஞ் சிறப்புகளுளொன்று; shouts of praise to Arhat by the celestials. "சுடர்மண்டலஞ் சுரதுந்துபி தெய்வத்துவனி" (திருநூற். 80).

*[தெய்வம் + துவனி. துல் → தொல் → தொனி → துவனி = ஓசை, ஒலி, இசை முழக்கம்]*

**தெய்வதம்** *teyvadam,* பெ. (n.) *1.* **தெய்வம்;** deity, divinity. "ஆங்கத் தெய்வதம் வாராதோ வென" (மணிமே. 9:70) **2. ஆண்டு** (பிங்.); year.

**தெய்வதயானை** *teyvada-yāṉai,* பெ. (n.) தெய்வயானை பார்க்க; see *teyva-yāṉai.* "தெய்வதயானை கேள்" (கந்தபு. தெய்வயா. 171).

*[தெய்வம் + யானை]*

**தெய்வதை** *teyvadai,* பெ. (n.) தேவதை பார்க்க; see *tēvadai.* "திருவாக்குந் தெய்வதையும் . . . தேற்ற வழிபாடு செய்வதே" (சிறுபஞ். 43).

**தெய்வநதி** *teyva-nadi,* பெ. (n.) **கங்கை** (பிங்.); the Ganges, as the sacred river.

*[தெய்வம் + நதி]*

**தெய்வநானம்** *teyva-nāṉam,* பெ. (n.) (சைவம்) வெயிலெறிக்கும்போது பெய்யும் மழையில் கிழக்கு நோக்கி ஏழடி சென்றுமீளுகை (தத்துவப். 4), உரை); walking seven steps in an easterly direction in the rain while the sun shines.

*[தெய்வம் + நானம்]*

**தெய்வநிந்தை** *teyva-nindai,* பெ. (n.) **கடவுளைப் பழிக்கை;** humilate God's grace.

ம. தைவநிந்த

*[தெய்வம் + நிந்தை]*

**தெய்வநியமம்** *teyva-niyamam,* பெ. (n.) 1. கடவுளாணை; divine decree; judgment of heaven. 2. தற்செயல்; providential occurrence (செ.அக.).

*[தெய்வம் + நியமம்]*

**தெய்வப்பகை** *teyva-p-pagai,* பெ. (n.) **குழந்தைகளை வருத்துகின்ற தீய கோள்கள்;** the evil planet believed to affect babies. "செல்லும் மன்னோ சீவகன் றெய்வப் பகை வென்றே" (சீவக. 364)

*[தெய்வம் + பகை]*

**தெய்வப்பசு** *teyva-p-pašu,* பெ. (n.) **காமதேனு** (பிங்.); celestial cow.

*[தெய்வம் + பசு]*

Skt. pasu → த. பசு

**தெய்வப்படை** *teyva-p-paḍai,* பெ. (n.) **தெய்வப் படைக்கலம்** (திவ்விய அஸ்திரம்); divine weapon. "தெய்வப் படையும் சினமுந் திறனும்" (கம்பரா. அதிகாயன். 50).

*[தெய்வம் + படை]*

**தெய்வப்பத்தி** *teyva-p-patti,* பெ. (n.) **கடவுளிடம் பத்திமை;** devotion of god.

அத்திக்காய், கோரைக்காய், தேத்தன்காய், ஐவிரலிக்காய், வெள்ளைக் கத்திரிக்காய், சோற்றுக்காந்தல் கற்றாழை ஆகியவற்றைப் புசிப்பவர்களுக்குத் தெய்வபக்தி கிடையாது (சா.அக.).

*[தெய்வம் + பத்தி]*

**தெய்வப்பயம்** *teyva-p-payam,* பெ. (n.) தெய்வவச்சம் பார்க்க; see *teyva-vaccam.*

*[தெய்வம் + பயம்]*

Skt. bhaya → த. பயம்

**தெய்வப்பலகை** *teyva-p-palagai,* பெ. (n.) **தகுதியுள்ள புலவர்கட்கு மட்டும் இடங் கொடுக்கக் கூடியதாய்ச் சிவபிரானாற் கழகத்தார்க்கு அருளப்பெற்ற பலகை;** the miraculous seat of sangam poets. "வாங்கருந் தெய்வப் பலகையைச் சங்க மண்ட பத்திடை நடுவிட்டு" (திருவாலவா. 15, 4).

*[தெய்வம் + பலகை]*

**தெய்வப்பாடல்** *teyva-p-pāḍal,* பெ. (n.) 1. தேவர் பாடும் பாடல்; songs of the gods. 2. தெய்வத்தைப் பற்றிய பாடல்; songs in praise of the gods, as at the opening of a dance. "நன்மையுண்டாகவும் தீமைநீங்கவும் வேண்டித் தெய்வப் பாடல் . . . பாட" (சிலப். 3:135, உரை). 3. அருட்பாடல்; inspired song or hymn.

*[தெய்வம் + பாடல்]*

**தெய்வப்பாத்திரம்** *teyva-p-pāttiram,* பெ. (n.) தெய்வஏனம் பார்க்க; see *teyva-ēṉam.* "தெய்வப் பாத்திரஞ் செவ்விதின் வாங்கி" (மணிமே. 21:151).

*[தெய்வம் + பாத்திரம்]*

**தெய்வப்பாவை** *teyva-p-pāvai,* பெ. (n.) **கொல்லி மலையில் தேவரால் நிறுவப்பட்ட நோக்குவோரைத் தன்வயப்படுத்தும் தெய்வப் படிமை;** a woman - shaped statue in the Kolli mount, believed to have been made by demons. "சிலைத் தொழிற் சிறுநுதற் றெய்வப் பாவைபோல்" (சீவக.687).

*[தெய்வம் + பாவை]*

**தெய்வப்பிரமம்** *teyva-p-piramam,* பெ. (n.) **தெய்வத்தன்மையுடைய நான்முகன்** (பிரம) **வீணை;** the divine lute of Brahmā. "தெய்வப் பிரமஞ் செய்குவோரும்" (பரிபா. 19, 40).

**தெய்வப்பிறப்பு** *teyva-p-piṟappu,* பெ. (n.) **தெய்வப்பிறவி** பார்க்க; see *teyva-p-piṟavi.*

*[தெய்வம் + பிறப்பு]*

**தெய்வப்பிறவி** *teyva-p-piṟavi*, பெ. (n.) இறைகூறு கொண்ட பிறப்பு; godly being.

*[தெய்வம் + பிறவி]*

**தெய்வப்புணர்ச்சி** *teyva-p-puṇarcci*, பெ. (n.) தலைவனும் தலைவியும் இயல்பினாற் கூடும் முதற்கூட்டம்; union of lovers brought about by destiny. "தெய்வப் புணர்ச்சி செய்ம றுணிந்தது" (திருக்கோ. 7, கொளு.).

மறுவ. இயற்கைப் புணர்ச்சி

*[தெய்வம் + புணர்ச்சி]*

**தெய்வப்புலமை** *teyva-p-pulamai*, பெ. (n.) இறைத்தன்மை வாய்ந்த புலமை; poetic gift, as divinely inspired. "தெய்வப் புலமை யருந்திறல் வள்ளுவன்" (குறள், சிறப்புப் பாயிரம்).

*[தெய்வம் + புலமை]*

**தெய்வப்புலவன்** *teyva-p-pulavaṉ*, பெ. (n.) 1. இறைத்தன்மை வாய்ந்த கவிஞன்; gifted poet, as divinely inspired. தெய்வப் புலவனுக்கு நா உணரும், சித்திர ஓடாவிக்குக் கை உணரும் (பழ.). 2. திருவள்ளுவர்; Thiruvalluvar. தெய்வப் புலவன் திருவள்ளுவனுரைத்த மெய் வைத்த சொல் லொன்றும் மேவாமே... (நெஞ்சுவிடு தூது).

*[தெய்வப் புலமை → தெய்வப் புலவர்]*

**தெய்வப்புள்** *teyva-p-puḷ*, பெ. (n.) கருடன்; garuda, as the celestial bird. "தெய்வப் புள்ளேறி வருவான் சித்திர கூடத்துள்ளானே" (திவ். பெரியதி. 3, 3, 6).

*[தெய்வம் + புள்]*

**தெய்வப்பெண்** *teyva-p-peṇ*, பெ. (n.) தேவ நங்கை (திவா.); celestial nymph. "தெய்வப் பெண் ணேத்திசைப்ப" (திருவாச. 19, 6).

*[தெய்வம் + பெண்]*

**தெய்வப்பெண்டிர்** *teyva-p-peṇḍir*, பெ. (n.) தெய்வ நங்கை (திவா.); celestial nymph. "சிறுகாஞ்சொறி நன்னாரி தெய்வப் பெண்டீருடனாக" (சாஅக.).

*[தெய்வம் + பெண்டிர்]*

**தெய்வப்பெயர்த்தொகுதி** *teyva-p-peyar-t-togudi*, பெ. (n.) அகராதியில் ஒரு பகுதி; a part of dictionary.

*[தெய்வப்பெயர் + தொகுதி]*

**தெய்வப்பக்தி** *teyva-pakti*, பெ. (n.) தெய்வப்பத்தி பார்க்க; see *teyva-p-patti*.

*[தெய்வம் + பக்தி]*

த. பத்தி → Skt. bhakti

**தெய்வம்** *teyvam*, பெ. (n.) 1. கடவுள் (சூடா.); God, deity. "தெய்வ முணாவே" (தொல். பொருள். 18). 2. தெய்வத்தன்மை; divine nature. "தெய்வமே கமழு மேனி" (சீவக. 1718). 3. தெய்வத் தன்மையுள்ளது; that which is divine. "தெய்வத்தாற் கூறாயோ" (திணைமாலை. 90). 4. ஊழ்; fate, destiny. "தெய்வத்தா லாகா தெனினும்" (குறள். 619). 5. தெய்வமணம் பார்க்க; see *teyva-maṇam*. 6. தெய்வாதனம் பார்க்க; see *teyvādaṉam*. "குஞ்சித வராகந் தெய்வம்" (தத்துவப். 108). 7. ஆண்டு (தைலவ. தைல); year. 8. மணம் (பல்பொருட் சூளா.); fragrance. 9. புதுமை (பல்பொருட் சூளா.); newness.

ம. தெய்வம், தேவன், தைவம், தெய்யம்; க. தேவ

[தோய் → தேய்.
தேய்தல் = உரசுதல். தேய்த்தல் (பி.வி.)
தேய் → தேய்வை = உரசும் சந்தனக் கட்டை.
தேய் → தே → தீ = நெருப்பு.
தேய் → தேயு (வ.)

தீயானது முதற்காலத்தில் தெய்வமாக வணங்கப்பட்டதினால் தீயின் பெயரினின்று தெய்வத்தைக் குறிக்கும் பெயர்கள் திரிந்தன.

சுள் → சுர் → சுரம் → சுரன் = தேவன்

தேய் → தே = தெய்வம், தலைவன்.

தே → தேவு → தேவன்.

தேய் → (தெய்) → தெவ்வு → தெய்வம் (முதா. 205)]

இனி, இருளும் பொறுக்கொணாத துன்பமாகி, தீபகம் என்னும் எரிநரகிற்கு இருளுலகம் என்றொரு பெயரும் ஏற்பட்டிருப்பதால், கதிரவ வடிவிற் பகலிருளையும் விளக்கு வடிவில் இரவிருளையும் போக்கும் தீயும் கண்ணிற்கு இன்றியமையாத ஒளியைத் தருவதுடன், உடம்பிற்கும் உணவிற்கும் வேண்டிய வெம்மையையும் உதவுகின்றது பற்றி, தெய்வம் எனப் போற்றத்தக்க பூதமுந் தீயேயாகி, தெய்வம் என்னும் பெயரும் தீயின் பெயரின்றே தோன்றியுள்ளது (செந்தமிழ்ச் செல்வி, சிலம்பு 53, பக். 164).

**தெய்வமணம்** *teyva-maṇam*, பெ. (n.) 1. *இறை மணம்;* divine fragrance. 2. *தெய்வப் புணர்ச்சி பார்க்க;* see *teyva-p-puṇarcci*. 3. *வேள்வி செய்வோன் வேட்பிக்கின்றாருள் ஒருவற்குத் தன் பெண்ணைத் தீ முன்னர்க் காணிக்கையாகக் கொடுப்பது;* a form of marriage in which the sacrificer gives away his daughter to an officiating priest before the sacrificial fire, as the latter's fee. "தெய்வ மணத்தார் திறம்" *(தொல். பொருள். 92, உரை).*

*[தெய்வம் + மணம்]*

**தெய்வமணி** *teyva-maṇi*, பெ. (n.) 1. சிந்தாமணி *(பிங்.);* celestial wishing gem. 2. பொன்னாக்கி *(பரிசவேதி);* philosopher's stone. "தீண்டளவில் வேதிகை செய் தெய்வமணி கொல்லோ" *(கம்பரா. உருக்காட்டு. 68).* 3. குதிரைக்கழுத்திலுள்ள நற்சுழி *(அசுவசா. 14);* auspicious curl on a horse's neck. 4. *நற்சுழியுள்ள குதிரைவகை;* horse with a lucky curl. "கழுத்தில் வலஞ் சுழித்திருந்தால் . . . தெய்வமணியென விசைப்பர்" *(திருவிளை. நரிபரி. 111).*

*[தெய்வம் + மணி]*

**தெய்வமந்திரி** *teyva-mandiri*, பெ. (n.) *தெய்வவமைச்சன் பார்க்க;* see *teyva-v-amaiccaṉ*.

*[தெய்வம் + மந்திரி]*

**தெய்வமயக்கம்** *teyva-mayakkam*, பெ. (n.) *தெய்வமேறிய மருள் நிலை;* inspiration of obsession by a spirit. "தெய்வமயக்கத்தாற் கூறினாள்" *(சிலப். 12: 51, உரை).*

*[தெய்வம் + மயக்கம்]*

**தெய்வமயக்கு** *teyva-mayakku*, பெ. (n.) *தெய்வத்தாலேற்பட்ட மன மயக்கம்;* trance induced by a deity. "ஆங்குநிற் கொணர்ந்த வருந்தெய்வ மயக்கம்" *(மணிமே. 21:109).*

*[தெய்வம் + மயக்கு]*

**தெய்வமரம்** *teyva-maram*, பெ. (n.) *விண்ணுலக மரம்;* celestial tree.

*[தெய்வம் + மரம்]*

**தெய்வமாடம்** *teyva-māḍam*, பெ. (n.) *தெய்வத்தானம் பார்க்க;* see *teyva-t-tāṉam*. "தெய்வ மாடமுந் தேர்நிலைக் கொட்டிலும்" *(பெருங். இலாவாண. 7, 143).*

*[தெய்வம் + மாடம்]*

**தெய்வமாடு-தல்** *teyvam-āḍu-*, 5 செ.கு.வி. (v.i.) *தெய்வத்தன்மையுறுதல் (கொ.வ.);* to be possessed or inspired by a spirit.

*[தெய்வம் + ஆடு-.]*

**தெய்வமானுடம்** *teyva-māṉuḍam*, பெ. (n.) *தெய்வத்தன்மை பொருந்திய மாந்த நிலை;* semi-divine nature. "யான் அவளைத் தெய்வமானுட மென்றறிந்து" *(திருக்கோ. 251. உரை).*

*[தெய்வம் + மானுடம்]*

**தெய்வமுறு-தல்** *teyvam-uṟu-*, 20 செ.கு.வி. (v.i.). 1. *தெய்வ உணர்வு மேலிடல்;* to become possessed by a spirit. "சாலினி தெய்வமுற்று" *(சிலப். 12:8).* 2. *தெய்வத்தன்மையுறுதல் (சிலப். 19:26. அரும்.);* to gain godhood.

*[தெய்வம் + உறு-.]*

**தெய்வமுனி** *teyva-muṉi*, பெ. (n.) *நாரதர் போன்ற தேவ முனி;* celestial sage as Nāradar.

*[தெய்வம் + முனி]*

**தெய்வமேறு-தல்** *teyvam-ēṟu-*, 5 செ.கு.வி. (v.i.) *தெய்வ உணர்வு மேலுறுதல்;* to be possessed by a spirit.

*[தெய்வம் + ஏறு-.]*

**தெய்வயாகம்** *teyva-yāgam*, பெ. (n.) *தெய்வவேள்வி பார்க்க;* see *teyva-vēḷvi*.

*[தெய்வம் + யாகம்]*

**தெய்வயானை** *teyva-yāṉai*, பெ. (n.) 1. *இந்திரனின் யானை; தேவயானை;* Indira's elephant. 2. *குமரக்கடவுள் தேவியருள் ஒருத்தி (பிங்.);* a wife of Lord Murugan. "குமரற் கிந்திரன் றருந் தெய்வ யானையே" *(கந்தபு. தெய்வயா. 52).*

*[தெய்வம் + யானை]*

**தெய்வயானைகாந்தன்** *teyva-yāṉai-kāndaṉ*, பெ. (n.) *முருகக்கடவுள் (சூடா.);* Kandaṉ, as the Lord of Teyvayāṉai.

*[தெய்வம் + யானை + காந்தன்]*

**தெய்வயானைதண்ணீர்வாங்கு-தல்** *teyva-yāṉai-taṇṇīr-vāṅgu-*, 11 செ.கு.வி. (v.i.) கிட்டதட்ட 1000 அடிப்பரப்புள்ள நீர் கொந்தளித்து அதில் சிக்கும் கலங்களுக்கு இடர் உண்டாகும் வகையில் வாடைக் காலத்தில் கடலின்மேல் குறிப்பிட்ட இடத்தில் கருத்த மேகங்கள் திரண்டு விழுதுகளைப் போலக் கோடு கோடாகத் தொடுதல்; to rain in a particular place on the surface of the sea with cluster of murkey sky, during winter season, which effects a tumultuous surface at about 1000 feet breadth and it goes to the level of causing damage to ships.

**தெய்வலோகம்** *teyva-lōgam*, பெ. (n.) தெய்வவுலகம் பார்க்க; see *teyva-v-ulagam*. "தெய்வலோகத்தின் படித்தாய்ச் செல்வத்துடனே அவதரித்தது" (பு. வெ. 9. 17. உரை).

[தெய்வம் + லோகம்]

த. உலகம் → Skt. lōga → த. லோகம்

**தெய்வவச்சம்** *teyva-vaccam*, பெ. (n.) கடவுளாணைக்கு அஞ்சுகை; fear of God.

[தெய்வம் + அச்சம்]

**தெய்வவணக்கம்** *teyva-vaṇakkam*, பெ. (n.) 1. கடவுளை வணங்குகை; worship of God. 2. நூன்முதலிற் கூறப்படும் கடவுள் வாழ்த்து; invocation of a deity at the beginning of a treatise. "தெய்வ வணக்கமுஞ் செயப்படு பொருளும்" (காரிகை. பாயி. 1. உரை).

[தெய்வம் + வணக்கம்]

**தெய்வவமைச்சன்** *teyva-vamaiccaṉ*, பெ. (n.) தேவர்களுக்கு அமைச்சனான வியாழன்; Jupiter, as counsellor of the gods.

[தெய்வம் + அமைச்சன்]

**தெய்வவாக்கு** *teyva-vākku*, பெ. (n.) 1. கடவுள் திருமொழி; word of God, divine utterance. 2. உருவிலிச் சொல் (அசரீரி); voice or utterance of an invisible speaker.

[தெய்வம் + வாக்கு]

**தெய்வவாழ்த்து** *teyva-vāḻttu*, பெ. (n.) தெய்வவணக்கம் பார்க்க; see *teyva-vaṇakkam*.

[தெய்வம் + வாழ்த்து]

**தெய்வவிசுவாசம்** *teyva-višuvāšam*, பெ. (n.) 1. கடவுளிடம் நம்பிக்கை; faith in God. 2. நம்பும் மதம்; theistic belief. 3. கடவுளிடத்துக் காட்டுவதுபோற் காட்டும் நம்பிக்கை; reverence and faith, as in God.

[தெய்வம் + விசுவாசம்]

**தெய்வவியப்பு** *teyva-viyappu*, பெ. (n.) வியப்புகள் மூன்றனுள் ஒன்று (சிலப். 10:167, உரை); pre-eminence resulting from divinity, one of three adisayam.

[தெய்வம் + வியப்பு]

**தெய்வவிரதன்** *teyva-viradaṉ*, பெ. (n.) சிறப்பு நோன்பு கொண்ட வீடுமன்; Bhīṣmaṉ, as one who took a divine vow.

[தெய்வம் + விரதன்]

**தெய்வவீடு** *teyva-vīḍu*, பெ. (n.) வானூர்தி; celestial vehicle. "திக்குற நினைப்பினிற் செல்லுந் தெய்வ வீடு" (கம்பரா. நகரப். 32).

[தெய்வம் + வீடு]

**தெய்வவுத்தி** *teyva-vutti*, பெ. (n.) தலைக் கோலம்; woman's head ornament. "தெய்வ வுத்தியோடு வலம்புரி வயின்வைத்து" (திருமுரு. 23).

[தெய்வம் + உத்தி]

**தெய்வவுலகம்** *teyva-vulagam*, பெ. (n.) வானுலகம்; the celestial world, heaven.

[தெய்வம் + உலகம்]

**தெய்வவேள்வி** *teyva-vēḷvi*, பெ. (n.) தேவருக்காக ஓமம் வளர்த்துச் செய்யும் வேள்வி; sacrifice to deities.

[தெய்வம் + வேள்வி]

**தெய்வாதனம்** *teyvādaṉam*, பெ. (n.) ஒரு கால் மடித்து ஒரு கால் ஊன்றியிருக்கும் இருக்கை வகை; a kind of yogic posture in which one leg is bent and the other leg is planted erect.

**தெய்வாதீனம்** *teyvādīnam,* பெ. (n.) *1.* தெய்வச் செயல்; divine providence. *2.* தற்செயல் *(உ.வ.)*; chance.

**தெய்வாவி** *teyvāvi,* பெ. (n.) *(கிறித்.)* தூய ஆவி; holy ghost.

*[தெய்வம் + ஆவி]*

**தெய்வானை** *teyvāṉai,* பெ. (n.) தெய்வயானை பார்க்க; see *teyva-yāṉai.*

*[தெய்வம் + யானை]*

**தெய்விகம்** *teyvigam,* பெ. (n.) *1.* கடவுள் தன்மையுள்ளது; that which is divine. *2.* கடவுட்செயல்; divine act or injunction. *3.* ஒன்பது பனை உயரமுள்ள ஓர் அளவு *(சுக்கிர நீதி. 232)*; a lineal measure of nine talam. *4.* தற்செயல்; chance. "சேனைக ளிளைப்பறத் தெய்விகந்தனில் வந்த" *(பாரத. பதினொன்காம். 68).* *5.* மேன்மை; transcendence, magnificence, super-eminance.

*[தெய்வ(ம்) + இகம்]*

**தெய்விகாதிசயம்** *teyvigādišayam,* பெ. (n.) தெய்வவியப்பு பார்க்க; see *teyva-viyappu.*

**தெய்வீகம்** *teyvīgam,* பெ. (n.) தெய்விகம் பார்க்க; see *teyvigam.* "தெய்வீகமாக நீர்தாமித் திசையில் வந்தது" *(சிவரக. சிவடுண்டிவன. 44).*

*[தெய்விகம் → தெய்வீகம்]*

**தெய்வீகமா-தல்** *teyvīgam-ā-,* 7 செ.கு.வி. (v.i.) இறத்தல்; to die as attaining the divine state *(திருப்பணி. மதுரைத்தல. 5).*

*[தெய்வீகம் + ஆ-]*

**தெய்வீகவுலா** *teyvīga-v-ulā,* பெ. (n.) இரட்டையர் இயற்றிய ஏகாம்பரநாதர் உலா; a poem by Iraṭṭaiyar in praise of Sivaṉ at Kanjipuram.

*[தெய்வீகம் + உலா]*

**தெய்வை** *teyvai,* பெ. (n.) குழம்பு *(அக.நி.)*; mixture of thick consistency.

*[தேய்வை → தெய்வை]*

**தெயிலுப்பு** *teyiluppu,* பெ. (n.) தெல்லுப்பு பார்க்க; see *telluppu (சா.அக.).*

**தெரவாங்கனை** *teravāṅganai,* பெ. (n.) மீன் வகை; a kind of fish.



**தெராட்டு**[1] *teraṭṭu,* பெ. (n.) விரைவாகச் செல்லுதல்; going speed. 'வண்டி தெராட்டுலே போகுது' *(நெல்லை.).*

**தெராட்டு**[2] *teraṭṭu,* பெ. (n.) தனியாய் விடுவது, களைகணின்றி விடுவது; abandon, leaving, helpless. 'தெராட்ல விட்டு விட்டான்' *(நெல்லை.).*

**தெரி**[1]**-த்தல்** *teri-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* வெளிப்படுத்துதல்; to make evident, bring to view. "தெய்வ மாக்கவி மாட்சி தெரிக்கவே" *(கம்பரா. சிறப். 6).* *2.* சொல்லுதல் *(திவா.)*; to tell, declare, inform. *3.* குறிப்பிட்டு விளக்குதல்; to explain specifically. "தெரிந்து மொழி கிளவி" *(தொல். சொல். 56).* *4.* எழுதுதல் *(பிங்.)*; to write, inscribe. *5.* கொழித்தல் *(யாழ்.அக.)*; to sift. *6.* தெரிந்தெடுத்தல்; to choose, select. "தெரித்த கணையாற் றிரிபுர மூன்றுஞ் செந்தீயின் மூழ்கவே *(தேவா. 10. 7).* *7.* பங்கிடுதல் *(யாழ். அக.)*; to partition, divide. *8.* காலங்கழித்தல்; to pass, as a certain period of time.

**தெரி**[2]**-த்தல்** *teri-,* 4 செ.கு.வி. (v.i.) மாறுபடுதல் *(யாழ்.அக.)*; to be perverse.

**தெரி**[3]**-தல்** *teri-,* 4 செ.கு.வி. (v.i.) ஆராய்ந்து வரையறை செய்தல்; எல்லை தெரித்தல்; to determine the border. "எல்லை தெரித்த பிடி சூழ்ந்து பிடாகை நடந்து கல்லும், கள்ளியும் நாட்டி" *(பெரிய லெய்டன் செப்பேடுகள்).*

**தெரி**[4]**-த்தல்** *teri-,* 4 செ.குன்றாவி. (v.t.) அகலல்; to get rid of as diseases *(சா.அக.).*

**தெரி**[5]**-தல்** *teri-,* 4 செ.கு.வி. (v.i.) *1.* தோன்றுதல்; to be seen, to become evident. "அந்த விண்மீன்

கண்ணுக்குநன்கு தெரிகின்றது". 2. விளக்கமாதல்; to be understood, intelligible, clear. "தன்னா னிகழ்ந்த தன்மை தானே தெரியச் சொன்னாள்" (கம்பரா. நகர்நீ. 37). 3. காணும் ஆற்றலைப் பெற்றிருத்தல்; to possess the power of sight. "அவனுக்குக் கண் தெரிகின்றது". 4. மனமறிதல்; to be conscious, as of one's guilt. 'தெரிந்து செய்த பாவம்'.

ம. தெரியுக; க. திளி; தெ. தெலியு; து. தெரியுனி; குட. திரி; கோத. தெய்ர்; துட. திர்ய; கூ. திரி

**தெரி[6]-தல்** *teri-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஆராய்தல்; to investigate, test, ascertain, enquire. "திறந் தெரிந்து தேறப்படும்" (குறள், 501). 2. அறிதல்; to know, understand. "எல்லாந் தெரியக் கேட்குநர் யார்?" (பரிபா. 12, 38). 3. தெரிந் தெடுத்தல்; to select, choose. "புனைமாண் மரீஇய வம்பு தெரிதியே" (கலித். 7). 4. கேட்டு அறிதல்; to learn through listening. "தெரிதல் நினைதலெண்ணலாகத் திருமாலுக்கு" (திவ். திருவாய். 6, 9, 11). 5. அரித்தெடுத்தல் (திவா.); to sift (செ.அக.).

**தெரிக்கல்** *teri-k-kal*, பெ. (n.) விளக்கி (விவரித்து)ச் சொல்லுகை; narration in detail. "சைவத் திறத்தினைத் தெரிக்கலுற்றாம்" (சிசி. பாயி. 2).

[தெரி → தெரிக்கல்]

**தெரிகடை** *teri-kaḍai*, பெ. (n.) 1. கழிவு; refuse. 2. தள்ளுபடி; that which is rejected as waste matter (சா.அக.).

[தெரி + கடை]

**தெரிகவி** *terikavi*, பெ. (n.) தெரிந்தெடுக்கப் பட்ட செய்யுள் திரட்டு; a poetic selection, anthology.

[தெரி + கவி]

**தெரிகவிச்செய்யுள்** *terikavi-c-ceyyuḷ*, பெ. (n.) பல நூல்களினின்று பொறுக்கி எடுக்கப் பட்ட செய்யுள்களின் தொகுதி; anthology of poems.

[தெரி + கவி + செய்யுள்]

**தெரிகாரம்** *teri-kāram*, பெ. (n.) பொரி காரம்; borax (சா.அக.).

[தெரி + காரம்]

**தெரிசொல்** *teri-šol*, பெ. (n.) 1. ஆணை, உண்மை (சத்தியம்) (அக.நி.); order, truth, promise. 2. தெரிந்த கரணியம் (சது.); cause, discovered, or alleged. 3. அருஞ்சொல் விளக்கம்; glossary (w).

[தெரி + சொல்]

**தெரிதரல்** *teridaral*, பெ. (n.) 1. அறிதல்; under stand. 2. தோற்றுதல்; to appear.

[தெரி → தெரிதரல்]

**தெரிதருதேற்றவுவமை** *teritaru-tēṟṟa-v-uvamai*, பெ. (n.) ஐயுற்றதினைத் தெரிந்து துணிவதாகிய அணி வகை; a kind of rhetoric.

[தெரிதரு + தேற்றவுவமை]

(எ-டு)

நல்லார்கட் பட்ட வறுமையி னின்னாதே
கல்லார்கட் பட்ட திரு.

இக்குறளில், கல்லாதா ரிடத்திற் பொருந்திய செல்வம், கற்றாரிடத்தில் பொருந்திய வறுமையினும் துன்பஞ் செய்வதாம், என்புழி, கல்லார் மாட்டுச் செல்வத்திற்குக் கற்றார் மாட்டு வறுமை உவமை கூறத்தக்கதன்று என்பது தெளிந்து கூறப்படுதலின் இது தெரிதருதேற்ற உவமையாம்.

"தாமரை நாண்மலருந் தண்மதியால் வீறழியும்
காமர் மதியுங் கரைவிரவும் - ஆமிதனால்
பொன்னை மயக்கும் புனை சுணங்கி னார்முகமே
என்னை மயக்கு மிது"

இதுவு மஃதே.

**தெரிந்தவன்** *terindavaṉ*, பெ. (n.) அறிவுடை யோன்; a man of knowledge and learning.

[தெரி + த் + த் + அ + அன்]

**தெரிந்துசெயல்வகை** *terindu-šeyal-vagai*, பெ. (n.) மன்னன் தான் செய்யும் வினைகளை ஆராய்ந்து செய்யுந் திறம் (குறள், 47, அதிகாரம்); the king's duty of acting after due deliberation.

[தெரிந்து + செயல் + வகை]

**தெரிந்துணர்ச்சி** *terinduṇarcci*, பெ. (n.). அறிந்துணரும் உணர்வு; judgment, discretion, wisdom. "மெய்யுறுவதாகா தென்னுந் தெரிந் துணர்ச்சி யுண்டாயின்" (இறை. 2, 31).

[தெரிந்து + உணர்ச்சி]

**தெரிந்துணர்வு** *terinduṇarvu,* பெ. (n.) தெரிந்துணர்ச்சி பார்க்க; see *terinduṇarcci.* "தெரிந்துணர்வொன்றின்மையால்" (திவ். இயற். பெரியதிருவந். 82).

*[தெரிந்து + உணர்வு]*

**தெரிந்துதெளிதல்** *terindu-teḷi-dal,* பெ. (n.) அமைச்சர் முதலாயினாரைப் பல்வகையானும், ஆராய்ந்து தெளிகை (குறள், 5ஆம் அதி.); to select, by a king of ministers, after careful, consideration of their qualification.

*[தெரிந்து + தெளி-தல்]*

**தெரிந்துவினையாடுதல்** *terindu-viṉai-y-āḍudal* பெ. (n.) தெளியப்பட்ட அமைச்சர் முதலாயினாரை, அவர் செய்யவல்ல, வினைகளை அறிந்து அவற்றின் கண்ணே ஆளுந் திறம் (குறள், 52ஆம் அதி.); employment of ministers and other agents in suitable duties.

*[தெரிந்து + வினையாடுதல்]*

**தெரிநிலை** *teri-nilai,* பெ. (n.) 1. தெளிவுபட அறிவிக்கும் நிலை (நன். 423); the state of clear indication. 2. ஆராய்ந்து அறியும் நிலை; the state of being investigated. "தெரிநிலைக் கிளவி" (தொல். சொல். 256, சேனா.). 3. தெரிநிலை வினை பார்க்க; see *terinilai-viṉai.* 4. எல்லா விரலும் விரிந்து வளைந்து நிற்கும் இணையா வினைக்கை வகை (சிலப். 3, 18, உரை); a gesture with one hand in which all the fingers are stretched and slightly bent.

*[தெரி + நிலை]*

**தெரிநிலைக்கை** *terinilai-k-kai,* பெ. (n.) தெரிநிலை,4 (சிலப். 3:18 உரை) பார்க்க; see *terinilai,4.*

*[தெரி + நிலை + கை]*

**தெரிநிலையும்மை** *terinilai-y-ummai,* பெ. (n.) தெளிவாகத் தெரிந்ததால் கூறும் உம்மை; declaration of a conviction as in ஆணுமன்று, பெண்ணுமன்று. தெரிதற் பொருட்கண் வருதலிற் றெரிநிலை யும்மை (தொல். சொல். 255, சேனா.).

*[தெரிநிலை + உம்மை]*

**தெரிநிலைவினை** *terinilai-viṉai,* பெ. (n.) காலத்தை வெளிப்படையாகத் தோற்றுவிக்கும் வினை (நன். 320, உரை); verbs explicity denoting tense by a tense-sign, opp. to kuṟippu-viṉai.

*[தெரிநிலை + வினை]*

**தெரிநிலைவினைப்பெயரெச்சம்** *terinilaiviṉai-p-peyareccam,* பெ. (n.) செயலும் காலமும் விளக்கிப் பெயரை அவாவி நிற்பது; verbal noun which acts as an adjective.

*[தெரிநிலைவினை + பெயரெச்சம்]*

**தெரிநிலைவினைமுற்று** *terinilai-viṉaimuṟṟu,* பெ. (n.) செயல், காலம், இடம் எனும் மூன்றனையும் விளக்கி முற்றுப்பெற்று நிற்பது; a verb which gives complete meaning.

*[தெரிநிலை + வினைமுற்று]*

'வந்தாய்' எனும் சொல், வருதலாகிய செயலையும் இறந்த காலத்தையும் முன்னிலை இடத்தையும் காட்டி முற்றுப்பெற்றுள்ளது.

**தெரிநிலைவினையெச்சம்** *terinilai-viṉai-y-eccam,* பெ. (n.) செயல், காலம் இரண்டை மட்டும் காட்டி, வினை எஞ்சி நிற்பது; a verbal clause which shows only, the tense, and the deed.

*[தெரிநிலை + வினையெச்சம்]*

வந்து என்னும் சொல் வருதலாகிய செயலும் இறந்த காலமும் அமையப்பெற்று வினையை அவாவி நிற்கிறது.

**தெரிப்பான்** *terippāṉ,* பெ. (n.) வயிறு வீங்கி நீர் கழியச் செய்யும் ஆட்டு நோய் வகை; a disease peculiar to sheep in which the abdomen gets swollen, and there is watery discharge from the bowls.

*[தெரி → தெரிப்பான்]*

**தெரிப்பு** *terippu,* பெ. (n.) 1. அறிவிப்பு; informing, acquainting, communicating. 2. ஆராய்வு (யாழ்.அக.); investigation. 3. சொல்லுகை (வின்.); saying, mentioning. 4. சீட்டு; note of hand. 5. கொழிப்பு; sifting with a fan. 6. பிரிப்பு (யாழ்.அக.); dividing. 7. கொக்கான் விளையாட்டில் கற்களைத்

தெரிந்தெடுக்கை (யாழ்ப்.); selecting stones in the kokkāṉ play. 9. கொழிக்கப்பட்டவை; things sifted, assorted or chosen. 10. எழுதுகை (சூடா.); writing, inscription.

[தெரி → தெரிப்பு]

**தெரிபடு-தல்** *teri-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. தெரிந்தெடுக்கப்படுதல்; to be selected. 2. தோன்றுதல்; to appear.

[தெரி + படு-.]

**தெரிபொருள்**[1] *teri-poruḷ,* பெ. (n.) அறிபவனாகிய ஆதன்; soul, as the agent of cognition. "தெரிபொரு டேரின்" (பரிபா. 2, 26).

[தெரி + பொருள்]

**தெரிபொருள்**[2] *teri-poruḷ,* பெ. (n.) 1. தேர்ந்த பொருள்; elected meaning. 2. தேட்டம்; thrived property.

[தெரி + பொருள்]

**தெரிமா** *terimā,* பெ. (n.) 1. இரைக்காக அலையும் விலங்கு; any animal that roams about in search of prey. 2. அரிமா; lion (சா.அக.).

[தெரி + மா]

**தெரிமானனப்புள்** *terimāṉaṉa-p-puḷ,* பெ. (n.) ஆந்தை; owl (சா.அக.).

**தெரிமுத்தம்** *teri-muttam,* பெ. (n.) இதளியம்; mercury (சா.அக.).

[தெரி + முத்தம்]

தெரித்தால் முத்தைப்போல் எங்கும் பரவிக் கிடப்பதால் இப்பெயர் வந்தது போலும்.

**தெரியசிங்கி** *teriya-siṅgi,* பெ. (n.) பருந்து; kite, heron (சா.அக.).



**தெரியத்தெரி-தல்** *teriya-t-teri-,* 2 செ.குன்றாவி. (v.t.) தெளிவாயறிதல்; to understand clearly. "தெரியத் தெரியுந் தெரிவிலாதானை" (நாலடி. 247).

[தெரிய + தெரி-.]

**தெரியப்படுத்து-தல்** *teriya-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அறிவித்தல்; to explain, to submit, to make known, or reveal. 'அவன் தன் முதலாளியிடத்தில் தெரியப்படுத்தினான்'.

[தெரிய + படுத்து-.]

**தெரியல்** *teriyal,* பெ. (n.) 1. தெரிந்து கொள்ளுகை; selection. "தேங்கமழ் தெரியற் றீம்பூந்தா ரவன்" (சீவக. 2253). 2. பூமாலை; flower garland. "புனைவினைப் பொலிந்த பொலனறுந் தெரியல்" (புறநா. 29).

[தெரி → தெரியல்]

**தெரியலர்** *teriyalar,* பெ. (n.) 1. அறிவில்லார் (யாழ்.அக.); the ignorant, the unenlightened, the uninformed. 2. பகைவர்; enemies. "தெரியலர் வந்து வணங்கித் திறையிடுஞ் சீர்மதுரை" (திருவாலவா. பக். 320, பயகர 11).

[தெரி + அல் + அர்]

**தெரியவுணர்-தல்** *teriya-v-uṇar-,* 2 செ.குன்றாவி. (v.t.) தெளியவறிதல்; to understand clearly. "தேறித் தெரியவுணர்நீ" (பரிபா. 6, 92).

[தெரிய + உணர்-.]

**தெரியாத்தன்மை** *teriyā-t-taṉmai,* பெ. (n.) தெரியாத்தனம் பார்க்க; see *teriyā-t-taṉam.*

[தெரி + ஆ + தன்மை. 'ஆ' எதிர் மறை இடைநிலை]

**தெரியாத்தனம்** *teriyā-t-taṉam,* பெ. (n.) அறியாமை (கொ.வ.); ignorance.

[தெரி + ஆ + தனம். 'ஆ' எதிர் மறை இடைநிலை]

**தெரியாநிலைவினை** *teriyānilai-viṉai,* பெ. (n.) குறிப்புவினை (சங்.அக.) பார்க்க; see *kuṟippu-viṉai.*

[தெரி + ஆ + நிலை + வினை]

**தெரியாப்புத்தி** *teriyā-p-putti,* பெ. (n.) தெரியாத்தனம் பார்க்க; see *teriyā-t-taṉam.*

[தெரி + ஆ + புத்தி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]

**தெரியிழை** *teriyilai,* பெ. (n.) 1. தேர்ந்த அணிகலன்; choiced ornament. 2. பெண்; woman, as wearing choice ornaments. தெரியிழை வந்தாள்.

*[தெரி + இழை]*

**தெரியுமோர்** *teriyumōr,* பெ. (n.) தெரிவோர்; those who know, or understand, learned men. "நேரீற் றியற்சீர் நிலைக்குரீத்தன்றே தெரியு மோர்க்கே" (தொல். பொருள். 337).

*[தெரியும் + ஓர்]*

**தெரிவி-த்தல்** *terivi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. அறிவித்தல்; to explain, point out, show, teach. 2. வெளிப்படுத்துதல்; to bring to light, manifest, reveal, display.

*[தெரி + வி. 'வி' பிறவினை ஈறு]*

**தெரிவிடு-தல்** *terividu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. தெரிந்தெடுத்தல்; to choose, select, cull. 2. ஆராய்தல்; to examine.

*[தெரிவு + இடு-.]*

**தெரிவில்புகழ்ச்சி** *terivil-pugalcci,* பெ. (n.) ஒன்றைப் பழித்தற்கு வேறொன்றைப் புகழும் அணி (வீரசோ. அலங். 32); figure of speech in which one is praised by way of slighting another.

*[தெரிவு + இல் + புகழ்ச்சி]*

எ-டு

பிறர்செல்வங் கண்டாற் பெரியோர் மகிழ்வுஞ்
சிறியோர் பொறாத திறமு - மறிவுறீஇச்
செங்கமல மெய்மலர்ந்த தேங் குமுத மேபசந்த
பொங்கொளியோன் வீறெய்தும் போது

**தெரிவினை** *teri-vinai,* பெ. (n.) தெரிநிலை வினை பார்க்க; see *terinilai-vinai.*

*[தெரி + வினை]*

**தெரிவெடு-த்தல்** *teri-v-edu-,* 4 செ.குன்றாவி. (v.t.) கடலில் வீசிய வலையில் மிதப்புக் கட்டிய மேற்பாகத்தையும், கல் கட்டப்பட்ட கீழ்பாகத்தையும் பிரித்து எடுத்தல் (மீனவ.); to separate the upper part of the net which is tied with the buoy and the lower part, which is tied with the stone.

*[தெரிவு + எடு-.]*

**தெரிவை**[1] *terivai,* பெ. (n.) 1. 25 முதல் 31 வரையான அகவைக்குட்பட்ட பெண் (திவா.); a woman between the age of 25 and 31 years. 2. 31 முதல் 40 வரையிலான அகவைக்குட்பட்ட பெண்; any woman between the age of 31 and 40 years. 2. பெண்; woman. "தெரிவை மார்க்கொரு கட்டளையெனச் செய்த திருவே" (கம்பரா. சித்திர. 33).

ம. தெரிவ; க. தரளெ (பெண்); தெ. தெரவ

**தெரிவை**[2] *terivai,* பெ. (n.) கன்னி ஓரை (பிங்.); virgo in the zodiac.

**தெரு** *teru,* பெ. (n.) 1. வீதி (திவா.); street. "வாரல் வாழிய ரையவெந் தெருவே" (குறுந். 139). 2. வழி; highway, public road. "தெருவும் மாமறுகலின் மயக்குற்றன" (புறநா. 345).

ம. தெரு; தெ. தெருவு

முடுக்கு சிறு சந்து; சந்து தெருவின் கிளை; தெரு சிறு வீதி; மறுகு போக்குவரத்து மிகுந்த பெருந்தெரு அல்லது வீதி; ஆவணம் கடைத்தெரு; அகலுள் அகன்ற மறுகு; சாலை பெருவழி (road).

சந்தி மூன்று தெருக்கள் கூடுமிடம்; சதுக்கம் நான்கு தெருக்கள் கூடுமிடம் (சொல். 50).

**தெருக்கதவு** *teru-k-kadavu,* பெ. (n.) தெருப் பக்கத்திலமைந்த கதவு; street door.

*[தெரு + கதவு]*

**தெருக்கந்தம்** *teru-k-kandam,* பெ. (n.) குங்கிலியம்; Indian lammder resin (சா. அக.).

**தெருக்காட்சிகொடு-த்தல்** *teru-k-kātci-kodu-,* 4 செ.குன்றாவி. (v.t.) கமுக்கமாக வைத்திருக்க வேண்டியதை விளம்பரப்படுத்தல்; to publish what should be kept secret (செ.அக.).

*[தெரு + காட்சி + கொடு-.]*

**தெருக்கால்** *teru-k-kāl,* பெ. (n.) வீட்டருகில் பரவர் நடும் முழுத்தக்கால்; post planted near a marriage-house in the first night of a wedding ceremony.

*[தெரு + கால்]*

**தெருக்காவல்** *teru-k-kāval,* பெ. (n.) தெருவிற் செய்யும் காவல்; patrol of streets.

*[தெரு + காவல்]*

**தெருக்குத்து** *teru-k-kuttu,* பெ. (n.) தெருவுக்கு நேராக அமைந்திருக்கும் வீடு; considered inauspicious portion of a house, being opposite to a street. *"அந்த வீடு தெருக்குத்தாக உள்ளது" (உ.வ.).*

*[தெரு + குத்து]*

இத்தகைய வீடுகள் செழிப்படையா என்பது நம்பிக்கை.

**தெருக்குத்துவா** *teru-k-kuttuvā,* பெ. (n.) 1. குத்துவா மீன்வகை; a herring, golden, glossed with purple. 2. நீலநிறமுள்ள கடல்மீன் வகை; a herring bluish.

**தெருக்குத்துவீடு** *teru-k-kuttu-vīḍu,* பெ. (n.) தெருக்குத்து பார்க்க; see *teru-k-kuttu.*

*[தெருக்குத்து + வீடு]*



**தெருக்கூத்து** *teru-k-kūttu,* பெ. (n.) 1. தெரு வெளியில் நடக்கும் நாடகம்; dramatic performance or dance in a street. 2. எல்லோராலும் நகைக்கத்தக்கது; that which is a public disgrace.

*[தெரு + கூத்து]*



**தெருக்கோலம்** *teru-k-kōlam,* பெ. (n.) தெருப் பக்கத்துள்ள தரையில் இடுங்கோலம் (நாஞ்.); decoration on the side of the floor facing a street.

*[தெரு + கோலம்]*

**தெருச்சண்டை** *teru-c-canḍai,* பெ. (n.) ஒன்றுக்கும் உதவாதவற்றுக்கு முரண்பட்டுத் தெருவில் செய்யும் தகராறு; quarrel at street due to insignificant matter. தெருச்சண்டை கண்ணுக்கு இன்பம் *(பழ.).*

*[தெரு + சண்டை]*

**தெருட்சி** *teruṭci,* பெ. (n.) 1. அறிவு (பிங்.); knowledge, wisdom, understanding. 2. தெளிவு; clearness. "தெருட்சி சேரவைத் திசைமுகன் சபித்த நாள்" *(சேதுபு. விதூம. 71).* 3. முதற்பூப்பு; attaining puberty.

*[தெருள் → தெருட்சி]*

**தெருட்டல்** *teruṭṭal,* பெ. (n.) யாழ் நரம்பை உருட்டும் இசைக்கரண வகை; rubbing the lute-string to test the tone. "சீருடனுருட்ட றெருட்டல்" *(சிலப். 7. கட்டுரை.).*

*[தெருட்டு + அல். 'அல்' தொ.பெ. ஈறு]*

**தெருட்டிக்கலியாணம்** *teruṭṭi-k-kaliyāṇam,* பெ. (n.) தெருட்டுக்கலியாணம் பார்க்க; see *teruṭṭu-k-kaliyāṇam.*

*[தெருட்டி + கலியாணம்]*

**தெருட்டு[1]-தல்** *teruṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. அறிவுறுத்துதல்; to inform, make known. 'தலைமகள் உடன்போகியவழித் தெருட்டு வார்க்குச் செவிலித்தாய் சொல்லியது' *(ஐங்குறு. 380. உரை).* 2. மனம் தெளியச் செய்தல்; to convince, persuade, enlighten the mind. 3. ஊடல் தீர்த்தல்; to pacify, make up a love-quarrel. "தெருட்டவுந் தெருளா தூடலொடு துயில்வோர்" *(மணிமே. 7:52).* 4. வற்புறுத்துதல்; to confirm, assure. 5. இசை பார்க்க யாழ் நரம்பை அழுந்தத் தீண்டித் திருகிவிடுதல்; to rub and test the tone of a lute string. "திருந்து நரம்பை யுறத்தொட்டுத் திருகிவிட றெருட்டல்" *(கூர்மபு. கண். 140).*

*[தெருள் → தெருட்டு-.]*

**தெருட்டு**[2] *teruṭṭu,* பெ. (n.) 1. அறிவிப்பு; informing, convincing. 2. தேற்றுகை; consoling, pacifying. 3. பூப்பெய்துதல்; attaining puberty, as of a girl.

[திரள் → தெருள் → தெருட்டு]

**தெருட்டுக்கலியாணம்** *teruṭṭu-k-kaliyāṇam,* பெ. (n.) 1. குழந்தைத் திருமணப் பெண்ணின் மணநிறைவு (இருதுசாந்தி): consummation after a child-wife attains puberty. 2. திருமணம் செய்தற்குரிய பருவத்திற் செய்யும் சடங்கு; ceremony at the time of a girl's becoming marriageable.

[திரள் → திரட்டு → தெருட்டு + கலியாணம். திரள் = சமைதல், பருவ மெய்துதல் ]

**தெருண்டபெண்** *teruṇḍa-peṇ,* பெ. (n.) சமைந்த பெண்; a girl who has attained puberty (சா.அக.).

[திரண்ட + பெண்.
திரண்டபெண் → தெருண்ட பெண்]

**தெருண்டமேலவர்** *teruṇḍa-mēlavar,* பெ. (n.) அறிவிற் சிறந்தவர்கள்; wise people.

[தெருண்ட + மேலவர்]

**தெருணை** *teruṇai,* பெ. (n.) மரவகை; potato plum of Mysore.

**தெருத்திண்ணை** *teru-t-tiṇṇai,* பெ. (n.) வாயிற் புறத்துள்ள திண்ணை; pial facing street.

[தெரு + திண்ணை]

**தெருப்பங்காளி** *teru-p-paṅgāḷi,* பெ. (n.) ஒரே தெருவில் வாழ்வோன்; one who lives in the same street.

[தெரு + பங்காளி]

**தெருப்பள்ளிக்கூடம்** *teru-p-paḷḷi-k-kūḍam,* பெ. (n.) வாயிற்றிண்ணையில் அமைந்துள்ள பள்ளிக்கூடம்; pial-school.

மறுவ. திண்ணைப் பள்ளிக்கூடம்

[தெரு + பள்ளி + கூடம்]

**தெருப்பாய்ச்சல்** *teru-p-pāyccal,* பெ. (n.) தெருக்குத்து பார்க்க; see *teru-k-kuttu.*

[தெரு + பாய்ச்சல்]

**தெருப்பிள்ளை** *teru-p-piḷḷai,* பெ. (n.) ஒரு தெருவிற் பெரியவராய் உள்ளவர் (இ.வ.); the most wealthy and influential man of a street.

[தெரு + பிள்ளை]

**தெருமரல்** *teru-maral,* பெ. (n.) 1. மனச்சுழற்சி; giddiness, confusion, perplexity, distress. "அலமர றெருமர வாயிரண்டுஞ் சுழற்சி" (தொல். சொல். 311). 2. அச்சம்; fear.

[தெருமரு → தெருமரல்]

**தெருமரு-தல்** *teru-maru-,* 12 செ.கு.வி. (v.i.) மனஞ் சுழலுதல்; to be unnerved, to sink under distress, to be confused in mind. "வளைமுன் கை பற்றி நலியத் தெருமந்திட்டு" (கலித். 51).

**தெருமறிச்சான்** *teru-maṟiccāṉ,* பெ. (n.) திருவிழாக் காலங்களில் தீண்டாக்குலத்தினர் வாராதபடி தெருவையடைத்து வைக்குந் தட்டி (நாஞ்.); 'tattis' placed across a street preventing the untouchables from entering during a festival.

[தெரு + மறிச்சான்]

**தெருவம்** *teruvam,* பெ. (n.) தெரு பார்க்க; see *teru.* "உருவச் செங்கொடி தெருவத்துப் பரப்பி" (பெருங். உஞ்சைக். 38. 351).

[தெரு → தெருவம்]

**தெருவாக்கு-தல்** *teruvākku-,* 8 செ.குன்றாவி. (v.t.) வீணாக்குதல்; to make it useless. 'எல்லாத்தையும் தெருவாக்கிட்டான்' (நெல்லை.).

[தெரு + ஆக்கு-.]

வீணானவற்றைத் தெருவிற்குப் போடும் தன்மையினால் வீணாக்குதல் தெருவாக்குதல் எனக் குறிப்பதற்கு அடிப்படையாயிற்று

**தெருவாசல்** *teru-vāšal,* பெ. (n.) வெளிவாசல்; door or gate of house, opening into a street, dist. fr. uḷ-vāšal.

[தெரு + வாசல்]

**தெருவிசு** *teruvišu,* பெ. (n.) 1. திறமையுடையது; that which is strong. 2. நல்வடிவு; healthy, formation of body, shapeliness. 'குழந்தைக்கு இன்னும் தெருவிசு ஏற்படவில்லை'.

[திறவிது → தெருவிது → தெருவிசு]

ஒ.நோ. நறுவிது - நறுவிசு

**தெருவில்விடு-தல்** *teruvil-viḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) *ஏதிலியாய் விடுதல்; களைகணின்றி விடுதல்;* abandon, helpless.

*[தெருவில் + விடு-.]*

**தெருவிலழகி** *teru-vil-aḻagi,* பெ. (n.) *குப்பைமேனி;* plant adoring rubbish heap *(சா.அக.).*

*[தெருவில் + அழகி (மருத்துவக் குழூஉக் குறி)]*

**தெருவு** *teruvu,* பெ. (n.) தெரு *பார்க்க;* see *teru.* "தேடுகின்றிலை தெருவுதோ றலறிலை" *(திருவாச. 5, 31).*

*[தெரு → தெருவு]*

**தெருவுப்பாடு** *teruvu-pāḍu,* பெ. (n.) *வீட்டின் முன்புறம்;* front portion of a house facing a street.

*[தெருவு + பாடு]*

**தெருள்[1](ளு)-தல்** *teruḷ(ḷu)-,* 16 செ.கு.வி. (v.i.) *1. உணர்வுறுதல்;* to know, to gain true knowledge. "தெருளாதான் மெய்ப்பொருள் கண்டற்றால் தேரின் அருளாதான் செய்யும் அறம்" *(குறள், 249). 2.* தெளிதல்; to perceive, ascertain, understand clearly. "தெருண்ட வறிவினர்" *(நாலடி. 301). 3.* பூப் பெய்துதல்; to arrive at puberty as a girl. *4. புகழுடைதல்;* to be renowned. *5.* விளங்குதல்; to be clear lucid. "வளமலை நாடனைத் தெருள . . . நீ யொன்று பாடித்தை" *(கலித். 43).*

**தெருள்[2]** *teruḷ,* பெ. (n.) *1.* திரளல்; maturing. *2.* தெளிவு; intellectual clearness *(சா.அக.).*

*[திரள் → தெருள்]*

**தெருள்வு** *teruḷvu,* பெ. (n.) தெருள் *பார்க்க;* see *teruḷ.*

*[தெருள் → தெருள்வு]*

**தெருளல்** *teruḷal,* பெ. (n.) *1.* திரளல்; attaining puberty. *2.* தெளிவடைதல்; having mature knowledge. *3.* தெளிவு; good understanding. தெருளாமனதுக்கு இருளே இல்லை *(பழ.). 4.* திரண்டு வருதல்; coming together as butter while churning the curd *(சா.அக.).*

*[திரளல் → தெருளல்]*

**தெருளான்** *teruḷāṉ,* பெ. (n.) அறிவிலி *(அக.நி.);* fool.

*[தெருள் + ஆ + அன். 'ஆ' எதிர்மறை. இடைநிலை]*

**தெருளுடைமை** *teruḷ-uḍaimai,* பெ. (n.) *அறிவுடைமை;* possessing clear knowledge acuteness of discernment *(சா.அக.).*

*[தெருள் + உடைமை]*

**தெல்[1]** *tel,* பெ. (n.) தெல்லு *பார்க்க;* see *tellu* *(செ.அக.).*

**தெல்[2]** *tel,* பெ. (n.) *அஞ்சல்;* post.

**தெல்[3]** *tel,* பெ. (n.) தெல்லாட்டு *பார்க்க;* see *tellāṭṭu.*

**தெல்லடி[1]-த்தல்** *tel-l-aḍi-,* 4 செ.கு.வி. (v.i.) தெல் *விளையாடுதல்;* to play at the game of tel.

*[தெல்' + அடி-.]*

**தெல்லடி[2]-த்தல்** *tel-l-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) வஞ்சனை செய்தல்; the practice fraud. "தெல்லடித்துப் புலவரெனத் திரியலாமே" *(தமிழ்நா. 230).*

*[தெல் + அடி-.]*

**தெல்லாட்டம்** *tellāṭṭam,* பெ. (n.) *1.* தெல்லு *பார்க்க;* see *tellu. 2.* வஞ்சனை; fraud, trick, deception.

*[தெருள் + ஆட்டம் - தெருளாட்டம் → தெல்லாட்டம்]*

**தெல்லாட்டு** *tellāṭṭu,* பெ. (n.) *விளையாட்டு வகை;* a kind of play.

*[சில் → தெல் + ஆட்டு]*

கோலியும் தெல்லும் கருவி வகையாலன்றி ஆட்டு வகையால் ஏறத்தாழ ஒன்றே. கோலிக்குப் பதிலாய்த் தெல்லுக்காயைப் பயன்படுத்துவதே தெல்லாட்டு. ஆயினும், கருவி வேறுபாட்டிற்குத் தக்கபடி தெறிக்கும் வகையும் வேறுபட்டதாம். இடக்கைச் சுட்டுவிரற்கும் பெருவிரற்கும் இடையில் இடுக்குவது இருகருவிக்கும் பொதுவெனினும், வலக்கைச் சுட்டுவிரலால் தெறிப்பது கோலிக்கும், வலக்கை நடுவிரலால் தெறிப்பது தெல்லிற்கும் சிறப்பாம். சிலர் வலக்கை மோதிர விரலைத் தெல்லிற்குப் பயன்

படுத்துவர். கோலியைத் தெறிக்கும்போது வலக்கை யகங்கை முன்னோக்கி நிற்கும்; தெல்லைத் தெறிக்கும்போது அது மேனோக்கி நிற்கும்.

**தெல்லி** *telli,* பெ. (n.) *1. மீன்பிடித்து இடுவதற்கான சிறுகூடை;* angler's basket. *2. சிறுவயல்;* a small field.

**தெல்லு** *tellu,* பெ. (n.) *1.* தெல்லுக்காய்; the disc-like seed of a plant, used in a game. "தெல்லுக்கரகங் கோங்கரும்பு *(உவமான சங்கிரகம், 11).* 2. விளையாட்டு வகை; a game with a small disc-like seed of a plant. 3. வழிச்செல்லும் ஒரு நிலையில், பல்லக்குத் தூக்குபவர்கள் தோள் மாற்றும் அஞ்சலிடம் (யாழ்.அக.); stage in a journey by palanquin; place of changing palanquin-bearers. *4.* நெடும் பாத்தி; oblong plots bounded by small ridge of a field. *5.* ஒரு வகைக்கொடி; a climber. *6.* நெடுங்கிடங்கு (யாழ்.அக.); long pit.

*[தெல் → தெல்லு]*

**தெல்லுக்கட்டு-தல்** *tellu-k-kattu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* இழுபறிப்படுதல்; to be pushed this way and that, to be distracted. *2.* பாத்தி கட்டுதல்; to put up ridges, as in a field.

*[தெல்லு + கட்டு-]*

**தெல்லுக்காய்** *tellu-k-kāy,* பெ. (n.) தெல் மரத்தின் காய்; the seed of 'tel' tree. தெல்லுக்காய் தெறித்தல் பாண்டி நாட்டு விளையாட்டு.

*[தெல்லு + காய்]*

**தெல்லுக்காரர்**[1] *tellu-k-kārar,* பெ. (n.) மாற்றுச் சிவிகையாளர் (யாழ்ப்.); relay of bearers for a palanquin.

*[தெல்லு + காரர்]*

**தெல்லுக்காரர்**[2] *tellu-k-kārar,* பெ. (n.) அஞ்சற்காரர்; postman.

*[தெல்லு + காரர்]*

**தெல்லுக்கொடி** *tellu-k-kodi,* பெ. (n.) தெல்லு பார்க்க; see *tellu* (சா.அக.).

*[தெல்லு + கொடி]*

**தெல்லுப்பு** *telluppu,* பெ. (n.) வளையலுப்பு; white medicinal salt.

**தெல்லோட்டு** *tellōttu,* பெ. (n.) ஓய்வில்லாத அலைக்கழிப்பு; continual teasing, pressing or harassing.

*[தெல் + ஓட்டு]*

**தெலிங்கம்** *teliṅgam,* பெ. (n.) தெலுங்கம் பார்க்க; see *teluṅgam.* "தெலிங்கங் கலிங்கம் வங்கம்" (நன். 272, மயிலை).

*[தெனுகு → தெலுகு → தெலுங்கு → தெலிங்கம்]*

**தெலுகு** *telugu,* பெ. (n.) தெலுங்கம் பார்க்க; see *teluṅgam* (செ.அக.).

*[தெனுகு → தெலுகு]*

**தெலுங்கம்** *teluṅgam,* பெ. (n.) *1.* தெலுங்கு நாடு; Telugu country. *2.* தமிழியக் குடும்ப மொழிகளுள் ஒன்றான தெலுங்கு மொழி; one of the Dravidian language, the Telugu language.

*[தெலுங்கு + அம்]*

**தெலுங்கன்** *teluṅgaṉ,* பெ. (n.) தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்டவன்; Telugu man. "திகைத்து நின்றேந் தெலுங்கரேம்" *(கலிங். 456).*

*[தெலுங்கு + அன்]*

**தெலுங்கு** *teluṅgu,* பெ. (n.) ஆந்திரநாட்டு மொழி; language of Andra Pradesh. கன்னடமும் களி தெலுங்கும் கவின் மலையாளமும் துளுவும் (மனோன்மணீயம்).

மறுவ. வடுகு, ஆந்திரம்

*[தெனுகு → தெலுகு → தெலுங்கு]*

தென்னிந்தியாவில், கிழக்கே கடற்கரையொட்டிப் பழவேற்காட்டிலிருந்து சிக்காக்கோல் வரைக்கும், மேற்கே மராட்டிய மைசூர்ச் சீமைகளின் கீழெல்லை வரைக்கும், 'கொடுக்கப்பட்ட கோட்டங்கள்' (ceded districts) கர்நூல், ஐதாராபாத்துச் சீமையின் பெரும்பகுதி நாகபுர நாட்டின் ஒரு பகுதி கோண்டுவனம் ஆகிய இடங்களில் பெரும்பாலும் தாய்மொழியாகப் பேசப்படுவது தெலுங்கு.

தெலுங்கிற்கு வடுகு, ஆந்திரம் என்னும் பெயர்களுண்டு. தெலுங்கு என்பது தெலுங்கராலேயே இடப்பட்டது; வடுகு

என்பது தமிழாராலும், ஆந்திரம் என்பது ஆயராலும் இடப்பட்டன.

தெலுங்கு தமிழ்நாட்டிற்கு வடக்கில் வழங்குவதால் வடுகு எனப்பட்டது. தெலுங்கு என்பதன் பண்டை வடிவம் திரிலிங்கம்.

தெலுங்கு என்னும் பெயர் தெலிங்க, தைலிங்க, தெலுகு, தெனுங்கு, தெனுகு என்னும் வடிவங்களிலும் தெலுங்கர்க்குள் வழங்கி வருகின்றது. இவற்றுள் தெனுகு என்னும் வடிவத்தைச் சிறந்ததாகக் கொண்டு அதற்குத் 'தேன் போன்றது' என்னும் பொருள் கற்பிப்பது தெலுங்குப் பண்டிதர் வழக்கம் *(தி.தா. 81-82).*

**தெலுங்குக்கட்டு** *telungu-k-kaṭṭu,* பெ. (n.) **மாம்பழக் கட்டு என்னும் புடைவையணியும் வகை;** mambaḻa-k-kaṭṭu, a mode of wearing the saree.

*[தெலுங்கு + கட்டு]*



**தெலுங்குச்சிற்றாடை** *telungu-c-ciṟṟāḍai,* பெ. (n.) **தெலுங்குக்கட்டு** பார்க்க; see *telungu-k-kaṭṭu.*

*[தெலுங்கு + சிற்றாடை]*

**தெலுங்குச்செட்டி** *telungu-c-ceṭṭi,* பெ. (n.) *1.* **தெலுங்கு மொழி பேசும் செட்டி இனம்;** telugu caste. *2.* **சலுப்பன்;** a trading caste speaking Telugu.

*[தெலுங்கு + செட்டி]*

**தெவ்**[1] *tev,* பெ. (n.) *1.* **பகை;** enmity, hostility. *2.* போர் *(சூடா.);* war, battle, fight. *3.* **பகைவன்;** opposing power, enemy. "தெவ்வடு சிலையினாய்" *(கம்பரா.பள்ளியடை. 59).*

**தெவ்**[2] *tev,* பெ. (n.) **கொள்ளுகை** *(பிங்.);* seizing, taking.

**தெவ்வம்** *tevvam,* பெ. (n.) **பகைவர்;** enemy. "நிறை வழங்காத் தெவ்வம் பணியச் சென்றாலும்" *(திருக்கோ. 304).*

*[தெவ் + அம் = தெவ்வம்]*

**தெவ்வர்** *tevvar,* பெ. (n.) **பகைவர்;** enemy, foe. என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் *(குறள், 771).*

*[தெவ் + அர் = தெவ்வர்]*

**தெவ்வர்முனைப்பதி** *tevvar-muṉaippadi,* பெ. (n.) **பாசறை** *(சூடா.);* camp of an invading hostile army.

*[தெவ்வர் + முனைப்பதி]*

**தெவ்வலை** *tevvalai,* பெ. (n.) **240 அடி தொலைவு பரவக்கூடியதும் 20 பேரால் இழுக்கப்படுவதுமான வலைவகை** *(இவ.);* drag net that spreads to a distance of about 80 yards, requiring for its use 20 men, who gradually form a semi-circle and then capture fish.

*[தெவ்வு + அலை]*

**தெவ்வன்** *tevvaṉ,* பெ. (n.) **பகைவன்;** foe, enemy. "தெளிதல் செல்லாத் தெவ்வன்" *(பெருங். மகத. 14, 28).*

*[தெவ்' + அன். 'அன்' - ஆண்பாலீறு]*

**தெவ்வினை** *tev-viṉai,* பெ. (n.) **போர்** *(யாழ்.அக.);* war, battle.

*[தெவ்' + வினை]*

**தெவ்வு**[1]**-தல்** *tevvu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **கொள்ளுதல்** *(பிங்.);* to get, take, obtain. "நீர் தெவ்வுநிரைத் தொழுவர்" *(மதுரைக். 89).* *2.* **கவர்தல்;** to seize, grasp, steal. "கடவுளரைத் தெவ்வினீரேற் பொருந்தவவர் தமைக் கொடுமின்" *(விநாயகபு. 80, 131). 3.* **நிறைத்தல்;** to fill. "பாடற்பயத்தாற் கிளர்செவி தெவி" *(பரிபா. 11, 69).* *4.* **மன்றாடிக்கேட்டல்;** to beg hard, importune. "அந்தச் செயலுக்குத் தெவ்வுகிறான்" *(தஞ்சை.).*

*[தெவு → தெவ்வு]*

**தெவ்வு**[2] *tevvu,* பெ. (n.) **தெவ்**' பார்க்க; see *tev'.* "தெவ்வுப் பகையாகும்" *(தொல். உரி. 48).*

ம. தெவ்வு

*[தெவ் → தெவ்வு]*

**தெவ்வு**[3] *tevvu,* பெ. (n.) தெவ்[2] பார்க்க; see *tev.*

**தெவ்வு**[4] *tevvu,* பெ. (n.) நிலா; moon.

**தெவ்வூன்றி** *tevvūnri,* பெ. (n.) **கருங்கோள்;** moon ascending node.

*[தெவ்வு + ஊன்றி]*

**தெவ்வேந்தர்** *tev-vēndar,* பெ. (n.) **பகையரசர்;** enemy king. "செங்கோல னெங்கோன் கொடுந்தொழிலாற் றெவ்வேந்தர்" *(வீரசோ. 157, உரை.)*

**தெவம்** *tevam,* பெ. (n.) **மாமரம்** (மூ.அக); mango tree.

**தெவிட்டல்** *teviṭṭal,* பெ. (n.) **உமிழப்பட்டது;** that which is spit or vomitted. "வால் வெண் டெவிட்டல்" *(அகநா. 224).*

*[தெவிட்டு → தெவிட்டல்]*

**தெவிட்டாதவமிழ்தரசம்** *teviṭṭāda-amiḻda-rašam,* பெ. (n.) **சத்தியுப்பு** பார்க்க; see *satti-uppu.*

**தெவிட்டு**[1]**-தல்** *teviṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **தேக்கிடுதல்;** to be sated or satiated fully. தெவிட்டாக்கனி பிள்ளை, தெவிட்டாப் பருகம் தண்ணீர் *(பழ.).*

*[திகட்டு → தெவிட்டு]*

**தெவிட்டு**[2]**-தல்** *teviṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **தேக்கிடுதல்;** to be sated, glutted as the stomach, to be cloyed. "தெவிட்டி விடுகிறேனோ" *(ஈடு. 2, 6, 5). 2.* **அசையிடுதல்;** to chew the cud. "வன்கலை தெவிட்டும்" *(புறநா. 161). 3.* **உமிழ்தல்;** to spit. *4.* **நினைத்தல்;** to think. *5.* **வாயா லெடுத்தல்** (வாந்தித்தல்); to vomit, loathe. *6.* **திரளுதல்;** to gather in a crowd. "மான்கண மரமுதற் றெவிட்ட" *(குறிஞ்சிப். 217). 7.* **தங்குதல்** (திவா.); to abide, stay, remain. *8.* **ஒலித்தல்;** to make noise. "வரிநுணல் கறங்கத் தேரை தெவிட்ட" *(ஐங்குறு. 468). 9.* **நிறைதல்** (சூடா.); to become full. "செஞ்சுடர் வெள்ளந் திசை தெவிட்ட" *(திருவாச. 3, 77).*

க. தேகட்டு

**தெவு** *tevu,* பெ. (n.) **கொள்ளுகை;** taking, receiving. "தெவுக் கொளற் பொருட்டே" *(தொல்.சொல். உரி. 47).*

*[தெவ்வு → தெவு]*

**தெவுட்டு-தல்** *tevuṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தெவிட்டு-தல் பார்க்க; see *teviṭṭu-.*

*[தெவிட்டு → தெவுட்டு]*

**தெவுள்(ளு)-தல்** *tevuḷ(ḷu)-,* 2 செ.கு.வி. (v.i.) *1.* **நிறைதல்** (அக.நி.); to become full, filled. *2.* **திரளுதல்;** to overflow, increase.

**தெழ்கு** *teḻgu,* பெ. (n.) **இடையிலணியும் அணிகலன் வகை;** a kind of waist-ornament. "இடை விரவிக் கோத்த வெழிற் றெழ்கி னோடும்" *(திவ்.பெரியாழ். 1, 32).*

தெ. தேகா

*[தெழி[4] → தெழ்கு]*

**தெழி**[1]**-த்தல்** *teḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) **மிதித் துழக்குதல்;** to thresh. "நெற்போர் தெழிக்கும் பகட்டிளங் காளை" *(நன். 101. உரை.).*

**தெழி**[2]**-த்தல்** *teḻi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **அதட்டுதல்;** to drive or control by shouting; to bluster, utter threats. "பகடு தெழி தெள்விளி" *(அகநா. 17). 2.* **முழக்குதல்;** to sound forth, cause to sound, as a drum. "செங்கண்மா றெழிக்கப் பட்ட வலம்புரி" *(சீவக. 811). 3.* **அடக்குதல்;** to subdue, suppress. "பஞ்சேந்தியக் குஞ்சரமுந் தெழித்தேன்" *(பதினொ. பொன்வண். 23). 4.* **பிரித்தல்;** to separate. "ஒய்யெனத் தெழித்தாங்கு" *(சிலப். 15:48, உரை). 5.* **வருந்துதல்;** to trouble, distress. "உலகு தெழித்துழலு மாக்கர் கோமான்" *(தேவா. 133, 8).*

**தெழி**[3]**-த்தல்** *teḻi-,* 4 செ.கு.வி. (v.i.) **ஒலித்தல்;** to sound, resound, roar. "தெழிக்கும் புறங் காட்டிடை" *(தேவா. 462, 4).*

**தெழி**[4] *teḻi,* பெ. (n.) **ஒலி;** sound, noise. "வெண்ணெய்த் தெழிகேட்கும்" *(கலித். 108:35).*

**தெழித்தல்** *teḻittal,* பெ. (n.) **ஆரவாரம்;** uproar, tumult.

**தெழிப்பு** *teḻippu,* பெ. (n.) **ஆரவாரம்;** sound, noise, bluster, noisy rage. "இடித்தவான் தெழிப்பினால்" *(கம்பரா. கும்பகர்ண. 279).*

**தெள்**[1] *teḷ,* பெ. (n.) **தெள்ளுப்பூச்சி;** a jumping insect, flea.

**தெள்**[2]**-தல்** (தெட்டல்) *teḷ-,* 9 செ.கு.வி. (v.i.) **தெளிதல்;** to become clear, clear-minded.

**தெள்கு¹-தல்** *teḷgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* தெளிவாதல் (யாழ்ப்.); to become clear. *2.* தேங்குதல்; to be overcrowded, overfull. "திரைநீர்த் தெள்கி" (திவ்.பெரியதி. 3,4,7).

*[தெள்ளு → தெள்கு]*

**தெள்கு²** *teḷgu,* பெ. (n.) தெள்¹ பார்க்க; see *teḷ*. சிறிய தெள்கு துள்ளிக் கருடனைக்குப் பறவை கற்பிப்பதென (அரிச்.பு. பாயி. 12).

*[தெள் → தெள்கு]*

**தெள்விளி** *teḷ-viḷi,* பெ. (n.) *1.* தெளிந்தவோசை; clear sound or tone. "கோவலராம் பலந் தீங்குழற் றெள்விளி பயிற்ற" (குறிஞ்சிப். 222). *2.* தெளிந்த சொல்; clear, distinct utterance or word. "வள்ளுயிர்த் தெள்விளி யிடையிடை பயிற்றி" (குறிஞ்சிப். 100). *3.* கூவி வெருட்டும் ஓசை; ringing shout, as in scaring birds. "கிள்ளைத் தெள்விளி யிடையிடை பயிற்றி" (அகநா. 28). *4.* இசைப் பாட்டு; musical song. "நரம்புரி தெள்விளி நான்மறை நெறியவர்" (சீவக. 661).

*[தெள் + விளி]*

**தெள்ளச்சி** *teḷḷacci,* பெ. (n.) *1.* பூநீறு (வின்.); a medicinal powder. *2.* உவர் மண்; fullers earth. (இ.வ.) (செ. அக.).

*[தெள்ளு → தெள்ளச்சி]*

**தெள்ளத்தெளி-தல்** *teḷḷa-t-teḷi-,* 3 செ.கு.வி. (v.i.) நன்றாய்த் தெளிதல்; to be free completely from obscurity.

*[தெள்ள + தெளி]*

**தெள்ளி¹** *teḷḷi,* பெ. (n.) வெயிலில் காய்ந்த ஒரு கூடையளவுக் கருவாடு (மீனவ.); basket full of dry-fish.

*[தெள் → தெள்ளி]*

**தெள்ளி²** *teḷḷi,* பெ. (n.) யானை (அக.நி.); elephant.

**தெள்ளிச்சி** *teḷḷicci,* பெ. (n.) தெள்ளச்சி பார்க்க; see *teḷḷacci*.

*[தெள்ளச்சி → தெள்ளிச்சி]*

**தெள்ளிப்போடு-தல்** *teḷḷi-p-pōḍu-,* 19 செ.குன்றாவி. (v.t.) *1.* கொழித்துப் போடுதல்; to separate large from small pieces as with a fan. *2.* மருந்துப் பொடியைச் சன்னத் தூளாகவே பிரித்துப் போடல்; to separate the fine powdered portion of medicine from the crushed portion (சா. அக.).

பட. தெள்ளு

*[தெள்ளி + போடு-.]*

**தெள்ளிமை** *teḷḷimai,* பெ. (n.) *1.* தெளிவு; clearness, obviousness, perspicuity. *2.* அறிவு நுட்பம்; intelligence, sagacity, penetration, cleverness. சொன்னதென்ன தெள்ளிமைபோ (விறலிவிடு.)

*[தெளிமை → தெள்ளிமை]*

**தெள்ளிய** *teḷḷiya,* வி.எ. (adv.) தெளிவான; clearly.

*[தெள் → தெள்ளிய]*

**தெள்ளியசிங்கப்பெருமாள்** *teḷḷiya-śiṅga-p-perumāḷ,* பெ. (n.) சென்னை, திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலில் எழுந்தருளியுள்ள இறைவன்; God in Chennai, Tiruvalli-k-kēṇi Parthasarathy temple.

*[தெள்ளிய + சிங்கம் + பெருமாள்]*

இத்திருக்கோயிலைத் துளசிங்கப் பெருமாள் கோயில் என்றழைப்பது கொச்சை வழக்கு.

**தெள்ளியர்** *teḷḷiyar,* பெ. (n.) தெளிந்த அறிவினர்; the learned, the wise, as persons of clear understanding. "திருவேறு தெள்ளிய ராதலும் வேறு" (குறள், 374).

*[தெள் → தெள்ளியர்]*

**தெள்ளு¹-தல்** *teḷḷu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* தெளிவாதல்; to be clear, lucid, pure, refined as language; to shine clearly; to gleam. "தெள்ளுங் கழலுக்கே" (திருவாச. 10, 19). *2.* அறிவு முதிர்தல்; to be mature in knowledge or experience.

*[தெள் → தெள்ளு]*

**தெள்ளு²-தல்** *teḷḷu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* ஆராய்தல்; to examine, sift. "தெள்ளியறிந்த விடத்து மறியாராம்" (நாலடி, 380). *2.* கொழித்தல்; to sift, as grain. எள்ளைத் தெள்ளி உண். *3.* புடைத்தல்; to sift gently in a winnowing fan. இடித்த சோளத்தைத் தெள்ளிக் கொடு. *4.* அலைகொழித்தல்; to waft, as the sea; to

cast upon the shore. "கரி மருப்புத் தெள்ளி நறைந் திசை திசை பாயும்" (திருக்கோ. 128).

[தெள் → தெள்ளு]

**தெள்ளு³** *te!!u*, பெ. (n.) தெள்¹ பார்க்க; see *te!* (சா.அக.).

[தெல்லு → தெள்ளு]

**தெள்ளுக்கடி** *te!!u-k-kadi*, பெ. (n.) தெள்ளுப் பூச்சிக் கடி; flea bite (சா.அக.).

[தெள்ளு + கடி]

**தெள்ளுக்காய்** *te!!u-k-kāy*, பெ. (n.) பெருந் தெள்ளுக்காய்; scimitar pod (சா.அக.).

[தெள்ளு + காய்]

**தெள்ளுக்காய்ச்செடி** *te!!u-k-kāy-c-cedi*, பெ. (n.) பெரிய தெள்ளுக்காய்ச் செடி; negro bean co-witch (சா.அக.).

இது இரண்டாண்டிற்கொருமுறை முளைக்கும் பூடு; இலைகள் அகன்ற வடிவு. காம்பு நீளம், காய் வளைவு, முசு முசுப்பாயிருக்கும், ஒரே விதை. குண்டிக்காய் வடிவம். பூக்கள் பெரிதாயும் ஊதா நிறமாயிருக்கும். விதையைத் தின்னலாம்.

[தெள்ளு + காய் + செடி]

**தெள்ளுதமிழ்** *te!!u-tami!*, பெ. (n.) செந்தமிழ்; pure Tamil.

[தெள் → தெள்ளு + தமிழ்]

**தெள்ளுப்பு** *te!!uppu*, பெ. (n.) வளையலுப்பு; white medicinal salt.

[தெள் + உப்பு]

**தெள்ளுப்பூச்சி** *te!!u-p-pūcci*, பெ. (n.) தெள்¹ பார்க்க; see *te!*.

[தெள்ளு + பூச்சி]



**தெள்ளுள்ளி** *te!!u!!i*, பெ. (n.) வெள்ளுள்ளி; garlic (சா.அக.).

[வெண்மை + உள்ளி – வெள்ளுள்ளி → தெள்ளுள்ளி]

பூண்டு வெண்மையாயிருத்தலாலும், உள்ளி வகையைச் சார்ந்ததாதலாலும் இவ்வாறு அழைக்கப்பட்டுப் பின் திரிந்திருக்கலாம்.

**தெள்ளேணம்** *te!!ēnam*, பெ. (n.) கை கொட்டிப் பாடியாடும் மகளிர் விளையாட்டு வகை; a girls' play accompained by singing and clapping of hands. "நாம் தெள்ளேணங் கொட்டாமோ" (திருவாச. 11.1).

**தெளி¹-தல்** *te!i-*, 3 செ.குன்றாவி. (v.i.) 1. கசடு நீக்கித் தெளிவுறல்; to clear from a sediment. 2. நோயினின்று குணமடைதல்; to recover from illness. 3. மூர்ச்சை தெளிதல்; to regain consciousness. 4. ஒன்றையே சிந்தித்தல்; to ponder, ruminate on only one thing. 5. துளைத்தல்; to pierce, perforate. 6. தானே அறிதல்; to know or experience one self.

ம. தெளியுக; க. திளி; தெ. தெலி; து. தெலியுனி

**தெளி²-தல்** *te!i-*, 3 செ.குவி. (v.i.) 1. தெளிவாதல்; to become clear, limpid, transparent, as water by the settling of sediment. 2. அமைதியுறுதல்; to become serene, as the mind. "தெளியா நோக்க முள்ளினை" (அகநா. 33). 3. ஒளிர்தல்; to be bright, as the countenance. 4. வெண்மையாதல்; to become white, as cloths by washing. 5. ஒழிதல்; to clear away, disappear, as famine, as an epidemic. 'வற்கடந் தெளிந்தது'. 6. ஐயநீங்குதல்; to clear up, as doubt; to become evident, obvious, as the meaning of a passage. பேராசிரியரின் விளக்கம் கேட்டபின் தெளிந்தது. 7. முடிவுக்கு வருதல்; to come to a conclusion. 8. குணப்படுதல்; to be cured, as disease. "நோய் தெளிந்துவிட்டது". 9. செழித்தல்; to grow stout, fat, sleek, as persons or animals; to thrive, as vegetation. 'ஆள் இப்போது தெளிந்திருக்கிறான்'. 10. மேல்வரும்படி காணுதல்; to turn out, as clear profit; to accrue, as gain; to be a clear gain after allowing for all expenses.

**தெளி³-தல்** *te!i-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. ஆராய்தல்; to consider, investigate. 2. அறிதல்; to know, understand, perceive,

experience. "பிரியலேந் தெளிமே" (குறுந். 273). 3. நம்புதல்; to trust, confide in. "தெளியாதான் கூரையுட் பல்காலுஞ் சேறலும்" (திரிகடு. 11). 4. துளைத்தல் (வின்.); to pierce, perforate.

[தெள் → தெளி]

ஆராய்ச்சியால் ஐயம் நீங்கித் தெளிவு பிறக்கும். அதன்பின் தெளியப்பட்டதன் மீது நம்பிக்கையுண்டாகும். அதனால் ஒரு வினை முயற்சிக்கு உறுதியான தீர்மானஞ் செய்யப் பெறும்.

**தெளி[4]-த்தல்** *teḷi-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. துப்புரவாக்குதல்; to clear, free, as from turbid or feculent matter; to clarify, refine, clean. 2. தெளிவித்தல்; to make known, affirm clearly, cause to believe. "தெளித்தசொற் றேறியார்க் குண்டோ தவறு" (குறள், 1154). 3. ஊடலுணர்த்துதல்; to pacify, make up, as a love-quarrel. "பரிந்தோட் குறுகி யிரத்தலுந் தெளித்தலும்" (தொல். பொருள். 41). 4. வெளிப்படுத்துதல்; to make, manifest, reveal. 5. உறுதி செய்தல் (யாழ். அக.); to determine. 6. தூவுதல்; to strew scatter, sprinkle, as water. "நறுவிரை தெளித்த நாறிணர்மாலை" (அகநா. 126). 7. விதைத்தல்; to sow, as seed. 8. கொழித்தல் (வின்.); to cast up in sifting, as sand, as pearls. 9. புடைத்தல் (வின்.); to winnow, separate large from small particles by a fan. 10. சாறுவடித்தல்; to extract the essence. "திருக் கொண் மாங்கனி தெளித்த தேறலின்" (சீவக. 2402). 11. உருக்கியோட வைத்தல்; to melt, as in refining gold. "தெளித்த செம்பொற் சுண்ணம்" (சீவக. 1956). 12. நீக்குதல்; to dispel, as fear, sorrow, delirium.

[துளித்தல் = துளி விழுதல் (தன்வினை); துளிகளைச் சிந்துதல், தெளித்தல், தெறித்தல், இறைத்தல், சிந்துதல் (பிறவினை). துளி → தெளி. தெளித்தல் = துளி துளியாய்ச் சிந்துதல், மலர், அரிசி முதலியவற்றைச் சிற்றளவாய்த் தூவுதல் (மு.தா. 52)]

**தெளி[5]-த்தல்** *teḷi-*, 3 செ.கு.வி. (v.i.) சூளுறுதல்; to take an oath. "தீதிலேமென்று தெளிப்பவும்" (கலித். 81, 33).

**தெளி[6]** *teḷi*, பெ. (n.) 1. தெளிவு; clearness. "தெளி கொண்ட வெங்கள்" (பு.வெ. 1. 15). 2. சாறு; juice, essence. "கரும்பின் தெளி" (தேவா. 280). 3. ஒளி; light. "தெளிவளர் வான்சிலை" (திருக்கோ. 16, உரை).

**தெளி[7]** *teḷi*, பெ. (n.) விதைப்பு; sowing, as of seeds in a field. "நடவுக்குத் தெளி நாலத் தொன்று" (தஞ்சை.).



**தெளி[8]** *teḷi*, பெ. (n.) புல்லூரி; a parasitic plant (சா. அக.).

**தெளிச்சல்** *teḷiccal*, பெ. (n.) உடலின் பூரிப்பு; healthy appearance, plumpness. 'வேலையான பிறகு அவனுக்கு உடலில் தெளிச்சல் காணுகிறது' (நாஞ்.).

[தெளி → தெளிச்சல்]

**தெளிஞன்** *teḷiñaṉ*, பெ. (n.) அறிஞன் (வின்.); learned, wise man, sage (செ.அக.).

[தெளி → தெளிஞன்]

**தெளித்துவார்-த்தல்** *teḷittu-vār-*, 4 செ.குன்றாவி. (v.t.) தெளிந்ததை ஒன்றினின்று மற்றொன்றில் ஊற்றுதல்; to pour off gently from one vessel to another, to decant (சா. அக.).

[தெளித்து + வார்-.]

**தெளிதேன்** *teḷitēṉ*, பெ. (n.) தூயதேன்; pure honey. "பாலுந் தெளிதேனும் பாகும் பருப்புமிவை நாலுங் கலந்துனக்கு நான் தருவேன்" (ஔவையார்).

**தெளிந்தகுரல்** *teḷinda-kural*, பெ. (n.) அடைப்பில்லாத குரலொலி; clear voice (சா. அக.).

[தெளி + குரல்]

**தெளிந்தநீர்** *teḷinda-nīr,* பெ. (n.) 1. முட்டை நீர்; albumen. 2. மழைநீர்; rain water. 3. தெளி நீர்; clear water. 4. பனிக்குடத்து நீர்; amniotic fluid (சா. அக.).

[தெளி + நீர்]

**தெளிந்தபுத்தி** *teḷinda-putti,* பெ. (n.) தெளிந்தவறிவு பார்க்க; see *teḷinda-v-aṟivu.*

[தெளிந்த + புத்தி]

Skt. buddhi → த. புத்தி

**தெளிந்தவலை** *teḷinda-valai,* பெ. (n.) பெரும் வலைக் கண்களுடைய மீன்பிடி வலை; a fishing net with large holes.

**தெளிந்தவறிவு** *teḷinda-v-aṟivu,* பெ. (n.) பகுத்தறிவு, நுண்ணறிவு; mature understanding, clear intellect, discernment, profound wisdom.

[தெளிந்த + அறிவு]

**தெளிந்துகொடு-த்தல்** *teḷindu-koḍu-,* 4 செ.குவி. (v.i.) சூளுரைத்தலால் ஐயம் நீக்குதல்; to remove doubt, as by an oath.

[தெளிந்து + கொடு-.]

**தெளிந்துவரு-தல்** *teḷindu-varu-,* 3 செ.குவி. (v.i.) 1. நோய் குணமடைதல்; to progress from illness showing improvment. 2. நீர் தெளிவாகுதல்; to become clear as water. 3. மயக்கந்தெளிதல்; to recover gradually from giddiness (சா.அக.).

[தெளிந்து + வரு-.]

**தெளிநீர்**[1] *teḷi-nīr,* பெ. (n.) 1. தெளிவடைந்த நீர்; cleared liquid or water. 2. தூயநீர்; pure water. 3. பனி நீர்; dew water. 4. வாலை நீர்; distilled water (சா. அக.).

[தெளி + நீர்]

**தெளிநீர்**[2] *teḷi-nīr,* பெ. (n.) ஒரு பண்டத்தைக் கரைத்துத் தெளிய வைத்து வடித்த நீர்; clear solution.

[தெளி + நீர்]

**தெளிப்பு** *teḷippu,* பெ. (n.) 1. தூய்மை செய்கை; clearing, clarification, refinement, purification. 2. கொழிக்கை; separating grains on a winnowing fan. 3. வடிக்கை; straining off; decanting. 4. தூவுகை; sprinkling, scattering, strewing. 5. விதைப்பு; sowing of seeds.

[தெளி → தெளிப்பு]

**தெளிப்புத்திரவம்** *teḷippu-t-tiravam,* பெ. (n.) தெளிப்புநீர்மம் பார்க்க; see *teḷippu-nīrmam.*

[தெளிப்பு + திரவம்]

Skt. drava → த. திரவம்

**தெளிப்புநீர்ப்பாசனம்** *teḷippu-nīr-p-pāšaṉam,* பெ. (n.) குழாய் மூலம் வரும் நீரைப் பீய்ச்சி அடிக்கும் கருவி மூலம் சிதறச் செய்து பயிரின் அடிப்பகுதி நனையும்படிச் செய்யும் பாசனமுறை; sprinkling irrigation.



**தெளிப்புநீர்மம்** *teḷippu-nīrmam,* பெ. (n.) எண்ணெய்கள், துப்புரவு நீர்மங்கள், வண்ணங்கள் உட்பட மெருகேற்றுவதற்குப் பயன்படும் நீர்மப்பொருள்கள்; spraying liquid.

[தெளிப்பு + நீர்மம்]

**தெளிமணி** *teḷi-maṇi,* பெ. (n.) தூமணி (யாழ்.அக.); a gem of purest ray.

[தெளி + மணி]

**தெளிய** *teḷiya,* வி.எ. (adv.) தெளிவாக; clearly, distinctly, evidently, obviously.

[தெளி + தெளிய]

**தெளியக்கடை-தல்** *teḷiya-k-kaḍai-,* 2 செ.குன்றாவி. (v.t.) சிக்கனமாயிருத்தல்; to thrift.

[தெளிய + கடை-.]

**தெளியக்காண்-த(ட)ல்** *teḷiya-k-kāṇ-,* 3 செ.குன்றாவி. (v.t.) 1. விளக்கமாய்ப் பார்த்தல்;

to see distinctly and clearly. 2. *ஐயமற அறிதல்;* to know or understand without any doubt. 3. *முற்றுமுணர்தல்;* to have complete knowledge of a thing. 4. *அறிவு தெளிவானதால் காணும் காட்சி;* to have divine vision through intellectual advancement *(சா.அக.).*

*[தெளிய + காண்]*

**தெளியவயம்** *teḷiyavayam,* பெ. (n.) *அனைத்துக் கரைப்பான் (சர்வத் திராவகம்);* universal solvent *(சா.அக.).*

**தெளிவாஞ்சேறு** *teḷivāñjēṟu,* பெ. (n.) கடலடிச் சேற்றில் ஒரு வகை; kind of mud lie under the sea *(மீனவ.).*

**தெளிவி-த்தல்** *teḷivi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. *அறிவித்தல்;* to announce. 2. *தெரியப் பண்ணுதல்;* to make one to understand. 3. விளக்குதல்; to explain.

*[தெளி → தெளிவி. 'வி' பிறவினையீறு]*

**தெளிவு** *teḷivu,* பெ. (n.) வலையின் கண்கள் சுருங்கி விடாமல் விரிந்து இருத்தல்; eye of the net in a expand condition.

**தெளியவை-த்தல்** *teḷiya-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) தெளியும்படி அசையாமலிருக்கச் *செய்தல்;* to set or allow to settle without disturbing, to become free from dregs by their sinking to the bottom. 2. ஐயம் தெளியும்படிச் *செய்தல்;* to change from a disturbed or troubled condition of mind to one of tranquility by clearing all doubts *(சா.அக.).*

*[தெளிய + வை-.]*

**தெளியாநோக்கம்** *teḷiyā-nōkkam,* பெ. (n.) வெருவின பார்வை; timid look. "மழைக்கண் டெளியா நோக்க முள்ளினை" *(அகநா. 33).*

*[தெளி + ஆ + நோக்கம். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தெளியாப்பிணி** *teḷiyā-p-piṇi,* பெ. (n.) தீராத நோய்; incurable disease *(செ.அக.).*

*[தெளி + ஆ + பிணி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தெளிர்[1]-தல்** *teḷir-,* 2 செ.கு.வி. (v.i.) ஒளி பெறுதல்; to shine, sparkle. "வண்ணைந் தெளிர" *(பரிபா. 10, 55).*

**தெளிர்[2]-த்தல்** *teḷir-,* 2 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to sound, articulate. "இலங்குவளை தெளிர்ப்ப வலவை னாட்டி" *(ஐங்குறு. 197).* 2. செழித்தல்; to be fertile. "வறந்த ஞாலந் தெளிர்ப்ப வீசி" *(ஐங்குறு.452).* 3. மகிழ்ச்சியுறுதல்; to be happy. "சேயிழை தெளிர்ப்பக் கவைஇ" *(அகநா. 51).*

**தெளிர்[3]** *teḷir,* பெ. (n.) *யாழின் உள்ளோசை (திவா.);* vibrating sound of a lute.

**தெளிர்தல்[4]** *teḷir-,* பெ. (n.) 1. *பேசுவதால் எழும்பும் ஒலி;* sound raised by speaking. 2. பொருந்துதல்; become fit.

**தெளிரல்** *teḷiral,* பெ. (n.) எடுத்தலோசை *(பிங்);* loud sound, high pitch.

**தெளிவருடம்** *teḷi-varuḍam,* பெ. (n.) இலவங்கப் பத்திரி; leaf of wild cinnamon or cinnamon leaf *(சா.அக.).*

**தெளிவாக்கு-தல்** *teḷivākku-,* 5 செ.குன்றாவி. (v.t.) தூயதாக்குதல்; to purify from feculant matter, to clarify, to make clear.

*[தெளிவு + ஆக்கு-.]*

**தெளிவாள்** *teḷivāḷ,* பெ. (n.) கூர்வாள்; sharp sword. "இவ் வவிவேகத்தை யறுக்கைக்குத் தெளிவாளாயிருப்பது ஏற்றச் சுருக்கமறத் தன்ன ளவிலுண்டான தெளிவு" *(ரஹஸ்ய. 602).*

*[தெளி + வாள்]*

**தெளிவி-த்தல்** *teḷivi-,* 4 செ.குன்றாவி. (v.t.) அமைதி(சாந்த)ப்படுத்துதல்; to calm down. "பகவானோடு எதிரம்பு கோத்த உருத்திரனை ப்ரஹ்மா தெளிவித்து விலக்க" (ரஹஸ்ய. 609).

**தெளிவில்புகழ்ச்சி** *teḷivil-pugaḻcci,* பெ. (n.) பழிப்பது போல் புகழ்வதாகிய அணி; a figure of speech, in which there is apparent censure, but veiled praise. "பழிமொழி மொழிந்து பல்புகழ் விளக்குதல் தெளிவில் புகழ்ச்சி யென்மனார் புலவர்" *(வீரசோ. அலங். 14, உரை).*

*[தெளிவு' + இல் + புகழ்ச்சி]*

**தெளிவிறு-த்தல்** *teḷiviṟu-, 4. செ. குன்றாவி.* (v.t.) *1. தெளிந்த நீரை வண்டலினின்று வடித்துக் கொள்ளுதல்;* to filter or separate clear water from the sediment. *2. பொருள் கரைந்த நீரைக் கரையாத ஏனத்தினின்றுப் பிரித்தல்;* to separate the solution from the precipitate. *3. பூண்டெரித்த சாம்பலைத் தண்ணீரிலிட்டுக் கரைத்துப் பின் கரைந்திருக்கும் காரவுப்பை வண்டலினின்று வடித்து வாங்கல்;* to extract alkaline salts, such as potash, soda, etc. from the ashes, derived by burning plants; to separate soluble from the insoluble matter and drawing off the solution - lixivriation. *4. கரையாத பொருளைப் பொடி செய்து தண்ணீரிலிட்டு வைத்திருந்து அடியில் நின்றது போக எஞ்சியதைக் கலங்காமற் இறுத்துக் கொள்ளல்;* to purify by wasting or cleansing as ores by diffusing insoluable powder in water and allowing the heavy part to settle and the decanting the supernatant fluid *(சா.அக.).*

*[தெளிவு + இறு]*

**தெளிவு**[1] *teḷivu,* பெ. (n.) *1. துலக்கம்;* clarity, transparency, limpidness. *2. ஒளி;* bright, brilliance, as of a gem, pearl etc. 3. *பொருள் வெளிப்படப் புலப்படுதலாகிய செய்யுட் குணம்;* perspicuity, clearness, as a merit of poetic composition. "தெளிவெனப்படுவது பொருள் புலப்பாடே" *(தண்டி. 16).* 4. *உடற் செழிப்பு* (கொ.வ.); plumpness, sleekness. *5. சாறு;* juice, essence. "கரும்பின் றெளிவே" *(திருவாச. 5, 55).* 6. பதநீர் (கோவை.); sweet toddy. 7. *கஞ்சித்தெளிவு* பார்க்க; see *kañji-t-teḷivu;* 8. *அறிவு (பிங்.);* knowledge, wisdom. "வலிதாயந் தேனியன்ற நறுமாமலர் கொண்டு நின்றேத்தத் தெளிவாமே" (தேவா. 1114, 6). 9. *நனவு (திவா.);* conscious, waking state. *10. மனத்தெளிவு (திவா.);* clarity of mental vision. *11. ஆராய்ந்து கொண்ட முடிவு;* conclusion, decision reached after full deliberation. "தெளிவிலதனைத் தொடங்கார்" *(குறள். 464).* 12. *நம்பிக்கை;* confidence. "தெளிவிலார் நட்பிற் பகை நன்று" *(நாலடி. 219).* 13. *மனவமைதி;* placidity, tranquillity, serenity of mind. *14. நற்காட்சி;* clear vision of truth. "அறத்துளார்க்கெல்லா மினியாரத விதுதெளிவே" *(சீவக. 2816).* 15. *உளக் குறிப்பு (பிங்.);* thought, meaning, intention. *16. நீக்கம் (வின்.);* clearing, passing away, as of clouds, darkness, fear, sleep, etc. *17. செலவு போக உள்ள மேல்வரும்படி (வின்.);* net profit, profit or gain after deducting expenses and waste. *18. ஏது;* evidence, proof. "தக்க தெளிவில்லாததால் வழக்கு தள்ளுபடி யாயிற்று" *(நாஞ்.)*

*ம. தெளிவு; க. திளிவு; தெ. தெலுபு, தெலிவி; து. திருவளிகெ.*

**தெளிவு**[2] *teḷivu,* பெ. (n.) 1. *தேர்ந்த அறிவு;* mature knowledge. *2. துணிவு;* fearlessness, intrepedity. *3. தூய்மை;* clearness, perspicuity. *4. தெளிந்த நீர்ப்பகுதி;* clear portion of liquid as distinguished from precipitated portion *(சா.அக.).*

*[தெளி → தெளிவு]*

**தெளிவு**[3] *teḷivu,* பெ. (n.) *பாடற்பயன்வகை (சிலப். 3;16. உரை);* one of pādarpayaṉ *(செ.அக.).*

**தெளிவு**[4] *teḷivu,* பெ. (n.) *பதநீர்; புளிப்பேறாத படி சுண்ணாம்பிட்ட கலயத்துள்ளிறக்கிய இனிப்புக் கள்;* sweet toddy drawn in a pot lined with lime to prevent fermentation.

*[தெல் → தெள் → தெளி → தெளிவு]*

**தெளிவுகொடு**[1]**-த்தல்** *teḷivu-koḍu-, 4 செ.கு.வி.* (v.i.) *1. நோயினின்று குணப்படும் குறியைக் காட்டல்;* to exhibit improvement in health by showing symptoms of recovery as from disease. *2. சாவுக்கு முன் முகத்தில் ஒருவகை ஒளி (பிரகாசம்) காணப்படுதல்;* to be seen a kind of brightness in face even before the death.

*[தெளிவு + கொடு-.]*

**தெளிவுகொடு**[2]**-த்தல்** *teḷivu-koḍu-, 4 செ.கு.வி.* (v.i.) *உணர்வு வரப்பண்ணுதல்;* to make one's consciousness.

*[தெளிவு + கொடு-.]*

**தெளிவுசூடு** *teḷivu-šūḍu,* பெ. (n.) தேறுசூடு *பார்க்க;* see *tēṟu-šūḍu.*

*[தெளிவு + சூடு]*

**தெளிவுத்தண்ணீர்** *teḷivu-t-taṇṇīr,* பெ. (n.) கடலில் நீர் அலையின்றியிருத்தல்; clear water in sea.

அப்பொழுது முத்துக் குளிக்கக் கடலில் இறங்கமாட்டார்கள். காரணம் திருக்கை, சுறா போன்றவை மக்களைக் கடித்துத் துன்பம் விளைவிக்கும். (மீனவ)

*[தெளிவு + தண்ணீர்]*

**தெளிவுப்பருவை** *teḷivu-p-paruvai,* பெ. (n.) தெளிந்த நீர்ப்பரப்பில் மேயும் மீன் கூட்டம் (மீனவ.); fishes which swim in the clear water.

*[தெளிவு + பருவை]*

**தெளிவுமீன்** *teḷivu-mīṉ,* பெ. (n.) தெளிந்த நீர்ப்பரப்பில் மேயும் மீன்; fish which swims in the clear water.

*[தெளிவு + மீன்]*

**தெளிவுவாங்கு-தல்** *teḷivu-vāṅgu-,* 5 செ.குவி. (v.i.) தெளிவிறு-த்தல் பார்க்க; see *teḷiviṟu-* (சா.அக.).

*[தெளிவு + வாங்கு-.]*

**தெளிவுரை** *teḷivurai,* பெ. (n.) *1.* தெளிவான பேச்சு; clear speech. *2.* பாட்டுக்கெழுதும் உரை வகையுளொன்று; a kind of commentary for poem.

*[தெளிவு + உரை]*

**தெளிவுறை** *teḷivuṟai,* பெ. (n.) *1.* நோயைக் குணமாக்கும் மருந்து; medicines tending to cure disease, curative. *2.* அறிவை வளர்க்கும் மருந்து; medicine improving the intellect as phosphates, etc. or clearness of understanding (சா.அக.).

*[தெளிவு + உரை]*

**தெளிவெண்ணெய்**[1] *teḷiveṇṇai,* பெ. (n.) *1.* கசடு நீக்கிய எண்ணெய்; oil free from sediment. *2.* தூய எண்ணெய்; pure clear oil. *3.* நறுவேப்பெண்ணெய்; a kind of dark margosa oil. *4.* நெய்; ghee (சா.அக.).

*[தெளிவு + எண்ணெய்]*

**தெளிவெண்ணெய்**[2] *teḷiveṇṇai,* பெ. (n.) தூய வெண்ணெய்; pure butter.

*[தெளிவு + வெண்ணெய்]*

**தெளு** *teḷu,* பெ. (n.) கஞ்சித்தெளிவு; water strained from rice after it is well cooked.

*[தெளிவு → தெளுவு → தெளு]*

**தெளுவு** *teḷuvu,* பெ. (n.) தெளிவு பார்க்க; see *teḷivu* (செ.அக.).

*[தெளிவு → தெளுவு]*

**தெற்கத்தி** *teṟkatti,* பெ.எ. (adj.) தெற்கிலுள்ள; south, southern. "தெற்கத்திப் பேச்சு" (உ.வ.) தெற்கத்திக் குருவியை வடக்கத்திக் குருவி தெற்றி அழைத்ததாம் சீகம்பழம் தின்ன (பழ.).

ம. தெக்கே

*[தெற்கு → தெற்கத்தி]*

**தெற்கத்திக்கணை** *teṟkatti-k-kaṇai,* பெ. (n.) குழந்தைநோய் வகை; bronchitis, broncho-pneumonia, whooping cough, infantile convulsions.

*[தெற்கு → தெற்கத்தி + கணை]*

**தெற்கத்திக்காற்று** *teṟkatti-k-kāṟṟu,* பெ. (n.) தென்றல் பார்க்க; see *teṉṟal* (செ.அக.).

ம. தெக்கன்காற்று

*[தெற்குகாற்று → தெற்கத்திக்காற்று]*

**தெற்கத்திநோய்** *teṟkatti-nōy,* பெ. (n.) தெற்கத்திக்கணை பார்க்க; see *teṟkatti-k-kaṇai.*

*[தெற்கு → தெற்கத்தி + நோய்]*

**தெற்கத்திப்பேச்சு** *teṟkatti-p-pēccu,* பெ. (n.) *1.* தென்றேயத்திலுள்ளார் வழங்கும் மொழி; southern dialect. *2.* தென்றேயத்திலுள்ளவர் களுக்குரிய பேச்சுமுறை; intonation peculiar to the southerns.

*[தெற்கு → தெற்கத்தி + பேச்சு]*

**தெற்கத்தியான்**[1] *teṟkattiyaṉ,* பெ. (n.) *1.* தென்னாட்டான்; person belonging to South India. *2.* தென்பகுதிக்காரன்; southerner.

ம. தெக்கன் (தெற்கு)

*[தெற்கு - தெற்கத்தி + ஆன்]*

**தெற்கத்தியான்**[2] *teṟkattiyāṉ,* பெ. (n.) தென் திசையினின்று வரவழைக்கப்பட்ட மாடுகள்; cows brought from the southern side.

*[தெற்கு - தெற்கத்தி + ஆன்]*

**தெற்கித்தி** *terkitti*, வி. (adj.) தெற்கத்தி பார்க்க; see *terkatti*.

*[தெற்கத்தி → தெற்கித்தி]*

**தெற்கு** *terku*, பெ. (n.) தென்றிசை (திவா.); south.

*ம. தெக்கு; க. தெங்க, தெங்கல், தெங்கு; து. தெனுகாயி, தென்காயி, தெங்காயி; குட. தெக்கி*

*[தென் + கு – தெற்கு]*

**தெற்குத்தி** *terkutti*, பெ. (n.) தெற்கத்தி பார்க்க; see *terkatti*.

*[தெற்கத்தி → தெற்குத்தி (இ.வ.)]*

**தெற்குப்பார்த்தவீடு** *terku-p-pārtta-vīḍu*, பெ. (n.) **தெரு வாசல் தெற்குப் பக்கமாக அமைந்த வீடு;** house built with its main gate on the southern side.

*[தெற்கு + பார்த்த + வீடு]*

**தெற்குமுகமாய்ப்போ-தல்** *terku-mugam-āy-p-pō-*, 8 செ.கு.வி. (v.i.). **இறத்தல்** (வின்.); to die (செ.அக.).

*தெற்குப் பகுதி கடற்கோளுக்கு ஆட்பட்டதால் இது இறந்தவர்களுக்கு உரிய திசையாகக் கருதப்படுகிறது.*

**தெற்குவாசல்** *terku-vāšal*, பெ. (n.) *1.* **தென் திசையிலமைந்த வாயில்;** door in south side. *2.* **தென் திசையில் வாசலமைந்த வீடு;** house facing south side.

*[தெற்கு + வாசல்]*

**தெற்கோட்டம்** *terkōṭṭam*, பெ. (n.) **கருக்கொண்ட மேகத்தின் தென்திசை நோக்கிய ஓட்டம்;** southern passage of the rain clouds.

*[தெற்கு + ஓட்டம்]*

**தெற்பை** *terpai*, பெ. (n.) **தருப்பை** (யாழ்.அக.) பார்க்க; see *taruppai*.

*[தருப்பை → தெற்பை]*

**தெற்றல்**[1] *terral*, பெ. (n.) **மாறுபாடு உடையவன்;** perverse person. "தெற்றலாகிய தென்னிலங்கைக் கிறைவன்" (தேவா. 680, 8).

*[தெள் → தெற்று → தெற்றல்]*

**தெற்றல்**[2] *terral*, பெ. (n.) **அறிவில் தெள்ளியவன்;** clear sighted person. "இணைமருது திற்றுவீழ் நடைகற்ற தெற்றல்" (திவ். பெரியதி. 11, 4, 9).

**தெற்றி**[1] *terri*, பெ. (n.) *1.* **திண்ணை;** raised verandah. "இலங்குவளை மகளிர் தெற்றியாடும்" (புறநா. 53). *2.* **மாடம்** (பிங்.); mansion, palace. *3.* **மேட்டிடம்;** elevated ground, mound. "புற்றுந் தெற்றியும் சாடும்" (தெ.க. தொ. iii, 410). *4.* **தெற்றியம்பலம்** (நிகண்டு) பார்க்க; see *terri-y-ambalam*.



**தெற்றி**[2] *terri*, பெ. (n.) **மரவகை;** a tree. "தெற்றி யுலறினும் வயலை வாடினும்" (அகநா. 259).

**தெற்றி**[3] *terri*, பெ. (n.) **பழிபளகு விளைப்பவன்;** one who brings ruin or disgrace. "தெற்றியுமாய் நின்றான் றெரிந்து" (பாரதவெண். 193).

*[தெற்று → தெற்றி]*

**தெற்றிக்கால்** *terri-k-kāl*, பெ. (n.) **தெற்றுக்கால்** (இ.வ.) பார்க்க; see *terru-k-kāl*.

*[தெற்றுக்கால் → தெற்றிக்கால்]*

**தெற்றிக்காளை** *terri-k-kāḷai*, பெ. (n.) **பின்னங்கால் முட்டியிடும் காளை;** knack kneed bull. "தெற்றிக்காளை கழுத்தால் நெரிக்கச் சிதைந்து போன" (பறாளை. பள்ளு).

*[தெற்றி + காளை]*

**தெற்றியம்பலம்** *terri-y-ambalam*, பெ. (n.) **மேட்டிடமாக அமைந்த சித்திரக்கூடம்** (பிங்.); raised hall in a place or temple.

*[தெற்றி + அம்பலம்]*

**தெற்றியிலக்கை** *terri-y-ilakkai*, பெ. (n.) **ஊர்ப் பொதுவிலொரு பகுதியை மேட்டிடமாகச்**

செய்து பயன்படுத்துவோர் செலுத்தும் வரி; tax paid by the people, who use the common elevated land in the village.

[தெற்றி + இலக்கை]

**தெற்றிவீழ்த்து-தல்** *teṟṟi-vīḻttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **தட்டி விழச் செய்தல்** (வின்.); to trip, cause to stumble.

[தெற்றி + வீழ்த்து-.]

**தெற்று[1]-தல்** *teṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **இடறுதல்;** to stumble. "தெற்றுகாலின ரோடினர்" (உபதேசகா. சிவவிரத. 139.). 2. **தடைப்படுதல்;** to be obstructed, hindered. "இல்வாழ்க்கை யென்னு மியல்புடை வான்சகடஞ் செல்லாது தெற்றிற்று நின்று (அறநெறி. 158, பக். 39) (யாழ். அக.). 3. **மாறுபடுதல்** (சூடா.); to be perverse, obstinate. 4. **பிழை செய்தல்;** to mistake, commit a fault, do wrong. "தெற்றினார் புரங்கள் செற்றார்" (பெரியபு. திருநீலகண்ட. 3). 5. **முறுக்கிக் கொள்ளுதல்;** to become intertwined. "தெற்றுகொடி முல்லையொடு" (தேவா. 622, 6). 6. **இகலுதல்;** to quarrel. 'சுமவாது மருட்டி யெங்குந் தெற்றிய விவனையோமுன் றெரிப்ப தின்று' (திருவாலவா. 30, 23). 7. **வாய் கொன்னுதல்;** to stammer in speaking, stutter. 8. **செறிதல்;** to throng, to be dense, crowded. "கற்றவர் தெற்றிவர" (திவ். பெரியாழ். 1, 5, 8).

ம. தெற்றுக; க. தெத்து; தெ. தொற்றுபடு.

[தெள் → தென் → தெற்று]

**தெற்று[2]-தல்** *teṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. **மோதுதல்;** to beat, strike. "தெற்று வெண்டிரைச் சரையு" (உபதேசகா. சிவநாம. 135). 2. **அலைத்தல்;** to disturb, shake. "தேரரக்கன் மால்வரையைத் தெற்றியெடுக்க" (தேவா. 46, 8). 3. **தடுத்தல்;** to obstruct, hinder. "பிணப் பெருங் குன்றந் தெற்றி" (கம்பரா. சம்புமாலி. 19). 4. **மாற்றுதல்;** to change. "இது சந்திரன் தொழிலைத் தெற்றினமையால் தெற்றுருவகம்" (வீரசோ. அலங். 18, உரை). 5. **பல்லைக்கடித்தல்;** to gnash, grind, as the teeth. "தெற்றின ரெயிறுகள்" (கம்பரா. கரன். 104). 6. **பின்னுதல்;** to braid, plait entwine, weave. "குடம்பைநூ றெற்றி" (கல்லா. கணபதிதுதி). 7. **தொடுத்தல்;** to bring up, tie together. "ஆய்பூந் தட்டத் தகத்தோடு தெற்றிய தாமம்" (பெருங். அத்தன. 7,26). 8. **இறுக்குதல்** (யாழ்.அக.); to tighten.

[தெள் → தென் → தெற்று]

**தெற்று[3]** *teṟṟu,* பெ. (n.) 1. **பின்னுகை;** entwining. 2. **இடறுகை;** tripping. 3. **வேலியடைப்பு** (யாழ்.அக.); hedge of thorns protecting a passage. 4. **செறிவு;** denseness. "தெற்றார் சடை முடியான்" (திருவாச. 34, 5). 5. **மாறுபாடு** (பிங்.); perversity. 6. **தவறு** (நாஞ்.); mistake, wrong.

ம. தெற்று; க. தட்டு; தெ. தொட்டு; து. தண்டுணி

**தெற்று[4]** *teṟṟu,* பெ. (n.) **தேற்றம்** (வின்.); certainty, ascertainment, assurance, persuasion, confidence.

[தேற்று → தெற்று]

**தெற்றுக்கால்** *teṟṟu-k-kāl,* பெ. (n.) 1. **முட்டிக் கால்;** knocking knee. 2. **முட்டிக் காலுள்ளவன்-ள்-து;** knock-kneed person or animal.

[தெற்று[2] + கால்]

**தெற்றுக்காலன்** *teṟṟu-k-kālaṉ,* பெ. (n.) **முட்டிக்காலுள்ளவன்-து;** knock-kneed person or animal.

[தெற்றுக்கால் → தெற்றுக்காலன்]



**தெற்றுருவகம்** *teṟṟuruvagam,* பெ. (n.) **அணியிலக்கண வகை;** a kind of rhetoric. எஞ்சிய பண்பி லியையினு மொழிதொழில் செஞ்சொலாற் கிளப்பது தெற்றுரு வகமே (வீரசோ. பக். 234).

எ-டு.
"தாமரையைக் குவியாது நாட்குமுத
மலர்த்தாது
திமை செயும் என்னுயிர்க்குள் திருமுகமாந்
திங்களே"
இச்செய்யுளில் நிலவின் தொழிலைத் தெற்றினமையால் தெற்றுருவகம்.

*[தெற்று + உருவகம்]*

**தெற்றுப்பல்** *teṟṟu-p-pal,* பெ. (n.) 1. ஒன்றோ டொன்று பின்னியிருக்கும் பல்; snagged tooth. 2. மிகையான பல்; supernumerary tooth.

*[தெற்று + பல்]*

**தெற்றுப்பல்லன்** *teṟṟu-p-pallaṉ,* பெ. (n.) பின்னற் பல்லுள்ளவன்; a person with snagged teeth.

*[தெற்று + பல்லன்]*

**தெற்றுப்பல்லி**[1] *teṟṟu-p-palli,* பெ. (n.) பின்னற் பல்லுள்ளவள்; a woman with snagged teeth.

*[தெற்று + பல்லி]*

**தெற்றுப்பல்லி**[2] *teṟṟu-p-palli,* பெ. (n.) தீச்சொல்லுடையவள்; a woman of evil tongue (செ.அக.).

*[தெற்று + பல்லி. தெற்று = கோணல், நேர்மைக்கு மாறானது]*

**தெற்றுமாற்று** *teṟṟu-māṟṟu,* பெ. (n.) ஏமாற்று (வின்.); tricks, shifts, deception.

**தெற்றுரை** *teṟṟurai,* பெ. (n.) மாறுபடுமொழி; inconsistent speech. "தெற்றுரை செய்து தியக்கமுற்று" (பிரபோதசந். 11, 19).

*[தெற்று + உரை]*

**தெற்றுவமை** *teṟṟuvamai,* பெ. (n.) அணியிலக்கண வகை; a kind of rhetoric. பொருள்போ லமைந்த பொருவிது வென்னு மரபொடு தெற்றி வருவது தெற்றே (வீரசோ. பக்.224).
எ-டு. நின்முகம்போல மலர்ந்த தாவிந்த
மன்னமே பாரா யது.
- இதில் தெற்ற உவமித்தலால் தெற்றுவமை

**தெற்றுவாசல்** *teṟṟu-vāšal,* பெ. (n.) திட்டி வாசல்; wicket. "பல தெற்றுவாசல்களையுடைய அரிய கோபுர வாயிலை ஐயுறாமற் புகுவீர்" (மலைபடு. 490, உரை).

*[தெற்று + வாசல்]*



**தெற்றுவாய்** *teṟṟu-vāy,* பெ. (n.) திக்குவாய்; stammering.

*[தெற்று + வாய்]*

**தெற்றென்(னு)-தல்** *teṟṟeṉ(ṉu)-,* 5 செ.குன்றாவி. (v.t.) தெளிதல்; to discern, conclude. "தெற்றென்க மன்னவன்கண்" (குறள், 581).

**தெற்றென** *teṟṟeṉa,* கு.வி.எ. (adv.) 1. விரைவாக; speedily, hastily. "தெற்றெனச் செலவுகடைக் கூட்டுதிராயின்" (பொருந. 174). 2. உடனே; forthwith, immediately. "அகல்யா றகழ்ந்தக்காற் றெற்றெனத் தண்ணீர் படும்" (நாலடி., 150). 3. தெளிவாக; clearly. "யானுந் தெற்றென உணரேன்" (அகநா. 58).

ம. தெற்றன, தெற்றென

*[தெற்று + என]*

**தெற்றெனவு** *teṟṟeṉavu,* பெ. (n.) 1. தெளிவு; certainty, clearness. "தெற்றென வில்லார் தொழில்" (திரிகடு. 54). 2. வெட்கமின்மை; immodesty. "சோற்றை முன்னிருந்து முற்றத்தான் துற்றிய தெற்றெனவும்" (திவ். இயற். பெரியதிரு. 141).

*[தெற்று + எனவு]*

**தெறக்கோலா** *tera-k-kōlā,* பெ. (n.) உருட்டாய் உள்ள ஒரு கடல் மீன்; fish in a round form (மீனவ).



உருவ அமைப்பில் சாலா போலும் காணப்படும்.

**தெறஞ்சுபோ-தல்** *terañju-pō-*, 8 செ.கு.வி. (v.i.) **திரைந்து** (திரிந்து) **போதல்;** to coagulate, form into clots, as milk. 'பால் தெறஞ்சு போயிடுச்சு' (நெல்லை).

*[திரிந்து → திரைந்து → தெறைந்து → தெறஞ்சு. ஒ. நோ.: கரைந்து → கரைஞ்சு]*

**தெறல்** *teṟal*, பெ. (n.) 1. **அழிக்கை;** ruining. "வலியுந் தெறலு மளியு முடையோய்" (புறநா. 2). 2. **சினத்தல்;** being angry. "தெறலருங் கடுந்துப்பின்" (மதுரைக். 32). 3. **வெம்மை;** heat. "தீயுனுட்டெறனீ" (பரிபா. 3. 63). 4. **வருந்துகை;** affliction. "தேடறு நலத்தபுன லாசைதெற லுற்றார்" (கம்பரா. கடிமணா. 2).

*[தெறு → தெறல்]*

**தெறி¹-த்தல்** *teṟi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **தாக்கப்பட்டு வெளிப்படுதல்;** to strike and fly off. "மன்னவன் வாய்முதற் றெறித்தது மணியே" (சிலப். 20: 72). 2. **பிதுங்குதல்;** to start, as eyes. "கண் தெறித்துப் போகிறது" 3. **பொறி அல்லது துளியாய்ச் சிதறுதல்;** to be sprinkled, as drops or particles of water; to splash up, as spray; to fly off, as sparks. "கண்பனி நெகிழ்நூன் முத்தின் முகிழ்முலைத் தெறிப்ப" (அகநா. 289). 4. **முறிதல்;** to break. 5. **அறுதல்;** to burst asunder, snap in twain, as a rope. 6. **குலைதல்;** to be scattered, as an army. "மாப்படை தெறித்துச் சிந்த" (கம்பரா. மூலபல. 134). 7. **துள்ளுதல்;** to spring, leap, hop, as a stag. "தாவுபு தெறிக்கு மான்மேல்" (புறநா. 259). 8. **பிளத்தல்;** to split. "தெறித்தன செறிசுடர்க் கவசம்" (கம்பரா. கிங்கர. 32). 9. **முற்றுதல்;** to be complete, full. "தெறிப்ப விளைந்த தீங்கந்தாரம்" (புறநா. 258). 10. **வேறுபடுதல்;** to be broken off, as friendship, to become disunited. 11. **நீங்குதல்;** to be removed, cured, as a disease. "பிணி தெறித்துப் போயிற்று" (வின்.). 12. **தவறுதல்;** to fail, end unsuccessfully. "செயல் தெறித்துப் போயிற்று" 13. **குறும்பு பண்ணுதல்;** to be mischievous. "அவன் மிகவும் தெறித்தவன்". 14. **செருக்குத் திமிராயிருத்தல்;** to be proud. 15. நரம்பு துடித்து நோவுண்டாதல்; to give the throbbing pain.

*[தெறு → தெறி]*

**தெறி²-த்தல்** *teṟi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **விரலாற் சுண்டுதல்;** to shoot with the finger and thumb. 2. **விரலால் உந்துதல்;** to twang, as a bow-string with the finger and thumb; to thrum, as the strings of a lute. 'சிலையை நாண் டெறித்தான்" (கம்பரா. தேரேறு. 29). 3. **உடைத்தல்;** to break, cut. 'பூட்டைத் தெறித்தான்'.

**தெறி³-த்தல்** *teṟi-*, 4 செ.கு.வி. (v.i.) 1. **தெறிக்குதல்;** to break suddenly or to snap off. 2. **விண் என வலித்தல்;** to throb pain as of boils. 3. **கண் தெறிக்குதல்;** to grow blind by dazzling. 4. **எட்ட விழல்;** to spirt as drops of particles of water (சா.அக.).

**தெறி⁴** *teṟi*, பெ. (n.) 1. **சிதறுகை** (சங்.அக.); spattering, splashing, scattering. 2. **அணி, குப்பாயம் முதலியவற்றின் கடைப்பூட்டு** (யாழ்.அக.); clasp, as of an ornament. 3. **குறும்புப் பேச்சு;** mischievous talk. "எப்போதும் அவன் தெறி பேசுகிறான்" (நாஞ்.) (செ.அக.).

*[தெளி → தெறி]*

**தெறி⁴** *teṟi*, பெ. (n.) **தேள்;** scorpion (சா.அக.).

**தெறிக்கடி-த்தல்** *teṟi-k-kaḍi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. **சிதறவடித்தல்;** to scatter, disperse. 2. **எதிரி அடங்கும்படி பேசுதல்;** to confound, puzzle, as in controversy (செ.அக.).

*[தெறி → தெறிக்க + அடி-.]*

**தெறிக்கப்பேசு-தல்** *teṟikka-p-pēšu-*, 5 செ.குன்றா.வி. (v.t.) **பொறுமையின்றி கடுத்துப் பேசுதல்** (கொ.வ.); to speak, rashly and inconsiderately (செ.அக.).

*[தெறிக்க + பேசு-.]*

**தெறிகெடு-தல்** *teṟi-keḍu-*, 11 செ.கு.வி. (v.i.) **நிலைகுலைதல்;** to be routed, scattered. "தெறிகெட வோடுதல் கண்டு" (சேதுபு. சுந்தமா. 39).

*[தெறி + கெடு-.]*

**தெறிச்சமீன்** *teṟicca-mīṉ,* பெ. (n.) 1. விரைவாக நீந்திச் செல்லும் மீன்; fish that swims fast in the water. 2. பெரிய மீன்; big fish.

*[தெறி → தெறித்த → தெறிச்ச + மீன்]*

**தெறிச்சவெள்ளம்** *teṟicca-veḷḷam,* பெ. (n.) நீரோட்டமில்லாத கடல்; currentless sea (மீனவ.)

*[தெறிச்ச + வெள்ளம்]*

**தெறிசிங்கி**[1] *teṟi-siṅgi,* பெ. (n.) மாந்தரின் மீது தெளித்தால் பட்ட இடம் புண்ணாகும் ஒரு வகைக் கூட்டு மருந்து (நாஞ்.); a mixture whose drops cause swelling in the body (செ.அக.).

*[தெளி → தெறி + சிங்கி]*

**தெறிசிங்கி**[2] *teṟi-śiṅgi,* பெ. (n.) அகத்தியர் பெருநூலிற் சொல்லியுள்ள ஒரு வகைச் சிங்கி வித்தை; a magic performance or an art in jugglery described in perunūl of Agattiyaṉ (சா.அக.).

**தெறிசோறு** *teṟi-cōṟu,* பெ. (n.) உண் கலத்தினின்று சிதறிவிழுஞ் சோற்றுப் பருக்கை; spoon drift.

*[தெறி + சோறு]*

**தெறித்தவள்** *teṟittavaḷ,* பெ. (n.) குடும்பத்தினின்று வெளியேறி விலைமகளானவள்; an unchaste woman who has deserted her home and become a prostitute.

*[தெளி → தெறி. தெறி → தெறித்தவள்]*

**தெறித்தவன்** *teṟittavaṉ,* பெ. (n.) 1. செறுக்குள்ளவன்; headstrong, proud man. 2. கொடியவன் (வின்.); cruel man.

*[தெறு → தெறி → தெறித்தவன்]*

**தெறித்தளத்தல்** *teṟitaḷattal,* பெ. (n.) ஒன்றைத் தட்டுதலால் உண்டாம் ஒலியின் தன்மையினைக் கூர்ந்து செவியில் அளக்கை (தொல். எழுத்து 7, உரை.); measurement by determining the quality of the sound by the ear. 2. கூர்ந்து (நிதானித்து) அளக்கை (இ.வ.); careful measuring.

*[தெறித்து + அளத்தல்]*

**தெறித்துநடை** *teṟittu-naḍai,* பெ. (n.) துள்ளு நடை; hopping gait. "தெறித்து நடை மாபிற்றன் மறிக்குநிழ லாகி" (குறுந். 213).

*[தெறித்து + நடை. தெறி → தெறித்து]*

**தெறித்துப்போ-தல்** *teṟittu-p-pō-,* 11 செ.கு.வி. (v.i.) 1. குடும்பத்தைவிட்டு விலகி விலை மகளாதல் (சென்னை); to desert one's home and become a prostitude. 2. பிணி தீர்தல்; to be cured. 'பிணி தெறித்துப் போயிற்று' 3. ஒளியாற் கண் கூசி மழுங்குதல் (இ.வ.); to be dazzled by excess of light. இயங்கியின் முகப்புவிளக்கு வெளிச்சத்தினால் கண் தெறித்துப் போயிற்று (உ.வ.) மின்னல் வெளிச்சத்தினால் கண் தெறித்துப் போயிற்று (உ.வ.).

*[தெறி → தெறித்து + போ-.]*

**தெறிதலை** *teri-talai,* பெ. (n.) தறிதலை (இ.வ.); அடங்காதவன்; swollen-headed person.

*[தறிதலை → தெறிதலை]*

**தெறிநடை** *teṟi-naḍai,* பெ. (n.) தெறித்துநடை பார்க்க; see *terittu-naḍai.* "தெறிநடை மரைக் கண மிரிய" (அகநா. 224).

*[தெறி + நடை]*

**தெறிப்படங்கு**[1]**-தல்** *teṟi-p-paḍaṅgu-,* 9 செ.கு.வி. (v.i.) வெடியுப்பு, உப்பு முதலியவற்றைக் கட்டும் போது படபட வென்று தெறிக்கும் குணம் அடங்குதல்; to be over the busting noises of salts, nitre, etc., which were produced while they are heated (சா.அக.).

*[தெறிப்பு + அடங்கு]*

**தெறிப்படங்கு**[2]**-தல்** *teṟi-p-paḍaṅgu-,* 9 செ.கு.வி. (v.i.) செறுக்கு அடங்குதல்; to control presumptous conduct தேர்தலில் தோற்றபின் அவர் தெறிப்படங்கின்று (உ.வ.).

*[தெறிப்பு[1] + அடங்கு-.]*

**தெறிப்பான்** *teṟippāṉ,* பெ. (n.) தலை சிதறத்தக்கவன் என்று பொருள்படுமோர் வசை மொழி (உ.வ.); a curse meaning that the person cursed deserves to have his head blown to pieces.

*[தெறிப்பு → தெறிப்பான்]*

**தெறிப்பு**[1] *terippu*, பெ. (n.) செறுக்கு மேலிட்ட ஒழுக்கம்; presumptuous conduct.

**தெறிப்பு**[2] *terippu*, பெ (n.) கடைப் பூட்டு (வின்); button, clasp of thread or metal.

ம. தெறிப்பு

*[தெறி → தெறிப்பு]*

**தெறிப்பு**[3] *terippu*, பெ. (n.) தெறித்துப் போதல்; break caused abruptly (சா.அக.)

*[தெற்று → தெறி → தெறிப்பு]*

**தெறிப்பு**[4] *terippu*, பெ (n.) அதிர் வெடி; rocket.

*[தெறி → தெறிப்பு]*

**தெறிப்புநாடி** *terippu-nāḍi*, பெ. (n.) 1. துள்ளு நாடி; swift abrupt pulse. 2. பின்னுக்கு உதைத்தோடும் நாடி; rebounding pulse (சா.அக.).

*[தெறிப்பு[3] + நாடி]*

**தெறிப்புமசகு** *terippu-masagu*, பெ. (n.) மசகுப் பொருள்களை வாரித் தெறித்து மசகிடும் முறை; splash lubrication.

*[தெறிப்பு + மசகு]*

**தெறிபட்டவள்** *teri-paṭṭavaḷ*, பெ. (n.) தெறித்தவள் பார்க்க; see *terittavaḷ*.

*[தெறித்தவள் → தெறிபட்டவள்]*

**தெறிபடு-தல்** *teri-paḍu*, 20 செ.கு.வி. (v.i.) 1. சிதறுண்ணுதல்; to be scattered, as cattle. 2. அலைந்துலைதல்; to be tossed about, as a vessel at sea. 3. தோற்றோடுதல்; to be discomfited, routed, as an army. 4. கலங்குதல்; to be puzzled, confounded. 5. திக்கறுதல் (வின்.); to be desolate, forsaken. 6. தவறுதல்; to fail, come to naught. 'செயல் தெறிபட்டது'.

*[தெறி + படு-.]*

**தெறிபதம்** *teri-padam*, பெ. (n.) நெய்மம் காய்ச்சுகையில் எண்ணெய் வெடிபடும் நிலை; spirtling stage of medicinal oil when boiling.

*[தெறி + பதம்]*

**தெறிமுற்று-தல்** *teri-muṟṟu-*, 5 செ.கு.வி. (v.i.) முழுதும் பழுத்தல் (இ.வ.); to become fully ripe.

*[தெறிக்க + முற்று-.]*

**தெறிவாதம்** *teri-vādam*, பெ. (n.) நோய் வகை; a disease.

**தெறிவில்** *teri-vil*, பெ. (n.) சுண்டு வில்; a small bow for shooting pellets. "சுரிகையுந் தெரிவில்லுஞ் செண்டுகோலும்" (திவ். பெரியாழ். 3, 4, 3)

ம. தெறிவில்லு

*[தெறி' + வில்]*



**தெறு**[1]**-தல்** *teṟu-*, 6 செ.குன்றாவி. (v.t.) 1. சுடுதல்; to burn, scorch. "நீங்கிற் றெறூஉம்" (குறள், 1104). 2. தண்டஞ்செய்தல்; to punish. "கொடியோர்த் தெறுதலும்" (புறநா. 29). 3. அழித்தல்; to destroy. "பெரிதாய பகை வென்று பேணாரைத் தெறுதலும்" (கலித். 11). 4. கொல்லுதல் (பிங்.); to kill. "முள்ளி னெய்தெற விழுக்கிய" (மலைபடு. 301). 5. வருத்துதல்; to trouble, plague. "செம்முக மாத்தெறு கட்டழிய" (திருக்கோ. 313). 6. நெரித்தல் (திவா.); to crush, bruise. 7. காய்ச்சுதல்; to boil down. "கரும்பினைத் தெற்ற கட்டியின்" (காசிக. இல்ல.3). 8. சினத்தல்; to be angry at or with. "தெறலருங் கடுந்துப்பின்" (மதுரைக். 32.). 9. கொட்டுதல்; to sting, as a wasp. "கடிதாகத் தெறுதலை யுடைய மிக்க குளவியினம் (பதிற்றுப். 71, உரை). 10. மிகுத்தல் (பிங்); to increase.

**தெறு**[2]**-தல்** *teṟu-*, 6 செ.கு.வி (v.i.) 1. தங்குதல்; to tarry. 2. நீங்குதல்; to leave, forsake. "பொய்ம்மை தெறுவது" (திருநூற். 13).

**தெறு**[3]**-த்தல்** *teṟu-*, 11 செ.குன்றாவி. (v.t.) 1. நெரித்தல் (பிங்.); to crush, bruise.

2. குவித்தல்; to heap. "விருந்தின் மன்ன ரருங்கலந் தெறுப்ப" (அகநா. 54)

ம. தெறுக்குக (சுருட்டுதல், பின்னுதல்)

**தெறு**[4] *teṟu*, பெ (n.) *1.* சுடுகை; burning, scorching. "தீத்தெறுவிற் கவின்வாடி" (பட்டினப். 10). *2.* சினம்; anger. "தெறுவர விருபாற் படுக்குநின் வாள்வாய்" (புறநா. 50). *3.* அச்சம்; fear. "தெறுவர வென்னாகு வள்கொல்" (அகநா. 73). *4.* துன்பம்; distress. "தெறுவர வீங்கினம் வருபவோ" (குறுந். 336).

**தெறுக்கால்** *teṟu-k-kāl*, பெ. (n.) *1.* தேள் (திவா.); scorpion *2.* நளிஓரை (சூடா); scorpio in the zodiac

[தெறு + கால்]

**தெறுகுவர்** *teṟuguvar*, பெ. (n.) அழிப்பவர்; one who destroys.

[தெறு' → தெறுகுவர்]

**தெறுநர்** *teṟunar*, பெ. (n.) *1.* பகைவர் (பிங்.); foes, enemies *2.* கொலையாளர் (யாழ்.அக.); murderers.

[தெறு' → தெறுநர்]

**தெறுப்பதம்** *teṟu-p-padam*, பெ. (n.) தெறுக்கால் பார்க்க; see *teṟu-k-kāl*. "தெறுப்பதங் கழீஇ செறிந்தெழு நரகிடை" (உபதேசகா. சிவத்துரோ. 229).

[தெறு + பதம்]

**தெறுபொருள்** *teṟu-poruḷ*, பெ. (n.) திறைப் பொருள்; indemnity, tribute. "உறுபொருளும் உல்கு பொருளும்தன் ஒன்னார்த் தெறுபொருளும் வேந்தன் பொருள்" (குறள், 756).

[தெறு ' + பொருள்]

**தெறுவர்** *teṟuvar*, பெ. (n.) பகைவர்; foes, enemies. "தெறுவர் பேருயி ருண்ணு மாதோ" (புறநா. 307).

[தெறு → தெறுவர்]

**தெறுவி** *teṟuvi*, பெ. (n.) அகப்பை; ladle. "தெறுவியாலன்றி" (காசிக. இல்லற. 29).

[தெறு → தெறுவி]

**தெறுவு** *teṟuvu*, பெ. (n.) சுடுகை; burning.

[தெறு³ → தெறுவு]

**தெறுழ்** *teṟuḻ*, பெ. (n.) *1.* காட்டுக்கொடி வகை; a creeper. "தெறுழ்வீ பூப்ப" (புறநா. 119). *2.* புளிமா பார்க்க (புறநா 119, உரை); see *puḷimā*.

[தெறு → தெறுழ்]

**தென்** *teṉ*, பெ (n.) *1.* தென்னை (சூடா.) பார்க்க; see *teṉṉai*. *2.* தெற்கு (பிங்.); south, southern region. தென்திசை. *3.* அழகு (பிங்.); beauty. "மதனன்றன் தென்னீருருவமழிய" (தேவா. 1155, 4). *4.* கற்பு (சூடா); chastity. *5.* இசை (பிங்.); harmony, music. *6.* இசைப்பாட்டு (பிங்.); song. *7.* இனிமை; sweetness. "தென்னிசை பாடும் பாணன்" (திருவாலவா. 56, 7). *8.* வலப்பக்கம்; right side. "இடக்கால் தென்றொடைமே லொன்றச் செறி" (சைவச. பொது. 273).

ம., க., தெ. தென்

[தில் → தெல் → தென். தென்னுதல் = கோணுதல், சாய்தல். தென் = தென்னை மரம் இயற்கையாக வளர்ந்த தென்றிசை. குமரிக் கண்டத்தில் ஏழ்தெங்க நாடியிருந்தமையையும், தென் கண்டத்திலும் அதனையடுத்த தீவுகளிலும் இன்றும் தென்னை செழித்து வளர்தலையும் நோக்குக (வே.க. 144, 145)]

**தென்கடல்** *teṉ-kaḍal*, பெ. (n.) *1.* கோடியக் கரையையொட்டித் தென்பக்கமாய் உள்ள கடல்; sea near the Kōḍiyakkarai. *2.* குமரிக் கடல்; Cape Comerin sea; Kanniya-k-kumari sea.

[தென் + கடல்]

**தென்கயிலாயம்** *teṉ-kayilāyam*, பெ. (n.) கைலாயத்தை ஒத்ததும் தென்தேயத்தில் உள்ளதுமான தில்லை (சிதம்பரம்) திருக்காளத்தி, திருவையாறு போன்ற சிவன் கோயில்; Sivan shrines of the south, as Tillai, Chidambaram, Tirukkalatti, Tiruvaiyaru, etc.

[தென் + கயிலாயம்]

Skt. kailas → த. கயிலாயம்

**தென்கயிலை** *teṉ-kayilai*, பெ. (n.) தென் கயிலாயம் பார்க்க; see *teṉ-kailāyam*. "தென்கயிலைக்குப் போவன்" (சீகாளத். பு. தென்கை. 9)

[தென் + கயிலை]

**தென்கரைநாடு** *tenkarainādu,* பெ. (n.). காவிரிக்குத் தென்கரையாகச் சோழ மண்டலத்துள் அமைந்த நாடு; country situated in chola mandalam, which is south of cauvery. "தென்கரை நித்த விநோத வளநாடு" (கரந்தைச் செப்பேடுகள்).

*[தென் + கரை + நாடு]*

**தென்கலை** *ten-kalai,* பெ. (n.) 1. தமிழ்; the Tamil literature and art, as belonging to the south. "வடகலை தென்கலை வடுகு கன்னடம்" (கம்பரா. பாயி). 2. தென்கலையார் பார்க்க; see *ten-kalaiyār.* 3. தென்கலைத்திருமண் பார்க்க; see *tenkalai-t-tiruman.*

**தென்கலைத்திருமண்** *tenkalai-t-tiruman,* பெ. (n.) தென்கலை மாலியர் இடும் திருமண்; the mark worn on the forehead by the ten-kalai-māliyar.

*[தென்கலை + திரு + மண்]*



**தென்கலைநாமம்** *tenkalai-nāmam,* பெ. (n.). தென்கலைத்திருமண் பார்க்க; see *tenkalai-t-tiruman.*

*[தென்கலை + நாமம். ராமம் → நாமம்]*

**தென்கலையார்** *ten-kalaiyār,* பெ. (n.) தென்கலைத் திருமண் இடும் மாலியப் பிரிவினர்; the vainava sect wearing ten-kalai-t-tiruman.

*[தென் + கலையார்]*

**தென்கலைராமம்** *ten-kalai-rāmam,* பெ. (n.) தென்கலைத்திருமண் பார்க்க; see *tenkalai-t-tiruman.*

*[தென்கலை + ராமம்]*

**தென்காசி** *tenkāśi,* பெ. (n.). குற்றாலத்திற்கு அருகில் சிற்றாற்றங்கரையில் உள்ளதும், பிற்காலப் பாண்டியரது தலைநகராய் இருந்ததுமான நகரம்; a Śivan shrine, on the river Cirrāru, north-east of Kurrālam in Tirunelveli district, capital of the later Pāndyas.

*[தென் + காசி]*

**தென்காசிவழக்கு** *tenkāśi-valakku,* பெ. (n.) இரு திறத்தார்க்கும் நடுவுகூறி எளிதில் வழக்குத் தீர்க்குமுறை (நெல்லை.); rough and ready settlement of a dispute by striking a mean.

*[தென்காசி + வழக்கு]*

**தென்காசியாசாரம்** *ten-kāśi-y-āśāram,* பெ. (n.) தென்காசிவிருந்தோம்பல் பார்க்க; see *tenkāśi-virundōmbal.* தென்காசி ஆசாரம் திருநெல்வேலி உபசாரம் (பழ.).

*[தென்காசி + ஆசாரம்]*

Skt. ācāra → த. ஆசாரம்

**தென்காசிவிருந்தோம்பல்** *tenkāśi-virundōmbal,* பெ. (n.) உள்ளன்பில்லாத விருந்தோம்பல் (நெல்லை); insincere and hollow courteousness.

**தென்கால்** *tenkāl,* பெ. (n.) தென்காற்று பார்க்க; see *tenkārru.*

*[தென் + கால்; கால் = காற்று]*

**தென்காற்று** *tenkārru,* பெ. (n.) தென்றல்; balmy breeze, as blowing from the south.

ம. தென்னிகாற்று

*[தென் + காற்று]*

**தென்கிழக்கு** *ten-kilakku,* பெ. (n.) தென்கீழ்த் திசை; south east.

ம. தெக்குகிழக்கு

*[தென் + கிழக்கு]*

**தென்கீழ்த்திசை** *ten-kīl-t-tiśai,* பெ. (n.) தென்கிழக்கு பார்க்க; see *ten-kilakku.*

*[தென் + கீழ் + திசை]*

**தென்கீழ்த்திசைப்பாலன்** *ten-kīl-t-tiśai-p-pālan,* பெ. (n.) தென்கீழ்த்திசையிறை பார்க்க; see *ten-kīl-t-tiśai-y-irai.*

*[தென் + கீழ் + திசை + பாலன்]*

**தென்கீழ்த்திசையிறை** *ten-kīḻ-t-tišai-y-iṟai,* பெ. (n.) தென்கிழ்த் திசையின் தலைவனாகிய தீத் தெய்வம் (சூடா.); Agni, as regent of the south-east.

*[தென் + கீழ் + திசை + இறை]*

**தென்கீழ்த்திசையோன்** *tenkīḻ-t-tišaiyōṉ,* பெ. (n.) தென்கீழ்த்திசையிறை பார்க்க; see *teṉkīḻ-t-tišai-y-iṟai.* "தென்கீழ்த்திசையோனாக்கிய தனிமுதற் றிருமாமதுரை" *(கல்லா. 31,10).*

*[தென் + கீழ் + திசையோன்]*

**தென்குரங்காடுதுறை** *teṉkuraṅgāduturai,* பெ. (n.) காவிரியின் தென்கரையிலுள்ள பாடல் பெற்ற சிவன் கோயில்; a Šivaṉ place; on the south bank of the Cauvery.

*[தென் + குரங்காடுதுறை]*

இதுவே இன்று கபிஸ்தலம் என்றழைக்கப் படுகிறது.

**தென்கோடு** *teṉ-kōḍu,* பெ. (n.) பிறைநிலவின் தென்முனை; Southern cusp of the moon. "வடகோ டுயர்ந்தென்ன தென்கோடு தாழ்ந் தென்ன வான்பிறைக்கே" *(பட்டினத். பொது. 1).*

*[தென் + கோடு]*

**தென்சார்** *teṉ-šār,* பெ. (n.) தென்பக்கம்; south side.

*[தென் + சார்]*

**தென்சிதம்பரம்** *teṉ-šidambaram,* பெ. (n.) சிவ வழிபாட்டுக்குரிய முதன்மையான இடங்களுள் ஒன்று; an important Šivaṉ temple, one among many (இரு.நூற்.தமி.).

*[தென் + சிதம்பரம்]*

சிற்றம்பலம் → சிதம்பரம்

**தென்படு-தல்** *teṉ-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) *1.* புலப்படுதல்; to meet, appear, strike one's eyes. அது என் கண்ணிலே தென்பட்டது. *2.* பயிற்சியடைதல்; to be versed, experienced. "அதிலே நன்றாய்த் தென்பட்டவன்" *(இ.வ.).*

**தென்பரதம்** *teṉ-paradam,* பெ. (n.) ஒன்பது கண்டங்களுள் ஒன்று (நவகண்டங்களுள் ஒன்று); a continent, one of navakaṇḍam.

*[தென் + பரதம்]*

**தென்பல்லி** *teṉ-palli,* பெ. (n.) புல்லகம் என்ற தலையணியின் உறுப்பிரண்டனுளொன்று; one of the two sections of the ornament pullakam. "தென்பல்லி வடபல்லி என்னும் இவையும் . . . ஒன்றான தலைக் கோலத்தை" *(சிலப். 6:107, உரை).*

*[தென் + பல்லி]*



**தென்பாண்டி** *teṉ-pāṇḍi,* பெ. (n.) தென்பாண்டி நாடு பார்க்க; see *teṉpāṇḍi-nāḍu.* "தென்பாண்டி குட்டங் குடங்கற்கா" *(நன். 273, உரை).* 2. பாண்டிய நாடு; the Pāṇḍiya country, as being in the south. "தென்பாண்டி நாடே தெளி" *(திருவாச. 19,2).*

ம. தென்பாண்டி

*[தென் + பாண்டி]*

**தென்பாண்டிநாடு** *teṉ-pāṇḍināḍu,* பெ. (n.) நாஞ்சில் நாடாகக் கருதப்படும் பாண்டி நாட்டுத் தென்பகுதி (நன். 273, உரை); the Southern Pāṇḍya country identified with Nāñjil-nāḍu.

*[தென் + பாண்டி + நாடு]*

**தென்பார்** *teṉ-pār,* பெ. (n.) *1.* தென்னாடு; South India. "தென்பாராளு மறிவிற் குறுமுனி" *(தமிழ்நா. 239). 2.* பாண்டி நாடு; the Pāṇḍya country, as the southern part of the earth. "தென்பார் வைகுவோர் தவமோ" *(திருவிளை. உக்கிர பாண்டியன். 20).*

*[தென் + பார்]*

**தென்பாரதம்** *teṉ-pāradam,* பெ. (n.) தென்பரதம் பார்க்க (யாழ்.அக.); see *teṉ-paradam.*

*[தென் + பாரதம்]*

Skt. bhārata → த. பாரதம்

**தென்பாரிசம்** *te<u>n</u>-pārišam*, பெ. (n.) *தெற்குச் சிறகம்;* south wing.

*[தென் + பாரிசம்]*

**தென்பால்** *te<u>n</u>-pāl*, பெ. (n.) *தெற்குப் பாகம்;* the southern part.

ம. தென்பால்

*[தென் + பால்]*

**தென்பாலி** *te<u>n</u>-pāli*, பெ. (n.) *குமரிக் கண்டப் பகுதிகளொன்று;* an ancient division of the Tamil land. "தென்பாலி முகத்துக்கு வடவெல்லையாகிய பஃறுளி" *(சிலப். 8,:1, உரை).*

*[தென் + பாலி]*

**தென்பாற்பரதம்** *te<u>n</u>-pā<u>r</u>-paradam*, பெ. (n.) *ஒன்பது கண்டங்களுள் ஒன்று;* a continent, one of nav-kaṇḍam.

*[தென் + பால் + பரதம்]*

**தென்பு** *te<u>n</u>bu*, பெ. (n.) தெம்பு பார்க்க; see *tembu.*

தெ. தென்பு

*[தெம்பு → தென்பு]*

**தென்புலக்கோன்** *te<u>n</u>-pula-k-kō<u>n</u>*, பெ. (n.) *கூற்றுவன்;* Yama<u>n</u>, as the lord of the south. "தென்புலக்கோன் பொறி யொற்றி" *(திவ். பெரியாழ். 5,2,2).*

*[தென்புலம் + கோன்]*

**தென்புலத்தார்** *te<u>n</u>-pulattār*, பெ. (n.) *தென்றிசையில் வாழ்ந்து மறைந்த முன்னோர்;* the manes, as living in the south. "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான் என்றாங்கு ஐம்புலத்தார் ஓம்பல்தலை" *(குறள், 43).* **2.** தென்புலர் பார்க்க; see *te<u>n</u>-pular.* "தென்புலத் தார்க் கென்னுக் கடைவுடையேன் யான்" *(திவ். இராமானுச. தனியன்).*

*[தென் + புலத்தார்]*

**தென்புலத்தார்வேள்வி** *te<u>n</u>-pulattār-vēḷvi*, பெ. (n.) **1.** *ஐவகை வேள்வியு ளொன்றாய் நாள்தோறும் தென்றிசையிலுள்ளார் (பிதிரர்); பொருட்டுச் செய்யும் நீத்தார் கடன்;* one of ai-vagai vēḷvi; daily offering of libations to the manes.

*[தென + புலத்தார் + வேள்வி]*

**தென்புலம்** *te<u>n</u>-pulam*, பெ. (n.) **1.** *தென்றேயம்;* the southern country. "தென்புல மருங்கிற் சாந்தொடு துறப்ப" *(நெடுநல். 52).* **2.** *தென்றிசையிலுள்ளவருலகம்;* region of the manes. "தென்புல வாழ்நர்க்கு" *(புறநா. 9).* **3.** *கூற்றுவனுலகு;* the abode of the God of death, world of Yama<u>n</u>. "தென்புலக் கோன் பொறி யொற்றி" *(திவ். பெரியாழ். 5, 22).* **4.** *தமிழகத்தின் தெற்கிலிருந்த பாண்டி நாடு;* Pāṇḍya country. "தென்புலங் காவலி னொரீஇ" *(புறநா. 7).*

ம. தென்புலம், தெக்கன்புரி

*[தென் + புலம்]*

**தென்புலர்** *te<u>n</u>-pular*, பெ. (n.) *காலதூதர்;* Yama<u>n</u>'s messengers. "தென்புலர்க் கென்னைச் சேர்கொடான்" *(திவ். பெரியதி. 7,3,3,).*

*[தென்புலம் → தென்புலர்]*

**தென்மச்சேறு** *te<u>n</u>ma-c-cē<u>r</u>u*, பெ. (n.) *கடலடிச் சேற்று வகையுள் ஒன்று;* kind of mud, which deposit beneath of the sea.

*[தென்மம் + சேறு]*

**தென்மதுரை** *te<u>n</u>madurai*, பெ. (n.) **1.** *தலைச் சங்கமிருந்து கடல் கொள்ளப்பட்ட நகரம் (சிலப். 8:1, உரை);* Southern Madurai the reputed city where the first Sangam met, supposed to have been submerged by the sea. **2.** *தென் பாலுள்ள மதுரை;* Madurai dist. fr. Vada Madurai.

*[தென் + மதுரை. மதி → மதிரை → மதுரை = மதிக்குலத்தவனான பாண்டியன் முதல் தலைநகர் (தென் மதுரை), கண்ணன் ஆண்ட வடமதுரை, அப்பெயர் பெற்ற கடைக்கழகப் பாண்டியர் தலைநகர் (வைகை மதுரை) (வ.வ. 52)]*

**தென்மலை** *te<u>n</u>-malai*, பெ. (n.) *பொதிய மலை;* Mount Podiyam, believed to be the residence of Agattiyar. opp. to vaḍamalai. "தென்மலையிருந்த சீர்சான் முனிவரன்" *(பு.வெ. சிறப்புப்பாயிரம்).*

*[தென் + மலை]*

**தென்மாடு** *te<u>n</u>-māḍu*, பெ. (n.) *தென் பக்கம்;* south side. "கோயிலில் அர்த்த மண்டபத்தில்

தென்மாட்டில் வாசலில் மேற்கடைய உத்திரத்திலும்" (தெ.க.தொ. 5, கல். 588).

*[தென் + மாடு. மாடு = பக்கம். "மாடு" பார்க்க]*

**தென்முனி** *ten-muni,* பெ. (n.) *அகத்தியன்;* Agattiyan, as residing in the south. "தென்றிசை வைகென்று தென்முனிக்குக் கயிலையின்முன் புகன்ற ஞான்று" *(கடம்பபு.இலீலா.18).*

*மறுவ.* குடமுனி

*ம.* தென்முனி

*[தென் + முனி]*

**தென்முனை** *ten-munai,* பெ. (n.) தென்கோடி முனை *(இ.வ.);* the South pole.

*[தென் + முனை]*

**தென்மேற்கு** *ten-mērku,* பெ. (n.) தெற்கைச் சார்ந்த மேற்றிசை; south-west.

*ம.* தெக்கு படிஞ்ஞாறு

*[தென் + மேற்கு. மேல் – மேற்கு]*

**தென்மேற்றிசைப்பாலன்** *ten-mērrišai-p-pālan,* பெ. (n.) தென்மேற்குத் திசையின் தலைவன் (நிருதி) *(பிங்.);* Niruti, regent of the south-west.

*[தென் + மேல் + திசை + பாலன்]*

**தென்மொழி** *ten-moli,* பெ. (n.) *1.* தென்னாட்டில் பேசப்படும் மொழி; South Indian language. *2.* தமிழ்; Tamil, as the speech of the South. "வடமொழி தென்மொழி" *(கம்பரா. பாயி.).*

*ம.* தென்மொழி

*[தென் + மொழி. தென்குமரிக்கண்டத்தில் தோன்றிய தமிழ் மொழி]*

தமிழ் என்பது தமிழை மட்டும் குறிக்குமென்றும் 'திரவிடம்' என்பது தமிழினின்று திரிந்த பிறமொழிகளையே குறிக்குமென்றும்; 'தென்மொழி' என்பது அவ்விரண்டையும் குறிக்குமென்றும் வேறு பாடறிந்து கொள்க. (தென்மொழி. ஆகத்து 1959)

தமிழும் திரவிடமும் சேர்ந்தது தமிழியம். தமிழல்லாத தமிழின மொழிகளே திரவிடம். தமிழ் ஆரியத்துணை வேண்டாத இயன் மொழியென்றும், திரவிடம் அதை வேண்டும் திரிமொழியென்றும் வேறுபாடறிக. தமிழும் திரவிட மொழிகளிலுள்ள தமிழ்க் கூறும் சேர்ந்ததே தென்மொழி (வண்.மொ. வழு.1).

**தென்வரை** *ten-varai,* பெ. (n.) தென்மலை பார்க்க; see *ten-malai.* "தென்வரைச் சாந்துமூழ்கி" *(சீவக. 2081).*

*[தென் + வரை]*

**தென்றமிழ்** *tenramil,* பெ. (n.) *தமிழ்மொழி;* Tamil, as the language of the south. "என்றுமுள தென்றமி ழியம்பியிசை கொண்டான்" *(கம்பரா. அகத்திய. 47).*

*[தென் + தமிழ்]*

**தென்றல்** *tenral,* பெ. (n.) *1.* தென்காற்று; south wind, balmy breeze from the south. "வண்டொடு புக்க மணவாய்த் தென்றல்" *(சிலப். 2:24). 2.* கோடைத் தென்காற்று (இவ.); south-west monsoon in June - September. தென்றல் முற்றிப் பெருங் காற்றாகும் *(பழ.).*

*ம.* தென்றல்

*[தென் → தென்றல்]*

**தென்றல்வருமலை** *tenral-varumalai,* பெ. (n.) தென்மலை *(பிங்.)* பார்க்க; see *ten-malai* *(செ.அக.).*

*[தென்றல் + வருமலை]*

**தென்றலை** *tenralai,* பெ. (n.) தெற்கு; south. தென்றலையில் தேவநேயனார் வீடு (இ.வ.).

*[தென் + தலை]*

**தென்றற்கோன்** *tenrar-kōn,* பெ. (n.) பாண்டியவரசன்; Pāṇḍya king as the lord of tenral. "தென்றற்கோன் செவிமடுத்தார்" *(திருவிளை.மெய்க்கா. 12).*

*[தென்றல் + கோன்]*

பொதிகை மலைக்கு அரசனாதலால் அங்கிருந்து வீசும் தென்றலுக்கும் அரசன் என்பதால் இப்பெயர் பெற்றான்

**தென்றற்றேரோன்** *tenrarrērōn,* பெ. (n.) காமன் *(பின்.);* Kāman, as having the south wind for his chariot.

*[தென்றல் + தேரோன்]*

காமவிருப்பை மிகுவிக்கும் தென்றலைத் தேராகக் கொண்டிருப்பதால் காமனுக்கு இப்பெயரமைந்தது.

**தென்றி** *teṉṟi*, பெ (n.) 1. தெற்கு; south. "தென்றிக் கயிலையிலே" *(காளத். உலா, 9).* 2. தென்றல் பார்க்க; see *teṉṟal*. "தென்றியா யசைந்து" *(கந்தபு. திருவவ.11).*

*[தென் – தென்றி]*

**தென்றிசைக்கிழவன்** *teṉṟišai-k-kiḻavaṉ*, பெ. (n.) தென்றிசைமுதல்வன் பார்க்க; *teṉṟišai-mudalvaṉ*.

*[தென் + திசை + கிழவன்]*

**தென்றிசைக்கோன்** *teṉṟišai-k-kōṉ*, பெ. (n.) தென்றிசைமுதல்வன் பார்க்க; *teṉṟišai-mudalvaṉ*.

*[தென் + திசை + கோன்]*

**தென்றிசைப்பாலன்** *teṉṟišai-p-pālaṉ*, பெ. (n.) தென்றிசைமுதல்வன் பார்க்க; see *teṉṟišai-mudalvaṉ*.

*[தென் + திசை + பாலன்]*

**தென்றிசைமுதல்வன்** *teṉṟišai-mudalvaṉ*, பெ. (n.) தென்திசையின் தலைவனான கூற்றுவன் (திவா.); Yamaṉ as regent of the south.

ம. தென்னல்; க. தெம்பரல், தென்காலி, தம்பெலர்; தெ. தெம்மா (காற்று)

மூழ்கிப்போன குமரிக்கண்டம் தென்றிசையிலிருந்ததாலும் தென்புலத்தார் என்பது நீத்தாரைக் குறிப்பதாலும், தென் திசைக்கு உரிய தலைவனாக, கூற்றுவன் கருதப் பட்டான்.

*[தென் + திசை + முதல்வன்]*

**தென்றிசையங்கி** *teṉṟisai-y-aṅgi*, பெ. (n.) உயிர்களைக்கொன்று கடவுளுக்கு உணவளிக்கும் வேள்வித் தீ; one of the three sacred fires of vedic sacrifice.

*[தென் + திசை + அங்கி]*

**தென்று-தல்** *teṉṟu-*, 5 செ.குன்றாவி. (v.i.) 1. சிதறுதல்; to be scattered, split to pieces. "ஆயிரந்தோளுந் திருச்சக்கரமதனாற் றென்றித் திசை திசைவீழ" *(திவ்.பெரியாழ். 5,3,9).* 2. இனம்பிரிதல்; to stray away, as from a group. "தென்றியிருளிற் றிகைத்த கரி" *(தேவா. 1156, 5).*

ம. தென்னுக

*[தெறி → தெற்று → தென்று]*

**தென்னகர்** *teṉ-ṉagar*, பெ. (n.) கூற்றுவன் நகரம் (தெற்கிலுள்ளது); Yamaṉ capital, as being in the south. "தென்னகர்க்கிறை சென்றனன்" *(உபதேசகா. சிவபுண். 227).*

ம. தென்னகர்

*[தென் + நகர்]*

**தென்னங்கட்டை**[1] *teṉṉaṅgaṭṭai*, பெ. (n.) பனங்கட்டை போன்று தென்னை மரத்திலிருந்து அறுத்து எடுக்கப்பட்ட கட்டை; log of wood obtained by cutting, coconut tree.

*[தென்னை + கட்டை]*

இவை கைமரங்களாகப் பயன்படுத்தப் படுகின்றன.

**தென்னங்கட்டை**[2] *teṉṉaṅgaṭṭai*, பெ. (n.) தேய்ந்த தென்னம் விளக்குமாறு; wornout broom of coconut leaf fibre.

*[தென்னை + கட்டை. கட்டை = தேய்ந்தது, குட்டையானது]*

**தென்னங்கருப்பநீர்** *teṉṉaṅ-karuppa-nīr*, பெ. (n.) தென்னையின் பதநீர் (வின்.); sweet coconut-toddy.

*[தென்னை + கருப்ப நீர்]*

**தென்னங்கள்** *teṉṉaṅ-kaḷ*, பெ. (n.) தென்னம் பாளையிலிருந்து வடிக்குங் கள்; coconut toddy.

ம. தெங்ஙின் கள்ளு

*[தென்னை + கள்]*

**தென்னங்கன்று** *teṉṉaṅ-kaṉṟu*, பெ. (n.) தென்னம்பிள்ளை பார்க்க; see *teṉṉam-piḷḷai*.

*[தென்னை + கன்று]*

**தென்னங்காடி** *teṉṉaṅ-gāḍi*, பெ. (n.) தென்னங் கள்ளைப் புளிக்க வைத்து அதனின்று வடிக்கப்படும் சாறு; coconut vinigar (சா.அக.).

*[தென்னை + காடி]*

நெல்லுமியைப் பயன்படுத்தி விரைந்து புளிக்க வைக்கலாம். இக்காடி ஊறுகாய்க் குதவும். தாகத்தைத் தணிக்கும்.

**தென்னங்காய்** *tennaṅ-gāy,* பெ. (n.) தேங்காய்; coconut fruit.

ம. தெங்ஙன்

*[தென்னை + காய்]*

**தென்னங்கிடுகு** *tennaṅ-kiḍugu,* பெ. (n.) தென்னங் கீற்றால் முடைந்த தட்டி; screen made of braided coconut leaf.

*[தென்னை + கிடுகு]*

**தென்னங்கிளி** *tennaṅ-kiḷi,* பெ. (n.) பெரும்பாலும் தென்னையில் வாழும் கிளி வகை; rose-ringed parakeet as nesting the coconut tree.

*[தென்னை + கிளி]*

**தென்னங்கீலகம்** *tennaṅ-kīlagam,* பெ. (n.) மேகநாத மூலி; unknown drug (சா.அக.).

**தென்னங்கீற்று** *tennaṅ-kīṟṟu,* பெ. (n.) தென்னை மட்டையின் ஓலையைமிடைந்த கீற்று; split coconut leaf.

*[தென்னை + கீற்று]*



**தென்னங்குருகு** *tennaṅ-kurugu,* பெ. (n.) தென்னையின் உள்ளீடு; heart of the coconut tree.

*[தென்னை + குருகு]*

**தென்னங்குருத்து** *tennaṅ-kuruttu,* பெ. (n.) தென்னை மரத்துத் தளிர்; tender terminal bud on the top of the coconut tree-coconut cabbage (சா.அக.).

*[தென்னை + குருத்து]*

இது சமையலுக்கு உதவும். எனினும் மரத்தை யழிக்காமல் இதைப் பறிக்க வியலாது.

**தென்னங்குரும்பி** *tennaṅ-krumbi,* பெ. (n.) இளநீர்பிடியாத காய்; very immature coconut.

*[தென்னை + குரும்பி]*

**தென்னங்குரும்பை** *tennaṅ-kurumbai,* பெ. (n.) 1. தென்னை மரத்தில் முதன்முதலாக விடும் இளங்காய்; the germ or the first setting of the young coconut. 2. பக்குவப்படாத தேங்காய்; immature coconut. தென்னங் குரும்பை திருக்குரும்பை பன்னாளடையெல்லாம் ஒரு மரத்துக்காய் (பழ.) (சா.அக.).

*[தென்னை + குரும்பை]*

**தென்னங்கூந்தல்** *tennaṅ-kūndal,* பெ. (n.) தேங்காயைச் சுற்றி அமைந்த நார்; fibre around the coconut.

*[தென்னை + கூந்தல்]*

**தென்னங்கெளுத்தி** *tennaṅ-keḷutti,* பெ. (n.) சுவையுள்ள ஒரு வகை மீன் (மீனவ.); a kind of tasty fish.



**தென்னங்கொட்டு** *tennaṅ-koṭṭu,* பெ. (n.) தென்னைத் தூறு; stump of a coconut tree.

*[தென்னை + கொட்டு]*

**தென்னங்கோம்பை** *tennaṅ-kōmbai,* பெ. (n.) 1. இரு கூறாக்கி உள்ளீடு எடுக்கப்பெற்ற தேங்காய் (இ.வ.); split coconut with its kernel taken out. 2. தென்னங்கோழை பார்க்க; see *tennaṅ-kōḻai.*

*[தென்னை + கோம்பை]*

**தென்னங்கோழை** *tennaṅ-kōḻai,* பெ. (n.) தேங்காய்க் குடுவை; coconut with the milk and kernal taken out.

*[தென்னை + கோழை]*

**தென்னஞ்சருக்கரை** *tennañ-carukkarai,* பெ (n.) தென்னங் கற்கண்டு; coconut jaggery the brown sugar obtained from the pure sweet toddy

*[தென்னை + சருக்கரை. சருக்கு → சருக்கரம் → சருக்கரை]*

**தென்னஞ்சாம்பல்** *tennañ-cāmbal,* பெ (n.) தென்னையோலையை எரித்த சாம்பல்; the ashes of the burnt leaves of coconut tree (சா.அக.)

*[தென்னை + சாம்பல்]*

இது மிகவும் காரமானது, மருந்திற்குப் பயன்படும்

**தென்னஞ்சாலை** *tennañ-cālai,* பெ. (n.) இரு பக்கத்திலும் தென்னைமரம் உள்ள சாலை; a road having rows of coconut trees on either side.

*[தென்னை + சாலை]*



**தென்னஞ்சேகு** *tennañ-jēgu,* பெ. (n.) தென்னையின் மரப்பாகம்; the porcupine wood of commerce

*[தென்னை + சேகு]*

**தென்னந்தும்பு** *tennan-tumbu,* பெ. (n.) தென்னை நாரில் திரித்த கயிறு; rope made by the coconut husk.

*[தென்னை + தும்பு]*

**தென்னந்தெளியலாக** *tennanteḷiyalāga,* பெ (n.) அங்கங்கே ஒவ்வொன்றாக; sporadically.

*[தென்னம் + தெளியலாக]*

**தென்னம்பஞ்சு** *tennam-pañju,* பெ (n.) தென்னைமட்டையின் அடிப்புறத்திலிருக்கும் பஞ்சுபோன்ற மெல்லிய பொருள்; soft, downy substance on the outside of the lower part of the coconut leaves

*[தென்னை + பஞ்சு]*

**தென்னம்பழம்** *tennampaḻam,* பெ. (n.) தேங்காய் நெற்று; ripe coconut (S.I.I.V, 93).

*[தென்னை + பழம்]*

**தென்னம்பன்னாடை** *tennam-pannāḍai,* பெ (n.) தென்னை மட்டைக்கும், மரத்திற்கும் இடையே மட்டை பிரியுமிடத்தில் காணப்படும் வலை போன்ற பொருள்; a coarse net-like fibrous matting found at the trunk where the foot stalks branch out.

*[தென்னை + பன்னாடை]*

**தென்னம்பால்** *tennam-pāl,* பெ. (n.) தென்னங்கள் பார்க்க; see *tennañ-kaḷ* (சா.அக.).

*[தென்னை + பால்]*

**தென்னம்பாளை** *tennam-pāḷai,* பெ. (n.) *1.* தென்னம்பூ உள்ளடங்கிய உறை; coconut flower with the integument covering it. *2.* தென்னம்பூவினுறை; integument or spathe of the blossom, which covers it until it expands.

*[தென்னை + பாளை]*

**தென்னம்பிசின்** *tennam-piśin,* பெ. (n.) தென்னை மரத்துப் பிசின்; coconut gum.

*[தென்னை + பிசின்]*

இது சிறிதளவே காணப்படும், பயனற்றது.

**தென்னம்பிள்ளை** *tennam-piḷḷai,* பெ. (n.) தென்னங்கன்று; coconut sapling.

*[தென்னை + பிள்ளை]*



**தென்னம்பூ** *tennam-pū*, பெ (n.) *தென்னை மரத்தின் பாளைப்பூ;* flowers of coconut tree *(சா.அக.)*

*[தென்னை + பூ]*

**தென்னம்பூநீர்** *tennam-pū-nīr*, பெ (n.) *தென்னம்பூவின் சாறு;* juice extracted from coconut flower *(சா.அக.)*

*[தென்னை + பூ + நீர்]*

**தென்னம்பொருப்பு** *tennam-poruppu*, பெ (n.) *பொதியமலை;* Mount Podiyam as the southern mountain. "தென்னம் பொருப்ப னன்னாட் டுள்ளும்" *(புறநா 33)*

*[தென் + அம் + பொருப்பு]*

**தென்னம்மாறு** *tennam-māṟu*, பெ (n.) *தென்னைவிளக்குமாறு பார்க்க;* see *tennai-viḷakkumāṟu*

**தென்னம்வெல்லம்** *tennam-vellam*, பெ (n.) *தென்னஞ் சருக்கரையைக் கட்டியாகத் திரட்டிய வெல்லம்;* coconut jaggery *(சா.அக.)*

*[தென்னை + வெல்லம்]*

**தென்னம்வேர்** *tennam-vēr*, பெ (n.) *நார்த் தன்மையுடைய தென்னையின் வேர்;* the long fibrous roots of coconut tree.

*[தென்னை + வேர்]*

மருத்துவப் பண்புடையது

**தென்னமட்டை** *tenna-maṭṭai*, பெ (n.) *தென்னைமட்டை பார்க்க;* see *tennai-maṭṭai.*

*[தென்னைமட்டை → தென்னமட்டை]*

**தென்னமரம்** *tenna-maram*, பெ (n.) *தென்னை பார்க்க* see *tennai* தென்னமரத்திலே தேள்கொட்டப் பனை மரத்திலே நெறி கட்டினது போல *(பழ.)*

*[தென்னை + மரம்]*

**தென்னர்**[1] *tennar*, பெ (n.) *தெற்கு;* south. "அதற்குத் தென்னர் மன்று மம்பல மொன்றுண்டு" *(கோயிற்பு பதஞ் 71)*

*[தென் + அர். 'அர்' சொல்லாக்க ஈறு]*

**தென்னர்**[2] *tennar*, பெ (n.) *1. தென்னாட்டவர்;* people of southern country. "தென்னர்பிரான் கழறிற் றறிவான் *(பதினொ திருத்தொண் 44)* *2. பாண்டிய வரசர்;* the Pāṇḍiyan kings. "தேவர் கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே" *(சிலப் 17. பக் 29)*

*[தென் + அர். 'அர்' பலர்பாலீறு]*

**தென்னர்** *tennar*, பெ (n.) *பகைவர் (யாழ்.அக.);* foes

ம. தென்னர்

*[தெறுநர் → தென்னர்]*

**தென்னர்நிலம்** *tennar-nilam*, பெ. (n.) *1. பகைவர் நாடு;* enemy's country. *2. போர்க் களம்;* battle field

*[தென்னர் + நிலம்]*

**தென்னரங்கன்சம்பா** *tennaraṅgaṉ-šambā*, பெ (n.) *சம்பா நெல்வகை;* a kind of camba paddy. "தென்னரங்கன் சம்பா திருக்குறுங்கை நம்பிசம்பா" *(நெல்விடு 183)*

*[தென் + அரங்கன் + சம்பா]*

**தென்னல்** *tennal*, பெ (n.) *தென்றல் பார்க்க;* see *tenṟal*

ம. தென்னல்

*[தென்றல் → தென்னல் (கொ.வ.)]*

**தென்னவன்** *tennavan*, பெ (n.) *1. தென் புலத்தையாண்ட பாண்டியன்;* Paṇḍiyaṉ, as ruling in the south. "வாய் வாய்ந்த தென்னவன் றொல்லிசை நட்ட குடியொடு" *(கலித் 104. 6)* *2. இராவணன்;* Rāvaṇaṉ. "தென்னவன் மலையெடுக்க" *(தேவா 1051. 10)* *3. கூற்றுவன்;* Kūṟṟuvaṉ *(மதுரைக் 20, உரை)*

ம. தென்னவன்

**தென்னவன்பிரமராயன்** *tennavaṉ-pirama-rāyaṉ*, பெ (n.) *மாணிக்கவாசகர் அமைச்சராயிருந்த பொழுது பாண்டியன் கொடுத்த பட்டப்பெயர்;* title conferred by the Pāṇḍiya king on Māṇikkavašagar while he was minister. "தென்னவனேனை தென்னவன் பிரமராயனே காண்க" *(திருவாலவா 27. 61)* *(செ.அக.)*

*[தென்னவன் + பிரமராயன்]*

**தென்னவிளக்குமாறு** *tenna-viḷakkumāṟu,* பெ. (n.) தென்னைவிளக்குமாறு பார்க்க; see *tennai-viḷakkumāṟu.*

*[தென்னை + விளக்குமாறு]*

**தென்னவெல்லம்** *tenna-vellam,* பெ. (n.) தென்னம்வெல்லம் பார்க்க; see *tennam-vellam.*

*[தென்னை + வெல்லம்]*

**தென்னவெனல்** *tenna-v-eṉal,* பெ. (n.) இசைக் குறிப்பு; a syllable sung in tunes. "தென்னவென்னு மிசைவளர்த்து" *(சிலப். 8: 41, அரும்.).*

*[தென்னா + எனல்]*

**தென்னன்** *tennaṉ,* பெ. (n.) தென்னவன் பார்க்க; see *tennavaṉ.* "தென்னன் வாழ்க வாழ்கவென்று" *(சிலப். 29, கந்துகவரி).*

*[தென் → தென்னன்]*

**தென்னா** *tennā,* பெ. (n.) இசையொலிக் குறிப்புச் சொல்; onom. expr. in musical note.

**தென்னாடு** *teṉ-ṉāḍu,* பெ. (n.) இந்தியாவின் தென்பகுதி; South India. தென்னாடுடைய சிவனே போற்றி *(தேவா.).*

*[தென் + நாடு]*

**தென்னாதெனாவெனல்** *tennā-tenā-v-eṉal,* பெ. (n.) தாளச் சொற்செட்டு; syllables used in humming tunes or singing. "தென்னா தெனாவென்று வண்டுமுரல் திருவேங்கடத் தென்னானை" *(திவ். திருவாய். 3, 9, 1). (சிலப். 3: 26), உரை, பக்.105).*

*[தென்னா + தெனா + எனல்]*

**தென்னிப்பார்-தல்** *tenni-p-pār-,* 4 செ.குன்றாவி (v.t.) வலையின் அப்போதைய நிலையை எண்ணிப் பார்த்தல் *(மீனவ.);* to watch the prevailing condition of a net.

**தென்னி** *tenni,* பெ. (n.) வாழை *(மூ.அ.);* plantain *(செ.அக.).*

*[தென் → தென்னி]*

**தென்னிலம்** *tennilam,* பெ. (n.) போர்க்களம்; battle-field.

*[தென்னர் + நிலம் = தென்னர்நிலம். தென்னர்நிலம் → தென்னிலம்]*

**தென்னிலை** *teṉ-ṉilai,* பெ. (n.) தென்னோலை; coconut leaves. "தென்னிலையின் பகுதியென" *(திருக்காளத். 4, 2, 11).*

*[தென்(னை) + இலை]*

**தென்னீர்க்கு** *tennīrkku,* பெ. (n.) தெங்கு ஓலையின் ஈர்க்கு *(வின்.);* rib of the coconut leaf.

*[தென்னை + ஈர்க்கு]*

**தென்னு[1]-தல்** *tennu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* வளைதல்; to bent. *2.* நெம்புதல்; to lift, as with a lever. *3.* கிளம்புதல்; to rise.

**தென்னுரை** *teṉ-ṉ-urai,* பெ. (n.) தென்மொழி பார்க்க; see *teṉ-moḻi.* "அன்ன நடையார் . . . மடலூரரார் என்பதோர் வாசகமுந் தென்னுரையிற் கேட்டறிவ துண்டு" *(திவ்.பெரியதிரும. 391)* *(செ.அக.).*

*[தென் + உரை]*

**தென்னுலகு** *teṉ-ṉ-ulagu,* பெ. (n.) தென்றிசை யுலகம்; the world of the manes. "தென்னுலகிற் புகுந்தனையோ" *(திருவிளை. வன்னியுங் கிணறும். 21).*

*[தென் + உலகு]*

**தென்னை** *tennai,* பெ. (n.) தெங்கு *(பிங்.);* coconut-palm.

ம. தென்ன

*[தென் → தென்னை]*



**தென்னை வகை**

*1.* பச்சைத் தென்னை, பச்சிளநீர்; green coconut tree.

*2. சிவப்புத் தென்னை, செவ்விளநீர்;* red coconut tree.

*3. ஈழத்துத் தென்னை;* Ceylon coconut tree.

*4. கொங்குத் தென்னை;* congoo coconut.

*5. கொட்டைக் காய்ச்சித் தென்னை;* coconut with small nuts but with thick kernels.

*6. ஆயிரங் காய்ச்சித் தென்னை;* many small fruited coconut tree.

*7. கடல் தெங்கு;* double coconut of Maldives.

*8. அடுக்கிளநீர்த் தென்னை.*

*9. கெவுளி பாத்திரத்தென்னை;* yellow coconut tree.

*10. பெருந் தென்னை.*

*11. நக்கவாரத் தென்னை;* Nicobar dwarf yellow coconut tree.



*12. தேளித் தென்னை.*

*13. பார்ப்பாரத் தென்னை;* brahmin coconut or coramandal coconut *(சா.அக.)*.

**தென்னைநீர்** *tennai-nīr,* பெ. (n.) *இளநீர்;* water of tender coconut.

*[தென்னை + நீர்]*



**தென்னைமட்டை** *tennai-maṭṭai,* பெ. (n.) *1. தென்னையோலையின் நடுவிலுள்ள மட்டை;* coconut leaf stalk. *2. தேங்காயின் கூந்தல்;* coconut husk.

*[தென்னை + மட்டை]*



**தென்னைமரம்** *tennai-maram,* பெ. (n.) *தென்னை பார்க்க;* see *tennai. தென்னை மரத்தில் ஏண்டா ஏறினாய், கன்றுக் குட்டிக்குப் புல்பிடுங்க, தென்னை மரத்தில் புல் ஏதடா? அதுதான் கீழே இறங்குகிறேன் என்றானாம் (பழ.). தென்னை மரத்திற்குத் தண்ணீர் வார்த்தால் தலையாலே தரும் (பழ.).*

*ம. தென்னமரம்*

*[தென்னை + மரம்]*

**தென்னையோலை** *tennai-y-ōlai,* பெ. (n.) *தென்னைமட்டையின் ஓலை;* the leaf of the coconut palm.

*ம. தெங்ஙோல*

*[தென்னை + ஓலை]*

**தென்னைவட்டு** *tennai-vaṭṭu,* பெ. (n.) *தென்னை வெல்லத்தைப் பலவடிவாகத் திரட்டிய கட்டி;* calles of cocoanut jaggery *(சா.அக.)*

*[தென்னை + வட்டு]*

**தென்னைவிளக்குமாறு** *tennai-viḷakkumāṟu,* பெ. (n.) *தென்னையோலையின் ஈர்க்குகளாலான துடைப்பம்;* broom made of palm leaf fibre.

*[தென்னை + விளக்குமாறு]*

**தென்னைவெல்லம்** *tennai-vellam,* பெ. (n.) *தென்னம்வெல்லம் பார்க்க;* see *tennam-vellam.*

*[தென்னை + வெல்லம்]*

**தென்னோகலம்** *tennō-kalam,* பெ. (n.) *கருநாவல்;* black jamoon *(சா.அக.)*.

**தென்னோலை** *tennōlai,* பெ. (n.) *தென்னையோலை பார்க்க;* see *tennai-ōlai.*

*[தென்னை + ஓலை]*

**தெனாது** *tenādu,* பெ. (n.) *1. தெற்குள்ளது;* that which is in the south. *"தெனாஅ துருகெழுகுமரி" (புறநா. 6). 2. தெற்கு;* south. *"வடாதுந் தெனாதும் பாராசர் வகுத்த நேமி" (பாரத. பதின்மூன்றாம். 50).*

*[தென் + அது. அது → ஆது]*

# தே

**தே**[1] *tē*, த் என்ற மெய்யெழுத்தும் ஏ என்ற உயிரெழுத்தும் சேர்ந்த கூட்டெழுத்து; the syllable formed by adding the long vowel *'ē'* to the consonant *'t'*.

*[த் + ஏ]*

**தே**[2] *tē*, பெ. (n.) கொள்ளுகை *(பிங்.)*; acquiring.

*[தெவ்வு → தே]*

**தே**[3] *tē*, பெ. (n.) *1.* தெய்வம் *(பிங்)*; the deity. "தேபூசை செய்யுஞ் சித்திரசாலை" *(சிவரக. நைமிச. 20)*. *2.* தலைவன் *(இலக்.அக.)*; chief, lord.

ம. தே

*[தேய்தல் = உரசுதல். தேய் → தே = (உரசிப் பற்றும்) நெருப்பு, (நெருப்பாகிய) தெய்வம், (தெய்வம் போன்ற) தலைவன் (வ.வ. 16)]*

**தே**[5] *tē*, பெ. (n.) மாடு துரத்தும் ஒலிக்குறிப்பு; onom. expr. of driving cattle.

**தேக்கந்தீவு** *tēkkan-tīvu*, பெ. (n.) ஏழுதீவுகளு ளொன்று; an annular continent named after the tree called tēkku, one of ēlu-tīvu *(செ.அக.)*.

*[தேக்கு → தேக்கம் + தீவு]*

**தேக்கம்**[1] *tēkkam*, பெ. (n.) *1.* தேங்குகை; being brimful. *2.* நிறைவு *(வின்.)*; fullness, satiety. *3.* நீரோட்டத்தின் தடை; obstruction of the flow of water.

*[தேங்கு → தேக்கு → தேக்கம்]*

**தேக்கம்**[2] *tēkkam*, பெ. (n.) ஏப்பம்; eructation. "அக்னி தன்னிறம் பெற்றுத் தேக்கமிட்டபடி" *(திவ்.திருநெடுந். 200, வியா. பக். 155)*.

ம. தேக்கம்; க. தேகு, தேகு; தெ. தேகு, தேஞ்சு, தேவு; து. தேரு; கோத. தேக்ள்; துட. தோக்; குட. தேகிலி; பட. தேகு; கோண். தேர்; கூ. தேபக்; கொலா. டேர்க் (கக்கல்)

*[தேங்குதல் = உயர்தல், மிகுதல். தேங்கு → தேக்கு → தேக்கம் (மு.தா. 73)]*

**தேக்கம்**[3] *tēkkam*, பெ. (n.) மனக்கலக்கம்; perturbation

*[தயக்கம் → தியக்கம் → தேக்கம். தயக்கம் = செய்வதறியாது நிற்கும் நிலை]*

**தேக்கம்**[4] *tēkkam*, பெ. (n.) *1.* தடை; obstruction. தேக்கமொன்று மிலன் *(திவ்.பெரியாழ். 2,9,3)*. *2.* அச்சம்; fear *(திவ்.பெரியாழ். 2,9,3, வியாப. 457)*.

*[தேங்கு → தேக்கம்]*

**தேக்கர்** *tēkkar*, பெ. (n.) மிகுதி; abundance. "மான்மதத் தேக்கரும்" *(கம்பரா. எதிர்கொள். 13)*.

**தேக்கரண்டி** *tē-k-karaṇḍi*, பெ. (n.) 60 துளி கொள்ளளவு கொண்ட சிறுகரண்டி; a small spoon holding 60 drops of liquid; tea spoon.

*[தே + கரண்டி]*

**தேக்கல்** *tēkkal*, பெ. (n.) செம்பாறை; gravel rock, gravel stone *(சா.அக.)*.

**தேக்கிடு-தல்** *tēkkiḍu-*, 4 செ.கு.வி. (v.i.) *1.* உணவின் மிகுதியால் அதில் வெறுப்பு நிலையடைதல்; to be satiated, as a person with rich food. *2.* ஏப்பமிடுதல்; to belch, eructate. "நெருப்புத் தின்றுதேக்கிடுகின்றது" *(கம்பரா. இலங்கையெரி. 46)*. *3.* நீர் முதலியன உள் நிரம்பி வெளிவருதல்; to brim over. "அமுத மயிர்க்கா றோறுந் தேக்கிடச் செய்தனன்" *(திருவாச. 3, 171)*.

*[ஏ → தே → தேக்கு + இடு-.]*

**தேக்கிவருவி** *tēkki-varuvi*, பெ. (n.) தொழு நோய், குட்டம்; leprosy *(சா.அக.)*.

**தேக்கிவி** *tēkkivi*, பெ. (n.) மொகசி மரம்; mootchy tree *(சா.அக.)*.

**தேக்கு**[1]**-தல்** *tēkku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1.* நீர் முதலியவற்றை ஓரிடந் தேங்கக் கட்டுதல்; to stop the flow, as of water; to dam up. "செவ்வழி நீரொடுங் குருதி தேக்கினான்" *(கம்பரா. கும்பகருண. 99)*. *2.* நிரம்பப் பருகுதல்; to drink to the full. "நிறைமத்த மதுவைத் தேக்கி" *(கம்பரா. அதிகாய. 215)*. *3.* தடை பண்ணுதல் *(சங்.அக.)*; to obstruct.

*[தேங்கு → தேக்கு-.]*

**தேக்கு**[2]**-தல்** *tēkku-*, 5 செ.கு.வி. (v.i.) *1.* நிறைதல்; to be full, copious, abundant, replete. "தேக்கிய

தேனுடன்" (கல்லா. 1). 2. ஏப்பம் விடுதல்; to belch. "ஆலமுண் டமுதேமிகத் தேக்குவர்" (தேவா. 529, 3). 3. தெவிட்டுதல்; to be sated, glutted, cloyed, satiated. "நாய்கழு கொருநாள் கூடியுண்டு தேக்கு விருந்தா முடலை" (தாயு. எந்நாட். யாக்கை. 3).

*[தேங்குதல் - உயர்தல், மிகுதல். தேங்கு → தேக்கு. தேக்குதல் = அடிவயிற்றிலுள்ள காற்றை எழுப்புதல், ஏப்பம் விடுதல். ஏப்பம் என்னும் சொல்லும் ஒலிக் குறிப்பொடு எழுச்சி குறித்த ஏகாரங் கலந்ததே (மு.தா. 73)]*

**தேக்கு³** *tekku,* பெ. (n.) 1. தெவிட்டு (அக.நி.); fullness; repletion, satiety. 2. ஏப்பம்; belching, eructation. "தேக்கின் தூய்மை" (குறள், 942, உரை).

*[தேங்கு → தேக்கு]*

**தேக்கு⁴** *tekku,* பெ. (n.) தேக்குமரம்; teak wood tree.

ம. தேக்கு; க. தேகு, தேக, தேங்கு; தெ. டேகு, தேகு; கோண். டேகா, தேகர; கொலா. தேக், டெக்; பர். டேரிக்மெரி (தேக்கு மரம்)

*[தேங்குதல் = உயர்தல், மிகுதல். தேங்கு → தேக்கு. உயர்ந்த அல்லது உயர்வான மரம் (மு.தா. 73)]*



தேக்கு வகை

1. பெருந்தேக்கு - large variety of teak tree.
2. வெண்தேக்கு - white teak.
3. குமிழ்த் தேக்கு - cashmere tree.
4. கற்றேக்கு - patana oak.
5. சிறுதேக்கு - cleodendron serratum.
6. பூந்தேக்கு - flower teak.
7. சொறிதேக்கு - cori teak
8. மெழுகுத் தேக்கு - wax teak
9 சோலை வெண்தேக்கு - looking glass plant of southern ghats.
10. கொழுக்கட்டைத் தேக்கு (அல்) கொள்ளிக் கட்டைத் தேக்கு - firebrand teak.
11. நாய்த் தேக்கு - dog teak.
12. பலந்தேக்கு - godaveri sebestan.
13. பூனைத் தேக்கு - rosy flowered batavian teak.
14. உவாத்தேக்கு - sand peper tree.
15. வத்தேக்கு - strong teak.
16. மஞ்சள் தேக்கு (அ) மஞ்சக்கடம்பு - saffron teak.

**தேக்கு⁵** *tekku,* பெ. (n.) 1. கமுகு; areca nut. 2. சண்பகம்; champauk tree (சா.அக.).

**தேக்கு⁶** *tekku,* பெ. (n.) இனிப்பு; sweetness (சா.அக.).

*[தீம் → தேம் → தேம்கு → தேக்கு]*

**தேக்குடிச்சி** *tet-kudicci,* பெ. (n.) கருவண்டு; a black bee.

*[தேன் + குடிச்சி. தேங்குடிச்சி → தேக்குடிச்சி]*



**தேக்கெறி¹-தல்** *tekkeri-,* 3 செ.கு.வி. (v.i.) 1. தெவிட்டுதல்; to be satiated; to be surfeited, cloyed. 2. ஏப்பமிடுதல்; to belch. "தேக்கெறிந்து

வருதலிற் நீம்புனல்" (கம்பரா. பாலகா. ஆற்றுப். 10). 3. நிறைதல்; to be full, brimful; to swell, as the ocean.

[தேக்கு[2] + எறி-.]

**தேக்கெறி[2]-தல்** *tēkkeṟi-*, 2 செகுன்றாவி. (v.t.) நிரம்பவுண்ணுதல்; to eat to the full. "செயற்றலைநின் றுழப்பவர்க டேக்கெறிவர்" (தணிகைப்பு. நாட். 130).

[தேக்கு + எறி-.]

**தேக்கொக்கு** *tēk-kokku*, பெ. (n.) தேமா; sweet mango.

[தே + கொக்கு. கொக்கு = மாமரம்]

**தேகிகை** *tēkikai*, பெ. (n.) ஒரு புழு; a worm.

**தேங்கண்ணி** *tēṅkaṇṇi*, பெ. (n.) காட்சிக்கு அழகிய கண்களை உடைய கடல் மீன்; sea-fish which has beautiful eyes.

[தேம் + கண்ணி]

**தேங்கமுகந்தளத்தல்** *tēṅga-mugantaḷatal*, பெ. (n.) படி முதலியவற்றால் அளக்கும் அளவுவகை (தொல்.எழுத்து. 2, உரை); measuring grain, etc., with a standard measure.

[தேங்கு + முகந்து + அளத்தல்]



**தேங்கல்** *tēṅgal*, பெ. (n.) 1. நிறைதல்; full. 2. அச்சக் குறிப்பு; gesture of fear. 3. மிகுதல்; overwhelm. 4. குலைதல்; collapse.

[தேங்கு + அல். 'அல்' தொழிற்பெயரீறு.]

**தேங்கனி[1]** *tēṅgaṉi*, பெ. (n.) தேங்காய்; coconut. "தேங்கனியுங் கொண்டு வந்து சீராக வைத்தாராம் (கோவ.க. 65).

[தெங்கு + கனி → தெங்குகனி → தேங்கனி. தேங்காய் பார்க்க]

**தேங்கனி[2]** *tēṅgaṉi*, பெ. (n.) சுவை நிறைந்த பழவகை; sweet fruit.

[தேம் + கனி. தேம் = இனிமை]

**தேங்காய்[1]** *tēṅgāy*, பெ. (n.) தென்னை மரத்தின் காய்; fruit of coconut tree. தேங்காய் தின்னவன் இருக்கக் கோம்பை சூப்பினவன் தெண்டம் இறுக்கிறதா? (பழ.).

ம. தேங்ங, தெங்ஙங்காயி; க. தெங்கின காயி, தெங்காயி; தெ. டெங்காய, தெங்காய; குட. தெங்கெ; கோத. தெங்காய்; துட. தொக்; பட. தெங்கெ

[தென்னை + காய் → தென்னங்காய் → தெங்கங்காய் → தேங்காய்]

மேற்பக்கம் ஓடால் மூடப்பட்டிருக்கும். உட்பக்கம் வெண்ணிறமான சதையும், நீருமிருக்கும். முற்றின தேங்காயில் சதைப்பற்று மிகுந்து நீர் குறைந்தும், இளந்தேங்காயில் சதைப்பற்று குறைந்து நீர் மிகுந்துமிருக்கும். தேங்காயை உலர்த்திக் கொப்பரையாக்கி, அதைச் செக்கிலிட்டு ஆட்டித் தேங்காயெண்ணெய் எடுப்பர் (சா.அக.).

**தேங்காய் வகை**

1. குருவித் தேங்காய் - இதுவே நெல்லி.
2. குறுந்தேங்காய் - சமுத்திராப் பழம்.
3. கொட்டைத் தேங்காய் - matured coconut.
4. கொப்பரைத் தேங்காய் - dried coconut.
5. சிறுதேங்காய் - fully riped though small.
6. இளநீர்த் தேங்காய் - tender coconut.
7. தேளித் தேங்காய் - a kind of red coconut.

**தேங்காய்[2]** *tēn-gāy*, பெ. (n.) இனிய காய்; sweet fruit. தேங்காய் நெல்லியும் (பெருங். உஞ்சைக். 52, 43).

[தீம் → தேம் + காய். தீம் = இனிமை]

**தேங்காய்க்கண்** *tēṅgāy-k-kaṇ*, பெ. (n.) தேங்காயின் மேலிடத்துள்ள முக்கண்; the three eyes of the coconut.

ம. தேங்ஙாக்கண்ணு

[தேங்காய் + கண்]

**தேங்காய்க்கண்திற-த்தல்** *tēṅgāy-k-kaṇ-tiṟa-*, 4 செ.குவி. (v.i.) தேங்காய்க்குள் மருந்தைப்

புகட்டுவதற்காக அதன் கண்ணைத் துளைத்தல்; to make a hole through one of three eyelets on the top of the shell in order to insert medicine or other drugs into it after clearing the water contained it.

*[தேங்காய் + கண் + திற-.]*

**தேங்காய்க்கணு** *tĕṅgāy-k-kaṇu,* பெ. (n.) தேங்காயோட்டின் நரம்பு; joints of the three sections of a coconut shell.

*[தேங்காய் + கணு]*

**தேங்காய்க்கயர்** *tĕṅgāy-k-kayar,* பெ. (n.) *1.* தேங்காய் உச்சியின் மெல்லோடு *(யாழ்ப்.);* soft or spongy crown of the coconut. *2.* தேங்காயோட்டோடு பற்றியிருக்கும் பருப்பின் தோல்; lowest part of the coconut kernal sticking to the shell *(செ.அக.).*

*[தேங்காய் + கயர்]*

**தேங்காய்க்கயில்** *tĕṅgāy-k-kayil,* பெ. (n.) பாதித் தேங்காய்; half of a coconut.

மறுவ. தேங்காய் மூலி, தேங்காய் மூடி

*[தேங்காய் + கயில்]*



**தேங்காய்க்கன்னமுது** *tĕṅgāy-k-kaṉṉamudu,* பெ. (n.) தேங்காய்க்கன்னலமுது பார்க்க; see *tĕṅgāy-k-kaṉṉalamudu.*

*[தேங்காய்க்கன்னலமுது → தேங்காய்க் கன்னமுது]*

**தேங்காய்க்கன்னலமுது** *tĕṅgāy-k-kaṉṉal-amudu,* பெ. (n.) தேங்காய்ப்பாலைச் சேர்த்துச் செய்த கன்னலமுது; a sweet preparation with coconut pulp.

*[தேங்காய் + கன்னலமுது]*

**தேங்காய்க்கீரை** *tĕṅgāy-k-kīrai,* பெ. (n.) தேங்காய்ப்பூக்கீரை பார்க்க; see *tĕṅgāy-p-pū-k-kīrai.*

*[தேங்காய் + கீரை]*

**தேங்காய்க்கீற்று** *tĕṅgāy-kīṟṟu,* பெ. (n.) தேங்காய்ப் பத்தை; cocoanut kernal sliced into several pieces.

மறுவ. தேங்காய்ப் பத்தை, தேங்காய்ச் சில், தேங்காய்த் துண்டு, தேங்காய் வகிர், தேங்காய்ப்பல்

*[தேங்காய் + கீற்று]*

**தேங்காய்க்குடுக்கை** *tĕṅgāy-k-kuḍukkai,* பெ. (n.) தேங்காயோட்டினாற் செய்த குப்பி; a round empty shell of coconut made to serve as a bottle to preserve anything *(சா.அக.).*

ம. தேங்ஙாக்குடுக்க

*[தேங்காய் + குடுக்கை]*

**தேங்காய்க்குடுமி** *tĕṅgāy-kuḍumi,* பெ. (n.) உரித்த தேங்காயில் விடப்பட்ட உச்சிநார்க் கற்றை; tuft of fibres on the crown of the coconut.

*[தேங்காய் + குடுமி]*



**தேங்காய்க்குருப்பு** *tĕṅgāy-k-kuruppu,* பெ. (n.) தேங்காய்ப்பூ பார்க்க; see *tĕṅgāy-p-pū.*

*[தேங்காய் + குருப்பு]*

**தேங்காய்க்குரும்பை** *tĕṅgāy-k-kurumbai,* பெ. (n.) முதிராத் தேங்காய்; immature coconut perhaps not fertilised *(சா.அக.).*

*[தேங்காய் + குரும்பை]*

**தேங்காய்க்கூடு** *tēṅgāy-k-kūḍu,* பெ. (n.) தேங்காய்கள் இட்டுவைத்திருக்கும் சிறு கொட்டகை (நாஞ்.); a shed where coconuts are stored.

ம. தேங்ஙக்கூடு

*[தேங்காய் + கூடு]*

**தேங்காய்க்கொப்பரை** *tēṅgāy-k-kopparai,* பெ. (n.) உலர்ந்த தேங்காய்; dried kernal of coconut (சா.அக.).

*[தேங்காய் + கொப்பரை]*

**தேங்காய்க்கோம்பை** *tēṅgāy-k-kōmbai,* பெ. (n.) தென்னங்கோம்பை பார்க்க; see *teṉṉaṅkōmbai.*

*[தேங்காய் + கோம்பை]*

**தேங்காய்கட்டியடி-த்தல்** *tēṅgāy-kaṭṭi-y-aḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தொந்தரவு செய்தல்; to give trouble, to vex, worry.

*[தேங்காய் + கட்டி + அடி-.]*

**தேங்காய்ச்சதை** *tēṅgāi-c-cadai,* பெ. (n.) தேங்காயினுட் சதைப்பற்று; kernal of coconut (சா.அக.).

*[தேங்காய் + சதை]*

**தேங்காய்ச்சிண்டு** *tēṅgāy-c-ciṇḍu,* பெ. (n.) தேங்காய்க்குடுமி பார்க்க; see *tēṅgāy-k-kuḍumi.*

*[தேங்காய் + சிண்டு]*

**தேங்காய்ச்சிரட்டை** *tēṅgāy-c-ciraṭṭai,* பெ. (n.) கொட்டங்கச்சி; half of a coconut shell.

ம. சிரட்ட; க. கரட; குட. செரடெ; பட. கரட்டலு

*[தேங்காய் + சிரட்டை]*

**தேங்காய்ச்சில்** *tēṅgāy-c-cil,* பெ. (n.) 1. தேங்காய்ப் பருப்பின் கூறு; a piece of coconut albumen with or without the shell. 2. கொட்டங் கச்சிக் கூறு; a piece of coconut shell.

*[தேங்காய் + சில்]*

**தேங்காய்ச்சுடு-தல்** *tēṅgāy-c-cuḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) தேங்காயைக் கண் வழியாகத் துளைத்து வெல்லம், கடலை, அரிசி, வறுத்த எள் முதலானவற்றை உள்ளே நிறைத்தடைத்து நிலத்தில் புதைத்து அவ்விடத்தில் தீமூட்டி வேகவைத்தல்; to cook the coconut by kiln method, with some edibles.

*[தேங்காய் + சுடு]*

**தேங்காய்ச்சொட்டு** *tēṅgāy-c-coṭṭu,* பெ. (n.) தேங்காய்ப் பருப்பின் துண்டு (வின்.); slice or thin piece of coconut albumen.

*[தேங்காய் + சொட்டு]*

**தேங்காய்த்தட்டு** *tēṅgāy-t-taṭṭu,* பெ. (n.) கப்பலின் பின்பக்கத்து மேற்றட்டு; poop deck.

*[தேங்காய் + தட்டு]*

**தேங்காய்த்தண்ணீர்** *tēṅgāi-t-taṇṇīr,* பெ. (n.) 1. இளநீர்; the sweet astringent fluid of tender coconut. 2. முற்றிய தேங்காயின் தண்ணீர்; sweet water of the riped coconut (சா.அக.).

*[தேங்காய் + தண்ணீர்]*

**தேங்காய்த்தலையன்** *tēṅgāy-t-talaiyaṉ,* பெ. (n.) தேங்காயைப் போன்ற தலையுடையோன்; one having a big head like coconut (சா.அக.).

*[தேங்காய் + தலையன்]*

**தேங்காய்த்திருகல்** *tēṅgāy-t-tirugal,* பெ. (n.) தேங்காய்த்துருவல் பார்க்க; see *tēṅgay-t-turuval* (சா.அக.).

*[தேங்காய் + திருகல்]*

**தேங்காய்த்திருகி** *tēṅgāy-t-tirugi,* பெ. (n.) தேங்காய்த்துருவி பார்க்க; see *tēṅgāy-t-turuvi.*

*[தேங்காய் + திருகி]*

**தேங்காய்த்துண்டு** *tēṅgāy-t-tuṇḍu,* பெ. (n.) தேங்காய்க்கீற்று பார்க்க; see *tēṅgāy-k-kīṟṟu.*

*[தேங்காய் + துண்டு]*

**தேங்காய்த்தும்பு** *tēṅgāy-t-tumbu,* பெ. (n.) தேங்காய் நார்க் கயிறு (யாழ்ப்.); thread made by fibres of the coconut-husk.

*[தேங்காய் + தும்பு]*

**தேங்காய்த்துருவல்** *tēṅgāy-t-turuval,* பெ. (n.) தேங்காய்ப் பருப்பின் துருவிய பூ; coconut scrapings (சா.அக.).

*[தேங்காய் + துருவல்]*

**தேங்காய்த்துருவி** *tēṅgāy-t-turuvi,* பெ. (n.) தேங்காய்ப் பருப்பைத் துருவுங் கருவி; coconut scraper.

*[தேங்காய் + துருவி]*



**தேங்காய்த்துருவுமனை** *tēṅgāy-t-turuvu-maṇai,* பெ. (n.) தேங்காய்த்துருவி பார்க்க; see *tēṅgāy-t-turuvi.*

*[தேங்காய் + துருவும் + மணை]*

**தேங்காய்த்துவையல்** *tēṅgāy-t-tuvaiyal,* பெ. (n.) தேங்காய்ப் பருப்பும் மசாலையும் கலந்தரைக்கப்படும் தொடுகறி வகை; chutny, as side dish, made of coconut kernal and spices.

*[தேங்காய் + துவையல்]*

**தேங்காய்நெய்** *tēṅgāy-ney,* பெ. (n.) தேங்காய்ப் பாலினின்று காய்ச்சியெடுக்கப்படும் எண்ணெய்; a kind of fragrant oil prepared from coconut juice.

தேங்காயெண்ணெய் வேறு; தேங்காய்நெய் வேறு

ம. தேங்ஙாநெய்

*[தேங்காய் + நெய்]*

**தேங்காய்நெற்று** *tēṅgāy-neṟṟu,* பெ. (n.) முதிர்ந்த தேங்காய்; matured and dried coconut useful for rising seedlings (சா.அக.).

*[தேங்காய் + நெற்று]*



**தேங்காய்ப்பத்தை** *tēṅgāy-p-pattai,* பெ. (n.) தேங்காய்க்கீற்று பார்க்க; see *tēṅgāy-k-kīṟṟu.*

*[தேங்காய் + பத்தை]*

**தேங்காய்ப்பருப்பு** *tēṅgāy-p-paruppu,* பெ. (n.) தேங்காயின் உட்சதைப்பற்று; coconut kernal (சா.அக.).

*[தேங்காய் + பருப்பு]*

**தேங்காய்ப்பல்** *tēṅgāy-p-pal,* பெ. (n.) தேங்காய்க்கீற்று பார்க்க; see *tēṅgāy-k-kīṟṟu*

ம. தேங்ஙாப்பல்

*[தேங்காய் + பல்]*

**தேங்காய்ப்பாயசம்** *tēṅgāy-p-pāyaśam,* பெ. (n.) தேங்காய்க்கன்னலமுது பார்க்க; see *tēṅgāy-k-kaṉṉal-amudu.*

*[தேங்காய் + பாயசம்]*

**தேங்காய்ப்பாரை**[1] *tēṅgāy-p-pārai,* பெ. (n.) தேங்காய் மட்டை உரிக்க உதவும் கருவி; an iron-piece fixed in a stone for husking coconut.



**தேங்காய்ப்பாரை**[2] *tēṅgāy-p-pārai,* பெ. (n.) எட்டுவிரல நீளம் வளரக்கூடியதும் நீலப்பச்சை நிறமுடையதுமான கள்ளப் பாறை மீன் (மீனவ); horse-mackerel, bluish green, attaining 8 inch in length.

*[தேங்காய் + பாரை]*

**தேங்காய்ப்பால்** *tēṅgāy-p-pāl,* பெ. (n.) 1. தேங்காய்த் துருவலினின்று பிழிந்த பால்; coconut juice pressed from the scraped kernal. ஆப்பத்தைத் தேங்காய்ப் பாலில் சேர்த்துண்டால் அருமையான சுவை. 2. தேங்காய்த் துருவலினின்று பிழிந்து சருக்கரையிட்டுச் சமைக்கப்படும் பருகம்; a sweet preparation of coconut juice.

ம. தேங்ஙாப்பால்

*[தேங்காய் + பால்]*

**தேங்காய்ப்பாலவியல்** *tēṅgāy-p-pāl-aviyal,* பெ. (n.) தேங்காய்ப்பாலோடு பல கறிகள் ஒன்று சேர்த்துச் சமைத்த கறிவகை (யாழ்ப்.); a vegetable curry cooked with coconut juice.

மறுவ. சொதி (நெல்லை)

*[தேங்காய் + பால் + அவியல்]*

**தேங்காய்ப்பாறை**[1] *tēṅgāy-p-pāṟai,* பெ. (n.) கடல் பாறை மீனின் வகை; a kind of sea fish of the caranx genus (சா.அக.).

*[தேங்காய் + பாறை]*

**தேங்காய்ப்பாறை**[2] *tēṅgāy-p-pāṟai,* பெ. (n.) தேங்காய்ப்பூவைக் கொண்டு செய்யப்படும் தின்பண்டம்; a toffee made by coconut.

*[தேங்காய் + பாறை]*

**தேங்காய்ப்பிண்ணாக்கு** *tēṅgāy-p-piṇṇākku,* பெ. (n.) தேங்காயினின்றும் எண்ணெய் எடுத்த பிறகு எஞ்சிய சக்கை; the resdue or refuse or oil cake left after extracting the oil from the kernal by a mill (சா.அக.).

இது கோழி, புறா, பன்றி போன்றவற்றுக்கு உணவாகவும், தென்னைக்கு எருவாகவும் பயன்படும்.

ம. தேங்ஙாப்பிண்ணாக்கு

*[தேங்காய் + பிண்ணாக்கு]*

**தேங்காய்ப்புரிக்கயிறு** *tēṅgāy-p-puri-k-kaiṟu,* பெ (n.) தென்னம் நாரினாலான கயிறு; thread made of coconut fibre.

*[தேங்காய் + புரி + கயிறு]*

**தேங்காய்ப்பூ** *tēṅgāy-p-pū,* பெ. (n.) 1. தேங்காய் முளை; the white solid albumen sprouting inside the coconut. 2. தேங்காய்த்துருவல் பார்க்க; see *tēṅgāy-t-turuval* (சா.அக.).

*[தேங்காய் + பூ]*

**தேங்காய்ப்பூக்கீரை** *tēṅgāy-p-pū-kīrai,* பெ. (n.) தேங்காய்த் துருவல் போலுள்ள பூவைக் கொண்ட கீரைவகை; a kind of brown spinach, the flowers of which resemble scraped coconut.

*[தேங்காய் + பூ + கீரை]*

**தேங்காய்ப்பூடு** *tēṅgāy-p-pūḍu,* பெ. (n.) அரிசிப்பூடு எனும் செடி; a plant.

*[தேங்காய் + பூடு]*

**தேங்காய்ப்பூத்துண்டு** *tēṅgāy-p-pū-t-tuṇḍu,* பெ. (n.) தேங்காய்த் துருவல் போல் மெத்தென்று நெய்த பருத்தித் துண்டு; turkey towel. பேச்சாளர்களுக்குத் தேங்காய்ப்பூத் துண்டு போர்த்தினேன் (உ.வ.).

**தேங்காய்ப்பூநாறி** *tēṅgāy-p-pū-nāṟi,* பெ. (n.) தேங்காய்ப்பூக்கீரை (யாழ்.அக.) பார்க்க; see *tēṅgāy-p-pū-k-kīrai.*

*[தேங்காய் + பூ + நாறி]*

**தேங்காய்ப்பூவறை** *tēṅgāy-p-pūvaṟai,* பெ. (n.) பால் பிழியப்பட்ட தேங்காய்த் துருவலாற் செய்யப்படும் கறிவகை; a kind of curry prepared from coconut-scrappings whose juice has been pressed out.

*[தேங்காய் + பூவறை]*

**தேங்காய்மட்டை** *tēṅgāy-maṭṭai,* பெ. (n.) தேங்காயின் மேலிருக்கும் நார்ப்பாகம் – கதம்பை; coconut fibre and husk (சா.அக.).

*[தேங்காய் + மட்டை]*

தென்னை மட்டை வேறு; தேங்காய் மட்டை வேறு.

**தேங்காய்மணி** *tēṅgāy-maṇi,* பெ. (n.) 1. தேங்காய் முளை (வெ); seed of a coconut. 2. தேங்காய்க் கொப்பரை; kernal of coconut.

*[தேங்காய் + மணி]*

**தேங்காய்மந்திரி-த்தல்** *tēṅgāy-mandiri-, 4* செகுவி. (v.i.) தேங்காயோது-தல் பார்க்க; see *tēṅgāy-ōdu-.*

*[தேங்காய் + மந்திரி]*

**தேங்காய்மரம்** *tēṅgāy-maram,* பெ. (n.) தென்னைமரம் பார்க்க; see *tennai-maram.* தேங்காய் மரத்தில் தேள்கொட்ட மாங்காய் மரத்தில் நெரி ஏறியதாம் *(பழ.).*

க. தெங்கின மர; பட. தெங்கெமொர

*[தேங்காய் + மரம்]*

**தேங்காய்முகரி** *tēṅgāy-mugari,* பெ. (n.) தேங்காய்க் கண்களின் இடைப்பாகம்; the portion in the coconut - shell between its two closed eyes, deemed the hardest part.

*[தேங்காய் + முகரி]*

**தேங்காய்முகிழ்** *tēṅgāy-mugiḻ,* பெ. (n.) தேங்காயின் மடல் (வின்.); the integument of coconut.

*[தேங்காய் + முகிழ்]*

**தேங்காய்முளை** *tēṅgāy-muḷai,* பெ. (n.) தேங்காய்ப் பருப்பின் முளைப்பகுதி; the almond like substance *(சா.அக.).*

*[தேங்காய் + முளை]*

இது முற்றும்போது உட்பக்கம் முழுவதையும் கவர்ந்துகொள்ளும்.

**தேங்காய்முறி** *tēṅgāy-muṟi,* பெ. (n.) தேங்காய் மூடி பார்க்க; see *tēṅgāy-mūḍi.*

மறுவ. தேங்காய் மூளி, தேங்காய் மூடி

*[தேங்காய் + முறி]*

**தேங்காய்மூடி** *tēṅgāy-mūḍi,* பெ. (n.) உடைத்த தேங்காயின் பாதி; half of a coconut *(சா.அக.)*

*[தேங்காய் + மூடி. முறி → முடி → மூடி]*

**தேங்காய்மூரி** *tēṅgāy-mūri,* பெ. (n.) தேங்காயின் நரம்பு; the three nerves of a coconut.

*[தேங்காய் + மூரி]*

**தேங்காய்மொத்தி** *tēṅgāy-motti,* பெ. (n.) மாட்டின் முன்னங்காலின் இடையிலுள்ள தசைத் திரட்சி (யாழ்.அக.)); lump of flush in the middle of the forelegs of cattle or buffaloes *(செ.அக.).*

*[தேங்காய் + மொத்தி]*



**தேங்காய்வகிர்** *tēṅgāy-vagir,* பெ. (n.) தேங்காய்க்கீற்று பார்க்க; see *tēṅgāy-k-kīṟṟu* *(சா.அக.).*

*[தேங்காய் + வகிர்]*

**தேங்காய்வழுக்கை** *tēṅgāy-vaḻukkai,* பெ. (n.) தேங்காயின் முற்றாத உள்ளீடு; soft kernal or albumen of an immature coconut.

*[தேங்காய் + வழுக்கை]*

**தேங்காய்வெட்டி** *tēṅgāy-veṭṭi,* பெ. (n.) தேங்காய் மட்டை உரிக்குங் கருவி; instrument for husking coconut.

*[தேங்காய் + வெட்டி]*

**தேங்காய்வெண்ணெய்** *tēṅgāy-veṇṇey,* பெ. (n.) தேங்காய்நெய் பார்க்க; see *tēṅgāy-ney* (நாஞ்.) *(செ.அக.).*

*[தேங்காய் + வெண்ணெய்]*

**தேங்காயடி** *tēṅgāy-aḍi,* பெ. (n.) எதிரியின் தேங்காயைத் தன் தேங்காயில் உடைத்தவனே வென்றவனென்று கருதப்படும் விளையாட்டு வகை (யாழ்.அக.); a game in which a person breaking the coconut of his antagonist with his own, is declared the winner.

*[தேங்காய் + அடி]*

**தேங்காயெண்ணெய்** *tēṅgāy-eṇṇey,* பெ. (n.) தேங்காயின் எண்ணெய்; coconut oil *(சா.அக.).*

ம. தேங்ஙாணி; பட. தெங்கெண்ணெ

*[தேங்காய் + எண்ணெய்]*

தேங்காய்க் கொப்பரையைச் செக்கிலிட்டு ஆட்டக் கிடைப்பது. வெளிர்மஞ்சள் நிறமுடையதாயும் மணமுடையதாயும் நெய் போன்றுமிருக்கும். குளிரில் உறையுந் தன்மையுடைது. நாட்படவிருந்தால் கெட்டுப் போகும். மருந்துக்குதவும் மயிர்ப் பூச்செண்ணெயாயும், சமையலெண்ணெ யாயும் பயன்படும்.

**தேங்காயெண்ணெய்ச்சவ்வு** *tēṅgāy-eṇṇai-c-cavvu,* பெ. (n.) **சவுக்காரக் கட்டி;** soap *(சா.அக.).*

*[தேங்காய் + எண்ணெய் + சவ்வு]*

**தேங்காயெறி-தல்** *tēṅgāy-eṟi-,* 3 செ.குன்றாவி. (v.i.) **இறைத்திருமேனியின் முன் சிதறு தேங்கா யுடைத்தல்** *(நாஞ்.);* to dash coconuts and break, as offering to an idol.

*[தேங்காய் + எறி]*

**தேங்காயோடு** *tēṅgāy-ōḍu,* பெ. (n.) **கொட்டாங்கச்சி;** coconut shell *(சா.அக.).*

*[தேங்காய் + ஓடு]*

**தேங்காயோது-தல்** *tēṅgāy-ōdu-,* 5 செ.கு.வி. (v.i.) **தேங்காயில் ஆற்றல் உண்டாகும்படி மந்திரித்தல்** *(வின்.);* to confer magical virtues on coconut by incantations.

*[தேங்காய் + ஓது]*

**தேங்கிட்டி** *tēṅgiṭṭi,* பெ. (n.) **தேள் கொடுக்கிப் பச்சிலை;** a kind of medicinal plant *(சா.அக.).*

**தேங்கு[1]-தல்** *tēṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **நிறைதல்;** to fill, become full, rise to the brim. "மதுவது தேங்கு கும்பம்" *(திருப்பு. 501). 2.* **தங்குதல்;** to stay, stagnate. "தேங்கு கங்கைத் திருமுடிச் செங்கணான்" *(கம்பரா. காட்சி. 21). 3.* **மிகுதல்** *(வின்.);* to be crowded, abundant, copious.

*[தெண்டுதல் = நெம்புதல், மேற்கிளப்புதல். தெண்டு → தெங்கு → தேங்கு. தேங்குதல் = உயர்தல், மிகுதல்]*

**தேங்கு[2]-தல்** *tēṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **மனங்கலங்குதல்** *(பிங்.);* to be puzzled; to be in trepidation. "நீர் . . . தேங்க வேண்டாவிறே" *(ஈடு. 9,7,9). 2.* **கால நீட்டித்தல்;** to delay, tarry. "தேங்காதிருவோ நேரிறைஞ்ச" *(பெரியபு. திருநா. 267). 3.* **கெடுதல்;** to perish; to be ruined. "தேங்காத மள்ளர்" *(சீவக. 16).*

**தேங்கு[3]-தல்** *tēṅgu,* 5 செ.கு.வி. (v.i.) **அஞ்சுதல்;** to be afraid. "நாம் இத்தைச் செய்யும்படியென் என்று தேங்குதல் அல்பமுமுடைய வனல்லன்" *(திவ்.பெரியாழ். 2,9,3, வியா, பக். 45).*

*[தியங்கு → தேங்கு]*

**தேங்கு[4]** *tēṅgu,* பெ. (n.) **தெங்கு;** coconut.

*[தெங்கு → தேங்கு]*

**தேங்குதண்ணீர்** *tēṅgu-taṇṇīr,* பெ. (n.) **தேங்கி நிற்கும் தண்ணீர்;** stagnant water *(சா.அக.).*

*[தேங்கு + தண்ணீர்]*

**தேங்குழல்** *tēṅguḻal,* பெ. (n.) **பணியார வகை;** a kind of vermicular confection made of rice paste. "பொரி தேங்குழ லப்பம்" *(தனிப்பா. 2, 75, 189).*

ம. தேங்குழல்

*[தேன் + குழல்]*

**தேங்குழலுரல்** *tēṅguḻal-ural,* பெ. (n.) **தேங்குழற் செப்பு** பார்க்க; see *tēṅguḻaṟ-ceppu.*

*[தேன் + குழல் + உரல்]*

**தேங்குழலுழக்கு** *tēṅguḻal-uḻakku,* பெ. (n.) தேங்குழற்செப்பு பார்க்க; see *tēṅguḻaṟ-ceppu.*

*[தேங்குழல் + உழக்கு]*

**தேங்குழற்செப்பு** *tēṅguḻaṟ-ceppu,* பெ. (n.) **தேங்குழல் பிழியுங் கருவி;** cylindrical utensil for preparing tēṅguḻal.

மறுவ. தேங்குழல் அச்சு

*[தேன் + குழல் + செப்பு]*



**தேங்கைச்சுட்டுப்புகைத்துவிடு-தல்** *teṅgai-c-cuṭṭu-p-pugaittu-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) தேங்காயைச் சுட்டு புகைகாட்டுதல்; exposing to the fumes of burnt coconut (சா.அக.).

**தேசக்காவல்**[1] *tēśa-k-kāval,* பெ. (n.) தாய் நாட்டைக் காவல் புரிகை; guarding the mother-land.

*[தேசம் + காவல்]*

**தேசக்காவல்**[2] *tēśa-k-kāval,* பெ. (n.) கொள்ளையரால் துன்பம் நேராதபடி இறையிலி நிலமளித்து நாட்டைக் காவல் புரியச் செய்யும் பழைய முறை; the ancient system of guarding a tract of country against marauders and compensating the person or persons employed for the purpose by grants of land rent free or by various fees or allowances (R.F.).

*[தேசம் + காவல்]*

**தேசகாலம்** *tēśakālam,* பெ. (n.) குறிப்பிட்ட வேளை; பொழுது, சந்தி எனும் காலம்; particular time, day, evening and dusk (கல்.வெ.).

**தேசத்தலைவர்** *tēśa-t-talaivar,* பெ. (n.) நாடு முழுதும் செல்வாக்குள்ள தலைவர்; national leader.

*[தேசம் + தலைவர்]*

**தேசத்துரோகம்** *tēśa-t-turōgam,* பெ. (n.) தேசவஞ்சனை பார்க்க; see *tēśa-vañjaṉai.*

*[தேசம் + துரோகம்]*

Skt. dhuroha → த. துரோகம்

**தேசத்தொண்டன்** *tēśa-t-toṇḍaṉ,* பெ. (n.) தேசப்பற்றாளன் பார்க்க; see *tēśa-p-paṟṟāḷaṉ.*

*[தேசம் + தொண்டன். தொண்டு - தொண்டன்]*

**தேசத்தொண்டு** *tēśa-t-toṇḍu,* பெ. (n.) நாட்டு நலனை முன்னிறுத்திச் செய்யும் ஊழியம்; patriotrict service. விடுதலைப் போரில் தேசத் தொண்டே முன்னிறுத்தப்பட்டது.

*[தேசம் + தொண்டு]*

**தேசதருமம்** *tēśa-tarumam,* பெ. (n.) தேசப்பழமை பார்க்க; *tēśa-p-paḻamai.*

*[தேசம் + தருமம்]*

**தேசப்படம்** *tēśa-p-paḍam,* பெ. (n.) நாட்டின் அரசியல், நில அமைப்பைக் காட்டும் படம்; map (of a country).

*[தேசம் + படம்]*

**தேசப்பண்** *tēśa-p-paṇ,* பெ. (n.) தேசியப்பண் பார்க்க; *tēśiya-p-paṇ.*

மறுவ. நாட்டுப்பண்

*[தேசம் + பண்]*

**தேசப்பழமை** *tēśa-p-paḻamai,* பெ. (n.) நாட்டு வழக்கம் (யாழ்ப்.); ancient or established customs or usages of a country.

*[தேசம் + பழமை]*

**தேசப்பற்றாளி** *tēśa-p-paṟṟāḷi,* பெ. (n.) தாய் நாட்டின் மீது மிகுந்த பற்றுடையவன்; patriotic person. விடுதலைப் போரிலீடுபட்ட தேசப்பற்றாளிகள் தனிமைச் சிறையிலடைக்கப் பட்டனர் (உ.வ.).

*[தேசம் + பற்றாளி]*

**தேசப்பற்று** *tēśa-p-paṟṟu,* பெ. (n.) ஒருவர் தம் நாட்டு நலனிலும் வளர்ச்சியிலும் கடமையுணர்வோடிருக்கும் ஈடுபாடு; patriotism; love for one's country.

*[தேசம் + பற்று]*

**தேசபக்தன்** *tēśa-paktaṉ,* பெ. (n.) தேசப்பற்றாளி பார்க்க; *tēśa-p-paṟṟāḷi.*

*[தேசம் + பக்தன். பத்தன் → பக்தன்]*

த. பத்தன் → Skt. bakta

**தேசபக்தி** *tēśa-bakti,* பெ. (n.) தேசப்பற்று பார்க்க; *tēśa-p-paṟṟu.*

*[தேசம் + பக்தி. பத்தி → பக்தி]*

த. பத்தி → Skt. bakti

**தேசபண்டாரி** *tēśapaṇḍāri,* பெ. (n.) தெள்ளாறு எறிந்த நந்திவர்மனுடைய சிறப்புப் பெயர்களில் ஒன்று; name of Teḷḷāru eṟinda Nandivarman.

*[தேசம் + பண்டாரி]*

**தேசம்** *tēśam,* பெ. (n.) 1. இடம்; place. காலதேச மறிந்து நடத்த வேண்டும். தேசங்கள்தோறும் மொழி (பாஷை)கள் வேறு (பழ.). 2. நாடு; country, province, territory, land, district.

தேசமெல்லாம் புகழ்ந்தாடுங் கச்சி (திருவாச. 9,4). தேசத்து நன்மை தீமை அரசர்க்கு இல்லையா? (பழ.) 3. நாவலந் தீவில் அமைந்த 56 தேசங்கள்; countries of ancient India, 56 in number.

ம. தேசம்

[துகு → திகு → திகை = முடிவு, எல்லை. திகைதல் = முடிதல், தீர்தல், தீர்மானமாதல், 'மாதம் திகைந்த சூலி', 'அதன் விலை இன்னும் திகையவில்லை' என்பது தென்னாட்டு வழக்கு. திகை → திசை = முடிவு, எல்லை, பக்கம். திசை → (தேசு) → தேசம்]

திசை, தேசம் என்னும் சொற்கள் பக்கம் என்னும் பொருளில் வருதலை 'அந்தத் திசைக்கே போக மாட்டேன்' என்னும் தமிழ் வழக்காலும், 'ஏகதேசம்' என்னும் வடமொழி வழக்காலும் அறியலாம். ஏகதேசம் = ஒரு பக்கம், ஒரு பகுதி. தேசம் என்னும் சொல் முதலாவது எல்லையைக் குறித்து, பின்பு ஓர் எல்லையில் அல்லது பக்கத்தில் உள்ள நாட்டைக் குறித்தது.

ஒ.நோ.: சீமை = எல்லை, நாடு (மு.தா. 97)

த. தேசம் → skt. dēša

**56 தேசங்களாவன**

அங்கம், அவந்தி, ஆந்திரம், ஆலயம், இடங்கணம், இலாடம், உகந்தரம், ஒட்டம், கடாரம், கருசம், கலிங்கம், கன்னடம், காசுமீரம், காந்தாரம், காம்போகம், கிராதம், குகுரம், குரு, குளிந்தம், கூர்ச்சரம், கேகயம், கேரளம், கொங்கணம், கோசலம், கௌடம், சவ்வீரம், சாதகம், சாலவம், சிங்களம், சிந்து, சீனம், சூரசேனம், சேரி, சோழம், சோனகம், திராவிடம், திரிகர்த்தம், துளுவம், நிடதம், நேபாளம், பப்பரம், பாஞ்சாலம், பாண்டியம், பாரசீகம், புளிந்தம், போடம், மகதம், மச்சம், மத்திரம், மராடம், மலையாளம், மாளவம், வங்கம், வங்காளம், விதர்ப்பம், விராடம்.

**தேசவழமை** *tēša-vaḻamai,* பெ. (n.) தேசப்பழமை பார்க்க; see *tēša-p-paḻamai.*

[தேசம் + வழமை]

**தேசாட்சரி** *tēšāṭcari,* பெ. (n.) ஓர் பண்; kind of node.

**தேசாதி** *tēšadi,* பெ. (n.) கவரையர் குலத்தலைவன் (வின்.); chief of the Kavaraiyar caste.

**தேசாதேசம்** *tēšatēšam,* பெ. (n.) பற்பல நாடு; various countries.

[தேசம் + தேசம்]

**தேசி** *tēši,* பெ. (n.) அழகி; beautiful women. "தேசியைச் சிறையில் வைத்தான்" (கம்பரா. அங்கத. 4).

[உல் → துல் → துள் → தொள் → தோள் → தோய் → தேய் → தேசு → தேசி]

**தேசிகப்பாடு** *tēšiga-p-pāḍu,* பெ. (n.) நாட்டில் நிகழும் வழக்கப்படி, வெளிநாடுகளில் இருந்து வருவோர்க்குத் திருக்கோயில்களில் ஒரு வேளை உணவு அளிக்கச் செய்யும் ஏற்பாடு; custom of supplying one time food for those who come from foreign countries. "விண்ணகோவரையர் வைத்த தானம் நிசதி நாநாழி அரிசி தேசிகப்பாடு கொடுப்போமானோம்" (தெ.க.தொ. 12, 1, 42).

**தேசியக்கொடி** *tēšia-k-koḍi,* பெ. (n.) ஒரு நாட்டுக்குரிய அடையாளக்கொடி; national flag. மூவண்ணக் கொடியாகிய நமது தேசியக் கொடியைக் காலை ஆறு மணியிலிருந்து மாலை ஆறுமணி வரை மட்டுமே பறக்கவிட வேண்டும்.

[தேசம் → தேசியம் + கொடி]

**தேசியகீதம்** *tēšiya-kīdam,* பெ. (n.) தேசியப் பண் பார்க்க; see *tēšiya-p-paṇ.*

[தேசம் → தேசியம் + கீதம்]

**தேசியச்சின்னம்** *tēšiya-c-cinnam,* பெ. (n.) நாட்டை அடையாளப்படுத்தற்குக் கையாளப் படும் கொடி, பண் முதலியன; national flag, national anthem etc., to mark as an emblem of a country

[தேசம் → தேசியம் + சின்னம்]

**தேசியத்தலைவர்** *tēšiya-t-talaivar,* பெ. (n.) தேசத்தலைவர் பார்க்க; see *tēša-t-talaivar.*

[தேசம் → தேசியம் + தலைவர்]

**தேசியப்பண்** *tēšiya-p-paṇ,* பெ. (n.) நாட்டுப் பற்றை வெளிப்படுத்துவதும், நாட்டுச் சின்னமாக விளங்குவதுமாகிய பாடல்;

## தேசியக்கொடி - பறவை
## விலங்கு - மலர் - சின்னம்



தேசியக் கொடி



தேசிய மலர்



தேசிய விலங்கு



தேசியப் பறவை



தேசியச் சின்னம்



national anthem. விழாமுடிவில் தேசியப்பண் இசைக்கப்பட்டது.

மறுவ. நாட்டுப்பண்

*[தேசம் → தேசியம் + பண்]*

**தேசியப்பறவை** *tēśiya-p-paṟavai,* பெ. (n.) ஒரு நாட்டுக்குரியதாக அறிவிக்கப்படும் பறவை; national bird. மயில் நமது நாட்டின் தேசியப் பறவை.

*[தேசம் → தேசியம் + பறவை]*

**தேசியம்** *tēśiyam,* பெ. (n.) *1.* நாட்டின் முழுமையையும் ஒற்றுமையையும் நோக்கமாகவுடைய போக்கு; nationalism. முன்னைப் பிரிவினைக்காரர்கள் இன்று தேசியம் பேசுகின்றனர். *2.* ஓர் இனமக்கள் தங்கள் தனித்துவத்தை வலியுறுத்தி அரசியலில் தனியுரிமைகோரும் போக்கு; nationalism advocated by ethnic groups. *3.* நாடு முழுவதற்கும் உரியது அல்லது நாடு முழுவதையும் சார்ந்தது; that which belongs to the nation. தேசியக்கொடி, தேசியப்பண்.

*[தேசம் → தேசியம்]*

**தேசியமலர்** *tēśiya-malar,* பெ. (n.) ஒரு நாட்டிற்குரியதாக அறிவிக்கப்படும் பூ; national flower. தாமரைப்பூ நமது நாட்டின் தேசிய மலர்.

*[தேசம் → தேசியம் + மலர்]*

**தேசியமாணவர்ப்படை** *tēśiya-māṇavar-p-paḍai,* பெ. (n.) படைப்பயிற்சி பெறும் மாணவ இளைஞர் படை; national cadet corps (NCC).

*[தேசியம் + மாணவர் + படை]*

**தேசியவியக்கம்** *tēśiya-v-iyakkam,* பெ. (n.) நாட்டின் நலன் கருதி இயங்கும் இயக்கம்; national movement. மொழிவளர்ச்சிக்குத் தேசியவியக்கம் தேவை.

*[தேசம் → தேசியம் + இயக்கம்]*

**தேசியவிலங்கு** *tēśiya-vilaṅgu,* பெ. (n.) ஒரு நாட்டுக்குரியதாக அறிவிக்கப்படும் விலங்கு; national animal. புலி நமது நாட்டின் தேசிய விலங்கு.

*[தேசம் → தேசியம் + விலங்கு]*

**தேசு** *tēśu,* பெ. (n.) *1.* ஒளி; bright. *2.* பொன்; gold. *3.* அழகு; beauty. "திருமா மணிவண்ணனன் தேசு" *(திவ். இயற். 3:9). 4.* புகழ்; fame. "நும்முடைத் திருவுந் தேசும்" *(சீவக. 771). 5.* அறிவு (ஞானம்); knowledge. "தேசுறு முண்பார்க் கென்றே தேறு" *(சைவச. பொது. 561). 6.* பெருமை; proud. "வலிச்சினமு மானமுந் தேசும்" *(பு.வெ. 2:4). 7.* வீரியம் (வின்.); energy.

த. தேசு; வ. தேஜஸ்

*[தேய் → தேயு → தேசு]*

**தேசுகொள்** *tēśukoḷ,* பெ.எ. (adj.) புகழாகிய ஒளியைக் கொண்டுள்ள; live so gloriously with fame. "செழியரைத் தேசுகொள் ஸ்ரீ கோராஜ கேஸரிவர்மரான ஸ்ரீராஜராஜ தேவர்க்கு" (தெ.க.தொ. 3:1, 4).

*[தேசு + கொள்]*

**தேட்கடி** *tēṭ-kaḍi,* பெ. (n.) தேட்கொட்டு பார்க்க; see *tēṭ-koṭṭu*.

*[தேள் + கடி]*

**தேட்கடை**[1] *tēṭ-kaḍai,* பெ. (n.) *1.* குருகு விண்மீன் (மூலம்) (பிங்.); 19th nakṣatra. *2.* பூடு வகை (மூ.அ.); a medicinal plant.

*[தேள் + கடை]*

**தேட்கடைப்பூண்** *tēṭ-kaḍai-p-pūṇ,* பெ. (n.) தேட்கொடுக்கி பார்க்க; see *tēṭ-koḍukki* (சா.அக.).

**தேட்குமச்சி** *tēṭ-kumacci,* பெ. (n.) தேக்குடிச்சி பார்க்க; see *tēk-kuḍicci* (தமி.சொ.அக.).

**தேட்கெண்டை** *tēṭ-keṇḍai,* பெ. (n.) ஐந்து விரல நீளம் வளரும் கடல்மீன் வகை (யாழ்.அக.); sea-fish, olive, attaining 5 inch in length.

*[தேள் + கெண்டை]*

**தேட்கொட்டான்** *tēṭ-koṭṭāṉ,* பெ. (n.) பனையிலையிலுள்ளதும் தீண்டினால் தேள்நஞ்சுபோற் கடுப்பை உண்டாக்குவது மான பூச்சிவகை (இ.வ); a green insect whose touch produces the same sensation as scorpion - sting found on palmyra leaves.

*[தேள் + கொட்டான்]*

**தேட்கொட்டு** *tēṭ-koṭṭu,* பெ. (n.) கொடுக்கு முனையால் தேள் குத்துகை; stinging of a scorpion thrust of a scorpion's sting.

*[தேள் + கொட்டு]*

**தேட்கொடுக்கி** *tēṭ-koḍukki,* பெ. (n.) 1. சிறு செடி வகை (பதார்த்த. 263); turnsole. 2. செடி வகை; tiger's claw.

*[தேள் + கொடுக்கி]*



**தேட்கொடுக்கு** *tēṭ-koḍukku,* பெ. (n.) தேளின் வாலிலுள்ள கொடுக்கு; scorpion sting.

*[தேள் + கொடுக்கு]*

**தேட்டக்காரன்** *tēṭṭa-k-kāraṉ,* பெ. (n.) 1. வருவாயுள்ளவன்; person who has amassed riches. 2. திருடன்; thief, pick pocket.

*[தேட்டம் + காரன்]*

**தேட்டம்** *tēṭṭam,* பெ. (n.) 1. ஈட்டுகை; acquiring, earning, accumulation. 2. துருவிக் கொள்ளுகை; seeking, search, pursuit. 3. திரட்டப்பட்ட பொருள்; acquisition; that which is earned or hoarded. "தேட்டற்ற தேட்டமே" *(தாயு.தேசோ.5).* 4. கவலை; anxiety, solicitude. 'அவனுக்குப் பிள்ளைமேல் வெகு தேட்டம்'. 5. விருப்பம்; earnest desire, appetite, longing. "தேட்டந்தான் வாளெயிற்றிற் றின்னவோ" *(கம்பரா. சூர்ப். 121).*

ம. தேட்டம்

*[தேடு → தேட்டு → தேட்டம்]*

**தேட்டாக்கூறு** *tēṭṭā-k-kūṟu,* பெ. (n.) தேடாக்கூறு பார்க்க; see *tēḍā-k-kūṟu.*

*[தேடு + ஆ + கூறு]*

**தேட்டாண்மை**[1] *tēṭṭāṇmai,* பெ. (n.) ஈட்டம்; earning, as of wealth. "தேட்டாண்மை செய்வாய்" *(அருட்பா. 1, நெஞ்சறி. 377).*

*[தேடு → தேட்டு + ஆண்மை. ஆள் + மை – ஆண்மை]*

**தேட்டாமரம்** *tēṭṭāmaram,* பெ. (n.) மர வகைகளுள் ஒன்று; a kind of tree.

கூரைக்கை, தூண்கள் இவற்றிற்குப் பயன்படும் மரம்.

**தேட்டாளன்**[1] *tēṭṭāḷaṉ,* பெ. (n.) வருவாயுள்ளவன்; thriving, wealthy person. "தேட்டாளன் காயற்றுரை சீதக்காதி" *(தனிப்பா. 238, 8).* 2. புதல்வன் (இ.வ.); son.

*[தேட்டு + ஆளன்]*

**தேட்டாளன்**[2] *tēṭṭāḷaṉ,* பெ. (n.) உழைப்பாளி; labour.

ம. தேட்டாளன் (வேடன்)

*[தேட்டு + ஆளன்]*

**தேட்டாறு** *tēṭṭāṟu,* பெ. (n.) கால்நடை நோய் வகை; a disease of cattle.

**தேட்டு** *tēṭṭu,* பெ. (n.) 1. விருப்பம்; earnest desire. "தேட்டறுஞ் சிந்தை திகைப்பறும்" (திருமந். 2745). 2. வருவாய் ஈட்டுகை; earning. "தேட்டற்ற தேட்டமே" (தாயு. தேசோ. 5). 3. துருவிக் கொள்ளுகை; seeking. "தேட்டருந் திறற் றேனினை" *(திவ். பெருமாள். 2).* 4. சாப்பாடு முதலியவற்றின் நிறைவு (சம்பிரமம்); richness, as of dinner. 5. பேணுகை (வின்.); supporting.

*[தேடு → தேட்டு]*

**தேட்டூண்** *tēṭṭūṇ,* பெ. (n.) வருமானம் (சம்பாத்தியம்); earnings. "தேட்டூணு மெங்கள் குடியிருப்பும் . . . எல்லாம் போச்சுது" *(தெய்வச். விறலிவிடு. 499).*

*[தேடு + ஊண்]*

**தேட்டை**[1] *tēṭṭai,* பெ. (n.) தேட்டம் பார்க்க; see *tēṭṭam.*

**தேட்டை**[2] *tēṭṭai,* பெ. (n.) தெளிந்த மோர்; clear butter milk *(சா.அக.).*

**தேட்டை**[3] *tēṭṭai,* பெ. (n.) 1. தெளிவு; clearness, transparancy. 2. தெளிந்த நீர் (வின்.); clear water. 3. உயர்ந்தது; that which is superior. அதற்கு இது தேட்டை (இ.வ.)

**தேட்படை** *tēṭ-paḍai,* பெ. (n.) கொம்பரக்கு; stic lac *(சா.அக.).*

**தேடாக்கூறு** *tēḍā-k-kūṟu,* பெ. (n.) பேணாமை (யாழ்ப்.); lack of support, neglected condition.

*[தேடு + ஆ + கூறு. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தேடாத்தேட்டம்** *tēḍā-t-tēṭṭam,* பெ. (n.) பெருமுயற்சி அல்லது தீயவழியா லீட்டிய பொருள் (வின்.); acquisition by unparalleled labour or by unworthy and unjust means.

*[தேடு + ஆ + தேட்டம். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தேடி** *tēḍi,* பெ. (n.) **அதிவிடயம்;** atis. "தேடித் தீந்தேன் றிப்பிலி" *(சீவக. 2703).*

**தேடித்தின்(னு)-தல்** *tēḍi-t-tiṉṉu-,* 14 செ.குன்றாவி. (v.t.) *1.* **அற்றை நாளீட்டிய பொருளான் வாழ்வு நடத்தல்** (இ.வ.); to live from hand to mouth. *2.* **பரத்தமையாய் வாழ்தல்** (வின்.); to live by whoredom.

**மறுவ.** அன்றாடங்காய்ச்சி

*[தேடு → தேடி + தின்.]*

**தேடிப்பிடி-த்தல்** *tēḍi-p-piḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **கண்டுபிடித்தல்;** to search. *2.* **கள்ளக் கணவனைப் பெறுதல்;** to procure a paramour.

**ம.** தேடிப்பிடிக்குக

*[தேடி + பிடி-.]*

**தேடியதேட்டம்** *tēḍiya-tēṭṭam,* பெ. (n.) **தாமே ஈட்டிய செல்வம்** (யாழ்ப்.); self acquired property.

*[தேடு → தேடி + தேட்டம்]*

**தேடியாடித்திரி-தல்** *tēḍi-y-āḍi-t-tiri-,* 3 செ.கு.வி. (v.i.) **தேடியோடித்திரி-தல்,** பார்க்க; see *tēḍi-y-ōḍi-tiri-.* (செ.அக.).

*[தேடி + ஆடி + திரி-.]*

**தேடியோடித்திரி-தல்** *tēḍi-y-ōḍi-t-tiri-,* 3 செ.கு.வி. (v.i.) **பெருமுயற்சி செய்தல்;** to make great efforts.

*[தேடி + ஓடி + திரி-.]*

**தேடிவை-த்தல்** *tēḍi-vai-,* 4 செ.குன்றாவி. (v.t.) **பொருள் சேர்த்து வைத்தல்;** to earn and lay up.

*[தேடி + வை-.]*

**தேடு[1]-தல்** *tēḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **துருவி நாடுதல்;** to seek, search for, enquire after. "தேடினே னாடிக்கண்டேன்" *(தேவா. 1189, 3).* தேடித் தின்றவர் தெய்வத்தோ டொத்தவர் *(பழ.).* *2.* **ஈட்டுதல்;** to acquire, earn, procure. "பாடுபட்டுத் தேடி" *(நல்வழி, 22).* தேடிய மூலிகை காலில் தட்டினாற்போல *(பழ.).* *3.* **பேணல்;** to take care of, cherish, foster, provide for. அவனை ஒருவருந் தேடுவாரில்லை *(உ.வ.),* தேடுவார் அற்றபிணம் தெருவோடு *(பழ.).*

**ம.** தேடுக; **குட.** தெட்; **துட.** தொட்க்

*[தோண்டு → தேண்டு → தேடு.*

*ஒ.நோ.: நோண்டு → நேண்டு → நேடு. நேடுதல் - தோண்டுதல் - தோண்டிப் பார்த்தாற் போல் தேடுதல். தேடிப்பார்த்தல் (வே.க. 287)]*

**தேடு[2]-தல்** *tēḍu-,* 5 செ.கு.வி. (v.i.) **முயலல்;** to seek, try, as to do a thing. "கோயிலுக்கு எழுந்தருளத் தேட" *(குருபரம். 511).* தேடிப் புதைத்துத் தெருவில் இருக்கிறதா? *(பழ.).*

**தேடு[3]** *tēḍu,* பெ. (n.) **மீன்வகை;** a fish. தேட்டுத் துண்டம் (நாஞ்.).

**ம.** தேடு

**தேடுகூலி** *tēḍu-kūli,* பெ. (n.) **ஆவணம் முதலியவற்றைத் துருவிக் கண்டெடுத்தற் குரிய கூலி;** search fee, paid for searching a document in a record office (செ.அக.).

*[தேடு + கூலி]*

**தேண்டு-தல்** *tēṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) **தேடு-1** பார்க்க; see *tēḍu-1.* "தேண்டிநேர் கண்டேன் வாழி" (கம்பரா. உருக்காட்டு. 77).

*[தேடு → தேண்டு-.]*

**தேண்மண்டலி** *tēṇ-maṇḍali,* பெ. (n.) **தேள் மண்டலி** பார்க்க; see *teḷ-maṇḍali* (சா.அக.).

*[தேள் → தேண் + மண்டலி]*

**தேணிறம்** *tēṇiṟam,* பெ. (n.) **மாந்தளிர்க் கல்** (யாழ்.அக.); a kind of green stone.

**மறுவ.** கற்காவி

*[தேன் + நிறம்]*

**தேத்தடை** *tē-t-t-aḍai,* பெ. (n.) தேத்திறால் பார்க்க; see *tē-t-t-iṟāl.* "தேத்தடைத் திரள் கிழிந் தசும்பறா வரை" *(தணிகைப்பு. நாட்டு. 14).*

*[தேம் + அத்து + அடை]*

**தேத்தா** *tēttā,* பெ. (n.) ஒரு வகை மரம் (யாழ்ப்.); a kind of tree.

**தேத்தாலடி-த்தல்** *tēttālaḍi-,* 4 செ.குவி. (v.i.) பலவிடத்தும் மலிவாக விற்றல்; to be available everywhere at a nominal price. கத்தரிக்காய் தெருவெல்லாந் தேத்தா லடிக்கிறது. (நாஞ்.)

ம. தேத்தலடிக்குக

**தேத்தான்** *tēttāṉ,* பெ. (n.) 1. தேத்தான் கொட்டை பார்க்க; see *tēttāṉ-koṭṭai.* 2. கழற்சிக்காய்; molucca bean (சா.அக.).

**தேத்தான்கொட்டை** *tēttāṉ-koṭṭai,* பெ. (n.) மருந்துக்குப் பயன்படும் தேற்றா மரத்தின் கொட்டை; seed of the water clearing tree (சா.அக.).

*[தேத்தான் + கொட்டை. தேற்றான் → தேத்தான்]*

**தேத்தி** *tētti,* பெ. (n.) தேத்தான்கொட்டை பார்க்க; see *tēttāṉ-koṭṭai* (சா.அக.).

**தேத்தியன்** *tēttiyaṉ,* பெ. (n.) தேத்தான் பார்க்க; see *tēttāṉ* (சா.அக.).

**தேத்திறால்** *tē-t-t-iṟāl,* பெ. (n.) தேனிறால் (தொல்.எழுத்து. 344, உரை); honeycomb.

*[தேன் → தேம் → தேத் + இறால்]*

**தேத்துக்காலி** *tēttu-k-kāli,* பெ. (n.) அடங்காதவள்-ன்; vagabond, loafer.

*[தேம்² + காலி → தேத்துக்காலி]*

**தேத்துலை** *tē-t-tulai,* பெ. (n.) பாறை மீன்; kind of fish called 'pāṟai'.

**தேத்துவாளை** *tēttu-vāḷai,* பெ. (n.) வாளை மீன் வகையுள் ஒன்று; kind of fish in 'vāḷai' species.

*[தேம் → தேத்து + வாளை]*

**தேத்தெலே** *tēttelē,* பெ. (n.) ஒரு மீன் வகை (மீனவ.); a kind of fish.

**தேதாவெனல்** *tētā-v-eṉal,* பெ. (n.) இசைக் குறிப்பு; onom. expr. of humming the syllables தே, தா in a tune. "தேதாவென வண்டொடு தேன் வரிசெய்ய" *(சீவக. 1066).*

*[தேதா + எனல்]*

**தேது** *tēdu,* பெ. (n.) தேசு பார்க்க; see *tešu.* "தேதெரி பாங்கையி லேந்தி" *(தேவா. 892, 4).*

தெ. தேசு

**தேதேயெனல்** *tētē-y-eṉal,* பெ. (n.) இசை குறிப்பு; onom. expr. of humming the syllables தே, தே in a tune. "அஞ்சிறைவண்டு தண்டேன் பருகித் தேதேயெனுந் தில்லையோன்" *(திருக்கோ. 82).*

*[தேதே + எனல்]*

**தேந்தம்** *tēndam,* பெ. (n.) குதிரைச்சுழி வகை; a mark in horses. "பிறப்புவகை வளருந்தேந் தம்" *(தஞ்.சர. iii, 117).*

**தேந்தலை** *tēn-dalai,* பெ. (n.) 1. செத்தை பார்க்க; see *šettai.* 2. தேங்குழல் (தஞ்சை.) பார்க்க; see *teṅguḻal.*

**தேந்தேமெனல்** *tēn-tēm-eṉal,* பெ. (n.) இசைக்குறிப்பு; onom. expr. of the sound of a drum. "தேந்தேமென்னு மணிமுழவமும்" *(சீவக. 292).*

*[தேம் + தேம் + எனல்]*

**தேநவரை** *tē-navarai,* பெ. (n.) ஐந்துவிரல நீளம் வரை வளரும் நவரை மீன் வகை; red-mullet, chestnut, attaining 5 inch in length.

*[தேம்¹ + நவரை]*

**தேநீர்** *tēnīr,* பெ. (n.) தேனில் நீரைக் கலந்து குடிக்குமொரு பருகம்; a drink of honey mixed water.

*[தேன் + நீர்]*

**தேப்பானை** *tē-p-pāṉai,* பெ. (n.) தேன் பெய்த பானை; pot containing honey (நன்.213. மயிலை).

*[தேன் + பானை – தேன்பானை → தேம்பானை → தேப்பானை]*

**தேப்புல்** *tēppul,* பெ. (n.) தேயிலைப் புல் அல்லது சுன்னாரிப்புல்; tea-grass.

*[தே + புல்]*

**தேப்பெருமாள்** *tē-p-perumāḷ,* பெ. (n.) *காஞ்சிபுரத்திற் கோயில் கொண்டுள்ள திருமால்;* 'Tirumāl', as worshipped at Kanjipuram.

*[தே³ + பெருமாள்]*

**தேப்பை** *tēppai,* பெ. (n.) **தெப்பம்;** raft. 'பிறவிநீர்க் கடலை நீந்துநற் றேப்பையாம்" (மேருமந். 1201).

**தேபூசை** *tē-pūšai,* பெ. (n.) **கடவுள் பூசை;** worship, reverent homage paid to god. தே பூசைமேற் கவனந் தீர்ந்துவிட்டேன் *(விறலிவிடு).*

*[தே + பூசை]*

**தேம்**¹ *tēm,* பெ. (n.) *1.* **இனிமை;** sweetness; pleasantness. "தேங்கொள் சுண்ணம்" *(சீவக. 12).* *2.* **மணம்** (பிங்.); fragrance, odour. "தேங்கமழ் கோதை" *(பு.வெ.12,7).* 3. **தேன்;** honey; "தேம்படு நல்வரை நாட" *(நாலடி, 239).* 4. **தேனீ;** honey bee. "தேம்பாய் கடாத்தொடு" *(பதிற்றுப். 53:17).* *5.* **கள்** (சூடா.); toddy. *6.* **மதம்;** must of an elephant "தேம்படு கவுள... யானை" *(முல்லைப். 31).* 7. **நெய்;** oil. "தேங்கலந்து மணிநிறங் கொண்ட மாயிருங் குஞ்சியின்" *(குறிஞ்சிப். 111).* 8. தேமம் (இ.வ.) பார்க்க; see *tēmam.*

ம. தேம்

*[தேன் → தேம்.*

*ஒ.நோ. மேன்பாடு → மேம்பாடு]*

**தேம்**² *tēm,* பெ. (n.) *1.* **இடம்** (திவா.); place. *2.* **தேயம்** (சூடா.); land, country. "தெவ்வர் தேஎத்து" *(புறநா. 6).* 3. **திக்கு;** direction, quarter; "அவன் மறை தேஎ நோக்கி" *(அகநா. 48).* 4. **ஏழாம் வேற்றுமைச் சொல்லுருபு** (நன். 302); a word used as locative case-suffix.

*[தேயம் → தேம்]*

**தேம்**³ *tēm,* பெ. (n.) **ஈரம்** (யாழ்.அக.); wetness.

**தேம்ப** *tēmba,* வி.எ. (adv.) **புலர;** to dawn.

**தேம்பல்**¹ *tēmbal,* பெ. (n.) *1.* **வாட்டம்** (பிங்.); fading, being faded. *2.* **குறைந்த நிலை;** reduced or diminished state. "தேம்ப லிளமதியஞ் சூடிய சென்னியான்" *(தேவா. 1017, 3).* 3. **வருத்தம்** (உ.வ.); difficulty. *4.* **பழம்பூ** (பிங்.); faded flower. *5.* **விம்மியழுகை;** heaving sob. அவன் தேம்பலை நிறுத்து.

*[தேம்பு → தேம்பல்]*

**தேம்பல்**² *tēmbal,* பெ. (n.) தேமல் பார்க்க; see tēmal.

*[தேமல் → தேம்பல்]*

**தேம்பா** *tēmbā,* பெ.எ. (adj.) *1.* **குறையாத;** not decrease. *2.* **அழியாத;** not ruined. *3.* **தேயாத;** not wane. *4.* **சுருங்காத;** not shrink. தேம்பாவணி வீரமாமுனிவரால் இயற்றப்பட்டது.

**தேம்பாரை** *tēmbārai,* பெ. (n.) **சேராங்கொட்டை;** marking nut *(சா.அக.).*

**தேம்பாவணி** *tēm-bā-v-aṇi,* பெ. (n.) **கிறித்துவின் தந்தை சூசையின் வரலாற்றைப் பற்றி வீரமாமுனிவர் 1726ஆம் ஆண்டில் பாடியதொரு தமிழ்ப் பாவியம்;** an epic poem on the life of Joseph, the father of Christ, by Beschi @ Viramāmuṉivar, written in 1726 A.D.

*[தேம் + பா + அணி. தேம்பா + அணி எனலுமாம்]*

**தேம்பாறை** *tēmbāṟai,* பெ. (n.) **சேங்கொட்டை;** marking nut.

**தேம்பிப்போ-தல்** *tēmbi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) **உலர்ந்து போதல்;** become dry.

*[தேம்பல் → தேம்பு → தேம்பி + போ-.]*

**தேம்பியழு-தல்** *tēmbi-aḻu-,* 1 செ.கு.வி. (v.i.) **விம்மியழுதல்;** to sob violently *(சா.அக.).*

*[தேம்பி + அழு-.]*

**தேம்பு-தல்** *tēmbu-,* 5 செ.கு.வி. (v.i.) *1.* **வாடுதல்;** to fade; wither, droop; to be tired; to faint. "கொழும்பதிய குடிதேம்பிச் செழுங்கேளிர் நிழல்சேர" *(மதுரைக். 167).* 2. **மெலிதல்;** to grow thin; to be emaciated. "ஆனாச் சிறுமைய ளிவளுந் தேம்பும்" *(குறிஞ்சிப். 26).* 3. **விம்மியழுதல்;** to sob violently. "விழிநீர் மல்கவே நின்று தேம்பு மன்னே" *(வெங்கைக்கோ. 329).* 4. **வருந்துதல்;** to be in trouble; to suffer. "அவாவினாற் றேம்புவார்" *(கலித். 97).* 5. **அழிதல்;** to perish. "ஊடியார் நலந்தேம்ப" *(கலித். 68).* 6. **ஆண்டழிக்க உரியதாதல்;** to be fit for enjoyment. "தேம்பூண் சுவைத்து" *(திவ். இயற். பெரியதிருவ. 14).*

ம. தேம்புக

*[தேம் + பு]*

**தேமணி** *tēmaṇi,* பெ. (n.) தெய்வமணி-3 பார்க்க; see *teyvamaṇi-3.*

*[தே + மணி]*

**தேமம்** *tēmam,* பெ. (n.) *ஈரம்;* dampness *(சா.அக.).*

*[தேம்³ → தேமம்]*

**தேமல்** *tēmal,* பெ. (n.) *1. சுணங்கு;* whitening of the skin with epithelial debris; yellow spreading spots about the breasts of women. *2. வெள்ளை நோய்;* ringworm. *3. தோலைப்பற்றி வரும் நோய்வகை;* fish-skin, a disease.

ம. தேமல்

*[தேம்பு → தேமல்]*

வகைகள்

1. அழுக்குத் தேமல்
2. அழகுத் தேமல்
3. பொங்கு தேமல்
4. மங்கு தேமல்
5. எச்சிற்றழும்பு (உத்கோட ரோகம்)

**தேமல்படர்-தல்** *tēmal-paḍar-,* 2 செ.கு.வி. (v.i.) *உடம்பின்மேல் தேமல் உண்டாதல்;* spreading of the yellow spots on the body *(சா.அக.).*

*[தேமல் + படர்-.]*

**தேமல்முகம்** *tēmal-mugam,* பெ. (n.) *தேமல் படர்ந்த முகம்;* freckle face *(சா.அக.).*

*[தேமல் + முகம்]*

**தேமனம்¹** *tēmaṉam,* பெ. (n.) *புளிப்பு;* sourness *(சா.அக.).*

**தேமனம்²** *tēmaṉam,* பெ. (n.) *துன்பம்;* distress.

**தேமா¹** *tēmā,* பெ. (n.) *மாமர வகை;* a kind of mango tree producing very sweet fruits.

ம. தேன்மாவு, தேனன்

*[தேம் + மா]*

**தேமா²** *tēmā,* பெ. (n.) நேர் நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு *(காரிகை, உறுப். 4);* the technical term for the metrical foot of nēr-nēr.

*[தே + மா]*

**தேமாங்கனி** *tē-māṅgaṉi,* பெ. (n.) நேர், நேர், நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு *(காரிகை, உறுப். 4);* a technical term for the metrical foot, of nēr-nēr-nirai.

*[தே + மா+ கனி]*

**தேமாங்காய்¹** *tē-māṅ-gāy,* பெ. (n.) நேர், நேர், நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு *(காரிகை, உறுப்.4);* a technical term for the metrical foot of nēr-nēr-nēr.

*[தே + மா+ காய்]*

**தேமாங்காய்²** *tē-māṅ-gāy,* பெ. (n.) *தேமாவின் காய்;* sweet mango.

ம. தேன்மாங்ங

*[தே + மாங்காய்]*

**தேமாந்தண்ணிழல்** *tē-mā-n-taṇ-ṇiḻal* பெ. (n.) நேர் நேர் நேர் நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு *(காரிகை, உறுப்பு. 5);* a technical term for the metrical foot of nēr-nēr-nēr-nirai.

*[தே + மா+ தண் + நிழல்]*

**தேமாந்தண்பூ** *tē-mā-n-taṇ-pū,* பெ. (n.) நேர் நேர் நேர் நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு *(காரிகை, உறுப். 5);* a technical term for the metrical foot nēr-nēr-nēr-nēr.

*[தே + மா+ தண் + பூ]*

**தேமாநறுநிழல்** *tē-mā-naṟu-niḻal,* பெ. (n.) நேர் நேர் நிரை நிரை என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு *(காரிகை, உறுப். 5);* a technical term for the metrical foot nēr-nēr-nirai-nirai.

*[தே + மா + நறு + நிழல்]*

**தேமாநறும்பூ** *tē-mā-naṟumpū,* பெ. (n.) நேர் நேர் நிரை நேர் என்ற சீரைக் குறிக்கும் வாய்பாடு *(காரிகை, உறுப்.5);* a technical term for the metrical foot of nēr-nēr-nirai-nēr.

*[தே + மா+ நறும் + பூ]*

**தேய்¹-தல்** *tēy-,* 2 செ.கு.வி. (v.i.) *1. உரைசுதல்;* to wear away by friction; to be rubbed. *2. குறைதல்;* to lessen, decrease, wane, as the moon; to waste away, as the oil in a burning lamp; to become exhausted. "தொடர்புந் தேயுமே

நின்வயி னானே" (குறுந். 42). தேய்ந்தாலும் சந்தனக்கட்டை மணம் போகாது (பழ.). 3. மெலிதல்; to be emaciated; to grow thin, as a child. "சிவனேநின்று தேய்கின்றேன்" (திருவாச. 32, 8). 4. வலிகுன்றுதல்; to become weakened. "அரம்பொருத பொன்போலத் தேயுமே" (குறள், 888). 5. கழிதல்; to lapse, pass, wear away, as time. 6. அழிதல்; to be effaced, erased, obliterated by rubbing; to be destroyed. "தேயா விழுப்புகழ்த் தெய்வம் பரவுதும்" (கலித். 103). 7. சாதல்; to die. "எம்பியோ தேய்ந்தான்" (கம்பரா. பாசப். 5).

ம. தேயுது; க. தேய்; தெ. தேயு; து. தேயுனி; பட. தேயி; குட., கோத. தேய்

**தேய்²-த்தல்** *tēy-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. உரைசச் செய்தல்; to rub, rub away, waste by rubbing. "மாநாகங் கொண்டாற் கொப்புளாம் விரலிற் றேய்த்தால்" (சீவக. 1288). 2. குறைத்தல்; to reduce. "அழுத கண்ணீரன்றே செல்வத்தைத் தேய்க்கும் படை" (குறள், 555). 3. அழித்தல்; to kill, destroy. "செறுநர்த் தேய்த்த செல்லுறழ் தடக்கை" (திருமுருகு. 5). 4. துலக்குதல்; to scour, scrub, polish by rubbing, as a wall, as a vessel; to clean, as teeth. பாத்திரத்தைத் தேய்த்து வைத்தாள் (உ.வ.). காலையில் படுக்கையினின்று எழுந்தவுடனும் இரவில் படுக்கச் செல்லும் முன்பும் பல் தேய்த்தல் நலம். 5. துடைத்தல்; to efface, erase, obliterate by rubbing. எழுத்தைத் தேய்த்து விட்டான். 6. செதுக்குதல்; to pare, shave, cut, as a gem. "மணியிற் றேய்த்த வள்ளமும்" (கம்பரா. வரைக். 40). 7. எண்ணெய் முதலிய அழுந்தப் பூசுதல்; to rub in, as oil, ointment or liniment. காரிக்கிழமை தோறும் எண்ணெய்த் தேய்த்துக்குளிப்பது அவர் வழக்கம்.

ம. தேய்க்குக

**தேய்க்கல்** *tēy-k-kal*, பெ. (n.) 1. தேக்கல் பார்க்க; see *tēkkal*. 2. தேய்க்குதல்; rubbing (சா.அக.).

**தேய்கடை** *tēy-kaḍai*, பெ. (n.) 1. தேய்ந்தது; that which is worn out, as an implement. 2. வளர்ச்சியற்றது; that which is stunted in growth.

[தேய்வு → தேய்வடை → தேய்கடை]

**தேய்கடைப்பணம்** *tēy-kaḍai-p-paṇam*, பெ. (n.) வழங்கித் தேய்ந்த காசு; coin worn out by use.

[தேய்கடை + பணம்]

**தேய்கடைப்பிள்ளை** *tēy-kaḍai-p-piḷḷai*, பெ. (n.) 1. வளர்ச்சியில்லாத குழந்தை; child of stunted growth or dwarfish in size. 2. மெலிவடைந்த குழந்தை; an emaciated child.

மறுவ. சவலைக் குழந்தை

[தேய்கடை + பிள்ளை]

**தேய்கல்** *tēy-kal*, பெ. (n.) உரைகல்; touch-stone (W.).

ம. தேப்புகல்லு; தே. தேங்கல்லு

[தேய் + கல்]

**தேய்ச்சுமாய்ச்சுப்போடு-தல்** *tēyccu-māyccu-p-pōḍu-*, 19 செ.குன்றாவி. (v.t.) 1. பொருள் முதலியவற்றைச் சிறுகச் சிறுகச் செலவிட்டு வீணாக்குதல்; to waste gradually or little by little. 2. கடன் கொடுத்தவனுக்குப் பொந்திகை (திருப்தி)யில்லாமல் சிறிது சிறிதாகக் கொடுத்துக் கழித்தல்; to pay; as a debt, in such small sums as not to satisfy the creditor. 3. அழுத்தமின்றிச் செய்தல்; to do superficially, as a work. 4. அமுக்கிவிடுதல்; to hush up, as a crime.

[தேய்ச்சு + மாய்ச்சு + போடு-.]

**தேய்த்துக்குளி¹** *tēyttu-k-kuḷi*, பெ. (n.) எண்ணெய்க் குளியல் (நாஞ்.); oil bath.

ம. தேச்சுகுளி

[தேய் → தேய்த்து + குளி]

**தேய்த்துக்குளி²-த்தல்** *tēy-t-tu-k-kuḷi-*, 4 செ.குன்றாவி. (v.t.) உடலைத் தேய்த்துக் குளித்தல்; to rub of body (சா.அக.).

ம. தேச்சுகுளிக்குக

[தேய் → தேய்த்து + குளி-.]

**தேய்த்துக்கொள்ளு-தல்** *tēyttu-k-koḷḷu-*, 7 செ.குன்றாவி. (v.t.) 1. எண்ணெய்யை உடம்பிற் தேய்த்துக் கொள்ளல்; rub or smearing of oil on the body. 2. இரு பெண்டிர் தம்முடன் ஏற்படுத்திக் கொள்ளும் கலவி; to have an

unnatural or immoral practice between women consisting in mutual friction of their genitals (சா.அக.).

[தேய்த்து + கொள்-.]

**தேய்த்துப்புரட்டு-தல்** *tēyttu-p-puraṭṭu-,* 8 செ.குன்றாவி. (v.t.) நெய்மமிட்டுக் கழுவுதல் (யாழ்ப்.); to rub an ointment to wash oneself, as in bathing.

[தேய்த்து + புரட்டு-.]

**தேய்த்துவிடு-தல்** *tēyttu-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. அழுக்கைத் தேய்த்து நீக்குதல்; to rub the dust. 2. உப்பைத் தளம் வைத்து வாரும் முறையில் முதலில் படிந்த உப்பை அளத்தோடு தேய்த்துவிடுதல்; to rub the salt, which in deposited first in the salt pan when scoop the salt from the floor (மீனவ.).

[தேய்த்து + விடு-.]

**தேய்தவளை** *tēy-tavaḷai,* பெ. (n.) தேரை பார்க்க; see *tērai* (சா.அக.).

[தேய்(ந்த) + தவளை]

(தவளை போன்று சிறிய உருவமுடையதால் இப்பெயர் பெற்றிருக்கலாம்)

**தேய்ந்தபல்** *tēynta-pal,* பெ. (n.) குறைந்த பல்; worn out tooth (சா.அக.).

[தேய்ந்த + பல்]

**தேய்ந்துமாய்ந்துபோ-தல்** *tēyndu-māyndu-pō,* 8 செ.குவி. (v.i.) கவலையால் உடல் மெலிவுறுதல்; to become emaciated with care; to pine.

[தேய்ந்து + மாய்ந்து + போ-.]

**தேய்ப்புக்கட்டை** *tēyppu-k-kaṭṭai,* பெ. (n.) சாந்து பூசித் தேய்ப்பதற்குப் பயன்படும், மரப்பலகையாலோ, தகரத்தாலோ ஆன கருவி; an instrument made of wood or tin to rub, after plaster the mortar.

[தேய்ப்பு + கட்டை]

**தேய்ப்புக்கரணை** *tēyppu-k-karaṇai,* பெ. (n.) பூச்சு வேலைகளில் பயன்படும் கரணை; small trowel used to plaster the mortar (கட்டட).

ஒருகா. (கரண்டி → கரணை)

[தேய்ப்பு + கரணை]

**தேய்ப்புக்கல்** *tēyppu-k-kal,* பெ. (n.) பூச்சு மண்ணைச் சுவரில் பூசித் தேய்க்கப் பயன்படும் கல்; stone used for smearing the sand on the walls (கட்டட).

[தேய்ப்பு + கல்]

**தேய்ப்புணி** *tēy-p-puṇi,* பெ. (n.) செட்டுள்ளவன் (வின்); thrifty person (செ.அக.).

[தேய்² → தேய்ப்பு + உணி]

**தேய்ப்புத்தாள்** *tēyppu-t-tāḷ,* பெ. (n.) உப்புத்தாள் (நாஞ்.); sand paper.

ம. தேப்புதாள்

[தேய்ப்பு + தாள்]

**தேய்ப்புப்பலகை** *tēyppu-p-palagai,* பெ. (n.) சாணை பிடிக்கும் பலகை (இவ.); whetstone.

ம. தேப்புபலக

[தேய் → தேய்ப்பு + பலகை]

**தேய்ப்புமட்டப்பலகை** *tēyppu-maṭṭap-palagai,* பெ. (n.) மணியாசுப் பலகை; mason's smoothing plane.

[தேய் + மட்டம் + பலகை]



**தேய்ப்பூணி** *tēy-p-pūṇi,* பெ. (n.) தேய்ப்புணி (வின்.) பார்க்க; see *tēy-p-puṇi.*

[தேய்ப்புணி → தேய்ப்பூணி]

**தேய்பிறை** *tēy-piṟai,* பெ. (n.) 1. குறைமதி; waning moon. "தேய்பிறையும் போல்" (திவ்.திருவாய். 8,8,10). 2. கரும் (கிருட்டிண)ப் பக்கம்; dark fortnight.

ம. தேய்பிற, தேவற

[தேய்¹ + பிறை]

**தேய்பிறையிரும்பு** *tēy-piṟai-y-irumbu,* பெ. (n.) *அரிவாள்;* sickle, as a crescent-shaped iron instrument. "தேய்பிறை யிரும்பு தம்வலக்கை சேர்த்தினார்" *(சீவக. 55).*

*[தேய் + பிறை + இரும்பு]*



**தேய்மானக்காரன்** *tēymāṉa-k-kāraṉ,* பெ. (n.) *பிறர் செலவிற் வாழ்க்கை நடத்தும் இவறன்;* parasite, sponge-cake.

*[தேய்மானம் + காரன்]*

**தேய்மானம்** *tēy-māṉam,* பெ. (n.) *1.* **தேய்வு;** loss by wear and tear. *2.* **பொன்னை உரைத்தலால் உண்டாம் குறைவு;** loss sustained in testing gold by rubbing on a touch-stone. அந்த நகையில் தேய்மானம் மிகுதி (உ.வ.). *3.* **சிக்கனம்;** frugality, parsimony. *4.* **சோம்பல்;** laziness.

ம. தேமானம்; க., தெ. தேமான

*[தேய் + மானம்]*

**தேய்வாங்கு** *tēy-vāṅgu,* பெ. (n.) **தேவாங்கு** பார்க்க; see *tēvaṅgu* (சா.அக.).

*[தேவாங்கு → தேய்வாங்கு]*

**தேய்வு** *tēyvu,* பெ. (n.) *1.* **குறைபாடு;** wearing away, lessening, abrasion, diminution, wasting. *2.* **கழிவு;** disgrace, degradation. "தோற்றோர் தேய்வும்" *(தொல்.பொருள்.63). 3.* **மெலிவு;** emaciation. "பிரிவினாற் றேய்ந்த தேய்வு" *(கம்பரா. முதற்போ. 108). 4.* **அழிவு;** decay, decline, downfall. "அரக்கர்தம் வருக்கந் தேய்வின்று நிரம்பியதென" *(கம்பரா. கடிமண. 75). 5.* **தேய்மானம்** பார்க்க; see *tēymāṉam. 6.* **பல் தேய்வு;** erosion of teeth.

*[தேய் + தேய்வு]*

**தேய்வுக்கட்டை** *tēyvu-k-kaṭṭai,* பெ. (n.) தேய்ந்த சந்தனக் கட்டை (இ.வ.); a piece of sandalwood worn out by trituration.

*[தேய்வு + கட்டை]*

**தேய்வை** *tēyvai,* பெ. (n.) **சந்தனக் குழம்பு;** fragrant unguent from sandalwood, formed by trituration. "நறுங்குற டுரிஞ்சிய பூங்கேழ்த் தேய்வை" *(திருமுருகு. 33).*

*[தேய் → தேய்வு → தேய்வை]*

**தேயம்**[1] *tēyam,* பெ. (n.) **தேசு** பார்க்க; see *tēśu.* "அரனம்பலம் போற்றேயத்ததாய்" (திருக்கோ. 39).

**தேயம்**[2] *tēyam,* பெ. (n.) **பொருள்;** wealth. "தீரரா மவரே தேயத் தியாகஞ்செய் சீவன் முத்தர்" *(ஞானவா. புண். 18).*

**தேயம்**[3] *tēyam,* பெ. (n.) *1.* **நாடு;** country, land, district. "வரம்பிலா வுருவத்தா னெத்தேயத்தான்" *(கம்பரா. மகரக்கண். 28). 2.* **இடம்;** place, location, room.

*[திகைதல் - முடிதல், திகை - முடிவு, எல்லை, திசை. திகை → திசை → தேசம்]*

வடமொழியில் திசா என்னும் சொற்குத் 'திச்' என்பதை மூலமாகக் காட்டுவர். திச் - காட்டு Gk. deiknumi (to show).

இந்தியில் திக்கா என்னுஞ் சொல் காட்டுதலைக் குறிக்கின்றது. நோக்கு - தேக்கு (த.வி.) - திக்கா (பி.வி.) இதற்கு மூலமான சூரசேனிச் சொல் கிரேக்க நாடு சென்று வேதமொழிக்கு வந்திருக்கலாம். வடமொழியிலுள்ள திக் என்னும் வடிவே திச் என்றும் திரிந்திருக்கலாம். அங்ஙனமாயின், தென் சொல்லும் வடசொல்லும் வெவ்வேறு வழியில் தோன்றினவாகும் (தி.ம. 745).

**தேயம்**[4] *tēyam,* பெ. (n.) **ஓகத்திற்குகந்தது;** which is worthy of meditation, as god. "அறிவோர் தேயமாவது யார்க்குமெட்டாதது" *(கந்தபு. அவைபுகு. 126).*

**தேயம்**[5] *tēyam,* பெ. (n.) **களவு** (சூடா.); theft.

*[ஏய் → ஏய்ப்பு = ஏமாற்றுகை. ஏய் → ஏயம் = தள்ளத்தக்கது. ஏயம் → தேயம்]*

த. தேயம் → Skt. stēya

**தேயவியற்கை** *tēya-v-iyaṟkai,* பெ. (n.) **நாட்டு வழக்கம்;** customs, usages and manners of a

country. "உணர்வு மிகுதியானும் தேயவியற்கை யானும் அறியப்படுதலானும்" (குறள், பரிமே. உரைப்பா.).

*[தேயம் + இயற்கை]*

**தேயன்**[1] *tēyaṉ,* பெ. (n.) **ஊழ்கம் செய்யப் படுவோன்** (சங்.அக.); one who is meditated upon.

**தேயன்**[2] *tēyaṉ,* பெ. (n.) **திருடுபவன்;** thief. "இரும்பினைச் செம்பினைத் தேயனும்" (சிவதரு. பாவ. 94).

*[தேயம் → தேயன்]*

**தேயனம்** *tēyaṉam,* பெ. (n.) **ஒளி;** lustre, brilliance. "தேயனநாடராகித் தேவர்கடேவர் போலும்" (தேவா. 838, 2).

**தேயாமண்டிலம்** *tēyā-maṇḍilam,* பெ. (n.) **தேய்ந்து குறையாத கதிரவன் மண்டிலம்;** disc of the sun, as never waning. தேயா மண்டிலங் காணுமாறு (பரிபா. 17:32).

*[தேய் + ஆ+ மண்டிலம். ஆ எதிர்மறை இடைநிலை]*

**தேயாமணி** *tēyā-maṇi,* பெ. (n.) **வயிரம்;** diamond so called from its notabilites hardness (சா.அக.).

*[தேய் + ஆ + மணி]*

**தேயாமதி** *tēyā-madi,* பெ. (n.) **முழுநிலவு;** full moon. "தேயாமதி போல்" (மணிமே. 27:137).

*[தேய் + ஆ + மதி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தேயிலைக்கரண்டி** *tēyilai-k-karaṇḍi,* பெ. (n.) **தேக்கரண்டி** பார்க்க; see *tē-k-karaṇḍi.*

*[தேயிலை + கரண்டி]*

**தேயு**[1] *tēyu,* பெ. (n.) *1.* **நெருப்பு;** fire. *2.* **நெருப்பினால் உடம்பிலேற்படும் செயல்கள்;** the five actions of fire in the human system. *3.* **பசி;** hunger. *4.* **சோர்வு;** faintness. *5.* **அச்சம்;** fear. *6.* **தூக்கம்;** sleep. *7.* **கேள்வி;** hearing.

*[தேய் → தேயு]*

**தேயு**[2] *tēyu,* பெ. (n.) **மயக்கம்** (பிங்.); bewilderment.

*[தேய் → தேயு]*

**தேயுடலி** *tēyuḍali,* பெ. (n.) **தேவாங்கு** பார்க்க; see *tēvāṅgu.*

*[தேய்[1] + உடலி]*

**தேயுலிங்கம்** *tēyu-liṅgam,* பெ. (n.) **ஐந்து இலிங்கங்களுள் தழல் வடிவினதாய்த் திருவண்ணாமலையிலுள்ள சிவலிங்கம்;** the lingam at Tiruvaṇṇāmalai believed to be constituted of the fire-element, one of five lingam.

*[தேயு[2] + லிங்கம். இலிங்கம் → லிங்கம். தேயு - தீ]*

**தேயுவின்கணம்** *tēyuviṉkaṇam,* பெ. (n.) **தீக்கணம்** பார்க்க; see *tīkkaṇam.*

*[தேயு + இன் + கணம். இன் இடைநிலை]*

**தேயுவின்கூறு** *tēyuviṉkūṟu,* பெ. (n.) **புறநிலைக் கருவி பதினொன்றனுள் தீயின் கூறான உணவு, தூக்கம், அச்சம், புணர்ச்சி, சோம்பல் என்பவை** (சைவ.); categories which partake of the nature of the fire element, five in number, viz. uṇavu, tūkkam, accam, puṇarcci, cōmbal, one of 11 divisions of puṟa-nilai-k-karuvi.

*[தேயு + இன் + கூறு. இன் இடைநிலை]*

**தேயுறை** *tēyuṟai,* பெ. (n.) **தேய்க்கும் மருந்து;** a medicine applied by rubbing.

*[தேய் + உறை]*

**தேர்**[1]**-தல்** *tēr,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **ஆராய்தல்** (பிங்.); to examine, investigate inquire into. "தேர்ந்துசெய்வஃதே முறை" (குறள், 541). *2.* **அறிதல்;** to understand, know. "தேர்ந்தனன் முருகன் வாய்மை" (கந்தபு. மூவாயிர.81). *3.* **சிந்தித்தல்;** to consider, deliberate, ponder well. *4.* **தெரிந்தெடுத்தல்;** to elect. *5.* **தேடுதல்;** to seek. "சிறுவெண் காக்கை நீத்து நீரிருங்கழி யிரைதேர்ந்துண்டு" (ஐங்குறு. 162). *6.* **உறுதி செய்தல்;** to ascertain, form a conclusion. "பேதைபாகனே பரமெனத் தேர்ந்துணர் பெரிய" (திருவிளை. புராணவா. 8).*7.* **கொள்ளுதல்** (பிங்.); to acquire, obtain. *8.* **ஐயுறுதல்** (குறள், 144, உரை); to doubt, question.

**தேர்**[2]**-தல்** *tēr-,* செ.கு.வி. (v.i.); **பயிற்சியடைதல்;** to be well versed, proficient in. நூல்களிற் றேர்ந்த புலமை.

ம. தேருக

**தேர்[3]-த்தல்** *tēr-, 11* செ.கு.வி. (v.i.) *கலத்தல்;* to mingle, combine. "குழம்பும் . . . சுண்ணமும் விரையுந் தேர்த்தரோ . . . அளறுபட்டது" (சூளா. சுயம். 130).

**தேர்[3]** *tēr,* பெ. (n.) *1. உருளி, தேர் (இரதம்);* car, chariot. "கடலோடா கால்வ னெடுந்தேர்" *(குறள், 496).* தேரோடு போச்சுது திருநாள் தாயோடு போச்சுது பிறந்தகம் *(பழ.). 2.* கொல்லாவண்டி பார்க்க; see *kollā-vaṇḍi. 3.* சிறுதேர்; boy's small car. "புதல்வனைத் தேர்வழங்கு தெருவிற் றமியோற் கண்டே" *(அகநா. 16). 4.* உருள் (உரோகிணி) விண்மீன் (சூடா.); the 4th naksatra. *5. கானல்;* mirage. "யானை விலங்குதேர்க் கோடு நெடுமலை" *(கலித். 24). 6. பாடை;* funeral fier.

ம., தெ. தேரு, தேர்; க., து., பட. தேரு

tēr, chariot. comp. Mongol t'ereg, chariot (C.G.D.F.L 620)

*[தேங்குதல் = உயர்தல், மிகுதல். தேங்கு → தேக்கு = உயர்ந்த அல்லது உயர்வான மரம், தேக்கு → தே → தேர் = உயரமான ஊர்தி]*

**தேர்[4]** *tēr,* பெ. (n.) தேரர் பார்க்க; see *tērar* "அலவை சொல்லுவார் தேரமணாதர்கள்" *(தேவா. 95, 10).*

**தேர்[5]** *tēr,* பெ. (n.) வலை கொள்ளுதற்குரிய முக்கோண வடிவுடைய மூங்கிலாலான சுழலுங் கருவி *(மீனவ.);* a rotating instrument in a conical shape to catch the net.

மறுவ. கதிர்

**தேர்க்கடம்பு** *tēr-k-kaḍambu,* பெ. (n.) *கொழுஞ்சி மரம்;* common country orange *(சா.அக.).*

**தேர்க்கவி** *tēr-k-kavi,* பெ. (n.) *1. சித்திரப் பாவகை;* variety of cittira-k-kavi which is fitted into a fanciful diagram representing a temple chariot.

*[தேர் + கவி]*

**தேர்க்கள்ளி** *tēr-k-kaḷḷi,* பெ. (n.) *தாமரை வடிவிலான பூவையுடைய சீமைக்கள்ளி;* a kind of foreign spurge known as Madagascar spurges *(சா.அக.).*

*[தேர் + கள்ளி]*

**தேர்க்காசு** *tēr-k-kāśu,* பெ. (n.) தேர்விழாவன்று குழந்தைகட்கு அன்பொடு கொடுக்கும் சில்லறைக் காசு; coin given as present to children on the day of car festival.

*[தேர் + காசு]*

**தேர்க்கால்[1]** *tēr-k-kāl,* பெ. (n.) *தேர்ச்சக்கரம்;* wheel of a chariot.

**தேர்க்கால்[2]** *tēr-k-kāl,* பெ. (n.) *குயவன் சக்கரம்;* potter's wheel. 'வேட்கோச் சிறாஅர் தேர்க்கால் வைத்த பசுமண்" *(புறநா. 32).*

*[தேர் + கால்]*



**தேர்க்குடம்** *tēr-k-kuḍam,* பெ. (n.) *1. தேரின் சக்கரக்குடம்;* hub of a chariot-wheel. *2. தேரின் ஒப்பனைத் தூண்;* brass knobs in the form of inverted pots, as ornaments to a chariot.

*[தேர் + குடம்]*

**தேர்க்குழிசி** *tēr-k-kuḻiśi,* பெ. (n.) தேர்க்குடம் பார்க்க; see *tēr-k-kuḍam.* "ஆரமே யமைந்த தேர்க்குழிசி யாயினார்" *(சீவக. 790).*

*[தேர் + குழிசி]*

**தேர்க்குறடு** *tēr-k-kuṟaḍu,* பெ. (n.) தேர்க்குடம் பார்க்க; see *tēr-k-kuḍam.* "பல ஆருந் தைத்து நிறைந்த தேர்க்குறடு" *(சீவக. 790, உரை).*

*[தேர் + குறடு]*

**தேர்க்கூம்பு** *tēr-k-kūmbu,* பெ. (n.) *1.* தேர்க்கொடிஞ்சி பார்க்க; see *tēr-k-koḍiñji. 2. தேரின் உச்சி;* finial of a chariot.

**தேர்க்கொடி** *tēr-k-koḍi,* பெ. (n.) *தேரிற்கட்டிய பதாகை;* flag hoisted at the top of a chariot.

*[தேர் + கொடி]*

**தேர்க்கொடிஞ்சி** *tēr-k-koḍiñji,* பெ. (n.) 1. கொடிஞ்சி பார்க்க; see *koḍiñji.* "நெடுந்தேர்க் கொடிஞ்சி பற்றி நின்றோன்" (புறநா. 77). 2. தேரின் நுகக்காலை இணைக்கும் அடிமரம்; the wooden frame to which the yoke of a chariot is fixed. "புரவிபூண்ட பொன்னுகக் கொடிஞ்சி" (பெருங்.உஞ்சைக். 48,15). 3. தேர்க்கூம்பு,2 பார்க்க; see *tēr-k-kūmbu.*

[தேர் + கொடிஞ்சி]

**தேர்க்கொடுங்கை** *tēr-k-koḍuṅgai,* பெ. (n.) தேரின் வெளிப்பக்கத்தின் மேல் வளைவு; curved cornice or projections of a chariot.

[தேர் + கொடுங்கை]

**தேர்க்கொத்தர்** *tēr-k-kottar,* பெ. (n.) தேர் இழுக்கிறவர்கள்; one who drag temple car (இருநூ.).

[தேர் + கொத்தர்]

**தேர்க்கொற்றன்** *tēr-k-koṟṟaṉ,* பெ. (n.) தேரோட்டுவோன் (இ.வ.); charioteer.

[தேர் + கொற்றன்]

**தேர்கடை** *tērkaḍai,* பெ. (n.) தீர்மானம்; decision (இருநூ.).

[தேர் + கடை]

**தேர்ச்சக்கரம்** *tēr-c-cakkaram,* பெ. (n.) தேர் உருளை; wheel of a chariot.

[தேர் + சக்கரம்]



**தேர்ச்சார்பலகை** *tēr-c-cār-palagai,* பெ. (n.) தேர்த்தட்டு (வின்.) பார்க்க; see *tēr-t-taṭṭu.*

[தேர் + சார் + பலகை]

**தேர்ச்சி** *tērcci,* பெ. (n.) 1. ஆராய்ச்சி; examination, investigation. 2. கல்வி; learning. 3. தெளிவு; discernment; ascertainment. 4. கலந்தாய்வு (பிங்.); deliberation, council. 5. பயிற்சி; experience. 6. தேர்வில் தேறுகை; success in examination.

ம. தேர்ச்சி

[தேர் + சி = தேர்ச்சி. சி - சொல்லாக்க ஈறு]

**தேர்ச்சித்துணைவர்** *tērcci-t-tuṇaivar,* பெ. (n.) 1. மந்திரத் தலைவர் (பிங்.); Ministers of State, King's counsellors, Statesmen. "தூநான் மறையோருடன் றேர்ச்சித் துணைவர் தொடர" (சேதுபு. அனும. 14). 2. நட்பாளர் (பிங்.); friends.

[தேர்ச்சி + துணைவர்]

**தேர்ச்சில்** *tēr-c-cil,* பெ. (n.) தேர்க்கால் பார்க்க; see *tēr-k-kāl.*

[தேர் + சில்]

**தேர்ச்சிவரி** *tērcci-vari,* பெ. (n.) உறவு முறையார்க்குத் தன் துயரங்களைத் தெரிவிக்கும் கூத்து வகை; a dramatic action in which a person expresses in detail all his sufferings to his relatives. "கிளைகட்குத் தன்னுறு துயரந் தேர்ந்து தேர்ந்துரைத்த தேர்ச்சிவரி" (சிலப். 8:103-4).

[தேர்ச்சி + வரி]

**தேர்ச்சினை** *tēr-c-ciṉai,* பெ. (n.) கொடிஞ்சி பார்க்க (கலித். 85:18); see *koḍiñji.*

[தேர் + சினை]

**தேர்ச்சீலை** *tēr-c-cīlai,* பெ. (n.) 1. தேரை ஒப்பனை செய்தற்கெனக் கட்டுஞ் சீலை; bright coloured cloths with which a chariot is ornamented. 2. பாடைச் சீலை; the cloth decorating the biar (செ.அக.).

[தேர் + சீலை]

**தேர்ச்சேனை** *tēr-c-cēṉai,* பெ. (n.) நால்வகைப்படையுள் ஒன்றான தேர்ப்படை; one among four army.

[தேர் + சேனை]

**தேர்த்தட்டு** *tēr-t-taṭṭu,* பெ. (n.) தேரின் உட்பரப்பு; central seating space of a chariot. "அழிந்த தேர்த்தட்டினின்று" (கம்பரா. இந்திரசித். 39).

ம. தேர்த்தட்டு

[தேர் + தட்டு]

**தேர்த்தடம்** *tēr-t-taḍam,* பெ. (n.) தேர்ச்சுவடு; print of the car in the sand on its way.

[தேர் + தடம்]

**தேர்த்தானை** *tēr-t-tāṉai,* பெ. (n.) தேர்ப்படை; chariot division of an army. "திறல் விளங்கு தேர்த்தானை" (புவெ. 48).

[தேர் + தானை]

**தேர்த்திருநாள்** *tēr-t-tiru-nāḷ,* பெ. (n.) கோயிற் றேர்த் திருவிழா; car festival.

[தேர் + திரு + நாள்]

**தேர்த்துகள்** *tēr-t-tugaḷ,* பெ. (n.) 1. தேர்ச் செலவால் எழுந்தூளி; dust rising from a chariot in motion. 2. எட்டுக் கதிரெழு துகள் கொண்டதோர் அளவு (வின்.); minute measure of length = 4 atoms of dust in a sunbeam = 8 kadireḻu tugaḷ.

[தேர் + துகள்]

**தேர்த்தொழில்** *tēr-t-toḻil,* பெ. (n.) தேர் நடாத்தும் கலை; art of charioteering. "மற்றொழிலுந் தேர்த் தொழிலும் வாரணத்தின் றொழிலும்" (சீவக. 1795).

[தேர் + தொழில்]

**தேர்தல்** *tērtal,* பெ. (n.) அவைகளுக்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கை; election. சட்டமன்றத் தேர்தல் கலவரத்தில் முடிந்தது

[தேர் → தேர்தல்]

**தேர்ந்தவன்** *tērndavaṉ,* பெ. (n.) திறமையானவன்; skilled person in certain matter. தேர்ந்தவன் என்பது கூர்ந்து அறிவதனால் (பழ.).

[தேர் → தேர்ந்த + அவன்]

**தேர்ந்துசெயல்** *tērndu-šeyal,* பெ. (n.) வாய்க்கும் திறன் நாடிச் செய்கை; fruitful attempt. "தெரிதலுந் தேர்ந்து செயலும் ஒருதலையாச் சொல்லலும் வல்லதமைச்சு" (குறள், 634).

[தேர்' → தேர்ந்து + செயல்]

**தேர்நிலை** *tēr-nilai,* பெ. (n.) தேர்முட்டி பார்க்க (கொ.வ.); see *tēr-muṭṭi.*

[தேர் + நிலை]

**தேர்ப்பந்தர்** *tēr-p-pandar,* பெ. (n.) தேர்போலும் பந்தல்; pandal.

[தேர் + பந்தர். பந்தல் → பந்தர். ல → ர போலி]

**தேர்ப்பாகன்** *tēr-p-pāgaṉ,* பெ. (n.) 1. தேரோட்டி (சிலப். 5, 55, அரும்.); charioteer. 2. அறிவன் (புதன்) (பிங்.); the planet mercury.

ம. தேர்ப்பாகன்

[தேர் + பாகன்]

**தேர்ப்பார்** *tēr-p-pār,* பெ. (n.) தேர்த்தட்டு (சூடா.) பார்க்க; see *tēr-t-taṭṭu.*

[தேர் + பார்]

**தேர்மண்டபம்** *tēr-maṇḍapam,* பெ. (n.) தேர் நிறுத்துமிடம்; the stand of a temple car. "தெப்பக்குளங் கட்டி தேர்மண்டபங் கட்டி" (குற்றா.குற. 91:4).

[தேர் + மண்டபம்]

**தேர்மரச்சுற்று** *tēr-mara-c-cuṟṟu,* பெ. (n.) தேர்த்தட்டைச் சுற்றி அமைக்கப்பட்ட பலகை (பிங்.); boards round the body of a chariot.

[தேர் + மரம் + சுற்று]

**தேர்மறம்** *tēr-maṟam,* பெ. (n.) அரசனது போர்த் தேரின் சிறப்பினைக் கூறும் புறத்துறை (பு.வெ. 7,10); theme eulogising a king's war-chariot.

[தேர் + மறம்]

**தேர்முட்டி** *tērmuṭṭi,* பெ. (n.) கோயில் திருத்தேர் தங்கி நிற்குமிடம் (கொ.வ.); the stand of a



temple car. "தேர்முட்டி கிட்டே இருக்கின்ற சந்தையில் வாங்கினேன்" *(மதுரை.).*

*[தேர் + முட்டி]*

**தேர்முல்லை** *tēr-mullai,* பெ. (n.) **பகைவரை வென்று மீண்ட தன் தலைவனது தேர் வரவறிந்து தலைவி மகிழ்ந்து கூறும் புறத்துறை** *(பு.வெ.10, முல்லைப். 3);* theme of the return of a hero in his chariot after subduing his enemies, sung in joy by his lady-love.

*[தேர் + முல்லை]*

**தேர்மூடு** *tēr-mūḍu,* பெ. (n.) தேர்நிலை *(நாஞ்.);* chariot stand.

*[தேர் + மூடு]*

**தேர்மொட்டு** *tēr-moṭṭu,* பெ. (n.) *1.* **தேர்க்கூம்பு** *பார்க்க;* see *tēr-k-kūmbu. 2.* **பூவரச மரத்தின் முதிர்ந்த மொட்டு** *(நாஞ்.);* mature bud of portia.

*[தேர் + மொட்டு]*

**தேர்வட்டை** *tēr-vaṭṭai,* பெ. (n.) **தேர்க்கால்** *(சிலப். 14: 165) பார்க்க;* see *tēr-k-kāl.*

ம. தேர்வட்டு

*[தேர் + வட்டை]*

**தேர்வடம்** *tēr-vaḍam,* பெ. (n.) தேரிழுத்தற்குரிய பெரிய கயிறு; cable, thick rope for drawing a car. "மணலையு மேவுதேர்வட மாக்கலாம்" *(அருட்பா. 6, வயித்திய. 4).*

*[தேர் + வடம்]*

**தேர்வண்மலையன்** *tērvaṉ-malaiyaṉ,* பெ. (n.) **வடவண்ணக்கன் பெருஞ்சாத்தனாரால் புறநானூற்றிலே பாடப்பெற்றவன்;** supposed to be a king sung by Vadavaṇṇakkaṉ Peruñjāttaṉār *(தமி.சொ.அக.).*

*[தேர்வண் + மலையன்]*

**தேர்வண்மை** *tēr-vaṇmai,* பெ. (n.) **புலவர் முதலியோர்க்கு அரசர் அளிக்குந் தேர்க் கொடை;** gift of chariots made by kings to poets. "தேர்வண்பாரி" *(புறநா. 118).*

*[தேர் + வண்மை]*

**தேர்வலவன்** *tēr-valavaṉ,* பெ. (n.) **தேர்ப்பாகன்;** charioteer. "திண்டேர் வலவ கடவெனக் கடைஇ" *(அகநா. 74).*

*[தேர் + வலவன்]*

**தேர்வலான்** *tēr-valāṉ,* பெ. (n.) தேர்வலவன் பார்க்க; see *tēr-valavaṉ.* "தேர்வலான் செப்புவான்" *(கம்பரா. தைல. 20).*

*[தேர் + வலான்]*

**தேர்வாசம்** *tēr-vāšam,* பெ. (n.) அரசு; pipal tree *(சா.அக.).*

**தேர்வாணம்** *tēr-vāṇam,* பெ. (n.) **வாணவகை;** a kind of rocket.

*[தேர் + வாணம்]*

**தேர்வாணைக்குழு** *tērvāṇai-k-kuḻu,* பெ. (n.) **அரசுப்பணிக்குத் தக்கவர்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்புடைய, அரசால் அமர்த்தம் பெற்ற உறுப்பினர்களைக் கொண்ட அமைப்பு;** public service commission (to select employees for government service).

*[தேர்வாணையம் + குழு]*

**தேர்வாணையம்** *tērvāṇaiyam,* பெ. (n.) தேர்வாணைக்குழு பார்க்க; see *tērvāṇai-k-kuḻu.*

*[தேர்வு + ஆணையம்]*

**தேர்வுநிலை** *tērvu-nilai,* பெ. (n.) *1.* **அரசுப் பணியில், குறிப்பிட்ட ஆண்டுகள் பணியாற்றியவருக்கு, அதே பணியிடத்தில் தரும் உயர்நிலை;** selection grade. பத்தாண்டு பணிபுரிந்த தமிழக அரசு ஊழியர்களுக்குத் தேர்வு நிலை வழங்கப்படும். *2.* **வருமான அடிப்படையில், உள்ளாட்சி அமைப்புகளுக்கு வழங்கும் உயர்நிலை;** selection grade to local bodies on the basis of higher revenue raised. சேலம் மாவட்டத்திலுள்ள ஆறகழூர் ஊராட்சியைத் தேர்வுநிலை ஊராட்சியாக இந்த நிதியாண்டில் அரசு அறிவித்தது.

*[தேர்வு + நிலை]*

**தேர்விருந்து** *tēr-virundu,* பெ. (n.) **தேர்த் திருநாளன்று ஒருவன் தன் மாப்பிள்ளைக்குச் செய்யும் விருந்து** *(இ.வ.);* feast given by a person to his son-in-law on the day of car festival in the local temple.

*[தேர் + விருந்து]*

**தேர்விளக்கு** *tēr-viḷakku,* பெ. (n.) **தேர்போலொப்பனை செய்யப்பெற்ற அடுக்கு விளக்கு** *(இ.வ.);* light arranged in the form of a chariot.

*[தேர் + விளக்கு]*

**தேர்வீதி** *tēr-vīdi*, பெ. (n.) தேரோடுந் தெரு; main street through which the car of an idol or a king passes. "தேர்வீதி யெழுதுகள் சேர்ந்து" *(மணிமே. 4:14).*

*ம.* தேர்வீதி; *க.* தேர்பீதி

*[தேர் + வீதி]*

**தேர்வு** *tērvu*, பெ. (n.) *1. ஆராய்ச்சி;* examination, search. *2. பயிற்சி;* thorough acquaintance, proficiency, practice, experience; the discerning faculty. *3. சுவை;* beauty; sweetness, as of expression. "*தக்கார்வாய்த் தேன்கலந்த* தேற்றச்சொற் றேர்வு" *(நாலடி, 259). 4.* தெரிந்தெடுக்கை (இ.வ.); election, as to a council.

*[தேர் → தேர்வு]*

**தேர்வென்றி** *tērvenri*, பெ. (n.) தன்றேரைச் செலுத்திப் பகைவர் தேர்களை அழிக்கும் வீரனது செயலைச் சிறப்பிக்கும் புறத்துறை (பு.வெ.12, ஒழிபு. 14); theme describing the valorous deeds of a warrior who rides his chariot and destroys his enemies' chariots.

*[தேர் + வென்றி]*

**தேரகத்தி** *tēragatti*, பெ. (n.) *தரகதி மரம்;* large brahma's baniyan rough leaf fig *(சா.அக.).*

*[தேர் + அகத்தி]*

**தேரகம்**[1] *tēragam*, பெ. (n.) செவ்வந்தி; red fig *(சா.அக.).*

*[தேர் → தேரகம்]*

**தேரகம்**[2] *tēragam*, பெ. (n.) வெண்ணிறமுள்ள சிறு கடல்மீன் வகை; whitebait, silvery.

**தேரகன்** *tēragan*, பெ. (n.) தேர்ப்பாகன் (சது.) பார்க்க; see *tēr-p-pāgan.*

*[தேர் + அகன்]*

**தேரடி** *tēradi*, பெ. (n.) *1.* தேர்முட்டி பார்க்க; see *tēr-mutti. 2.* தேர்ச்சக்கரம்; wheel, as the support of the car. *3.* திருமாலின் சக்கரப்படை; discus weapon of Tirumāl. "தேரடிக்கூர், வெம் படையாற் காப்பதூஉம்" *(இலக்.வி. 679, உரை).*

*[தேர் + அடி]*

**தேரடிச்சம்பாவனை** *tēradi-c-campāvanai*, பெ. (n.) தேரடிப்பணம் பார்க்க; see *tēradi-p-panam.*

**தேரடிப்பணம்** *tēradi-p-panam*, பெ. (n.) *1.* தேர்த் திருவிழாவன்று மாப்பிள்ளைக்குச் செய்யும் பரிசளிப்பு; present given by a person to his son-in-law on the day of car-festival. *2.* தேர்த் திருவிழாவன்று தேர்த்தச்சன் தேர்க்கொற்றன் முதலியோர்க்கு வழங்கும் பரிசில்; present given on the day of car festival to the architect who finished the chariot and its driver.

*[தேரடி + பணம்]*

**தேரணை** *tēranai*, பெ. (n.) இன்புறத்தான்; black honey thorn *(சா.அக.).*

**தேரர்** *tērar*, பெ. (n.) புத்தத் துறவி (பிட்சு); buddha bhiksus. "தேர ரமணரை" *(தேவா. 139, 11).*

**தேரல்** *tēral*, பெ. (n.) *1.* தேன்; honey. *2.* தேறுகை; recovery from illness *(சா.அக.).*

*[தேர் → தேரல்]*

**தேரலர்** *tēralar*, பெ. (n.) பகைவர்; foes, enemies.

*[தேர் + அல் + அர்]*

**தேரழுந்தூர்** *tēraluntūr*, பெ. (n.) சோழ நாட்டில் உள்ள தேவாரப் பாடல் பெற்ற சிவன் கோயில்; a place in chōla nādu which is in Tēvāram.

*[தேர் + அழுந்தூர்]*

"திருவழுந்தூர்" எனவும் வழங்கப்படும். இது கம்பர் பிறந்தவூர் என்பர்.

**தேரறேர்** *tērarēr*, பெ. (n.) கானல் நீர்; mirage, as of a phantom car. "மடமான். . . தேரறேர்க் கோடல்" *(கலித். 13,4).*

*[தேர் + அல் + தேர். 'அல்' எதிர்மறை வினை இடைநிலை]*

**தேரன்** *tēran*, பெ. (n.) தேரையர் பார்க்க; see *tēraiyar (சா.அக.).*

**தேரனார்** *tēranār*, பெ. (n.) தேரையர் (அபி.சிந்.) பார்க்க; see *tēraiyar.*

*[தேரையர் → தேரனார்]*

**தேராங்கிணி** *tērāṅgiṇi*, பெ. (n.) தேராங்குணி பார்க்க; see *tērāṅguṇi*.

**தேராங்குணி** *tērāṅguṇi*, பெ. (n.) 8 விரல நீளம் வளர்வதும் வெண்மை நிறமுடையதுமான கடல்மீன் வகை; whitebait, silvery, attaining 8 inch in length.

**தேராணி** *tēr-āṇi*, பெ. (n.) தேரின் அச்சாணி; linchpin of a chariot.

*[தேர் + ஆணி]*

**தேராச்செய்கை** *tērā-c-ceygai*, பெ. (n.) ஆய்ந்துபாராத செயல்; incognizant activity. தேராச்செய்கை தீராத் துன்பம் *(பழ.)*.

*[தேர் + ஆ + செய்கை. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தேராத்தாழை** *tērāt-tāḻai*, பெ. (n.) கூத்தன் குதம்பை; a kind of screw pine *(சா.அக.)*.

**தேராதுதெளிதல்** *tērādu-teḷidal*, பெ. (n.) ஆராயாது ஒன்றை மற்றொன்றாக உறுதி செய்கை; mistaking one object for another without investigation, as a post for a man. "தேராது தெளிதல் செண்டு வெளியில் ஓராது தறியை மகனென வுணர்தல்" *(மணிமே. 27:67)*.

*[தேர் + ஆ + து + தெளி-. 'ஆ' எதிர்மறை இடைநிலை. 'து' வினையெச்ச விகுதி]*

**தேரார்** *tērār*, பெ. (n.) 1. அறிவிலி; the ignorant. 2. கீழ்மக்கள் (திவா.); the low, the base. 3. பகைவர்; foes, enemies.

*[தேர் + ஆர்]*

**தேராவைக்காத்தான்** *tērāvai-k-kāttāṉ*, பெ. (n.) உடல் அமைப்பில், சூடை மீன்போலும் காணக்கூடும் ஒரு கடல் மீன் (மீனவ.); a fish which resembles sūḍai mīṉ.

**தேராள்** *tērāḷ*, பெ. (n.) 1. தேர்வீரன்; chariot warrior. 2. தேர் இழுத்தற்கு அனுப்பும் ஆட்கள்; persons who are by custom, sent by the mirasdar, to drag temple cars.

ம. தேராறி, தேராள்

*[தேர் + ஆள்]*

**தேரி** *tēri*, பெ. (n.) 1. மணற்குன்று; sand hill. 2. மணற்றரை (நெல்லை.); sandy tract.

ம. தேரி; க. தெவரி (மேட்டு நிலம்); பட. தெவரு (வரப்பு)

*[தேர் = உயரமான ஊர்தி. தேர் → தேரி]*

**தேரிடக்கியம்** *tēr-iḍakkiyam*, பெ. (n.) தேர்க்கொடி பார்க்க; see *tēr-k-koḍi*.

*[தேர் + இடக்கியம்]*

**தேரிலைச்சி** *tērilai-c-ci*, பெ. (n.) சத்தி சாரணை; diffuse hoyweed *(சா.அக.)*.

**தேரூமச்சி** *tēr-ūmacci*, பெ. (n.) தேர் போன்ற மேலோட்டையுடைய சிறு நத்தை வகை; a kind of snail, as haiving a turbinate shell.

*[தேர் + ஊமச்சி]*



**தேரூர்சுவடு** *tērūr-šuvaḍu*, பெ. (n.) தேர் ஊர்ந்து சென்ற அடையாளம்; the track of a car. "தேனார் பொழுதிற் றிருந்தா தேநீ சிந்தைகொண் டேவே றூரிற் போனார் தேரூர்சுவடு புதையல் வாழி" *(வீரசோ. 136, உரை.)*.

*[தேர் + ஊர் + சுவடு]*

**தேரூர்ந்தசித்தியான்** *tērūrnta-šittiyāṉ*, பெ. (n.) 1. சவர்க்காரம்; fuller's earth. 2. சவர்க்காரக் கட்டி; soap prepared from fuller's earth mixed with other ingredients *(சா.அக.)*.

**தேரூழியம்** *tēr-ūḻiyam*, பெ. (n.) கோயிற்றேரை இழுப்பதற்கு ஊர்வாரியாக ஆள்களைத் திரட்டி அனுப்பும் ஊழியம்; service where by each village is required to provide a fixed quota of men to drag the great temple cars.

*[தேர் + ஊழியம்]*

**தேரெழுத்தாணி** *tēr-eḻuttāṇi*, பெ. (n.) தேருருவான கொண்டையுள்ள எழுத்தாணி வகை (வின்.); style having a turbinate head.

*[தேர் + எழுத்து + ஆணி]*

**தேரை** *tērai*, பெ. (n.) 1. தவளை (பிங்.); frog. "அவ்வழித் தேரை தினப்பட லோம்பு" (கலித். 147, 32). தேரைகள் பாம்பைத் திரண்டு வளைத்தாற் போல (பழ.). 2. தவளை வகை; Indian toad. "தேரையார் தெங்கிளநீ ருண்ணார் பழிசுமப்பர்" (தமிழ்நா. 74). தேரை மோந்த தேங்காய் போல (பழ.). 3. தூண்டிலிலுணவு; fish bait. "தூண்டிலி னுட் பொதிந்த தேரையும்" (திரிகடு. 24). 4. தேங்காய் நோய் வகை (சீவக. 1024, உரை); coconut blight. 5. கல்லில் ஓடுங் கோட்டுக் குற்றம்; a defect of stone consisting of a granular line. "தேரை சிம்புள் சிலம்பி" (தத்துவப். 109).

ம. தேர



**தேரைக்கணம்** *tērai-k-kaṇam*, பெ. (n.) குழந்தைகளுக்கேற்படும் ஒருவகைக் கணை நோய்; a congenital disease in children (சா.அக.).

*[தேரை + கணம்]*

**தேரைக்கால்கை** *tērai-k-kāl-kai*, பெ. (n.) தேரை தீண்டலினால் குச்சியைப் போல் இளைத்துப் போன கால் வகைகள்; kind of legs of children, emaciated through disease (சா.அக.).

*[தேரை + கால் + கை]*

**தேரைக்குண்டி** *tērai-k-kuṇḍi*, பெ. (n.) 1. நோயினால் இளைத்த பிட்டம்; buttocks losing its roundity from disease. 2. சரத் தொட்டி; flat buttocks (சா.அக.).

**தேரைக்குற்றம்** *tērai-k-kuṟṟam*, பெ. (n.) உடம்புலர்ந்து, வற்றி, வெளுத்து, கண் பொடித்து, கை கால் வற்றி, மேல் மூச்சு வாங்கி, நெரிகுரல் பட்டுத் தேரையைப் போலச் சுருங்கிக் குழந்தையைக் கொல்லும் ஒரு நோய்; a fatal disease in childhood said to be due to trammission of infection caused by the Indian toad falling and secreting its urine on them (சா.அக.).

*[தேரை + குற்றம்]*

**தேரைகுடி-த்தல்** *tērai-kuḍi-*, 4 செ.குவி. (v.i.) தேங்காயின் உள்ளீடு கெடுதல் (யாழ்ப்.); to be blighted and eaten up, as coconuts.

*[தேரை + குடி-.]*

**தேரைச்சூரணம்** *tērai-c-cūraṇam*, பெ. (n.) தேரையை உலர்த்தி அரைக்கும் பொடி; a fine powder prepared from the Indian toad (சா.அக.).

*[தேரை + சூரணம்]*

மருத்துவக் குணமுடையது.

**தேரைத்தேங்காய்** *tērai-t-tēṅgāy*, பெ. (n.) தேரைநோய் விழுந்த தேங்காய்; blighted coconuts.

*[தேரை + தேங்காய்]*

"தேரையார் தெங்கிளநீ ருண்ணார் பழி சுமப்பர்" தேரைக்கும் இந்நோய்க்கும் எவ்விதத் தொடர்பும் இல்லாவிட்டாலும், தேரையின் பெயரே அந்நோய்க்குச் சூட்டப்பட்டது. செய்யாத் தவற்றுக்கு ஒருவர் பழி சுமப்பதற்கு இதனை உவமையாகக் கூறுவர்.

**தேரைத்தோசம்** *tērai-t-tōšam*, பெ. (n.) தேரைக்குற்றம் பார்க்க; see *tērai-k-kuṟṟam*.

*[தேரை + தோசம்]*

**தேரைபாய்-தல்** *tērai-pāy-*, 3 செ.குவி. (v.i.) தேரை தீண்டலினால் உடம்பிளைத்தல்; to emaciate of the body especially in children arising from the malgin and baleful influence of Indan-toad (சா.அக.).

*[தேரை + பாய்-.]*

**தேரைபாய்தல்** *tērai-pāydal,* பெ. (n.) *1.* பிறக்கும் குழந்தை இளைக்கும்படி கருப்பிணி மீது தேரைவிழுகை; leaping of a toad on a pregnant woman belived to cause wasting disease in the child. *2.* உடல் மெலிவாகை; becoming emaciated about the buttocks.

*[தேரை + பாய்-.]*

**தேரைபோ-தல்** *tērai-pō-,* 8 செ.கு.வி. (v.i.) தேங்காயை உள்ளீடற்றதாக்கும் நோய் பற்றுதல்; to be blighted and eaten up, as coconut. "தேரைபோயிற்று என்றாற் போல்வதொரு நோய் என்க" *(சீவக. 1024, உரை).*

*[தேரை + போ-.]*

**தேரைமுகந்தகாய்** *tērai-muganda-kāy,* பெ. (n.) தேரை நோயுற்ற தேங்காய்; blighted or withered coconut, coconut with no kernal inside *(சா.அக.).*

*[தேரை + முகந்த + காய்]*

**தேரைமேய்-தல்** *tērai-mēy-,* 3 செ.கு.வி. (v.i.) தேரைக்குடி-த்தல் (இவ.) பார்க்க; see *tērai-k-kudi-.*

*[தேரை + மேய்-.]*

**தேரைமோ-த்தல்** *tērai-mō-,* 3 செ.கு.வி. (v.i.) தேரைகுடி-த்தல் (வின்.) பார்க்க; see *tērai-kudi.*

*[தேரை + மோத்தல்]*

**தேரையர்** *tēraiyar,* பெ. (n.) தமிழ் மருத்துவ நூல்கள் பல இயற்றிய சித்தர்; a saint who composed many medical treatises in Tamil verse.

*[தேரை + அர்]*

அகத்தியரிடம் தமிழ் மருத்துவம் கற்றுக் கொண்ட மாணாக்கருள் ஒருவர் என்பர்.

**தேரையாதனம்** *tērai-y-ādanam,* பெ. (n.) கவிழ்ந்திருந்து கைகள் இரண்டு விலாவிலும் கால்கள் இரண்டு பிட்டத்திலும் சேரும்படி முடக்கிக் கிடக்கும் ஓகிருக்கை (தத்துவப். 109, உரை); a yogic posture of lying down frog - like, with arms touching the sides and the feet drawn up touching the hips.

*[தேரை + ஆதனம்]*



**தேரைவிழு-தல்** *tērai-vilu-,* 3 செ.கு.வி. (v.i.) தேரைபோ-தல் பார்க்க; see *tērai-pō-.*

*[தேரை + விழு-.]*

**தேரைவிழுந்தகல்** *tērai-vilunda-kal,* பெ. (n.) குறையுடைய கல்; defective stone.

*[தேரை + விழுந்த + கல்]*

**தேரைவிழுந்தபிள்ளை** *tērai-vilunda-pillai,* பெ. (n.) தேரை தீண்டலினால் இளைத்த குழந்தை; an emaciated child which is affected by the baleful influence of the Indian toad *(சா.அக.).*

*[தேரை + விழுந்த + பிள்ளை]*

**தேரோட்டம்** *tērōttam,* பெ. (n.) தேர்த்திருநாள்; car festival.

ம. தேரோட்டம்

*[தேர் + ஓட்டம்]*

**தேரோட்டி** *tērōtti,* பெ. (n.) அச்சாணி (யாழ்.அக.); axle pin.

*[தேர் + ஓட்டி]*

**தேரோட்டு**[1] *tērōttu,* பெ. (n.) தேரோட்டம் பார்க்க; see *tērōttam.*

*[தேர் + ஓட்டு]*

**தேரோட்டு**[2]**-தல்** *tērōttu-,* 8 செ.கு.வி. (v.i.) குடித்தனம் பண்ணுதல் (யாழ்ப்.); to leading domestic life *(மீனவ.).*

*[தேர் + ஓட்டு-.]*

**தேரோடும்வீதி** *tēr-ōdum-vīdi,* பெ. (n.) தேர்வீதி பார்க்க; see *tēr-vīdi.*

*[தேர் + ஓடும் + வீதி]*

**தேரோர்** *tērōr,* பெ. (n.) *1.* தேர்வீரர்; chariot warriors. *2.* தேரேறிவந்து ஏர்க்களத்தையும் போர்க்களத்தையும் இசைக்கருவிகளுடன் பாடியாடும் புலவர் (தொல்.பொருள். 76); a class of minstrels who go on chariots and with drum accompaniment sing the praises of the cultivators at the threshing-floor or of the warriors on the battle field.

*[தேர் + ஓர்]*

**தேரோன்** *tērōn,* பெ. (n.) ஞாயிறு; the sun, as having a chariot. "தேரோன் மலைமறைய" (திணைமாலை. 112).

*[தேர் + ஓன்]*

**தேலிக்கை** *tēlikkai,* பெ. (n.) எளிது; superficiality, slightness, lightness. "வழக்கைத் தேலிக்கையாய் விட்டு விட்டான்" (யாழ்.அக.).

**தேலு-தல்** *tēlu-,* 5 செ.குவி. (v.i.) *1.* தப்புதல்; to get rid of; to escape danger as a ship. *2.* தேறு-தல் பார்க்க; see *tēru-.* ஆள் தேலுதலரிது.

தெ. தேலு

*[தேறு → தேலு]*

**தேவக்கிரகம்**[1] *tēva-k-kiragam,* பெ. (n.) அமைதிப் பித்துநிலையையுண்டாக்கும் பேய்; a class of demon causing harmless madness.

**தேவக்கிரகம்**[2] *tēva-k-kiragam,* பெ. (n.) தேவர்களின் இருப்பிடம்; place where devar abide.

*[தேவர் + கிரகம்]*

**தேவக்கிரியை** *tēva-k-kiriyai,* பெ. (n.) *1.* தெய்வச் செயல் (வின்.); act of God, providence. *2.* ஓரிசை (பரத. இராக. 56); a specific melody type.

*[தேவ + கிரியை]*

**தேவகங்கை** *tēvagaṅgai,* பெ. (n.) வான வெளியிலிருந்து வருவதாகக் கருதப்படும் கங்கை ஆறு; Ganga believed to come from the sky.

*[தேவ + கங்கை]*

**தேவகண்ணி** *tēva-kaṇṇi,* பெ. (n.) மலை வேம்பு; chittagong wood.

*[தேவ + கண்ணி]*

**தேவகணம்** *tēvakaṇam,* பெ. (n.) *1.* கணம் பார்க்க; see *kaṇam.* 2. இரலை, மாழ்கு, கழை, கொடிறு, கைம்மீன், விளக்கு, பனை, முக்கோல், தொழுபஃறி முதலான ஒன்பது விண்மீன்கள்; the nine naksatras viz., aśuvini, mirugacīridam, puṉarpūsam, pūsam, attam, śuvāti, anuṭam, tiruvōṇam, irēvadi, as belonging to the dēva-class.

*[தேவ(ர்) + கணம்]*

**தேவகணிகை** *tēva-kaṇigai,* பெ. (n.) தேவதாசி பார்க்க; see *tēvadāśi.* "தேவகணிகையர்கள் கூத்தர்" (காஞ்சிப்பு. தலவி. 25).

*[தேவ + கணிகை]*

**தேவகணிகையர்** *tēva-kaṇigaiyar,* பெ. (n.) தேவதாசி பார்க்க; see *tēva-dāśi.*

*[தேவ + கணிகையர்]*

**தேவகதி** *tēva-gadi,* பெ. (n.) உயிர்கடக்கும் பிறப்பு நிலைகளுளொன்று (சீவக. 2800, தலைப்பு); the order of divine beings, one of four kati.

*[தேவர் + கதி]*

தேவப் பிறப்பு (தேவகதி) மக்கட் பிறப்பு (மக்கட்கதி) விலங்குப் பிறப்பு (விலங்குகதி), நரகர் பிறப்பு (நரககதி) என்பன நால்வகைப் பிறப்புகள்.

**தேவகதியெழுத்து** *tēva-gadi-y-eḻuttu,* பெ. (n.) செய்யுண் முதலில் வருதற்குரியனவும், நன்மை பயப்பனவுமாகிய அ. இ, உ, எ, க, ச, ட, த, ப என்ற எழுத்துகள் (வெண்பாப். முதன் மொழி. 18, உரை); auspicious letters at the commencement of a poem.

*[தேவகதி + எழுத்து]*

**தேவகந்தம்** *tēva-gandam,* பெ. (n.) *1.* குங்கிலியம் (மலை.); Indian bdellium. *2.* நெய்ச் சட்டி (தைலவ. தைல. 32); purple Indian water-lily.

*[தேவ + கந்தம்]*

**தேவகந்தர்** *tēva-gandar,* பெ. (n.) செங்கழுநீர்; a kind of red water lily (சா.அக.).

*[தேவ(ர்) + கந்தம்]*

**தேவகந்துலி** *tēva-ganduli,* பெ. (n.) தேவகந்தூறு பார்க்க; see *tēvagandūru* (சா.அக.).

**தேவகந்தூறு** *tēvagandūṟu,* பெ. (n.) செங்கழுநீர் (மலை); a kind of purple Indian water lily.

*[தேவ + கந்தூறு]*

**தேவகம்** *tēva-gam,* பெ. (n.) தெய்வீகமானது (யாழ்.அக.); that which is divine.

*[தெய்விகம் → தேவகம்]*

**தேவகருமம்நவகருமம்** *tēva-karumam-nava-karumam,* பெ. (n.) கோயிலில் நிகழ்த்தப்படும் வழிபாட்டுப் பணியும், கோயிலைப் புதுப்பித்தல், இடிபாடுகளைச் சீர்செய்தல் ஆகிய திருப்பணிகளும்; temple service done for adoration, and to reconstruct the damage part of the temple building.

*[தேவ கருமம் + நவகருமம்]*

இதற்கு இறையிலி நிலம் அளிக்கப் பெறுவது வழக்கு.

**தேவகன்** *tēvagaṉ,* பெ. (n.) கண்ண (கிருட்டிண)னுடைய பாட்டன், தேவகியின் தந்தை; grand father of Kannan, father of Dēvagi.

*[தேவன் → தேவகன்]*

**தேவகன்மி** *tēvakanmi,* பெ. (n.) கோயிலில் இறை (சுவாமி) பணி பார்ப்போன்; a temple official, as priest, a manager etc., "தேவகன்மிகள் இவை தலைகண்ட முதற் கொண்டு" (தெ.க.தொ. 5:92).

*[தேவ + கன்மி]*

**தேவகன்னி**[1] *tēva-kaṉṉi,* பெ. (n.) *1.* வாழை; plantain tree. *2.* மதகிரி வேம்பு; Indian mahogany.

*[தெய்வ → தேவ + கன்னி]*

**தேவகன்னி**[2] *tēva-kaṉṉi,* பெ. (n.) தேவலோகத்து அரம்பை; Ramba who dances in the tēvar court-yard.

*[தேவ + கன்னி]*

**தேவகன்னிகைமரம்** *tēvakaṉṉigaimaram,* பெ. (n.) கட்டடத்திற்குப் பயன்படும் கோங்கு வகை மரம்; common caung used in building construction.

*[தேவர் + கன்னிகை + மரம்]*

**தேவகா** *tēvagā,* பெ. (n.) தேவர்களது பூங்கா; garden of Dēvar.

*[தேவர் + கா]*

**தேவகாஞ்சனம்** *tēva-kāñjaṉam,* பெ. (n.) தேவதாரு; decany desdarn Indian cedar tree (சா.அக.).

**தேவகாட்டம்** *tēvakāṭṭam,* பெ. (n.) தேவதாரு (சங்.அக.) பார்க்க; see *tēvatāru.*

*[தேவ + காட்டம்]*

**தேவகாதம்** *tēva-kādam,* பெ. (n.) மலைக்குகை; rock cave.

**தேவகாந்தாரி** *tēvagāndāri,* பெ. (n.) ஒருவகைப் பண்; a melody type.

**தேவகானம்** *tēva-gāṉam,* பெ. (n.) தேவர்கள் பாடும் இசை; celestial music. "சோழன் வாசலிலே தேவகானம் பாடுவா ளொருத்தியும்" (குருபரம். 126).

*[தேவ + கானம்]*

**தேவகி** *tēvagi,* பெ. (n.) கண்ணனின் தாய்; mother of Kannaṉ. "தெய்வத் தேவகி புலம்பிய புலம்பல்" (திவ். பெருமாள். 7, 11).

**தேவகிரி** *tēvagiri,* பெ. (n.) *1.* முருகக் கடவுட்குரிய இமய மலைப்பகுதி; a mountain sacred to Murugaṉ in the Himalayas. "தேவகிரிப்படலம் (கந்தபு.). *2.* துகில் வகை (சிலப். 14, 108, உரை); a kind of cloth.

*[தேவர் + கிரி]*

Skt. giri → த. கிரி

**தேவகுசுமம்** *tēvakusumam,* பெ. (n.) கிராம்பு (யாழ்.அக.); cloves.

**தேவகுஞ்சரி** *tēvakuñjari,* பெ. (n.) தெய்வ யானை பார்க்க; see *teyva-yāṉai.* "தேவ குஞ்சரிபாகா நமோநம" (திருப்பு. 94).

*[தேவர் + குஞ்சரி]*

**தேவகுடிமை**[1] *tēva-kuḍimai,* பெ. (n.) பழைய வரி வகை; an ancient tax.

*[தேவர் + குடிமை]*

**தேவகுடிமை**[2] *tēva-kuḍimai,* பெ. (n.) கோயிலுக்குரிய நிலத்தில், குடியிருப்பதோடு,

கோயிற் பணிகளைப் பார்த்து வரும் குடிகள்; people who live in the temple land and do temple service.

[தேவர் + குடிமை]

**தேவகுண்டம்** *tēva-gunḍam,* பெ. (n.) தானாயுண்டான ஊற்று (யாழ்.அக.); natural spring, as God - made (செ.அக.).

[தேவர் + குண்டம்]

**தேவகுமாரன்** *tēva-kumāraṉ,* பெ. (n.) இயேசு; Christ, as the son of God.

[தேவர் + குமாரன்]

**தேவகுரு**[1] *tēva-guru,* பெ. (n.) வியாழன் (பிங்.); Brhaspati, as priest of the celestials.

[தேவர் + குரு]

**தேவகுரு**[2] *tēva-guru,* பெ. (n.) தேவகுருவம் பார்க்க; see *tēva-guruvam.*

**தேவகுருவம்** *tēva-guruvam,* பெ. (n.) வினை நிலங்கள் ஆறனுள் ஒன்று (பிங்); a region of bliss where the fruits of good karma are enjoyed one of six pōka-pūmī.

[தேவர் + குருவம்]

**தேவகுலம்** *tēva-kulam,* பெ. (n.) கோயில்; temple. "தேவகுலமுந் தெற்றியும் பள்ளியும்" (மணிமே. 26:72).

[தேவர் + குலம்]

**தேவகெந்தம்** *tēva-kentam,* பெ. (n.) தேவகந்தம் (யாழ்.அக.) பார்க்க; see *teva-kantam.*

[தேவகந்தம் → தேவகெந்தம்]

**தேவகோட்டம்**[1] *tēva-kōṭṭam,* பெ. (n.) தேவகுலம் பார்க்க; see *tēva-kulam.* "தேவகுலம் மன்றாகச் செய்யப்பட்ட தேவ கோட்டத்தை" (திருக்கோ. 129).

[தேவர் + கோட்டம்]

**தேவகோட்டம்**[2] *tēva-kōṭṭam,* பெ. (n.) கோயில் கருவறைப் புறச்சுவரில் இறைத்திரு மேனிகளை வைப்பதற்கான மாடங்கள்; niche in the outside of the temple sanctum to keep the iodls.

[தேவர் + கோட்டம்]

**தேவகோடி** *tēva-kōḍi,* பெ. (n.) ஒரு பேரெண்; a very large number. "தேவகோடி கார்மலி கடலங் காலாள்" (சீவக. 2219).

[தேவ(ர்) + கோடி]

**தேவச்சந்தம்** *tēva-c-candam,* பெ. (n.) நூறு சரமுள்ள முத்தாரம் (யாழ்.அக.); a garland of hundred strings of pearls (செ.அக.).

[தேவர் + சந்தம்]

**தேவசங்கு** *tēva-šaṅgu,* பெ. (n.) சங்கப் பணம்; a treasure of Gubera.

[தேவ + சங்கு]

**தேவசத்துவம்** *tēva-šattuvam,* பெ. (n.) மகளிர்க்குரிய மெய்ப்பாடுகள் பத்தனுள் தேவத் தொடர்பான குணம் (கொக்கோ.); the divine element in the make up of a woman, one of pattu cattuvam.

[தேவர் + சத்துவம்]

**தேவசபை** *tēva-šabai,* பெ. (n.) இந்திரன் அவை; Indiraṉ's audience-hall.

[தேவ(ர்) + சபை]

**தேவசமுகம்** *tēva-šamugam,* பெ. (n.) தேவசன்னிதி பார்க்க; see *tēva-šaṉṉidi.*

[தேவ(ர்) + சமுகம்]

**தேவசன்னிதானம்** *tēva-šaṉṉidāṉam,* பெ. (n.) தேவசன்னிதி பார்க்க; see *tēva-šaṉṉidi.*

[தேவர் + சன்னிதானம்]

**தேவசன்னிதி** *tēva-šaṉṉidi,* பெ. (n.)
1. தெய்வத்தின் திருமுன்பு; divine presence.
2. கோயில்; temple.

[தேவர் + சன்னிதி]

**தேவசாட்சியாய்** *tēva-šāṭciyāy,* கு.வி.எ. (adv.) உண்மையாய்; truly, as having God for witness.

[தெய்வம் → தேவம் + சாட்சியாய்]

**தேவசிகிச்சை** *tēva-šigiccai,* பெ. (n.) மூன்று மருத்துவ முறைகளுள், இதளிய கந்தக நஞ்சுகளால் நோய்கட்குச் செய்யும் நீக்கவினை (பரிகாரம்) (பதார்த்த. 1202); treatment of diseases by the use of mercury,

sulphur and arsenic, considered to be of divine origin, one of three methods.

*[தேவர் + சிகிச்சை]*

**தேவசித்தன்** *tēva-šittaṉ*, பெ. (n.) *கமலமுனி;* name of a sage of Kamalamuni *(சா.அக.).*

*[தேவ + சித்தன்]*

**தேவசிந்தனை** *tēva-šindaṉai*, பெ. (n.) தெய்வத்தை நினைத்துச் செய்யும் ஊழ்கம்; religious meditation.

*[தேவர் + சிந்தனை]*

**தேவசிருட்டை** *tēva-širuṭṭai*, பெ. (n.) *மது;* any sweet drink beverage *(சா.அக.).*

**தேவசுத்தி** *tēva-šutti*, பெ. (n.) ஐந்துவகை மாசு நீக்குதலில், தெய்வத்தை இருக்கையில் அமர்த்தி, உடையை உடுத்துத் திருமஞ்சனம் ஆட்டி ஒப்பனை செய்து, நறும்புகை, விளக்குகளால் தூய்மை செய்தல்; purification of a deity, which consists in placing its image on a seat, bathing it, adorning it with garments, ornaments, etc, one of pañja-cutti.

*[தெய்வம் + சுத்தி]*

**தேவசுமம்** *tēva-šumam*, பெ. (n.) *கிராம்பு;* cloves.

**தேவசேகரம்** *tēva-šēgaram*, பெ. (n.) *தவனம்;* southern wood.

**தேவசேவை** *tēva-šēvai*, பெ. (n.) தெய்வத்திற்குச் செய்யும் தொண்டு; service in a temple *(செ.அக.).*

*[தேவர் + சேவை]*

**தேவசேனாபதி** *tēva-šēṉābadi*, பெ. (n.) *முருகக் கடவுள்;* Murugan as the commander of the celestial host.

*[தேவர் + சேனாபதி]*

**தேவசேனை** *tēva-sēṉai*, பெ. (n.) *1.* இந்திரன் *மகள்;* daughter of Indiraṉ. *2.* தேவக் கூட்டம்; celestials.

*[தேவர் + சேனை]*

**தேவடி**[1] *tēvaḍi*, பெ. (n.) *அரண்மனை;* palace.

**தேவடி**[2] *tēvaḍi*, பெ. (n.) *தேவரடியார் பார்க்க;* see *tēvar-aḍiyār.*

*[தேவரடி → தேவடி]*

**தேவடிச்சி** *tēvaḍicci*, பெ. (n.) தேவரடியார் *பார்க்க;* see *tevar-aḍiyār.*

ம. தேவடிச்சி

*[தேவடி(யாள்) → தேவடிச்சி]*

**தேவடிமை** *tēvaḍimai*, பெ. (n.) *கணிகையர்;* dancing girl, as a servant of God (Pudu. insc. 930). *2.* வேலைக்காரி; servant maid. (I.M.P.N.A. 202)

*[தேவ + அடிமை]*

**தேவடியாள்** *tēvaḍiyāḷ*, பெ. (n.) தேவரடியார் *பார்க்க;* see *tēvar-aḍiyār.* தேவடியாள் இருந்து ஆத்தாள் செத்தால் கொட்டு முழக்கும், தேவடியாள் செத்தால் ஒன்றுமில்லை.

*[தேவரடியார் → தேவடியாள்]*

**தேவடியான்** *tēvaḍiyāṉ*, பெ. (n.) சிவனியப் *பார்ப்பனன்;* siva brahmin. "காளி தேவடியான் இரண்டாயிரத்து நா நூற்று வரேம்" *(தெ.க.தொ. 3:1. கல். 10).*

ம. தேவடியான் (கூட்டிக் கொடுப்பவன்)

*[தேவர் + அடியான்]*

**தேவடை** *tēvaḍai*, பெ. (n.) எழுத்தழிந்த காசு; coin with face worn out. அந்தக் காசு தேவடை.

*[தேய் → தேய்வடை → தேவடை]*

**தேவத்துவம்** *tēvattuvam*, பெ. (n.) தேவ தன்மை; heavenliness (இருநூ.).

*[தேவம் → தேவத்துவம்]*

**தேவதச்சன்** *tēva-taccaṉ*, பெ. (n.) தேவகம்மியன்; Viccuvakarmā.

*[தேவர் + தச்சன்]*

**தேவதத்தம்** *tēvatattam*, பெ. (n.) *1.* கோயிலுக்குச் செய்யும் நன்கொடை (கோயிலுபயம்); that which is given to a temple. *2.* அருச்சுனனுக்கு இந்திரன் கொடுத்த சங்கு *(யாழ்.அக.);* Arjunās conch, as given by Indiraṉ.

*[தேவ + தத்தம்]*

**தேவதத்தன்** *tēvatattaṉ,* பெ. (n.) *1.* எவனை யேனுமொருவனைக் குறிக்குஞ் சொல்; a word used to denote an imaginary person. "தேவதத்தன் தானாகப் போகலானென்றால்" *(யாப்.வி. 3, பக்.37). 2.* கொட்டாவியை உண்டு பண்ணும் வளி *(பிங்.);* the vital air of the body which produces yawning

**தேவதத்தாக்கிரசன்** *tēva-tattākkirašaṉ,* பெ. (n.) புத்தன்; Lord Buddhaṉ.

**தேவதத்துவம்** *tēva-tattuvam,* பெ. (n.) தெய்வ அன்பு; god's love (இருநூ.).

*[தேவ(ர்) + தத்துவம்]*

**தேவதரு** *tēvataru,* பெ. (n.) *1.* தெய்வ மரம்; one of the celestial trees. "அருள்பழுத் தொழுகு தேவதருவே" *(தாயு. பரிபூரணா, 1). 2.* தேவதாரம் (மலை) பார்க்க; see *tēvatāram. 3.* செம்புளிச்சை; red hemp bendy. *4.* மந்தாரம்; mountain eboy.

*[தெய்வம் + தரு = தேய்வத்தரு → தேவதரு]*

**தேவதாகாரம்** *tēvatāgāram,* பெ. (n.) கோயில் *(யாழ்.அக.);* temple.

**தேவதாசன்** *tēvadāšaṉ,* பெ. (n.) *1.* தெய்வத் தொண்டன்; devotee, servant of god. *2.* அரிச்சந்திரன் மகன்; the son of Harichandran.

*[தேவர் + தாசன்]*

**தேவதாசி** *tēvadāši,* பெ. (n.) *1.* கோயிற் பணி விடை புரியுங்கணிகை; dancing girl, dedicated to the service of a God. *2.* தேவலோகத்து நாட்டிய அரம்பையர்; celestial dancing-girls.

**தேவதாடம்** *tēvatāḍam,* பெ. (n.) *1.* கருங்கோள் (இராகு); the moon's ascending node. *2.* தீ; fire (செ.அக.).

**தேவதாமரை** *tēvatāmarai,* பெ. (n.) தாமரைச் செல்வம் (பதுமநிதி); patuma-nidi, a treasure of Kubera.

*[தேவர் + தாமரை]*

**தேவதாயம்** *tēvatāyam,* பெ. (n.) கோயிற்கு நிலம் வழங்கல் முதலிய நற்செயல்கள்; lands other endowments to a temple (R.F.). "தேவதாயங்கள் வேதியர் செய்கள்மேற் கோவினா லிறைகூட்டி" *(குற்றா. தல. கவுற்சன. 62).*

*[தேவ + தாயம்]*

**தேவதாயனம்** *tēvatāyaṉam,* பெ. (n.) கோயில்; temple (இருநூ.).

**தேவதாயோக்கியம்** *tēvatā-y-ōkkiyam,* பெ. (n.) கடவுளர்க்குரியது; that which is worthy of Gods themselves.

**தேவதாரம்** *tēvatāram,* பெ. (n.) *1.* தேவதாரு *1,2* பார்க்க; see *tēvatāru.* "தேவதாரத்துஞ் சந்தினும் பூட்டின சிலமா" *(கம்பரா. வரைக். 1). 2.* மதகரி வேம்பு; common bastard cedar.

**தேவதாரன்** *tēvatāraṉ,* பெ. (n.) தேவதாரம் பார்க்க; see *tēva-dāram* (சா.அக.).

**தேவதாரி**[1] *tēvatāri,* பெ. (n.) தேவதாரு *1,2* பார்க்க; see *tēva-tāru.*

**தேவதாரி**[2] *tēva-tāri,* பெ. (n.) இமயமலைச் சாரலில் வளரும் மருந்தாகும் இயல்புடைய மரம்; Indian cedar a medicinal tree (சா.அக.).

**தேவதாரு** *tēvatāru,* பெ. (n.) *1.* வண்டுகொல்லி; deodar cedar. *2.* மரவகை; red cedar. *3.* நெட்டிலிங்கம் பார்க்க; see *neṭṭiliṅgam.*

**தேவதாளி**[1] *tēvatāḷi,* பெ. (n.) *1.* ஊமத்தை; datura. *2.* பூசணி; pumpkin.

**தேவதாளி**[2] *tēvatāḷi,* பெ. (n.) *1.* பெரும்பண் வகை (பிங்.); a specific melody type. *2.* ஆனை மலையிலுள்ள மரவகை; langsat of the Āṉaimalai hills in Coimbatore (m.tr.). *3.* நுரைப் பீர்க்கு பார்க்க; see *nurai-p-pīrkku.*

**தேவதாளிதைலம்** *tēvatāḷi-tailam,* பெ. (n.) ஒருவகை மருந்தெண்ணெய்; a kind of medicinal oil (சா.அக.).

**தேவதானபிரமதேயம்** *tēvatāṉa-pirama-tēyam,* பெ. (n.) கோயில் வழிபாட்டிற்கென்று உரிமை செய்யப்பட்ட தேவப்பார்ப்பனர்கட்கும், கோயிலுக்கும் அமைந்த செலவினங்கட்கு உரியதாக அளிக்கப்பெறும் இறையிலி நிலம்; land given to temples for the brahmins, and for the temple expenses.

**தேவதானம்** *tēvatāṉam,* பெ. (n.) கோயிற்கு விடப்பட்ட இறையிலி நிலம்; endowment of tax-free land to a temple. "நன்றிகொ டேவதான நல்கி" *(திருவாலவா. 48, 22).*

ம. தேவதானம்

*[தேவ + தானம்]*

**தேவதானியம்** *tēva-tāṉiyam,* பெ. (n.) சிறுங்கி அல்லது தித்திப்புச் சோளம்; sweet cholam *(சா.அக.).*

*[தேவ + தானியம்]*

வ. தானியம் → த. தவசம்

**தேவதீபம்** *tēvatīpam,* பெ. (n.) 1. கண் (யாழ்.அக.); eye. 2. தெய்வீக ஒளி; divine light.

*[தேவ + தீபம்]*

**தேவதீர்த்தம்** *tēva-tīrttam,* பெ. (n.) தெய்வங்களை மனங்குளிரச் செய்வதற்காக உள்ளங்கையிலே நீரை ஊற்றி, அது விரல்களின் வழியாக நிலத்தை அடையச் செய்யும் ஐவகைத் தூய நீருள் (தீர்த்தம்) ஒன்று (சைவச.பொது.66); water poured from the palm of the hand, through the finger tips on the ground, to propitate devar one of pañca-tirttam.

*[தேவ + தீர்த்தம்]*

**தேவதுந்துபி** *tēva-tundubi,* பெ. (n.) ஓர் இசைக் கருவி; drums of the Gods. "தேவதுந்துபி தேவர்கட் கோகையுய்த் துரைப்பான்" *(சீவக. 2367)* (செ.அக.).

*[தேவ + துந்துபி]*

**தேவதூதன்** *tēva-dūdaṉ,* பெ. (n.) 1. தெய்வச் செய்தி கொணர்வோன்; divine messenger. 2. தூதனாகிய தேவன் (கிறித்.); Holy Angel (செ.அக.).

*[தேவர் + தூதன்]*

**தேவதூபம்** *tēva-dūbam,* பெ. (n.) வெள்ளைக் குங்கிலியம் பார்க்க (தைலவ.தைல.); see *veḷḷai-k-kuṅgiliyam.*

*[தேவர் + தூபம்]*

**தேவதேவன்** *tēva-dēvaṉ,* பெ. (n.) பரம்பொருள்; the supreme being. "நீயே தவத் தேவதேவனும்" *(திவ். இயற். நான்மு.20).*

*[தேவர் + தேவன்]*

**தேவதேவு** *tēva-dēvu,* பெ. (n.) தேவதேவன் பார்க்க; see *tēva-tēvaṉ.* "தேவதே வுபதேசித்த சித்தியை" *(திருவிளை. அட்டமா. 29).*

**தேவதை** *tēvadai,* பெ. (n.) 1. தெய்வம்; deity, god. 2. பேய் (யாழ்.அக.); evil spirit.

ம. தேவத

**தேவதைக்குற்றம்** *tēvadai-k-kuṟṟam,* பெ. (n.) ஊர்த் தேவதைகளின் சினத்தினால் ஏற்படும் கோளாறுகள்; diseases due to malignant influence of demon and monsters (சா.அக.).

*[தேவதை + குற்றம்]*

**தேவதைக்குறை** *tēvatai-k-kuṟai,* பெ. (n.) சிறுதெய்வக்குறையால் உண்டாகும் நோய் (வின்.); disease due to possession by an evil spirit (செ.அக.).

*[தேவதை + குறை]*

**தேவதைத்தொடர்ச்சி** *tēvadai-t-toḍarcci,* பெ. (n.) சிறு தேவதையின் பீடிப்பு (வின்.); possession or obsession by a demon.

*[தேவதை + தொடர்ச்சி]*

**தேவந்தி** *tēvandi,* பெ. (n.) சிலப்பதிகாரக் கண்ணகியின் தோழி; friend of Kaṇṇagi in Cilappati-karam.

**தேவநகர்** *tēva-nagar,* பெ. (n.) 1. கோயில்; temple. 2. துறக்கம்; city of the Gods.

*[தேவர் + நகர். நகுதல் = விளங்குதல். நகு → நகர் = விளங்கும் மாளிகை, மாளிகையுள்ள பேரூர்]*

**தேவநற்கருணை** *tēvanaṟ-karuṇai,* பெ. (n.) கிறித்தவரின் சடங்கு; a ceremony of Christianity.

*[தேவ + நற்கருணை]*

**தேவநாகரம்** *tēva-nāgaram,* பெ. (n.) தேவநாகரி பார்க்க; see *tēva-nāgari.* "நந்திநாகரந் தேவநாகர முதலாய எழுத்துக்களை" *(சிவதரு. சிவஞானதான. 32, உரை).*

*[தேவ + நாகரம்]*

**தேவநாகரி** *tēva-nāgari,* பெ. (n.) வடநாட்டில் உண்டாகி வழங்கும் ஆரிய மொழியின்

வடிவெழுத்து; North Indian Sanskrit script (செ.அக.).

*[தேவ + நாகரி]*

**தேவநாயகன்** *tēva-nāyagaṉ,* பெ. (n.) தேவர்கள் தலைவன்; the Lord of celestials.

ம. தேவநாயகன்

*[தேவ + நாயகன்]*

**தேவநாழியோடொக்குமுழக்கு** *tēva-nāḻiyōḍokkum-uḻakku,* பெ. (n.) திருச்சோற்றுத் துறை சிவன்கோயிலில் நெய் அளப்பதற் கிருந்த அளவை; measurement use to measure the ghee in Sivan temple in Tiruccōṟṟutturai. "நிசதி உழக்கு நெய் - தேநாழியோ டொக்கும் உழக்கினால் அட்டுவேன்" (தெக.தொ. 5, கல். 619).

*[தேவ + நாழி + ஓடு + ஒக்கும் + உழக்கு]*

**தேவநிகாயம்** *tēva-nigāyam,* பெ. (n.) வீடுபேறு; salvation.

*[தேவ(ர்) + நிகாயம்]*

**தேவநிணல்** *tēva-niṇal,* பெ. (n.) நாவல்; jamboo tree (சா.அக.).

**தேவநிந்தகன்** *tēva-nindagaṉ,* பெ. (n.) தெய்வத்தைத் தூற்றுபவன் (யாழ்.அக.); blasphemer.

*[(தெய்வம்) தேவ + நிந்தகன்]*

**தேவநிலம்** *tēvanilam,* பெ. (n.) தேவதைகளுக் கென்று விடப்பட்ட ஆறிலொரு மனைப் பகுதி (வின்.); portion of a house-site allotted to several deities, being one-sixth of a square plot (செ.அக.).

*[தேவ(ர்) + நிலம்]*

**தேவநிறம்** *tēvaniṟam,* பெ. (n.) 1. சீந்தில்; moon creeper. 2. பொன்னிறம்; golden colour (சா.அக.).

*[தேவ(ர்) + நிறம்]*

**தேவநீதி** *tēvanīdi,* பெ. (n.) தெய்வத் தண்டனை (யாழ்.அக.); divine punishment.

*[தேவ(ர்) + நீதி]*

**தேவநேயன்**[1] *tēvanēyaṉ,* பெ. (n.) இறைவன் மேல் அன்பு கொண்டோன் (கிறித்.); Jesus.

*[தேவன் + நேயன்]*

**தேவநேயன்**[2] *tēvanēyaṉ,* பெ. (n.) வடமொழிப் பிணிப்பினின்று தமிழைக் காக்கப் பிறப்பு எடுத்ததாகக் கூறியவரும், செந்தமிழ்ச் சொற்பிறப்பியல் அகரமுதலி தொகுப்பது தம் வாழ்நாள் பணியென்று கொண்டவரும் மாந்தன் பிறந்தகம் குமரிக் கண்டமே என்று நிறுவியவரும் தமிழ் திரவிடத்திற்குத் தாய் ஆரியத்திற்கு மூலம், ஞால முதன் மொழி என்னும் முப்பெரும் முடிவுகளை நிறுவத் தம் வாழ்நாள் முழுமையும் ஆய்வு மேற் கொண்டவருமான இருபதாம் நூற்றாண்டின் தனித்தமிழ்ப் பேரறிஞர்; purist Tamil scholar of 20th century, who devoted his life time to establish the purity and the antiquity of Tamil, who considered his birth is for the same cause, who considered compilation of the etymological dictionary of Tamil language as his life time mission, who asserted Kumari continent was the birth place of human race, Tamil is the mother of Dravidian languages, Tamil has roots of Aryan languages, and Tamil is the primary classical language of the world.

*[தேவன் + நேயன்]*



தேவன்:

தேய் - தேய்தல் = உரசுதல்

தேய் - தீய் - தீ = நெருப்பு, விளக்கு, நரகம்.

தீ - தீமை = தீயின் தன்மை. தீ - தீய = கொடிய.

தீய்தல் = எரிந்து போதல், கருகுதல், பற்றிப் போதல்.

தீதல் = தீய்தல்.

ஏகாரம் ஈகாரமாய்த் திரிதலை, தேன் - தேம் - தீம் என்னும் திரிபிலும் கண்டு கொள்க.

தேய் - தேயு (சமற்கிருதம்) = நெருப்பு

*இத் 'தேய்' அடியினின்றே தெய்வப் பெயர் தோன்றிற்று.*

*தேய் - தேய்வு - தேவு - தேவன்.*

*தேய்வு - தெய்வு - தெய்வம்.*

*தேவு - தே = தெய்வம், தலைவன்*

*பால் வரை தெய்வம் வினையே பூதம் (தொல். 341) தெய்வம் உணாவே மாமரம் புட்பறை (தொல். 964) தெய்வம் அஞ்சல் புரையறத் தெளிதல் (தொல். 1218) வழிபடு தெய்வம் நிற்புறங் காப்ப (தொல். 1367). யகர வொற்றுள்ள தெய்வப்பெயரே பெரும் பான்மையாகவும், தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே (தொல்.1395) என வகர வொற்றுள்ள பின்னை வடிவு அருகியும், இதுபோதுள்ள தமிழ் நூல்களுள் முந்தியதாகிய தொல்காப்பியத்துள் வருதல் காண்க.*

*சமற்கிருதம்* - deva, daiva

*இலத்தீன்* - dues = god

*கிரேக்கம் (*Greek*)* - theos = god

*'தேவ' என்னும் சொற்குச் சமற்கிருதத்திற் காட்டப்படும்* div *(*to be bright*)* di, dip *(*to shine*) என்னும் வேர்ச்சொற்கள் முதற் பொருளன்றி வழிப்பொருளே கொண்டுள்ளமையின் பொருந்தாமை காண்க.*

*பின்வரும் சித்திய (*scythian*) ஆரியச் சொற்கள், 'தீ' (நெருப்பு) என்னும் தமிழ்ச் சொற்கு இனமானவை எனக் கால்டுவெல் கண்காணியார் காட்டுவார்.*

***சித்தியம்:***

***சாமாயிதே*** (samoiede) - tu, tui, ti, ty

***மஞ்சு*** (Manchu) - tua

***அங்கேரியம்*** (Hungarian) - tuz

***ஒசுத்தியக்கு*** (Ostiak) - tut

***துங்கசு*** (Tungus) - togo

***இலசுக்கியம்*** (Lesghian) - tze, zi, zie

***ஆரியம்:***

***கேலிக்கம்*** (Gaelic) - teire

***வேலிசு*** (Welsh) - tan

***பாரசீகம்*** (Persian) - tigh.

**நேயன்**

*நள் - நண் - நண்பு - நட்பு*

*நள்ளுதல் = அடைதல், பொருந்துதல், நட்புக் கொள்ளுதல், செறிதல்*

*நள்ளார் = பகைவர்.*

*நள்ளி = உறவு (சூடா.)*

*நள்ளிருள் = செறிந்தவிருள் (திருக்கோ 156, சிலப். 15:105)*

*நள்ளுநர் = நண்பர் (திவா.).*

*நள் - நளி. நளிதல் = செறிதல்.*

*நள் - நெள் - நெய் = ஒட்டும் நீர்மப் பொருள்* (oil, ghee)*, கருப்புக் கட்டிச்சாந்து.*

*நெய்தல் = இணைத்தல், நூலை இணைத்து ஆடையாகச் செய்தல்.*

*நெய் = குருதி, நெய்த்தோர் (நெய்த்துவர்?) = குருதி. அகரம் எகரமாதலை, பரு - பெரு, சத்தான் - செத்தான் என்னும் திரிபுகளிற் காண்க.*

*ளகர மெய்யீறு யகர மெய்யீறாவதை, கொள் - கொய், தொள் - தொய், பொள் - பொய் முதலிய திரிபுகளிற் காண்க.*

*நெய் - (நெய்ஞ்சு) - நெஞ்சு - நெஞ்சம் = விலாவெலும்புகள் இணைக்கப்பட்ட இடம் அல்லது அன்பிற்கிடமாகக் கருதப்படும் நெஞ்சாங்குலை (*heart*) உள்ள இடம்.*

*நெய் - நேய் - நேயம் = அன்பு.*

*ஈரம் பசை முதலிய சொற்கள் ஒட்டும் பொருளையும் அன்பையும் குறித்தல் காண்க. அன்பு, இருவரை அல்லது பலரை இணைப்பது.*

*நேய் - நே = அன்பு. நேயம் - நேசம்*

*ய - ச, ஒ.நோ: நெயவு - நெசவு*

*நேசம் - நேசி. நேசித்தல் = அன்பு கடாத்தல், விரும்புதல். 'நேசித்து ரசவாத வித்தைக் கலைந்திடுவார்' (தாயுமானவர்) நேயம் - நேயன். நேசம் - நேசன்.*

*நேயம் என்னும் தென்சொல் வடநாட்டுத் திரவிடத்தில் வழங்கி, பின்னர்ப் பிராகிருதத்திலும் தொடர்ந்து, இறுதியில் சமற்கிருதத்திற் புகுந்து 'ஸ்நேஹ' என்று வழங்குகின்றது. இவ்வரலாற்றை அறியாதார், பேரன் பாட்டனைப் பெற்றான் என்பது போல், ஸ்நேஹ (சமற்.) - நேயம் (பிராகிருதம்) - நேயம் (தமிழ்) எனத் தலைகீழாய்த் திரிப்பர். இங்ஙனமே சென்னைப் பல்கலைக் கழகத் தமிழகராதியிலும் உண்மைக்கு மாறாகக் காட்டப்பட்டுள்ளது. பகுத்தறிவும் நடுவு நிலைமையுமுள்ள அறிஞர் உண்மை கண்டுகொள்வாராக. நேயம் வடசொல்லாயின் 'நெய்' என்பதும் அதன் அடிவேரான 'நள்'*

என்பதும் வட சொல்லாதல் வேண்டும். அங்ஙன மாகாமை வெள்ளிடை மலைபோல் தெள்ளிதே.

வடமொழி ஆயிரக்கணக்கான தென் சொற்களைக் கடன் கொண்டிருப்பதால், மொழிநூல் முறைப்படி நடுவு நிலையாய் ஆராய்ந்து உண்மை காண வேண்டுமேயன்றி, வடமொழி தேவமொழியாதலால் பிற மொழியினின்று கடன் கொள்ளாதென்னும் கருநாடகக் குருட்டுக் கொள்கையை அடிப் படையாகக் கொண்டு, தூய தென் சொற்களையும் வடசொல்லென வலிப்பது, அறிவாராய்ச்சி மிக்க இக்காலத்திற் கேற்காதென வடமொழிவாணர் திடமாக அறிவாராக; ஆராய்ச்சியில்லாத தமிழ்ப் பேராசிரியரும் வடமொழியிலுள்ள சொல்லெல்லாம் வடசொல்லெனக் கருதும் பேதைமையை விட்டுய்வாராக. மயிர் எனும் தொன்சொல் ச்மச்ரு (smrsru) எனச் சகரம் முற்கொண்டு வழங்குவது போன்றே, நேயம் என்னும் தென்சொல்லும் 'ஸ்நேஹ' என ஸகரம் முற்கொண்டு சமற்கிருதத்தில் வழங்கு கின்றதென அறிக. (தென்மொழி. நவ. 1959).

**தேவப்பசு** *tēva-p-pašu,* பெ. (n.) **காமதேனு** (யாழ்.அக.); the celestial cow.

*[தேவ(ர்) + பசு]*

Skt. pašu → த. பசு

**தேவப்பிரணவம்** *tēva-p-piraṇavam,* பெ. (n.) **தேவபாணி** பார்க்க; see *tēva-pāṇi.* "தேவப்பிரணவமெனும் வடமொழியை" (பன்னிருபா. 207).

*[தேவ(ர்) + பிரணவம்]*

**தேவப்பிறங்கி** *tēva-p-piṟaṅgi,* பெ. (n.) **நாகமல்லி;** snake jasmine (சா.அக.).

**தேவப்புள்** *tēvappuḷ,* பெ. (n.) **எகினம்** (அன்னம்); swan, as a divine bird.

*[தேவ + புள்]*

**தேவபட்சி** *tēva-patci,* பெ. (n.) **ஆள்காட்டிப் பறவை;** red wattled lapwing sand piper (சா.அக.).

*[தேவ(ர்) + பட்சி]*

Skt. pakṣi → த. பட்சி

**தேவபதம்** *tēvapadam,* பெ. (n.) *1.* **விண்;** heaven, firmament. *2.* **அரசக் குழுகாயம்;** royal presence.

*[தேவ + பதம்]*

**தேவபதி** *tēva-pati,* பெ. (n.) **தேவர்கோன்** (யாழ்.அக.) பார்க்க; see *tēvar-kōṉ.*

ம. தேவபதி

*[தேவ(ர்) + பதி]*

Skt. pati → த. பதி

**தேவபவனம்** *tēva-pavaṉam,* பெ. (n.) *1.* **அரசமரம்;** pipal tree. *2.* **கோயில்;** temple. *3.* **வீடுபேறு;** heaven (சா.அக.).

ம. தேவபவனம்

*[தேவ(ர்) + பவனம்]*

Skt. bhavana → த. பவனம்

**தேவபாடை** *tēva-pāḍai,* பெ. (n.) **வடமொழி;** Sanskrit, as the language of the Gods. "தேவபாடையினிக்கதை செய்தவர்" (கம்பரா. சிறப்புப். 7).

*[தேவ(ர்) + பாடை]*

Skt. bhāsha → த. பாடை

மொழி இயற்கையாய் உருவானதுமன்று; கடவுளால் படைக்கப்பட்டதுமன்று; மக்களால் உருவாக்கப்பட்டதே. அவ்வாறிருக்க ஒரு மொழியைத் தேவமொழி என்பது ஏமாற்று வேலை யென்றறிக.

**தேவபாணி** *tēva-pāṇi,* பெ. (n.) **தேவரைப் புகழ்ந்து கூறும் பாட்டுவகை;** songs in praise of Gods. "செந்துறை வெண்டுறை தேவபாணி யிரண்டும்" (சிலப். 6:35, உரை).

*[தேவ(ர்) + பாணி]*

**தேவபூசை** *tēva-pūšai,* பெ. (n.) **இல்லத்தில் நடைபெறும் இறைவழிபாடு;** daily worship in a house.

ம. தேவபூச

*[தேவ(ர்) + பூசை. பூசுதல் = கழுவுதல். பூசு → பூசை = தெய்வப் படிமையை நீராட்டிச் செய்யும் வழிபாடு]*

**தேவபூசைப்பூ** *tēva-pūšai-p-pū*, பெ. (n.) செங்கழுநீர்ப்பூ; red Indian water lily (சாஅக.).

*[தேவ(ர்) + பூசை + பூ]*

**தேவபூதரு** *tēva-pūtaru*, பெ. (n.) கருவண்டு; black beetle (சாஅக.).

**தேவபூதி** *tēva-pūdi*, பெ. (n.) 1. தில்லை மரம்; tigers spurge. 2. கங்கை; Ganga.

**தேவபூமி** *tēva-pūmi*, பெ. (n.) துறக்கம் (யாழ்அக.); the world of the celestials.

ம. தேவபூமி

*[தேவ(ர்) + பூமி]*

**தேவபோகமுறைமை** *tēva-pōga-muraimai*, பெ. (n.) கோயில் தெய்வங்களுக்குரிய வழிபாட்டுச் செலவினங்களுக்குத் தேவதான வருவாயினைக் கொண்டு நாளும் நிகழ்த்துவிக்கும் வழிபாட்டு முறைகள்; arrangement done to do temple worship expenses by the income of the temple.

*[தேவபோக + முறைமை]*

**தேவம்**[1] *tēvam*, பெ. (n.) தெய்வம் (இவ.) பார்க்க; see *teyvam*.

**தேவம்**[2] *tēvam*, பெ. (n.) 1. அனிச்சை பார்க்க; see *aniccai*. 2. குழிநாவல் பார்க்க; see *kulināval*. 3. மாமரம்; mango.

**தேவமஞ்சரம்** *tēvamañjaram*, பெ. (n.) கண்ண (கிருட்டிண)னின் அணிகலன்; ornaments of Lord Kannan (இருநூ.).

*[தேவ(ர்) + மஞ்சரம்]*

**தேவமணி** *tēvamaṇi*, பெ. (n.) 1. கண்ண (கிருட்டிண)னின் அணிகலன்களுள் ஒன்றான அகன்மணி; pearls one among Kannan's ornaments. 2. சிவன்; Lord Sivan. 3. குதிரைச் சுழியினொன்று; curved and circular marks on the body of the horse (இருநூ.).

ம. தேவமணி

*[தேவ(ர்) + மணி]*

**தேவமந்திரி** *tēvamandiri*, பெ. (n.) வியாழன் (பிங்.) இந்திரனின் அமைச்சர்; Brhaspati, as Indiran's minister.

ம. தேவமந்த்ரி

*[தேவ(ர்) + மந்திரி]*

**தேவமருத்துவர்** *tēva-maruttuvar*, பெ. (n.) தேவர்களுக்கு மருத்துவராகிய (அசுவினி) தேவதைகள்; Asvins, the twin physicans of the celestial region.

*[தேவ(ர்) + மருத்துவர்]*

**தேவமருத்துவன்** *tēva-maruttuvaṉ*, பெ. (n.) திருப்பாற்கடலைக் கடையும்போது தோன்றிய மருத்துவன்; the physican of the celestial world said to have been born who the ocean of milk churned by Rakshas and Devars (சாஅக.).

*[தேவ(ர்) + மருத்துவன்]*

**தேவமனோகரி** *tēva-manōgari*, பெ. (n.) பண் வகை (பரதராக.பக். 103); a specific melody type.

*[தேவ(ர்) + மனோகரி]*

**தேவமாசம்** *tēva-māšam*, பெ. (n.) தேவமாதம் பார்க்க; see *tēva-mādam*.

*[தேவ(ர்) + மாசம். மாதம் → மாசம்]*

**தேவமாதம்** *tēva-madam*, பெ. (n.) கருவுற்ற எட்டாந் திங்கள்; eighth month; after conception.

*[தேவ(ர்) + மாதம்]*

**தேவமாதா** *tēva-mādā*, பெ. (n.) தேவர்களின் அன்னை (அதிதி); Atiti, the mother of the Gods. 2. மேரி என்னும் கன்னி; (R.C.) virgin Mary.

ம. தேவமாதா (வு)

*[தேவ + மாதா]*

**தேவமாதி** *tēvamādi*, பெ. (n.) நாகப்படக் கற்றாழை; a kind of aloe perhaps the one resembling snake's hood (சாஅக.).

**தேவமாமரம்** *tēva-māmaram*, பெ. (n.) 1. தேவமரம் பார்க்க; see *tēva-maram*. 2. குளிர் நாவல்; superior jamoon tree (சாஅக.).

*[தேவ(ர்) + மாமரம்]*

**தேவமானம்** *tēva-māṉam*, பெ. (n.) தேவர்க்குரிய காலவளவு; divine standard of time.

*[தேவ(ர்) + மானம். மா → மானம் = அளவீடு, அளவு, அளவை, மதிப்பு]*

**தேவமுத்திரை** *tēva-muttirai*, பெ. (n.) காசுமீரப் படிகம்; cusmera crystal or cusmere stone (சாஅக.).

*[தேவ + முத்திரை]*

**தேவமூடம்** *tēva-mūḍam,* பெ. (n.) தேவர்கள் தம்மைக் காப்பாற்றுவார் என்று மயங்கல்; believing Gods will protect, an illusionary idea.

*[தேவ + மூடம். முட்டு → முட்டாள். முட்டு → முட்டன் → மூடன். மூடன் → மூடம்]*

**தேவமேரையாய்** *tēva-mēraiyāy,* வி.எ. (adv.) அழகாக, நன்றாக; divinely.

*[தேவ + மேரை + ஆய்]*

**தேவயஞ்ஞம்** *tēva-yaññam,* பெ. (n.) கடவுள் வேள்வி; sacrifice to deity.

*[தேவ(ர்) + யஞ்ஞம்]*

Skt. yajña → த. யஞ்ஞம்

**தேவயாத்திரை** *tēvayāttirai,* பெ. (n.) நற்பேறு கிடைக்க செய்யும் பயணம்; pilgrimage to sacred places. "தேவயாத்திரை தீர்த்தயாத்திரை செய் சிவநேசர்" *(தணிகைப்பு. அகத்திய. 502).* 2. கோயில் தெய்வத்தின் புறப்பாடு; procession of the chief idol of a temple.

ம. தேபயாத்ர

*[தேவ(ர்) + யாத்திரை]*

**தேவயானம்**[1] *tēvayāṉam,* பெ. (n.) 1. கடவுளர் ஊர்தி; chariot or vehicle of a God. 2. அர்ச்சில் முதலிய தேவதைகளைக் கடந்து வீடு பேறடையச் செல்லும் வழி; way to the supreme heaven which is open only to the brahma-vit, and on which one has to pass by arccis and other deities.

ம. தேவபானம்

*[தேவ(ர்) + யானம்]*

**தேவயானம்**[2] *tēvayāṉam,* பெ. (n.) மூக்கின் வழியாய் வலது பக்கத்தில் ஓடும் மூச்சு; air passing through the right nostril *(சா.அக.).*

**தேவயானை** *tēvayāṉai,* பெ. (n.) 1. ஐராவதம் பார்க்க; see *airāvadam.* 2. தெய்வயானை; a wife of Lord Murugan.

*[தேவ + யானை]*

**தேவயுகம்** *tēvayugam,* பெ. (n.) 12000 தெய்வ வாண்டு கொண்ட காலவளவு *(சங்.அக.);* period consisting of 12000 divine years.

ம. தேவயுகம்

*[தேவ + யுகம்]*

**தேவர்** *tēvar,* பெ. (n.) 1. கடவுளர்; deities, objects of worship. "தேவர்ப் பராஅய முன்னிலைக் கண்ணே" *(தொல்.பொருள். 450).* 2. உயர்ந்தோரைக் குறிக்குஞ் சொல்; a term of respect for persons, of high station. 3. திருவள்ளுவர்; Tiruvaḷḷuvar. "ஒன்னா ரழுத கண்ணீரு மனைத்து என்றார் தேவரும்" *(சீவக. 1891, உரை).* 4. சீவகசிந்தாமணி என்னும் பாவியத்தின் ஆசிரியரும், 9ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவருமான திருத்தக்கத் தேவர் என்னும் சமண முனிவர்; Tiruttakka-t-tēvar, the Jaina author of śivaga-cintāmaṇi. "தேவர்அதனை அபரகாத்திர மென்றார்" *(சீவக. 806, உரை).* 5. அரசர், துறவியர் முதலியோரது, பெயர்ப்பின் வழங்கும் சிறப்புப் பெயர்; a word appended to the names of kings, ascetics, etc. "இராசராசதேவர், திருத்தக்கதேவர்". 6. தேவரீர் பார்க்க; see *tēvarīr.* "தேவர் திருவடிகளிலே" *(ஈடு, 2,3,4).* 7. மறவர் சாதியினரின் பட்டப்பெயர்; title of marava caste. 8. நால்வகைத் தேவதை வகையார்; celestial of four classes.

*[தேவ(ம்) → தேவர்]*

**தேவர்க்காடல்** *tēvar-k-kāḍal,* பெ. (n.) தெய்வமேறி ஆடுதல் (ஆவேசம்) (வின்.); temporary possession by a spirit.

*[தேவர்க்கு + ஆடல்]*

**தேவர்கடன்** *tēvar-kaḍaṉ,* பெ. (n.) தெய்வ வேள்வி பார்க்க; see *teyva-vēḷvi (சா.அக.).*

*[தேவர் + கடன்]*

**தேவர்கன்மி** *tēvar-kaṉmi,* பெ. (n.) தேவகன்மி பார்க்க; see *tēva-kaṉmi.* "திருவானிலை மாதேவர் கோயிலில் தேவர் கன்மிக்கும்" *(தெக.தொ. 3:43).*

*[தேவர் + கன்மி]*

**தேவர்குலம்** *tēvar-kulam,* பெ. (n.) தேவகுலம் பார்க்க; see *tēva-kulam.* "தேவர் குலத்தை வலங்கொண்டு" *(இறை. 1, பாயி. பக்.3).*

*[தேவர் + குலம்]*

**தேவர்கோ** *tēvarkō,* பெ. (n.) தேவர்கோன் பார்க்க; see *tēvarkōṉ.* "தேவர் கோ வறியாத தேவதேவன்" *(திருவாச. 5, 30).*

*[தேவர் + கோ]*

**தேவர்கோன்**[1] *tēvarkōṉ*, பெ. (n.) தேவர்களுக்கு *அரசனான இந்திரன்;* Indiran, the lord of the celestials. "தேவர்கோன் பூணாரந் தென்னர்கோன் மார்பினவே" *(சிலப். 17, பக்.447).*

*[தேவர் + கோன்]*

**தேவர்கோன்**[2] *tēvarkōṉ*, பெ. (n.) குளிர் நாவல்; superior jamoon tree *(சா.அக.).*

**தேவர்ணன்** *tēvarṇaṉ*, பெ (n.) தேன் நிறத்தில் சிறுநீர் கழிவதாகிய வெள்ளை நோய்; honey coloured urine one of the 18 varieties of veneral diseases *(சா.அக.).*

**தேவர்நாடு** *tēvar-nāḍu*, பெ. (n.) துறக்கம் *(மணிமே. 14:42);* Indiran's heaven.

*[தேவர் + நாடு]*

**தேவர்பகைவர்** *tēvar-pagaivar*, பெ. (n.) அசுரர் *(பிங்.);* asuras, as enemies of the Gods.

*[தேவர் + பகைவர்]*

**தேவர்மந்தணம்** *tēvar-mandaṇam*, பெ. (n.) தேவர்கட்கு மட்டும் தெரிந்த பூடகம்; profound secret, known only to Gods.

*[தேவர் + மந்தணம்]*

**தேவர்வசம்** *tēvar-vašam*, பெ. (n.) தேவர்வாசம் பார்க்க; see *tēvar-vāšam.*

*[தேவர் + வசம்]*

**தேவர்வாசம்** *tēvar-vāšam*, பெ. (n.) *அரச மரம்;* pipal, as the abode of the gods *(சா.அக.).*

*[தேவர் + வாசம்]*

இம்மரத்தில் தேவர்கள் வசிப்பதாக நம்பிக்கை.

**தேவரகசியம்** *tēva-ragašiyam*, பெ. (n.) தேவர்மந்தணம் பார்க்க; see *tēvar-mandaṇam.*

*[தேவர் + ரகசியம்]*

Skt. rahasya → த. ரகசியம்

**தேவரகண்டன்** *tēvarakaṇḍaṉ*, பெ. (n.) திருவாரூர்ச் சிவபெருமான்; Šivaṉ, as worshipped at Tiruvārūr. "தேவரகண்டப் பெருமாள் தியாகப் பெருமாள்" *(திருவாரூ. 25).*

**தேவரங்கம்** *tēvaraṅgam*, பெ. (n.) பணிப் புடைவை *(யாழ்.அக.);* cloth worn by women while engaged in household work.

**தேவரடியார்** *tēvar-aḍiyār*, பெ. (n.) தளிப் பெண்டிர்; temple dancing girls. "தேவரடியார்க்கும் உவச்சர்க்கும் *(தெ.க.தொ.3:47).*

*ம.* தேவடிச்சி

*[தேவர் + அடியார்]*

**தேவரநீதி** *tēvaranīdi*, பெ. (n.) கணவன் இறந்த பின், குல வளர்ச்சி கருதி அளியரை (மைத்துனரை)க் கூடி மகப்பெறும் பண்டை வடவர் வழக்கம்; the practice of north Indian's which a childless widow is permitted to have sexual union with the borther of her deceased husband for the sake of raising up seed to the deceased. "ஈண்டு தேவர நீதியிற் கொழுந்தி யரெழின் மகப்பெற நின்னால் வேண்டுமால்" *(பாரத.சம்பவ. 4).*

*[தேவரன் + நீதி]*

**தேவரம்பை** *tēvarambai*, பெ. (n.) *1.* தேவ உலகத்து மகளிருளொருத்தி; a celestial damsel. *2.* தெய்வப் பெண்; damsels in svarga.

*[தேவ + அரம்பை. அர் → அரம் = அச்சம், துன்பம். அரமகள் = துன்புறுத்தும் தெய்வப்பெண். அர் → அரம் → அரம்பை]*

**தேவரன்** *tēvaraṉ*, பெ. (n.) கணவனுடன் பிறந்தான்; husband's brother. "ஈண்டு தேவரநீதியிற் கொழுந்திய ரெழின் மகப்பெற நின்னால் வேண்டுமால்" *(பாரத. சம்பவ. 4).*

**தேவராசசுவாமிகள்** *tēvarāša-šwamigaḷ*, பெ. (n.) 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இவர் கந்தர் சட்டிக் கவசம், சக்திக் கவசம் போன்ற நூல்களை எழுதியுள்ளார்; a poet, author of kandar-saṭṭi-k-kavacam, sakthi-k-kavasam, in 19th century.

**தேவராசப்பிள்ளை** *tēvarāša-p-piḷḷai*, பெ. (n.) 19ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த புலவர்; a poet lived in the 19th century.

இவர் குசேலோபாக்கியானம், சூத சங்கிதை, பஞ்சாக்கர தேசிகர் பஞ்சரத்னம், பஞ்சாக்கர தேசிகர் பதிகம், சேடமலை மாலை, தணிகாசல மாலை எனும் சிற்றிலக்கியங்களை எழுதியுள்ளார்.

**தேவராசன்** *tēvarāšan*, பெ. (n.) தேவர்கோன் பார்க்க; see *tēvar-kōn*.

*[தேவ(ர்) + ராசன்]*

*த.* அரசன் → Skt. ராசன்

**தேவராசியம்** *tēvarāšiyam*, பெ. (n.) தேவர்மந்தணம் பார்க்க; see *tēvar-mandaṇam*.

*[தேவ + ராசியம்]*

Skt. rahasya → ரகசியம் → ராசியம்

**தேவராட்டி** *tēvarāṭṭi*, பெ. (n.) தெய்வம் ஏறி அருள் கொண்டு குறி சொல்பவள்; a woman divinely inspired and possessed of oracular powers. "தலைமரபின் வழிவந்த தேவராட்டி தனையழைமின்" *(பெரியபு. கண்ண. 47)*.

*[தேவர் + ஆட்டி]*

**தேவராண்டு** *tēvar-āṇḍu*, பெ. (n.) தேவர்க்குரியதும் 365 மாந்த ஆண்டுகளைக் கொண்டதுமான ஆண்டு; year of the Gods = 365 years of mortals.

*[தேவர் + ஆண்டு]*

**தேவராயன்சம்பா** *tēvarāyaṉ-cambā*, பெ. (n.) சம்பா நெல்வகை (இவ.); a kind of campā paddy.

*[தேவராயன் + சம்பா]*

**தேவராலயம்** *tēvar-ālayam*, பெ. (n.) தேவர்களின் இருப்பிடமான மாமலை மேரு (பிங்.); mount Meru as the abode of the Gods.

*[தேவர் + ஆலயம்]*

**தேவராளன்** *tēvarāḷaṉ*, பெ. (n.) தெய்வமருள் கொண்டு குறி சொல்பவன்; a man divinely inspired and possessed of oracular powers. "களித்தனன் றேவராளன்" *(சீகாளத். பு. கண்ணப். 57)*.

*[தேவர் + ஆளன்]*

**தேவரான்** *tēvarāṉ*, பெ. (n.) காமதேனு; celestial cow. "இன்ன தேவரான் கொடுப்ப" *(திருவிளை. நான் மாட. 20)*.

*[தேவர் + ஆன்]*

**தேவரிடைச்சான்றார்** *tēvar-iḍai-c-cāṉṟār*, பெ. (n.) இடையர்; cow herd caste. "இவ்வூர் தேவரிடைச் சான்றோர் கோயில்கட்குரிய திருவிளக்கு நிவந்தமாக வைக்கப்பெறும் ஆடுகளைக் கைக்கொண்டு நிவந்தப்படி நாளும் கோயிலில் நெய்யளாள் வரும் இடையர் குலமக்கள். *(தெ.க.தொ. 19, 119)*.

மறுவ. மன்றாடிகள்

**தேவரீர்** *tēvarīr*, பெ. (n.) பெரியோரை முன்னிலைப்படுத்துஞ் சொல்; you, yours, a term of respect. "தேவரீர் திருவடிகளைத் திக்குநோக்கித் தண்டம் பண்ணினேன்" *(சிலப். 13: 87, உரை)*. தேவரீர் சித்தம் என் பாக்கியம் *(பழ.)*.

*[தேவர் → தேவரீர்]*

**தேவருணவு** *tēvar-uṇavu*, பெ. (n.) அமுதம்; nectar, ambrosia, as the food of Gods.

*[தேவர் + உணவு]*

**தேவருணன்** *tēvaruṇaṉ*, பெ. (n.) துரிஞ்சில்; bat (சா.அக.).

மறுவ. துரிஞ்சி

**தேவரூண்** *tēvar-ūṇ*, பெ. (n.) தேவருணவு பார்க்க; see *tevar-uṇavu*.

*[தேவர் + ஊண்]*

**தேவரூர்** *tēvar-ūr*, பெ. (n.) பொன்னாங்காணி (தைலவ.தைல. 109) பார்க்க; see *poṉṉāṅgāṇi*.

**தேவரொட்டாதி** *tēvar-oṭṭādi*, பெ. (n.) எட்டி மரம்; nuxvomica tree (சா.அக.).

**தேவலகன்** *tēvalagaṉ*, பெ. (n.) கோயிற் பூசகன் (யாழ்.அக.); temple priest.

**தேவலன்** *tēvalaṉ*, பெ. (n.) 1. தேவரன் பார்க்க; see *tēvaraṉ*. 2. ஒழுக்க வழியில் நடப்பவன்; virtuous man. 3. பார்ப்பனன்; brahmin.

**தேவலாம்** *tēvalām*, பெ. (n.) தேவலை[1] பார்க்க; see *tēvalai*.

*[தேவலை - தேவலாம்]*

**தேவலை[1]** *tēvalai*, பெ. (n.) 1. ஏதுவான நிலை; better condition, as in health. இப்போது அவனுக்கு உடம்பு தேவலை. 2. சிறப்பானது; that which is preferable. அதைவிட இது தேவலை.

*[தாழ்வு + இல்லை → தாவில்லை → தேவலை (கொ.வ.)]*

**தேவலை**[2] *tēvalai,* பெ. (n.) *பெரிய வலையின் நீள அகலத்தைச் சீர்படுத்தும் வலை (தஞ்சை.மீனவ.);* a net which corrects the breath of the big net.

**தேவலோகம்** *tēvalōgam,* பெ. (n.) தேவர்நாடு *பார்க்க;* see *tēvar-nāḍu.*

*[தேவன் + உலகம்]*

**தேவவசனம்** *tēva-vaša̱nam,* பெ. (n.) *கடவுள் திருமொழி* (chr.); word of God.

**தேவவசீகரம்** *tēva-vasīgaram,* பெ. (n.) *படையல் ஊனும், மதுவும் இயேசுவின் அரத்தமாக மாறுமெனக் கொண்டு செய்யும் வழிபாடு* (R.C.); transubstantiation at Eucharist.

**தேவவரசி** *tēva-v-araši,* பெ. (n.) *இந்திராணி;* Indirāṇi *(இருநூ.).*

**தேவவரசு** *tēva-v-arašu,* பெ. (n.) *கொடியரசு;* wild peepul tree *(சா.அக.).*

**தேவவருடம்** *tēva-varuḍam,* பெ. (n.) தேவராண்டு *பார்க்க;* see *tēvar-āṇḍu (இருநூ.).*

*[தேவர் + வருடம்]*

த. ஆண்டு → Skt. வருஷம், த. வருடம்

**தேவவல்லபம்** *tēva-vallabam,* பெ. (n.) *சுரபுன்னை;* long leaved gamboge.

**தேவவிரதன்** *tēva-viratan̲,* பெ. (n.) தெய்வவிரதன் *பார்க்க;* see *teyva-viratan̲.*

**தேவவிருட்சம்** *tēva-viruṭcam,* பெ. (n.) தேவதரு *பார்க்க;* see *tēvadaru.*

**தேவவைத்தியம்** *tēva-vaittiyam,* பெ. (n.) *இதளியக் கந்தக முறையில் செய்யும் மருத்துவம்;* the superior method of treating disease with the aid of compounds of mercury sulphur arsenic *(சா.அக.).*

**தேவவைத்தியர்** *tēva-vaittiyar,* பெ. (n.) *தெய்வ உலகத்து மருத்துவரான அசுவினி தேவர் முதலானோர்;* physician of the celestial aswini kumar, danvanthari, bagharam etc. *(சா.அக.).*

**தேவவைத்தியன்** *tēva-vaittiyan̲,* பெ. (n.) தேவ மருத்துவன் *பார்க்க;* see *tēva-maruttuvan̲ (சா.அக.).*

*[தேவர் + வைத்தியன்]*

**தேவளம்** *tēvaḷam,* பெ. (n.) *கோயில்;* temple.

*[தே + வளம்]*

**தேவன்** *tēvan̲,* பெ. (n.) *1. கடவுள்;* god. "தேருங்காற் றேவ னொருவனே" *(திவ். இயற். நான்மு. 2).* 2. *அருகன் (பிங்.);* Arhat. 3. *அரசன்;* king. "தேவா நின்கழல் சேவிக்க வந்தனன்" *(கம்பரா. கங்கை. 39).* 4. *கொழுந்தன் (யாழ்.அக.);* husband's brother. 5. *மறவர், கள்ளர், அகம் படியார்க்கு வழங்கும்பட்டப் பெயர்;* a title of maṟavar, kaḷḷar and akambadiyar. 6. *ஈட்டிக் காரன் (யாழ்.அக.);* lancer. 7. *பரிசைக்காரன் (யாழ்.அக.);* shield-bearer. 8. *மடையன் (யாழ்.அக.);* fool, idiot.

ம. தேவன்

*[தேய் → தேயு = நெருப்பு. தேய் → தேய்வு → தேவு = தெய்வம், தெய்வத் தன்மை. தேவு → தேவன் = கடவுள், அரசன், கணவன், தலைவன் (வ.வ. 17)]*

த. தேவன் → Skt. dēva

**தேவன்திருவரன்குளமுடையான்** *tēvan̲ tiruvaran̲-kulamuḍaiyān̲,* பெ. (n.) *13ஆம் நூற். கல்வெட்டால் அறியப்பெறும் புலவர்;* a poet known in the 13th century inscription.

*பாண்டி மண்டலத்தில் பொன்னமராவதி முதலிய நாடுகளில் வாழும் பெருவீரர்களாகிய மறமாணிக்கர்கள் மேல் தேவர் திருவரன் குளமுடையான் எனும் புலவர் "பேர் வஞ்சி" எனும் நூலொன்று பாடியதாகக் குறிப்பு காணப்படுகின்றது.*

**தேவனம்** *tēvan̲am,* பெ. (n.) *1. தாமரை (மலை.);* lotus. 2. *சூதாட்டம்;* gambling.

**தேவனுலகம்** *tēvan̲ulagam,* பெ. (n.) *துறக்கம்;* svarga, Indira's heaven.

*[தேவன் + உலகம்]*

**தேவா** *tēvā,* பெ. (n.) *பெரும் குரும்பை;* lowstring hemp *(சா.அக.).*

**தேவாங்கசெட்டி** *tēvāṅga-ceṭṭi,* பெ. (n.) *நெசவுச் சாதிப்பிரிவினருள் ஒருவகையார்;* a caste of weavers.

*[தேவாங்கம் + செட்டி. எட்டி → செட்டி]*

*தெய்வப் படிமைக்கு (தெய்வ அங்கத்திற்கு)ச் சாத்தப்படும் ஆடையை நெய்யும் வகுப்பினர்.*

**தேவாங்கம்** *tēvāṅgam,* பெ. (n.) பட்டுச்சேலை (வின்.); silk-cloth.

**தேவாங்கு**[1] *tēvāṅgu,* பெ. (n.) வேலைப் பாடமைந்த துகில் வகை (பிங்.) (சிலப். 14, 105), உரை); embroidered cloth of superior quality.

**தேவாங்கு**[2] *tēvāṅgu,* பெ. (n.) உடலிளைத்துத் தோன்றும் ஒருவகை விலங்கு; lemur, the Indian sloth, loris gracilis, considered to be very thinly built. தின்கிறதைத் தின்றும் தேவாங்கு போலிருக்கிறான் (பழ.).

ம. தேவாங்கு; தெ. தேவாங்கு

*[தேய் → தேய்வு + அங்கம் = தேய்வங்கம் → தேவங்கம் → தேவாங்கம் → தேவாங்கு]*

**தேவாசனம்**[1] *tēvāšaṉam,* பெ. (n.) ஓகிருக்கை வகை (யாழ்.அக.); a kind of yogic posture.

**தேவாசனம்**[2] *tēvāšaṉam,* பெ. (n.) கோள் ஒன்பான் நிலைகள்; nine statues of the satelites.

**தேவாசிரியன்**[1] *tēvāširiyaṉ,* பெ. (n.) திருக்கோயில்களில் மன்னர், அமைச்சர் முதலியோர் தனியாக வழிபாடு செய்வதற் கென அமைந்த மண்டபம்; a square or rectangular hall with a flat roof supported by pillars, which is made for the king and his ministers to worship separately.

**தேவாசிரியன்**[2] *tēvāširiyaṉ,* பெ. (n.) திருவாரூரிலுள்ள ஆயிரக்கால் மண்டபம்; the hall of thousand pillars in Tiruvārūr. "உள்ளது தேவாசிரிய னென்னுந் திருக்காவணம்" (பெரியபு. திருக்கூட். 2).

**தேவாசிரியன்கால்** *tēvāširiyaṉ-kāl,* பெ. (n.) தேவாசிரியன் என்ற பெயரால் விளங்கிய மரக்கால்; a measurement in the name of Devāsiriyaṉ.

*[தேவாசிரியன் + கால்]*

இம்மரக்கால் திருமுதுகுன்றமுடைய நாயனார் கோயிலிலும் இருந்ததனைக் கல்வெட்டொன்று உணர்த்துகின்றது. "உடையார் திருமுது குன்றமுடைய நாயநாற்கு - வைத்த திருநுந்தா விளக்கு ஒன்றுக்கு தேவாசிரியன் காலால் அளக்கும் நெய்" (தெ.க.தொ. 144).

**தேவாசிரியன்திருக்காவணம்** *tēvāširiyaṉ tiru-k-kāvaṇam,* பெ. (n.) திருவாரூர் கோயிலில் உள்ள கருங்கல் திருப்பணியாக அமைந்த பெருமண்டபத்தின் சிறப்புப் பெயர்; name of the granite hall in the Tiruvārur temple. "தேவாசிரியன் எனுந் திருக்காவணம்" (பெரியபு. திருக்கூட். 2)

*[தேவாசிரியன் + திரு + காவணம். காவணம் = கல்மண்டபம்]*

**தேவாசிரியன்நாழி** *tēvāširiyaṉ-nāḻi,* பெ. (n.) திருமுதுகுன்றம், திருவெண்ணெய்நல்லூர் ஆகிய கோயில்களில் நெய் அளக்கப் பயன்படுத்தப்பட்ட நாழிக்கமைந்த பெயர்; name for the measure of capacity to measure the ghee in Tirumudukuṉṟam, and Tiruveṇṇai nallūr temple.

*[தேவாசிரியன் + நாழி]*

**தேவாசீவன்** *tēvā-šīvaṉ,* பெ. (n.) கோயிற் பூசகன் (யாழ்.அக.); temple priest.

**தேவாசுரம்** *tēvāšuram,* பெ. (n.) தேவர்க்கும் அசுரர்க்கும் நடந்த போர்; war between Dēvar and Asurar. "நீ யன்றே . . . தேவாசுரம் பொருதாய்" (திவ். இயற். 368).

*[தேவ(ம்) + அசுரம்]*

**தேவாண்டு** *tēvāṇḍu,* பெ. (n.) தேவராண்டு பார்க்க; see *tēvar-āṇḍu* (செ.அக.).

*[தேவ + ஆண்டு]*

**தேவாத்திரம்** *tēvāttiram,* பெ. (n.) தேவர்களால் கொடுக்கப்பட்ட அம்பு; arrow given by the deities (இருநூ.).

*[தேவ + அத்திரம்]*

Skt. அஸ்திரம் → த. அத்திரம்

**தேவாத்துமா** *tēvāttumā,* பெ. (n.) அரசமரம்; pipal tree (சா.அக.).

**தேவாதி** *tēvādi,* பெ. (n.) தேவாதிதேவன் பார்க்க; see *tēvāti-tēvaṉ.*

**தேவாதிதேவன்** *tēvādi-tēvaṉ,* பெ. (n.) முதற்கடவுள்; the God of Gods. "எனைப் பலருந் தேவாதிதேவனெனப்படுவான்" (திவ். இயற். 2, 28).

**தேவாதீனம்** *tēvātīṉam,* பெ. (n.) தெய்வத்திற்கு உரியது; belonging of God (இருநூ.).

**தேவாபீட்டை** *tēvā-pīṭṭai,* பெ. (n.) வெற்றிலை; betel as a cherished object of the Gods.

**தேவாமணி** *tēvāmaṇi,* பெ. (n.) மணிக்குடல்; resentery small intestines.

**தேவாமிருதம்** *tēvāmiṟudam,* பெ. (n.) *1.* தேவருணவாகிய அமுதம்; ambrosia, the food of the immortals. *2.* சுழுமுனையமுதம்; the ambrosia like the fluid secreted by pineal gland and pituitary body in the cerelval region (சா.அக.).

*[தேவ + அமிழ்தம் → அமிர்தம்]*

த. அமிழ்தம் → Skt. amrude

**தேவாமுதம்** *tēvāmudam,* பெ. (n.) தேவருணவு; ambrosia, food of the immortals.

*[தேவர் + அமிழ்தம் → அமுதம்]*

**தேவாயதனம்** *tēvāyataṉam,* பெ. (n.) தேவாலயம் பார்க்க; see *tēvālayam.*

**தேவாயுதம்** *tēvāyudam,* பெ. (n.) வானவில் (யாழ்.அக.); rain-bow.

*[தேவர் + ஆயுதம்]*

**தேவார்ப்பணம்** *tēvār-p-paṇam,* பெ. (n.) தெய்வத்துக்குப் படைத்த பொருள்; offering made to the Gods.

*[தெய்வம் → தேவம் + அர்ப்பணம்]*

**தேவாரஅகத்தியர்** *tēvāra-agattiyar,* பெ. (n.) பொதியமலையிலுள்ள பாபநாசத்தில் தங்கியிருந்த பிற்கால முனிவர்; a poet lived in the Podigai mountain.

*[தேவாரம் + அகத்தியர்]*

இவர் மூவர் அருளிய தேவாரத் திருப்பதிகங்கள் 796இல் இருந்து 25 பதிகங்களைத் திரட்டியமைத்தார். அது "அகத்தியர் தேவாரத் திரட்டு" என்று வழங்கப் பெறுகின்றது.

**தேவாரத்துக்குத்திருப்பதியம்விண்ணப்பம்** *tēvārattukku-t-tiruppadiyam-viṇṇappam,* பெ. (n.) சிவன் திருமேனிகளின் திரு முன் அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியோரால் பாடப்பட்ட திருப்பதிகங்களைப் பாடுதல்; sing Tēvāram written by Appar, Sundarar and Sambandar in front of Sivaṉ idols.

**தேவாரத்துச்சுற்றுக்கல்லூரி** *tēvārattu-c-cuṟṟu-k-kallūri,* பெ. (n.) தெய்வச் சிலைகள் மாடங்களில் அமைக்கப்பட்டு விளங்கும் திருச்சுற்றாக அமைந்த கல் மண்டபம்; stone hall where the idols are kept in the niche. "முடி கொண்ட சோழன் திருமாளிகையால் வடபக்கத்துத் தேவாரத்துச் சுற்றுக் கல்லூரியில் தானஞ் செய்தருளா இருந்து" (முதல் இராசேந்திர சோழன், தெ.க.தொ 2:1, கல். 20).

**தேவாரத்துவாசல்** *tēvārattu-vāsal,* பெ. (n.) திருக்கோயில்களில் தேவாரத் திருப்பதி கங்களை வைத்து வழிபாடு செய்யுமிடம்; place where the books of Tēvāram are kept and worshipped in the temple. "இக்கோயில் தேவாரத்து வாசலில் எழுந்தருளியிருந்து" (தெ.க.தொ. 23, கல். 313).

*[தேவாரம் + அத்து + வாசல். அத்து = சாரியை]*

**தேவாரத்தேவர்** *tēvāra-t-tēvar,* பெ. (n.) ஆதன்மை (ஆன்மார்த்த) வழிபாட்டுக்குரிய உருவச் சிலைகளும் பிற கருவிகளும்; idols and other objects worshipped by an idividual in private (செ.அக.).

பெரிய பெருமாளுக்குத் தேவாரத் தேவராக எழுந்தருளுவித்த தேவர் பாதாதி கேசாந்தம் ஐவிரலே இரண்டு தோரை உசரத்து நாலு ஸ்ரீ ஹஸ்தமும் உடையராகக் கனமாகப் பித்தளையில் எழுந்தருளுவித்த சந்திரசேகரர் திருமேனி ஒன்று பெரிய பெருமாள் - முதல் இராசராசன் (தஞ்சைப் பெரிய கோயில் கல்வெட்டு) (தெ.க.தொ. 2:2, கல். 38).

**தேவாரப்பெட்டி** *tēvāra-p-peṭṭy,* பெ. (n.) அரசர் புறப்பாட்டில் முன்பாகக் கொண்டு செல்வதும் வழிபாட்டிற்குரிய சிலைகள் முதலியவற்றை வைத்திருப்பதுமாகிய பெட்டி (நாஞ்); box containing idols and other objects of worship carried in front of a royal procession (செ.அக.).

**தேவாரம்**[1] *tēvāram,* பெ. (n.) *1.* வழிபாடு; worship. "உயர்தவ மூவாயிரவர்க டாவா

மறையொடு தேவாரக் கைப்பற்றிய பணிமுற்ற" (கோயிற்பு. திருவிழா. 27). 2. வீட்டில் வைத்து வணங்கப்படும் கடவுள்; deity worshipped privately in a house. "உம்முடைய தேவாரமோ" (ஈடு. 6,8,10).

ம. தேவாரம்

**தேவாரம்**[2] *tēvāram,* பெ. (n.) சிவனைப் போற்றி அப்பர், சம்பந்தர், சுந்தரர் என்ற நாயன்மார் மூவரால் அருளிச் செய்யப்பெற்ற பதிகங்கள் கொண்டதும் தமிழ்மறை என்று கொண்டாடப்படுவதுமான சிவநெறித் திருமுறை; a collection of devotional songs in honour of Sivan, composed by Appar, Cambandar and Cundarar, otherwise known as Tamil marai (I.M.P.Tj.1012). "பேசுவது தேவாரமேயலால் வாய்க்கெளிய பேய்க் கிரந்தங்கள் பேசோம்" (தமிழ்நா. 231).

ம. தேவாரம்

தேவாரம் என்பது, இறைவனைப் பற்றிய இசைப்பாடல் என்று பொருள்படும். தே = தேவன். வாரம் = சொல்லொழுக்கமும் இசையொழுக்கமும் உள்ள பாடல்.

தேவாரம் பொதுவான கீர்த்தனை போலாது செந்தமிழ்ப் பாவும் பாவினமுமாக இருப்பது நோக்கத்தக்கது. தனியர் மட்டுமன்றி அவையோரும் சேர்ந்து பாடக் கூடியனவாகவும் எவரும் இன்புறும் இனிய இசையொடு கூடியனவாகவும் தேவாரப் பாடல்கள் அமைந்திருப்பது மிகப் போற்றத் தக்கதாகும் (த.இ.வ. 75).

**தேவாராதனை** *tēvārādaṉai,* பெ. (n.) கடவுள் வழிபாடு; worship, divine service (செ.அக.).

[தேவர் + ஆராதனை]

**தேவாலயம்** *tēvālayam,* பெ. (n.) 1. கடவுளர்க் குரிய கோயில்; temple, place of worship, church, sacred shrine, as Gods house. 2. மேரு மலை (யாழ்.அக.); mount Meru.

[தேவர் + ஆலயம்]

இக்காலத்து இச்சொல் பெரும்பாலும் கிறித்தவக் கோவிலைக் குறித்து நின்றது.

**தேவாவாசம்** *tēvāvāšam,* பெ. (n.) 1. கோயில்; temple. 2. அரசமரம்; pipal tree.

**தேவான்னம்** *tēvāṉṉam,* பெ. (n.) திருப்படையல் அமுது; boiled rice offered to a deity.

[தேவன் + அன்னம்]

**தேவி**[1] *tēvi,* பெ. (n.) 1. தெய்வமகள் (பிங்.); Goddess. 2. உமையம்மை (சூடா.); Goddess Umaiyammai. 3. காளிதேவி (சூடா); Goddess Kāli. 4. மூதேவி (m.m.208); Goddess of Misfortune. 5. பெரியம்மை (m.m.268); Goddess of smallpox. 6. மனைவி; wife. "மன்னவ னாருயிர் மாபெருந் தேவியே" (சீவக. 1403). 7. தலைவி; queen, princess, lady, a term of respect. "சித்திர தேவிப்பட்டந் திருமக னல்கினானே" (சீவக. 256).

ம. தேவி

[தேவன் (ஆண்பால்) → தேவி (பெண்பால்)]

**தேவி**[2] *tēvi,* பெ. (n.) 1. வாலை, சத்தியின் சிறு பெண் உருவம்; one of the form of Pārvati, ie a young girl. 2. கற்புடைப் பெண்; the first of the four classes of woman divided according to lust. 3. சீதேவியார் செங்கழுநீர்; a species of red India waterlily. 4. கற்பூர வல்லி; thick leaved lavender. 5. தேவதாரு பார்க்க; see *tēvatāru.* 6. குண்டலினி; serpent's power in the sacral region of the human body. 7. ஒருவகைப் புல்; a kind of cyprus grass. 8. ஒருவகைக் கடுக்காய்; a kind of gallnut (சா.அக.).

**தேவிக்குமுத்திரை** *tēvikku-muttirai,* பெ. (n.) தேவிமுத்திரை பார்க்க; see *tēvi-muttirai* (சா.அக.).

**தேவிகந்தம்** *tēvikandam,* பெ. (n.) கந்தகம்; sulphur (சா.அக.).

**தேவிகம்** *tēvigam,* பெ. (n.) பூம்பாதிரி; yellow flowered fragrant trumpet flower (சா.அக.).

**தேவிகல்பம்** *tēvikalpam,* பெ. (n.) சிவ பெருமான் சொல்ல, மலைமகள் எழுதியதாகக் கருதப்படும் ஓர் ஆயுர்வேத நூல்; a discourse on ayurvedic science as delivered by God Sivaṉ to his concert Pārvati which she has gifted (சா.அக.).

**தேவிகை**[1] *tēvigai,* பெ. (n.) ஓராறு; a river (இருநூ.).

**தேவிகை**[2] *tēvigai,* பெ. (n.) ஊமத்தைச் செடி வகை; trumpet flower nightshade.

**தேவிகோட்டம்** *tēvi-kōṭṭam,* பெ. (n.) காளி கோயில்; temple of Kāḷi.

*[தேவி + கோட்டம்]*

**தேவிசாரணை** *tēvi-śāraṇai,* பெ. (n.) சத்தி சாரணை; spreading haywood (சா.அக.).

**தேவிநாதம்** *tēvinādam,* பெ. (n.) 1. காந்தத்தினின்று எடுக்கும் ஈயம்; lead extract from magnet alchemically. 2. பூச்சு (அரிதாரம்); orpiment. 3. கருங்காக்கைப்பொன் (கிருட்டிண அப்பிரகம்); black mica (சா.அக.).

**தேவிமுத்திரை** *tēvimuttirai,* பெ. (n.) காசுமீரப் படிகம்; crystal stone of cashmare, a mineral (சா.அக.).

**தேவிமூலம்** *tēvi-mūlam,* பெ. (n.) சிறுபீளை பார்க்க; see *sirupīlai* (சா.அக.).

**தேவிமை** *tēvimai,* பெ. (n.) நாயகியாந் தன்மை; wifehood. "இவ்வுலக மூன்றுக்குந் தேவிமை தகுவார் பலருளர்" (திவ்.திருவாய். 6, 2, 6).

**தேவியச்சம்** *tēviyaccam,* பெ. (n.) கௌரியச்சம் பார்க்க; see *gawri-y-accam* (சா.அக.).

**தேவியர்** *tēviyar,* பெ. (n.) தேவி பார்க்க; see *dēvi.*

*[தேவி → தேவியர்]*

**தேவியர்குழாமும்பாவையர்ஈட்டமும்** *tēviyar kuḻamum-pāvaiyar-īṭṭamum,* பெ. (n.) அரசனின் மனைவியர் கூட்டமும், காமக் கிழத்தியர் கூட்டமும்; gang of king's wives, and his concubines. 'ஒப்பில் சத்தியவ்வை சாங்கப்பையென் றிவர் முதல் தேவியர் குழாமும், பாவையர் ஈட்டமுமிணையெனப் பிறவு முனைவயிற் கொண்டு (விசயராசேந்திரன் மெய்க்கீர்த்தி)

**தேவியார்**[1] *tēviyār,* பெ. (n.) தேவி பார்க்க; see *dēvi.*

*[தேவி → தேவியர் → தேவியார். 'ஆர்' - பலர்பால் ஈறு]*

**தேவியார்**[2] *tēviyār,* பெ. (n.) அரசனின் உரிமை மனைவியர்; அரசியர்; legal wives of the king. "பிரிதிவி கங்கரையர் தேவி அரிகண்டன் மகள் நங்கை மாணி" (தெ.க.தொ. 8, கல். 12).

*[தேவி + ஆர்]*

**தேவியுரம்** *tēviyuram,* பெ. (n.) கந்தகம்; sulphur (சா.அக.).

**தேவிரு** *tēviru,* பெ. (n.) 1. கொழுந்தன்; husband's younger brother. 2. முந்திய கணவன்; former husband (இருநா.).

**தேவில்** *tēvil,* பெ. (n.) தேவாலயம் பார்க்க; see *tēvālayam.* "கருவுடைத் தேவில்கள் எல்லாம்" (திவ்.திருவாய். 4, 4, 8).

*[தே → தேவு + இல்]*

**தேவிவிந்து** *tēvivindu,* பெ. (n.) கந்தகம்; sulphur (சா.அக.).

**தேவு** *tēvu,* பெ. (n.) 1. தெய்வம் (பிங்.); deity. "நரகரைத் தேவு செய்வானும்" (தேவா. 696, 2). 2. தெய்வத்தன்மை; godhead. "அயன்றிருமால் செல்வமு மொன்றோ வென்னச் செய்யுந்தேவே" (சி.சி. காப்பு. ஞானப், உரை).

*[தேய் → தேயு = நெருப்பு. தேய் → தேய்வு → தேவு = தெய்வம், தெய்வத்தன்மை (வ.வ. 17)]*

**தேவுளி** *tēvuḷi,* பெ. (n.) தேய்ந்த சிறிய உளி; chisel which is reduced much.

*[தேய் → தேவு → தேவு + உளி = தேவுளி]*

**தேவுறை** *tēvuṟai,* பெ. (n.) தேவர்கள் மருந்து; medicine used by tevar (சா.அக.).

**தேவேக்கியம்** *tēvēkkiyam,* பெ. (n.) ஓமம் (யாழ்.அக.); bishop's weed.

**தேவேசியம்** *tēvēśiyam,* பெ. (n.) வியாழன் (யாழ்.அக.); jupiter.

**தேவேத்தனம்** *tēvē-t-taṉam,* பெ. (n.) தெய்வச் செயல்; act of God providence.

**தேவேந்திரப்பொங்கல்** *tēvendira-p-poṅgal,* பெ. (n.) நெல்வகை; a kind of paddy.

**தேவேந்திரமாமுனி** *tēvēndira-mā-muṉi,* பெ. (n.) சிவசம்போதனை இயற்றிய சைன வாசிரியர்; a jaina ascetic, author of civacampōtaṉai (செ.அக.).



# தேள் வகைகள்

செந்தேள்

பார்ப்பாரத்தேள்

கருந்தேள்

சிறுதேள்

வாதத் தேள்

அரசத்தேள்

மண்டலித் தேள்

பித்தத் தேள்

**தேவேந்திரன்** *tēvēndiran*, பெ. (n.) தேவர்களுக்கு அரசன்; Indiran, the God of the celestials. "சிரபுரந் தேவேந்திரனூர்" (தேவா. 142,2) (செ.அக.).

**தேவேந்திரன்தங்கம்** *tēvēntiran-taṅgam*, பெ. (n.) தேவேந்திரனின் இருக்கையில் அமையப் பெற்ற 1008 மாற்றுப் பொன்; refined gold of 1008 matur or equivalent 2304 carats of pure gold (சா.அக.).

[தேவேந்திரன் + தங்கம்]

**தேவை**[1] *tēvai*, பெ. (n.) செயல்; affairs, business. "ஏவித் தேவைகொள்ளுதல்" (ஈடு. 8, 3, பிர) "தங்கள் தேவைகளுஞ் செய்யாதே" (சோழவமி. 65). 2. வற்புறுத்தல்; compelling need or necessity. "ஒரு தேவையிட்டிறே சொல்லிற்று" (ஈடு. 6, 10, 10). 3. விருப்பம்; desire. "தேவையுனக் கின்னதென்று செப்பாய்" (தாயு. பராபர. 247). 4. முடுக்கம் (யாழ்.அக.); haste. 5. அடிமைத் தனம்; slavery, bondage. "நீயுமுன் றேவைக் குரியைகாண்" (திவ்.பெரியாழ். 1,4,8). 6. மகட் கொடுத்தவர் திருமணத்தின் பின் மணமகனை அழைத்துச் செய்யும் முதல் விருந்து (இ.வ.); first wedding feast held in the parent's house of a bride.

**தேவை**[2] *tēvai*, பெ. (n.) இராமேசுவரம் பார்க்க; see *rāmēsuvaram*. "ஒரு தேவை வந்து பலதேவர் தாழு மிலக்குமணர் தண் புனலும்" (தேவை. 19) (செ.அக.).

**தேவை**[3] *tēvai*, பெ. (n.) கொள்ளுகை; getting.

[தெவு → தேவு → தேவை]

**தேள்** *tēḷ*, பெ. (n.) கொடுக்காற் கொட்டி வருத்தும் ஒருயிரி; scorpion. "தேட்கடுப்பன்ன நாட்படுதேறல்" (புறநா. 192, 16). தேளுக்குக் கொடுக்கிலே நஞ்சு, தேவடியாளுக்கு உடம்பிலே நஞ்சு, உனக்கோ உடம்பெல்லாம் நஞ்சு (பழ.), தேளுக்கு மணியம் கொடுத்தால் நாழிகைக்கு முந்நூறு முறை கொட்டும். (பழ.). 2. நளி ஓரை (பிங்) (சிலப். 3,123, உரை); scorpio in the zodiac (சா.அக.).

ம. தேள், தேரை; க. சேழ், தேழ்; தெ. தேலு; து. சேளு, தேளு; குட . தேளி; மா. தேலெ; பிரா. தேள்க்

[துள் → (தெள்) தேள் = குத்தும் நச்சுயிரி வகை (மு.தா. 130)]



வகை

1. கருந்தேள்
2. செந்தேள்
3. பார்ப்பாரத்தேள்
4. சிறு தேள்
5. அரசத் தேள்
6. உச்சிலிங்கத் தேள்
7. வாதத் தேள்
8. பித்தத் தேள்
9. சிலேட்டுமத் தேள்
10. மண்டலித் தேள்

**தேள்கடி** *tēḷ-kaḍi*, பெ. (n.) தேள் கொட்டு; the sting of scorpio (சா.அக.).

[தேள் + கடி]

**தேள்கல்** *tēḷkal*, பெ. (n.) ஒரு வகை நச்சுக்கல்; scropion stone on mineral bezoar (சா.அக.).

**தேள்கெண்டை** *tēḷ-keṇḍai*, பெ. (n.) ஒருவகைக் கெண்டை மீன்; scorpio goby.

[தேள் + கெண்டை]



**தேள்கெளுத்தி** *tēḷ-keḷutti,* பெ. (n.) தேள் போலுந் தோற்றமுடைய கெளுத்தி மீன்; fish resembles scorpion in structure.

*[தேள் + கெளுத்தி]*

**தேள்கொட்டு-தல்** *tēḷ-koṭṭu-,* 15 செ.குன்றாவி. (v.t.) தேள் கடித்தல்; the stinging of a scorpion (சா.அக.).

*[தேள் + கொட்டு-.]*

**தேள்கொடுக்கி** *tēḷ-koḍukki,* பெ. (n.) ஒருவகைப் பச்சிலை; devils claw tigers claw, scorpion sting martynia diandro, a bushy plant of 3-4 ft. high with large coarse leaves.

*[தேள் + கொடுக்கி]*

**தேள்கொடுக்கு** *tēḷ-koḍukku,* பெ. (n.) தேள் முள்; sting of a scorpion (சா.அக.).

*[தேள் + கொடுக்கு]*



**தேள்கொடுக்குஇணைப்பு** *tēḷ-koḍukku-iṇaippu,* பெ. (n.) கட்டட வேலைகளில் விட்டம் (கிராதி), சாத்து, அலகு இவை சேதமடையாமல் பொருத்துவதற்குப் பயன்படும் இணைப்பு; joint used in the building construction.

*[தேள் + கொடுக்கு + இணைப்பு]*

**தேள்தண்டட்டி** *tēḷ-taṇṭaṭṭi,* பெ. (n.) புறக் காதில் உருக்குமணியணிக்கு மேலிடத்தில் மகளிரணியும் காதணி வகை; a kind of ear-ring, worn by women above the urukkumaṇi (செ.அக.).

*[தேள் + தண்டட்டி]*

**தேள்மண்டலி** *tēḷ-maṇḍali,* பெ. (n.) மிக நஞ்சுள்ள தேள்; a scorpion with a very poisonous sting (சா.அக.).

**தேள்மீன்** *tēḷmīṉ,* பெ. (n.) விசிறி போல் விரிந்து காணப்படுவதோர் மீன்; fish which has fern like wings.

*[தேள் + மீன்]*

தேள் போன்று நச்சுதன்மையுடைய மீன் (மீனவ.) இது மெல்ல நீந்தும். சிவப்பும், பழுப்பும் கலந்த இம்மீனை உண்ணவியலாது.



**தேளக்கனம்** *tēḷakkaṉam,* பெ. (n.) தேளைக் கனம் பார்க்க; see *tēḷaikaṉam* (செ.அக.).

**தேளப்பாறை** *tēḷa-p-pāṟai,* பெ. (n.) தேளைப் போன்ற தோற்றமுடைய பாறை மீன்; pāṟai fish which resemble scorpion in structure.

*[தேள் + பாறை]*

**தேளி**[1] *tēḷi,* பெ. (n.) தேள் போன்று கவ்வு முறுப்புக் கொண்டதும் ஓர் அடிக்குமேல் வளர்வதும் ஈயவெண்மை நிறமுடையதுமான நச்சு மீன் வகை; scorpion fish, leaden, attaining more than one ft. in length, poisonous and having rippers like a scorpion. "அயிரையுந் தேளியு மாராலுங் கொத்தியே" (குற்றா. குற. 91, அனுபல்).

**தேளி**[2] *tēḷi,* பெ. (n.) *1.* திரளி மீன்; a short flat headed eel. *2.* கிழாத்தி; a fresh-water shark of cal fish family. *3.* தேட் கெண்டை; scorpion gobi. *4.* தேள்; scorpion (சா.அக.).

ம. தேள் மத்ச்யம்

*[தேள் → தேளி = தேள் போற் கொட்டும் மீன் (முதா. 120)]*

**தேளி**[3] *tēḷi,* பெ. (n.) தேளித் தேங்காய்; a kind of red coconut (சா.அக.).

ம. தேளி

**தேளிலை** *tēḷilai,* பெ. (n.) *காஞ்சொறி;* scorpion leaf (சா.அக.).

**தேளீ** *tēḷi,* பெ. (n.) *எரிவண்டு;* blistering fly (சா.அக.).

*[தேள் + ஈ]*

தேள் கொட்டியதைப் போன்ற எரிச்சல் உண்டாக்குவதால் இப்பெயர்

**தேளுக்கொட்டி** *tēḷu-k-koṭṭi,* பெ. (n.) தேட்கொடுக்கி; scorpion sting (சா.அக.).

*[தேள் + கொட்டி]*

**தேளேறு** *tēḷēṟu,* பெ. (n.) தேட்கொட்டு; sting of a scorpian. "வேலேறுபடத் தேளேறு மாய்ந்தாற்போல" (இறை. 2, பக். 39).

**தேளை** *tēḷai,* பெ. (n.) **நெஞ்சத் துடிப்பு** (நாஞ்.); palpitation of heart.

ம. தேள (இதயம்)

**தேளைக்கனம்** *tēḷai-k-kaṉam,* பெ. (n.) நெஞ்சுரப்பு (நாஞ்.); hardihood.

*[தேளை + கனம்]*

**தேற்காலி** *tēṟkāli,* பெ. (n.) **தேறுவம்** பார்க்க; see *tēṟuvam* (சா.அக.).

**தேற்றம்**[1] *tēṟṟam,* பெ. (n.) 1. **உறுதி;** certainty; assurance; determination. "தேற்றம் வினாவே" (தொல்.சொல். 259). 2. **தெளிவு;** clearness. "தேற்றச்சொற் றேர்வு" (நாலடி, 259). 3. **மனங்கலங்காமை;** presence of mind. "தேற்ற மவா வின்மை" (குறள், 513). 4. **ஆறுதல்;** comfort, consolation. 5. **சூளுறவு;** oath. "தீராத் தேற்றம்" (தொல்.பொருள். 102). 6. **செழிப்பு;** thriving, luxuriant growth. "தேற்றமான பயிர்".

*[தேறு → தேற்றம்]*

**தேற்றம்**[2] *tēṟṟam,* பெ. (n.) கோட்பாடு; theory. பித்தகோரசு தேற்றம்

**தேற்றமானவன்** *tēṟṟamāṉavaṉ,* பெ. (n.) 1. **துணிவுடையோன்;** courageous person. 2. **உடம்பு தேறினவன்;** invalid picking up strength; convalescent.

*[தேற்றம் + ஆனவன்]*

**தேற்றரவாளன்** *tēṟṟaravāḷaṉ,* பெ. (n.) தேற்றரவாளி (யாழ்அக.) பார்க்க; see *tēṟṟaravāḷi* (செ.அக.).

*[தேற்றரவாளி → தேற்றரவாளன்]*

**தேற்றரவாளி** *tēṟṟaravāḷi,* பெ. (n.) 1. **திடமுடையவன்** (யாழ்அக.); strong person. 2. **ஆறுதல் சொல்வோன்** (வின்.); comforter, consoler, encourager. 3. **தூய நல்லாவி;** the Holy Spirit (chr.).

**தேற்றரவு** *tēṟṟaravu,* பெ. (n.) தேற்றம் பார்க்க; see *tēṟṟam.*

**தேற்றல்** *tēṟṟal,* பெ. (n.) 1. **தெளிவடையச் செய்தல்;** effecting a cure in ones ailment. 2. **மெலிந்த உடம்பைத் தெளியும்படிச் செய்தல்;** feeding or supplying with nutriment to promote growth especially in an emaciated patient, nourishing the patient (சா.அக.).

*[தேறுதல் → தேற்றுதல் → தேற்றல்]*

**தேற்றன்** *tēṟṟaṉ,* பெ. (n.) **உண்மையறிவுள்ளவன்;** a person of true knowledge. "தேற்றனே தேற்றத் தெளிவே" (திருவாச. 1, 82).

**தேற்றன்மை** *tēṟṟaṉmai,* பெ. (n.) **தெளிவு;** certainty, clearness. "என்ன லதிலனென் றன்னதோர் தேற்றன்மைதானோ" (திவ். பெரியதி. 10, 9,9).

*[தேற்றல் + மை]*

**தேற்றா** *tēṟṟā,* பெ. (n.) தேற்றாமரம் **அதாவது** தேத்தான் கொட்டை மரம்; clearing nut tree. "தேற்றாவினுடைய விதையைக் கொண்டு கலத்தே மெல்லத்தேற்றக் கலங்கிய நீரிற் சிதைவு தெளியுமாறு போல" (கலித். 142, உரை.)

**தேற்றாங்கொட்டை** *tēṟṟāṅkoṭṭai,* பெ. (n.) **கலங்கனீரைத் தெளியச் செய்யும் தேற்றாவிதை;** clearing nut, used for clearing turbid water.

*[தேற்றான் + கொட்டை]*

**தேற்றாங்கொட்டைஇளகியம்** *tēṟṟāṅ-koṭṭai-iḷagiyam,* பெ. (n.) தேற்றான் கொட்டையில் செய்த மருந்து; a medicine prepared with clearing nut.

*[தேற்றான்கொட்டை + இளகியம்]*

**தேற்றாம்பொடி** *tēṟṟāmpoḍi,* பெ. (n.) தேற்றாங் கொட்டையிற் செய்த மருந்துப் பொடி; medicinal powders of tēṟṟāṅ-koṭṭai.

*[தேற்றாம் + பொடி]*

**தேற்றார்** *tēṟṟār,* பெ. (n.) 1. அறிவிலி; the ignorant. 2. பகைவர்; foes, enemies.

*[தேற்று + ஆ + அர். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தேற்றாவொழுக்கம்** *tēṟṟā-v-oḻukkam,* பெ. (n.) ஐயுறத்தக்க தீயொழுக்கம்; doubtful, shady conduct. "தேற்றா வொழுக்க மொருவன்க ணுண்டாயின்" *(நாலடி, 75).*

*[தேற்று + ஆ + ஒழுக்கம்]*

**தேற்றான்மரம்** *tēṟṟāṉ-maram,* பெ. (n.) தேற்றா (தைலவ.தைல.) பார்க்க; see *tēṟṟā.*

ம. தேற்றாமரம்

*[தேற்றா + மரம்]*

**தேற்றான்விதை** *tēṟṟāṉ-vidai,* பெ. (n.) தேத்தான்கொட்டை பார்க்க; see *tēttāṉ-koṭṭai* (சா.அக.).

ம. தேற்றான்கொட்ட

*[தேற்றான் + விதை]*

**தேற்று[1]-தல்** *tēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தெளிவித்தல்; to make clear, convince, assure, relieve from doubt. "தையால் தேறெனத் தேற்றி" *(கலித். 144).* 2. தெளிந்தறிதல்; to know, understand. "இரத்தலும் ஈதலே போலும் கரத்தல் கனவிலுந் தேற்றாதார் மாட்டு" *(குறள், 1054).* 3. சூளுறுதல்; to swear, take an oath. "தேரோடுந் தேற்றிய பாகன்" *(கலித். 71).* 4. தேற்றாவிதையால் நீர்தெளியச் செய்தல்; to clear, clarify, as with tēṟṟā-ṅ-koṭṭai. "தேற்றுவித்தாற் புனல் தேற்றுநர்போல்" *(அஷ்டப். அழகர்கலம், 85).* 5. தூய்மை செய்தல்; to refine. 6. ஆற்றுதல்; to comfort, console. 7. வலுவுண்டாக்குதல்; to communicate strength; to nourish, cherish, invigorate. 8. துணிவேற்றுதல் (இவ.); to encourage, hearten. 9. குணமாக்குதல்; to cure, give relief.

ம. தேற்றுக

*[தெள் → தெரி → தேர் → தேறு = தெளிவு. தேறுதல் = தெளிதல். தேறு → தேற்று (மு.தா. 145)]*

**தேற்று[2]** *tēṟṟu-,* பெ. (n.) 1. தெளிவிக்கை; making clear. 2. தெளிவு; becoming clear. "செஞ்சொற் பொருளின் றேற்றறிந் தேனே" *(சிவப். பிரபந். நால்வர். 28).* 3. தேற்றா (பிங்.); cleaning-nut tree. "தேற்றின் வித்திற் கலிங்குநீர் தெளிவ தென்ன" *(ஞானவா. தாமவியா. 3).*

*[தெள் → தெரி → தேறு → தேற்று (மு.தா. 145)]*

**தேற்றுகம்** *tēṟṟugam,* பெ. (n.) இலவு; silk cotton (சா.அக.).

**தேற்றுமருந்து** *tēṟṟu-marundu,* பெ. (n.) உடம்பை வலுப்படுத்தும் மருந்து; any invigorating specific-tonic (சா.அக.).

*[தேற்றும் + மருந்து]*

**தேற்றுமாடு** *tēṟṟu-māḍu,* பெ. (n.) உணவு முதலியவற்றால் உடலைத் தேற்றி விற்கும் மாடு (இ.வ.); bull or cow fattened or soiled for sale.

*[தேற்றும் + மாடு]*

**தேற்றேகாரம்** *tēṟṟē-kāram,* பெ. (n.) உறுதிப்பாட்டினையுணர்த்துமேகாரம் (குறள், 261, உரை); the particle 'ē' expressing emphasis or certainty.

*[தேற்றம் + ஏகாரம்]*

**தேற** *tēṟa,* வி.எ. (adv.) கடைபோக; thoroughly. தேற உசாவ வேண்டும்.

*[தேறு → தேற]*

**தேறகம்** *tēṟagam,* பெ. (n.) தேரகம் பார்க்க; see *tēragam.*

*[தேரகம் → தேறகம்]*

**தேறம்** *tēṟam,* பெ. (n.) மிகுதியாயிருப்பது; that which exceeds. ஒரு கல் தொலைவுக்குத் தேறமாயிருக்கும் (செ.அக.).

*[தேற்றம் → தேறம்]*

**தேறல்** *tēṟal,* பெ. (n.) 1. தெளிவு (பிங்.); clearness. 2. தெளிந்த கள்; pure, clarified toddy. "தேக்கட் டேறல்" (புறநா. 115). 3. தேன்; honey. "மலர்த்தேற லூறலின்" (தேவா. 94, 3). 4. சாறு; clarified juice. "ஆனெயைக் கரும்பினின் றேறலை" (திருவாச. 5: 38) (செ.அக.).

ம. தேறல்; க. தேட, தேடெ; தெ. தேட; து. தேடு

*[தேறு → தேறல்]*

**தேறலர்** *tēṟalar,* பெ. (n.) தேறார் பார்க்க; see *tēṟār.*

*[தேறு + அல் + அர். 'அல்' எதிர்மறை இடைநிலை]*

**தேறலார்** *tēṟalār,* பெ. (n.) தேறார் பார்க்க; see *tēṟār.* "தேறலார் தமைத் தேறலும்" (பாரத. சூது. 72).

*[தேறு + அல் + ஆர். 'அல்' எதிர்மறை இடைநிலை]*

**தேறாங்குனி** *tēṟāṅguṉi,* பெ. (n.) பெரிய நெத்திலி மீன்; anchovy fish.

**தேறார்** *tēṟār,* பெ. (n.) 1. பகைவர்; enemies. 2. அறியாதார்; ignorant person.

*[தேறு + ஆ + ஆர் → தேறார். 'ஆ' எதிர்மறை இடைநிலை புணர்ந்து கெட்டது]*

**தேறினகட்டை** *tēṟiṉakaṭṭai,* பெ. (n.) தேறினவன் பார்க்க; see *tēṟiṉavaṉ.*

*[தேறு → தேறின + கட்டை]*

**தேறினகாய்** *tēṟiṉakāy,* பெ. (n.) முற்றின காய்; mature green fruit.

*[தேறு → தேறின + காய்]*

**தேறினர்** *tēṟiṉar,* பெ. (n.) ஆராய்ந்து கொண்ட நண்பர்; tested or tried friends. "தேறினர்த் தேறலாமையும்" (பாரத. சூது. 72).

*[தேறு → தேறினர்]*

**தேறினவன்** *tēṟiṉavaṉ,* பெ. (n.) 1. பட்டறிவு மிக்கவன்; person of experience. 2. கலை முதலியவற்றில் தேர்ச்சி பெற்றவன்; one well versed in an art; an adept.

*[தேறு → தேறினவன்]*

**தேறு**[1]**-தல்** *tēṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. தெளிதல்; to be accepted as true. "ஒற்றுஒற்று உணராமை ஆள்க உடன்மூவர் சொற்றொக்க தேறப்படும்" (குறள், 589). 2. நீர் தெளிதல்; to be clarified, made clear, as water. "தேறுநீர் சடைக்கரந்து" (கலித். கடவுள் வாழ்.). 3. மயக்கந் தெளிதல்; to be strengthened; to be recover from swooning, from intoxication or from drooping. 4. முதிர்தல்; to be thorough, accomplished, mature, as the mind, to reach perfection. "தேறின அறிவு" (வின்.). 5. செழித்தல்; to thrive, improve, flourish, as vegetation. "தேறின பயிர்" (வின்.). 6. ஆறுதல்; to be comforted, consoled, solaced, soothed. 7. துணிவு கொள்ளுதல்; to cheerup, take courage. 8. தேர்ச்சியடைதல்; to be successful in examination. தேர்வில் தேறினான். 9. சொல் நிறைவேறுதல் (பலித்தல்); to prove; to result, amount to, as profit; to turn out. அந்த வணிகத்தில் இவ்வளவு வரும்படி தேறும். 10. சோறு முதலியன விறைத்தல் (வின்.); to become stiff, hard, as boiled rice, fruits. 11. தங்குதல் (வின்.); to stay, abide.

ம. தேறுக; க. தேட, தேடெ; தெ. தேறு; து. தேரு; கோத. தேர்

**தேறு**[2]**-தல்** *tēṟu-,* 5 செகுன்றாவி. (v.t.) 1. நம்புதல்; to trust, confide in, believe. "தேற்றாது செய்வார்களைத் தேறுதல் செவ்வி தன்றால்" (கம்பரா. வாலிவ. 33). 2. துணிதல்; to decide. "தேறுவ தரிது" (கம்பரா. மாயாசீதை. 89). 3. கூடுதல்; to unite with, arrive at. "தேறினும் தேறாவிடினும் அழிவின்கட் டேறான் பகாஅன் விடல்" (குறள், 876).

தெ. தேறு

**தேறு**[3] *tēṟu,* பெ. (n.) 1. தெளிவு; clearness. 2. உறுதி (சூடா.); certainty. 3. தேற்றா பார்க்க; see *tēṟṟā.* "மடிந்த தேறு பொடிந்தவேல்" (கலிங். 65). 4. தேற்றாங்கொட்டை பார்க்க; see *tēṟṟāṅgoṭṭai.* "தேறுபடு சின்னீர் போல" (மணிமே. 23:142).

*[தெள் → தெரி → தேர் → தேறு = தெளிவு. தேறுதல் = தெளிதல். தேறு - நீரைத் தெளிவிக்கும் தேற்றாங்கொட்டை (மு.தா. 145)]*

**தேறு**[4] *tēṟu-,* பெ. (n.) **கொட்டுகை;** sting, as of a wasp. "கடுந்தே றுறுகிளை" *(பதிற்றுப். 71:6).*

*[தெறு → தேறு]*

**தேறு**[5] *tēṟu,* பெ. (n.) **துண்டு;** piece. "கண்ட சருக்கரைத் தேற்றையும்" *(மதுரைக். 532, உரை).*

*[தெறி → தேறி → தேறு]*

**தேறுகடை** *tēṟu-kaḍai,* பெ. (n.) **தீர்மானம்** *(வின்.);* decision, settlement. அவன் அவ்வாறு தேறுகடை பண்ணினான் *(உ.வ.).*

தெ. தேருகட; க. தேருகடெ

*[தேறு + கடை]*

**தேறுசூடு** *tēṟu-šūḍu,* பெ. (n.) 1. **மாடு முதலியன தேறுவதற்காகச் சூடிடுகை;** branding cattle to promote their fattening. 2. **ஆடுமாடுகட்கு இடுஞ் சூடு;** brand on cattle.

*[தேறு + சூடு]*

**தேறுதலை** *tēṟu-talai,* பெ. (n.) 1. **துணிவு;** courage, encouragement. 2. **ஆறுதல்;** comfort. "தேறுதலைச் சொல்வார் சிலரில்லை" *(தனிப்பா.).*

**தேறுதி** *tēṟudi,* பெ. (n.) **தேற்றாமரம்** பார்க்க; see *tēṟṟā-maram (சா.அக.).*

**தேறுநர்** *tēṟunar,* பெ. (n.) 1. **கற்றோர்** *(வின்.);* the learned. 2. **நம்பத்தக்கவர்** *(வின்.);* trustworthy persons. 3. **சேர்ந்தோர்** *(யாழ்.அக.);* relatives.

*[தேறு → தேறுநர்]*

**தேறுமுகம்** *tēṟu-mugam,* பெ. (n.) **பற்றுக்கோடு;** support, comfort. "தேறுமுகமின்றித் திரிந்தேமையாள" *(கந்தபு. தேவர்கள்போற். 4).*

*[தேறு + முகம்]*

**தேறுவம்** *tēṟuvam,* பெ. (n.) **பூனைக்காலி;** cowiter plant *(சா.அக.).*

**தேறுவான்** *tēṟuvāṉ,* பெ. (n.) **சித்தரில் தேறியவர்;** an expert scholar a chief amongst the Siddhars *(சா.அக.).*

*[தேறு → தேறுவான்]*

**தேறை** *tēṟai,* பெ. (n.) **மீன்வகை** *(யாழ்.அக.);* a kind of fish.

**தேன்** *tēṉ,* பெ. (n.) 1. **மது;** honey. "பாலொடு தேன்கலந் தற்றே பணிமொழி வாலெயிறு ஊறியநீர்" *(குறள், 1121).* தேன் உள்ள இடத்தில் ஈ மொய்க்கும் *(பழ.).* 2. **கள்** *(சூடா.);* toddy. 3. **இனிமை;** sweetness. "தேனுறை தமிழும்" *(கல்லா. 9).* தேனே போலும் செந்தமிழ்க் கல்வி *(பழ.).* 4. **இனிப்புச் சாறு;** sweet juice. "ஆலைவாய்க் கரும்பின் றேனும்" *(கம்பரா. நாட். 9).* 5. **மணம்** *(சூடா.);* fragrance, odour. "அகிற்புகையளைந்து தேனளாய்ப் பஞ்சுடையமளிமேற் பள்ளி யேற்பவன்" *(சூளா. குமர. 17).* 6. **வண்டு வகை** *(திவா.);* a kind of beetle or bee. 7. **பெண்வண்டு** *(சூடா.);* a female beetle or bee. "தேனோ டினவண்டுமு பூந்தெரியலாய்" *(உபதேசகா. சூராதி. 4).* 8. **தேனிறால்;** honey-comb. "தீந்தே னெடுப்பி" *(ஐங்குறு. 272).*

ம., கோத. தேன்; க. தேனு, சேனு; தெ. தேனெ; து. தீய; குட. தேனி; துட. தோன்; கொலா., நா. தேனெ; பர். தீன்நெய்; கட. தீன், தீனு; மா. தெனி; பிரா. க னேன்; பட. சேனு

Pkt. tiniša

*[தெல் → தென் → தேன்]*

தேன் என்னும் சொல்லின் வேர்ப்பொருள் தெளிவு (தெளிந்தது) என்பதே.

தேன் என்னும் சொல் தெளிவு என்னும் வேர்ப்பொருள் கொண்ட தென்சொல் லென்றும்; அது முறையே தேம் → தீம் → தீவு எனத் திரியுமென்றும்; தீ என்னும் பகுதி இரட்டிக்குமிடத்துத் தித்தி என மருவிப் புணருமென்றும்; தமிழ்ச் சொற்களைத் தமிழடிப்படையாகவே ஆய்தல் வேண்டுமென்றும்; பண்டைத் தனித்தமிழ் நூல்களும் பல்லாயிரக்கணக்கான தென்சொற்களும் மறைந்து, இன்றுள்ள இலக்கண நூல்களும் விளங்காதவிடத்து, மொழித் திறத்தின் முட்டறுப்பது மொழிநூலேயென்றும்; கள், மது என்னும் சொற்கள் மயக்குவது என்பதை வேர்ப்பொருளாகக் கொண்ட தென் சொற்களென்றும்; தமிழே திரவிடமாகத் திரிந்துள்ளதென்றும்; வடமொழியில் வழங்குந் துணையானே ஒரு சொல் வடசொல்லாகிவிடாதென்றும்; தெற்றெனத் தெரிந்து கொள்க (குயில், 25.8.1959).

**வகைகள்**

1. கொம்புத் தேன்
2. கொசுத்தேன்
3. பாகுத் தேன்
4. கதண்டுத் தேன்

5. மலைத் தேன்.
6. மரப்பொந்துத்தேன்
7. புற்றுத் தேன்
8. மனைத் தேன்
9. இறால் தேன்
10. குறிஞ்சித் தேன்
11. சிறுதேன்
12. பெருந்தேன் *(சா.அக.)*

**தேன்கட்டை** *tēṉkaṭṭai,* பெ. (n.) யானை நெரிஞ்சில்; elephant caltrope *(சா.அக.).*

**தேன்கடல்** *tēṉ-kaḍal,* பெ. (n.) கட்கடல்; sea of toddy.

*[தேன் + கடல்]*

**தேன்கதலி** *tēṉ-kadali,* பெ. (n.) வாழை வகை *(மூ.அ.);* a kind of plantain.

ம. தேன்கதளி

*[தேன் + கதலி]*

**தேன்கல்** *tēṉkal,* பெ. (n.) திருமணி (கோமேதகம்); cinnamon stone.

*[தேன் + கல். தேன் போலும் வெளிர் மஞ்சள் நிறமுடைய கல்மணி]*

**தேன்களிம்பு** *tēṉ-kaḷimbu,* பெ. (n.) தேன்மெழுகு; bees-wax.

*[தேன் + களிம்பு]*

**தேன்கற்கண்டு** *tēṉ-kaṟkaṇḍu,* பெ. (n.) இறுகிய தேன்கட்டி *(பதார்த்த. 190);* crystalline honey-sugar.

*[தேன் + கல் + கண்டு]*

**தேன்கற்பம்** *tēṉ-kaṟpam,* பெ. (n.) தேனை மண்ணில் புதைத்து வைத்துக் கட்டியான வுடன் எடுத்து முறைப்படிக் கொள்ளும் காயமருந்து; honey crystallised by keeping it burried under the earth and then taken but for use in rejuvenating medicine *(சா.அக.).*

*[தேன் + கற்பம்]*

**தேன்காய்** *tēṉ-kāy,* பெ. (n.) 1. தேன்பச்சை பார்க்க; see *tēṉ-paccai.* 2. தேன்பூச்சிக்காய் பார்க்க; see *tēṉpūcci-k-kāy (சா.அக.).*

*[தேன் + காய்]*

**தேன்குடுக்கை** *tēṉ-kuḍukkai,* பெ. (n.) தேன் அடைத்துவைத்திருக்கும் மூங்கிற்கூடு; bamboo container for storing honey.

*[தேன் + குடுக்கை]*



**தேன்குழல்** *tēṉ-kuḻal,* பெ. (n.) உளுந்தமா, அரிசிமாவினால் முறுக்குப் போலச் செய்யப்படும் சிற்றுண்டி வகை; a preparation made out of the flours of black gram and rice in the proportion of 1:4 and ghee. "தேன் குழலுக்காரி வடையிலட்டுகம்" *(விநாயகபு. 39, 39).*

ம. தேன்குழல்

*[தேன் + குழல்]*

**தேன்குழாய்**[1] *tēṉ-kuḻāy,* பெ. (n.) தேன்குழல் *(மூ.அ.)* பார்க்க; *tēṉ-kuḻal.*

*[தேன் + குழாய்]*

**தேன்குழாய்**[2] *tēṉ-kuḻāy,* பெ. (n.) தேனீ கட்டும் மெழுகினால் செய்த கூண்டு; bee-hive made of wax *(சா.அக.).*

*[தேன் + குழாய்]*

**தேன்கூட்டுக்கட்டு** *tēṉ-kūṭṭu-k-kaṭṭu,* பெ. (n.) தேன்கூடு போன்று இடைவெளி விட்டு



4 ½ விரல அகலத்தில் சுற்றுச் சுவராக அமையும் கட்டுமானம்; place built like a bee hive, learning 4½ inches in breath in the circular wall; honey-comb wall.

*[தேன் + கூடு + கட்டு]*

**தேன்கூடு** *tē͟n-kūdu*, பெ. (n.) 1. தேனிறால்; honey comb. 2. தேன்கூட்டின் உள்ளறை (வின்); cells in a bee-hive. 3. தேனீத் தங்கும் கூடு (வின்.); bee-hive.

ம. தேன்கூடு; க. சேணுகூடு

*[தேன் + கூடு]*

**தேன்சிட்டு** *tē͟n-cittu*, பெ. (n.) தேன்நிறமுள்ள சிட்டுக்குருவி; a sparrow of the colour of honey (சா.அக.).

*[தேன் + சிட்டு]*



**தேன்சுவைமருந்து** *tē͟n-šuvai-marundu*, பெ. (n.) தேனைப் போலச் சுவையுடைய மருந்து; any medicine which has the consistence and sweetness as honey (சா.அக.).

*[தேன் + சுவை + மருந்து]*

**தேன்சேரான்** *tē͟nšērā͟n*, பெ. (n.) சேங்கொட்டை வகை; glabrous marking nut.

**தேன்தட்டு** *tē͟n-tattu*, பெ. (n.) தேனடை; honey comb (சேரநா.).

ம. தேன்தட்டு

*[தேன் + தட்டு]*

**தேன்தொடை** *tē͟n-todai*, பெ. (n.) தேன்தோடம் பழம் பார்க்க; see *tē͟n-tōdam-palam*.

*[தேன் + தொடை]*

**தேன்தோடம்பழம்** *tē͟n-tōdam-palam*, பெ. (n.) தித்திப்புக் கிச்சிலி; sweet orange (சா.அக.).

*[தேன் + தோடம் + பழம்]*

**தேன்தோடை** *tē͟n-tōdai*, பெ. (n.) தேன்றோடை பார்க்க; see *tē͟nrōdai*.

**தேன்பச்சை** *tē͟n-paccai*, பெ. (n.) அக்கமணி (உருத்திராக்க) மரம்; honey fruit tree (சா.அக.).

*[தேன் + பச்சை]*

**தேன்பதமாய்க்காய்ச்சு-தல்** *tē͟n-padamāi-k-kāiccu-*, 5 செ.குன்றாவி. (v.t.) தேனைப் போல் சிவந்த பாகுபதமாய்க் காய்ச்சுதல்; boiling a liquid till it attains the colour and the consistency of honey (சா.அக.).

*[தேன் + பதம் + ஆய் + காய்ச்சு-.]*

**தேன்பயில்பொதும்பு** *tē͟n-payil-podumbu*, பெ. (n.) தேன் கூடுகள் நிறைந்த வளமான சோலை; grove where bee-hives are found in large amount. "மீன் பயில் பள்ளமும் தேன் பயில் பொதும்பும்" (பெரிய லெய்டன் செப்பேடுகள்)

*[தேன் + பயில் + பொதும்பு]*

**தேன்பருந்து** *tē͟n-parundu*, பெ. (n.) பருந்து வகை; crested honey buzzard (செ.அக.).

*[தேன் + பருந்து]*

**தேன்பலா** *tē͟n-palā*, பெ. (n.) தேனொழுகும் பலாப்பழம்; honey dripping common jack fruit (சா.அக.).

*[தேன் + பலா]*

**தேன்பாகு** *tē͟n-pāgu*, பெ. (n.) தேனைப் போன்ற வெல்லப்பாகு அதாவது வைப்புத் தேன்; an artificial honey like syrup prepared from sugar or jaggery (சா.அக.).

*[தேன் + பாகு]*

**தேன்பாசி** *tē͟n-pāši*, பெ. (n.) கடற்பாசி; sea weed (சா.அக.).

*[தேன் + பாசி]*

**தேன்பிராக்கு** *tē͟n-pirākku*, பெ. (n.) சேரான் கொட்டை; marking nut (சா.அக.).


தேன் பருந்து


தேன்சிட்டு




தோல் குருவி


தோட்டக்கள்ளன்

**தேன்பூ** *tēṉ-pū,* பெ. (n.) தின்பூ பார்க்க; see *tiṉ-pū* (சா.அக.).

ம. தேன்பு

*[தேன் + பூ]*

**தேன்பூச்சிக்காய்** *tēṉ-pūcci-k-kāy,* பெ. (n.) தூண் மரத்தின் காய்; fruit of white cedar tree (சா.அக.).

**தேன்பூச்சிமரம்** *tēṉ-pūcci-maram,* பெ. (n.) ஆயா பார்க்க; see *āyā.*

**தேன்மண்டலம்** *tēṉ-maṇḍalam,* பெ. (n.) கொண்டலாந்தி மரம்; a tree (சா.அக.).

**தேன்மரம்** *tēṉ-maram,* பெ. (n.) நுணாமரம் (இங்.வை) பார்க்க; see *nuṇā-maram* (செ.அக.).

*[தேன் + மரம்]*

**தேன்மிருதிகம்** *tēṉ-mirudigam,* பெ. (n.) சாறாயம்; honey coloured liquior or spirit-brandy.

*[தேன் + மிருதிகம்]*

**தேன்மெழுகு** *tēṉ-meḻugu,* பெ. (n.) தேனடையிலுள்ள மெழுகு; bees-wax.

ம. தேன்மெழுகு

*[தேன் + மெழுகு]*

**தேன்மொழி** *tēṉ-moḻi,* பெ. (n.) 1. தேன் போன்ற இனிமையான பேச்சு; words as sweet as honey. தென்மொழி தேன்மொழி. 2. இனிய மொழியை உடையவள்; a woman of sweet words.

ம. தேன்மொழி

*[தேன் + மொழி]*

**தேன்வதை** *tēṉ-vadai,* பெ. (n.) தேன்கூடு (யாழ்ப்.); honey comb.

*[தேன் + வதை. பதி = பதிவாயிருக்கும் இடம், வீடு, ஊர், நகர். பதி → வதி → வசி → வாசம். பதி → வதி → வதை]*

**தேன்வளையல்** *tēṉ-vaḷaiyal,* பெ. (n.) பூநீறு; efflorescent salt found in the soil of fuller's-earth (சா.அக.).

**தேன்றாடு** *tēṉ-ṟāḍu,* பெ. (n.) தேனிறால் (நாஞ்.) பார்க்க; see *tēṉiṟāl.*

**தேன்றோடம்** *tēṉṟōḍam,* பெ. (n.) தித்திப் பெலுமிச்சை; sweet lime (செ.அக.).

*[தேன் + தோடம்]*

**தேன்றோடை** *tēṉṟōḍai,* பெ. (n.) கிச்சிலி வகை; mandarin orange (செ.அக.).

**தேனகக்குடிச்சி** *tēṉaga-k-kuḍicci,* பெ. (n.) கதண்டுக்கல்; stone in the head of wild beetle (சா.அக.).

புதையலைக் கண்டுபிடிக்கும் மந்திரத்தில் இதைப் பயன்படுத்துவர்.

**தேனகம்** *tēṉagam,* பெ. (n.) 1. மராமரம்; common soul. 2. ஒருவகைக் கடம்பு; white Indian oak (சா.அக.).

**தேனஞ்சு** *tēṉañju,* பெ. (n.) ஐயமுதம் (பஞ்சாமிர்தம்); mixture of five delicious substances. "தேனஞ்சாடிய தெங்கிள நீரொடு" (தேவா. 1020, 10).

*[தேன் + (ஐந்து) → அஞ்சு]*

**தேனடை** *tēṉ-aḍai,* பெ. (n.) தேனிறால் பார்க்க; see *tēṉ-iṟāl.*

ம. தேனட, தேன்தட்டு, க. சேனகுட்டி

*[தேன் + அடை]*

**தேனத்தி** *tēṉ-atti,* பெ. (n.) சீமையத்தி; common cultivated fig (செ.அக.).

*[தேன் + அத்தி]*

இம்மரத்தின் பழத்திலிருந்து தேன் போன்ற நீர்மம் எடுக்கப்படுவதால் இப்பெயர் பெற்றது.

**தேனம்** *tēṉam,* பெ. (n.) கடல் (யாழ்.அக.); ocean (செ.அக.).

**தேனம்பாறை** *tēṉam-pāṟai,* பெ. (n.) ஒருவகை மீன்; a kind of fish.

குறிப்பிட்டதொரு மீன் அதன் உரு அல்லது வளர்ச்சி நிலைக்கேற்ப வெவ்வேறு பெயர் பெறும். கொம்புப் பாறை, சேங்கடாப் பாறை, செம்பாறை என வெவ்வேறு பெயர் பெறும் இம்மீன்.

**தேனருவி** *tēṉaruvi,* பெ. (n.) குற்றால மலையின் மேலருவி (குற்றா. குற. 52); the highest of the three sacred water falls at Kuṟṟālam.

*[தேன் + அருவி]*

**தேனலை** *tēṉalai,* பெ. (n.) மரக்கலத்தைக் கடற்பரப்பிலுதைத்துச் செலுத்துதற்கேது வான கடலலை (மீனவ.); tides which helps the boat to go easily.

*[தேன் + அலை. தேன் = இனிமை, தேன் அலை = இனிமையாக அல்லது எளிமையாக (மரக்கலத்தை)ச் செலுத்த உதவும் அலை]*

**தேனவரை** *tēṉavarai,* பெ. (n.) தேநவரை பார்க்க; see *tēnavarai.*

*[தேன் + நவரை. தேம் → தேன்]*

**தேனழி-த்தல்** *tēṉaḻi-,* 4 செ.குவி. (v.i.) தேன் கூட்டைக் கலைத்துத் தேன் கொள்ளுதல்; to take honey from a bee-hive, driving away the bees. 'தேனிழைத்த என்றதனானே தேனழிக்க வருவாராலும்' (அகநா. 18, உரை).

*[தேன் + அழி-.]*

**தேனன்** *tēṉaṉ,* பெ. (n.) திருடன் (சூடா.); thief, robber.

*[ஏய் → ஏய்ப்பு = ஏமாற்றுகை. ஏய் → ஏயம் = தள்ளத்தக்கது. ஏயம் → தேயம் = களவு. தேய → தேயன் → தேனன்]*

த. தேனன் → Skt. stēna

தேயம்[6] பார்க்க

**தேனாயி** *tēṉāyi,* பெ. (n.) தேனீக்கள் போலுஞ் சேமிக்கும் பழக்கமுடையவர் (தஞ்சை.மீனவ.); people who saves money like bees.

**தேனார்மொழியம்மை** *tēṉār-moḻiyammai,* பெ. (n.) திருக்குடந்தைக்காரோணத்திலே கோயில் கொண்டிருக்கும் தேவியின் பெயர்; names of Goddess abode in Tirukkuḍandai temple.

**தேனி[1]-த்தல்** *tēṉi,* 4 செ.குவி. (v.i.) 1. இனித்தல்; to be sweet. 2. மகிழ்தல்; to be happy. "கேசவன்பேரிட்டு நீங்க டேனித்திருமினோ" (திவ்.பெரியாழ். 4. 6:1).

*[துல் → (தெல்) → தென் = (தெளிவு, கள்) இனிமை. தென் → தேன் = தெளிவு, கள், மது. தேன் → தேம் → தீம் → தீவு = இனிமை. தேன் → தேனி. தேனித்தல் = இனித்தல் (மு.தா. 145)]*

**தேனி[2]** *tēṉi,* பெ. (n.) ஒரு மாவட்டத் தலைநகர்; district head-quarter.

வையையாற்றின் துணையாறான தேனியாற்றின் கரையில் உள்ளதால் இப்பெயர் பெற்றது.

**தேனி[3]** *tēṉi,* பெ (n.) 1. கடுரோகினி (மலை.); black hellebore. 2. கொத்துமல்லி; corriander (சா.அக.).

**தேனிகா** *tēṉigā,* பெ. (n.) தேனீ பார்க்க; see *tēṉī* (சா.அக.).

**தேனிகை** *tēṉigai,* பெ. (n.) கொத்துமல்லி; corriander.

*[தேனி[3] → தேனிகை]*

**தேனிட்டகலவை** *tēṉiṭṭa-kalavai,* பெ. (n.) பல மருந்துகள் சேர்ந்த கலப்பு மருந்தைத் தேனில் கூட்டிவைக்கை; mixture of different medicines with purified honey (சா.அக.).

*[தேன் + இட்ட + கலவை]*

**தேனிரும்பு** *tēṉ-irumbu,* பெ. (n.) உயர்ந்த இரும்பு; superior iron.

*[தேன் + இரும்பு]*

**தேனிலையான்** *tēṉilaiyāṉ,* பெ. (n.) தேனீ (யாழ்.அக.) பார்க்க; see *tēṉī.*

*[தேன் + நிலை + ஆன்]*

**தேனிலிட்டமருந்து** *tēṉiliṭṭa-marundu,* பெ. (n.) தேனிலிட்டு வைத்த இஞ்சி முதலியன; medicines or any drug preserved in honey as greenginger (சா.அக.).

*[தேனில் + இட்ட + மருந்து]*

**தேனிலுண்ணல்** *tēṉiluṇṇal,* பெ. (n.) நல்ல தேனில் மருந்தைக் குழைத்து உட்கொள்ளுகை; taking medicine steped in purified honey in the proportion of 1:8 (சா.அக.).

*[தேனில் + உண்ணல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

## தேனீக்கள்







மலைத் தேனீ



கொசுத்தேனீ



வீட்டுத் தேனீ



சிறுதேனீ



கொம்புத் தேனீ

**தேனிவாதுமை** *tēṉi-vādumai,* பெ. (n.) தித்திப்பு வாதுமை; sweet almond *(சா.அக.).*

**தேனிழை-த்தல்** *tēṉi-iḻai-,* 4 செ.கு.வி. (v.i.) தேன்கூடு கட்டுதல்; to construct a bee-hive. "தேனிழைத்த கோடுயர் நெடுவரை" *(அகநா. 18).*

*[தேன் + இழை-.]*

**தேனிறக்கு-தல்** *tēṉ-iṟakku-,* 5 செ.குவி. (v.i.) தேனழி-த்தல் பார்க்க; see *tēṉ-aḻi-.*

*[தேன் + இறக்கு-.]*

**தேனிறம்** *tēṉiṟam,* பெ. (n.) மாந்துளிர்க்கல்; red ochre *(சா.அக.).*

மறுவ. கற்காவி

*[தேன் + நிறம்]*

**தேனிறாட்டு** *tēṉiṟāṭṭu,* பெ. (n.) தேனிறால் பார்க்க; see *tēṉ-iṟāl.*

**தேனிறால்** *tēṉ-iṟāl,* பெ. (n.) தேனைச் சேர்த்து வைக்க மெழுகால் தேனீக்கள் செய்யும் கூடு; honey - comb. "நறும்பழம் ... பெருந்தேனிறாஅல் சீறு நாடன்" *(ஐங்குறு. 214).*

*[தேன் + இறால்]*



**தேனீ** *tēṉī,* பெ. (n.) தேன் தொகுக்கும் ஈ; honey bee. "மலைநாட வுய்த் திட்டுந் தேனீக்கரி" *(நாலடி, 10).* 2. தேன் கூட்டும் வண்டு; honey bee.

ம. தேநீச்ச; க. சேனு நொண; கோண். தேனெ, பர். தீனி; குரு. தீந்; மா. தெனி

*[தேன் + ஈ = தேனீ]*

வகைகள்

1. வீட்டுத் தேனீ
2. சிறு தேனீ
3. மலைத் தேனீ
4. கொசுத் தேனீ
5. கொம்புத் தேனீ

**தேனீக்குடிக்கீரனார்** *tēṉī-k-kuḍi-k-kīraṉār,* பெ (n.) கடைக்கழகப் புலவர்களுள் ஒருவர்; a poet, one among last Šangam *(இருநூ.).*

*[தேனீக்குடி + கீரனார்]*

**தேனீக்கூடு** *tēṉī-k-kūḍu,* பெ. (n.) தேன் வண்டுக் கூடு; honey bag; bee hives *(சா.அக.).*

ம. தேனீச்சக்கூடு

*[தேன் + ஈ + கூடு = தேனீக்கூடு]*

**தேனீயிரைப்பை** *tēṉī-y-iraippai,* பெ. (n.) தேனீக்கூடு பார்க்க; see *tēṉī-k-kūḍu (சா.அக.).*

*[தேனீ + இரைப்பை]*

**தேனு** *tēṉu,* பெ. (n.) களவு (சூடா.); robbery *(செ.அக.).*

**தேனுகம்**[1] *tēṉugam,* பெ. (n.) பெண் யானை *(யாழ்.அக.);* female elephant.

**தேனுகம்**[2] *tēṉugam,* பெ. (n.) 1. மிளகு நங்கை; pepper mangay. 2. கொத்துமல்லி; coriander *(சா.அக.).*

**தேனுகன்** *tēṉugaṉ,* பெ. (n.) கண்ணனால் கொல்லப்பட்ட ஓர் அசுரன்; an Asura slain by Kannan. "தேனுகன் பிலம்பன் காளியனென்னும்" *(திவ். பெரியாழ். 3,6,4).*

**தேனுகாரி** *tēṉugāri,* பெ. (n.) கண்ணன்; Kannan, as the foe of Dhenuka.

**தேனுண்ணி** *tēṉ-uṇṇi,* பெ. (n.) தேனைக் குடிக்கும் பறவை; honey eater *(சா.அக.).*

*[தேன் + உண்ணி]*

**தேனுமுத்திரை** *tēṉu-muttirai,* பெ. (n.) கை முத்திரை; a hand pose. "தேனு முத்திரையுங் காட்டி" *(வாயுசங்.சிவவோம. 7).*

**தேனுறிஞ்சி** *tēṉ-uṟiñji,* பெ. (n.) தேனை உறிஞ்சும் ஒரு வகைப் பறவை; honey sucker *(சா.அக.).*

*[தேன் + உறிஞ்சி]*



**தேனூறு-தல்** *tēṉūṟu-,* 5 செ.கு.வி. (v.i.) இனிமையாதல்; to be honey sweet. "என்னுள்ளந் தேனூறி யெப்பொழுதுந் தித்திக்குமே" (திவ்.பெரிதி. 7:4:5).

*[தேன் + ஊறு-.]*

**தேனெய்** *tēṉey,* பெ. (n.) தேன்; honey. "தேனெய்யொடு கிழங்குமாறி யோர்" (பொருந. 216) (செ.அக.).

*[தேன் + நெய்]*

**தேனெறும்பு** *tēṉ-eṟumbu,* பெ. (n.) 1. பெரிய எறும்பு வகை; a large emmet, as found of sweet things. 2. நஞ்சுள்ள எறும்பு வகை; a small poisonous ant.

ம. தேனுறும்பு

*[தேன் + எறும்பு]*

**தேனோடைப்பழம்** *tēṉōḍai-p-paḻam,* பெ. (n.) நாகரப்பழம் பார்க்க; see *nāgara-p-paḻam* (சா.அக.).

# தை

**தை**[1] *tai,* பெ. (n.) த் என்ற மெய்யும் ஐ என்ற உயிரும் சேர்ந்த கூட்டெழுத்து; the syllable formed by adding the dipthong 'ai' to the consonant 't'.

**தை**[2]**-த்தல்** *tai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. **தையலிடுதல்** (சூடா.); to sew, stitch. 2. **ஆணி முதலியன அடித்தல்;** to nail, fasten beams with nails, spikes or pegs; to pin. "படத்திற்கு ஆணி தைத்தாயிற்றா". 3. **இலை முதலியன குத்தியிணைத்தல்;** to plait or stitch, as leaves into plate. 4. **பொருத்துதல்;** to join. "பலகை தைத்து" (பாரத. கிருட்டிண. 102.). 5. **முள் முதலியன ஊடுருவுதல்;** to pierce penetrate, prick, as a thorn, an arrow. "மேனி தைத்த வேள்சரங்கள்" (கம்பரா. உலாவியல். 15). 6. **மாலை தொடுத்தல்;** to tie, weave, as a wreath. "தொடலை தைஇய மடவரன் மகளே" (ஐங்குறு. 361). 7. **கோத்தல்;** to string, as beads. "அவிரிழை முத்தந் தைஇய மின்னுமிழ் பிலங்க" (பதிற்றுப். 39, 15). 8. **ஒப்பனை செய்தல்;** to adorn, decorate. தைஇய மகளிர் (கலித். 27:19). 9. **உருவாக்குதல்;** to make, create. "வல்லவன் தைஇய பாவைகொல்" (கலித். 56). 10. **பதித்தல்;** to set, enchase. "திகழொளி முத்தங் கரும்பாகத் தைஇ" (கலித். 80:4). 11. **இடுதல்;** to place, put, as a mark on the forehead. "திலகந் தைஇய தேங்கமழ் திருநுதல்" (திருமுருகு. 24). 12. **உடுத்துதல்;** to wear, put on "ஏர்தழை தைஇ" (கலித். 125:12). 13. **சித்திரித்தல்;** to paint. "அணிவரி தைஇயும்" (கலித். 76:2). 14. **சூழ்தல்;** to surround, cover, encircle. "சீர்மிகு முத்தந் தைஇய நார்முடி" (பதிற்றுப். 39:16). 15. **வலைபின்னுதல்** (வின்.); to make a net. 16. **அடைத்தல்** (யாழ்.அக.); to close, shut.

*[துள் – (தள்) → (தய்) + தை. தைத்தல் = துணி, பலகை முதலியவற்றை இணைத்தல்]*

**தை**[3]**-த்தல்** *tai-,* 11 செகுவி (v.i.) 1. **உள்நுழைதல்;** to enter, dart. "அவ்வழித் தைத்தது பூதம்" (கம்பரா. திருவவ. 88). 2. **மனத்திலுறைத்தல்;** to pierce the mind; to rankle; to cause pain. "அவன் சொன்ன சொல் என் மனத்திற் றைத்தது"

*[துள் – (தள்) → (தய்) + தை.]*

**தை**[4] *tai,* பெ. (n.) 1. **ஒப்பனை;** decoration, embellishment. "தைபுனை மாது" (திகண்டு.). 2. **தையல்** (தைலவ. தைல.); sewing.

**தை**[5] *tai,* பெ. (n.) **ஒரு தாளக்குறிப்பு** (அரு.நி.); onom. expr. of beating time.

**தை**[6] *tai,* பெ. (n.) 1. **தமிழாண்டின் தொடக்க மாதம்;** first month of Tamil era. 2. **திருவள்ளுவராண்டின் தொடக்க மாதம்** (இக்.வ.); first month of Thiruvalluvar era.

புனர்பூசம், பூசம் என்னும் விண்மீன் பெயர்கள் புனர்தை, தை என்றிருத்தல் வேண்டும் என்றும் வரிசையில் அவை முன்பின்னாக இடம் மாறியுள்ளன என்றும் கணியர் இ.மு. சுப்பிரமணியனார் கூறுகிறார். புனர்தை என்பதிலுள்ள தையே மாதப் பெயராக விளங்குகின்றது.

மாதங்கள் பற்றிய காலக் கணக்கீடு தமிழருடையதே. மாதங்களைப் பற்றி அறியுமுன் அவற்றிற்கு அடிப்படையான சிலவற்றைத் தெரிந்து கொள்ளுதல் மிகவும் இன்றியமையாததாகும்.

வானப் பெருவெளியில் கோள்களும் விண்மீன்களும் ஒரு நீள்வட்டப்பாதையில் முறையாகச் சுழன்று கொண்டிருக்கின்றன. விண்மீன்கள் எண்ணற்றனவாயினும், அவை இருபத்தேழு குழுக்களாகப் பிரிக்கப் பட்டுள்ளன. பொதுவாக ஒரு விண்மீன் என்று நாம் கருதுவது அல்லது குறிப்பிடுவது உண்மையில் ஒரு விண்மீன் குழுவேயாகும்.

இருபத்தேழு நாண்மீன்களும் அவற்றின் தோற்றத்தைக் கொண்டு ஒப்புமையாற் பெயர் பெற்றிருக்கின்றன. குதிரை போன்று காட்சியளிப்பது புரவி என்றும், அடுப்புப் போன்றே தோற்றமுடையது அடுப்பு என்றும் இவ்வாறே பிறவும் பெயர் பெற்றன. புரவி அஸ்வதி என்றும் அடுப்பு பரணி என்றும் வடசொல் வழக்குப் பெற்றுள்ளன. பிறவும் இத்தகையன.

வானவெளியில் கிழக்கு மேற்காக அமைந்த நீள்வட்ட மண்டிலம் முந்நூற்றறுபது சிறுபிரிவுகளாகவும், முப்பது பாகைகள் கொண்ட பன்னிரு பெரும் பிரிவுகளாகவும்

பகுக்கப்பட்டுள்ளன. இவையே ஓரைகள் எனப்படுகின்றன.

இப்பன்னிரு ஓரைகளிலும் இருபத்தேழு விண்மீன்களும் அடங்கியுள்ளன. ஒவ்வொரு பிரிவிலும் இரண்டேகால் விண்மீன்கள் இடம்பெறுகின்றன. ஓரைகள் கோள்வீடுகள் என்று குறிப்பிடப்படுகின்றன. கோள்வீடு - இராசி.

கதிரவன் வானமண்டிலத்தைச் சுற்றிவரும் கால அளவைப் பன்னிரண்டு பிரிவாக்கி யுள்ளமையால் அவை ஒவ்வொன்றிலும் கதிரவன் இடம்பெறுவது நோக்கிப் பன்னிரு மாதங்கள் பகுக்கப்பட்டன.

கதிரவன் ஒவ்வொரு ஓரையிலும் இடம் பெறும் கால அளவே ஒரு மாதம் ஆகும். இம்மாதங்கள் தனித்தனிச் சில நாழிகை ஏறத்தாழ இருபத்தொன்பது முதல் முப்பத்திரண்டு நாட்கள் வரையுள்ள கால அளவாம். இந்த அளவு எக்காலத்தும் ஒரே நிலையாக இருக்கும்.

ஆகவே ஓரைகளின் பெயர்களையொட்டியே மாதங்களின் பெயர்களும் அமைந்தன.

கதிரவனும் நீள்வட்டப்பாதையும் நிலையானவை. நிலவுலகம் கதிரவனைச் சுற்றி வரும்போது கதிரவனை நோக்கி அதன் பின்புறம் மறையும் ஓரையை நாம் அம்மாதமாகக் குறிக்கின்றோம்.

ஓரைகள் அவற்றின் தோற்றத்தைப் பொறுத்து ஒப்புமை வகையில் பெயர் பெற்றிருக்கின்றன. ஆடு, காளை, இருவர், நண்டு, அரிமா, கன்னி, நிறைகோல், தேள், வில், சுறா, குடம், மீன் ஆகியவற்றினைப் போன்று வடிவ அமைப்புடைமையால் ஓரைகள் முறையே மேழம், விடை, ஆடவை, கடகம், மடங்கல், கன்னி, துலாம், நளி, சிலை, சுறவம், கும்பம், மீனம் என்று பெயர் பெற்றன.

இப்பன்னிரு ஓரைகளும் மாதத்திற்கு ஒன்றாகக் கதிரவன்பின் மறைந்து கால வேறுபாட்டைக் காட்டுகின்றன.

அன்றாடம் காலையில் கதிரவன் தோன்றுவதற்கு முன்னும், மாலையில் கதிரவன் மறைந்த பின்னும் முதன்முதலில் வானில் தோன்றும் விண்மீன் கூட்டமே அன்று பகலில் கதிரவன் பின்னால் மறைந்த விண்மீன் கூட்டமாகும். இதைக் கொண்டே அம்மாதத்தின் பெயர் அமைகிறது.

மகரம் என்பது சுறாமீனைக் குறிக்கும் வடசொல். சுறாவின் வடிவில் விளங்கும் ஓரை சுறவம். இதுவே வடமொழியில் மகரராசி எனப்படுகிறது.

குத்தல் உணர்ச்சியைக் குறிக்கும் 'சுள்' என்னும் வேர்ச்சொல், சுல் - சுர் - சுரி எனத் திரிந்து அவ்வுணர்ச்சிப் பொருள் அடிப் படையில் சுரி, சூரி, சுணை, சுளுக்கி முதலான பல்வேறு சொற்களைத் தோற்று விக்கிறது. சுறுக்கென்று குத்துவது போற் கடிக்கும் எறும்பு சுள்ளான்.

கூரிய செதிலால் வெட்டுங் கடல் மீன் சுறா. சுறா - சுறவு. சுறவு + அம் = சுறவம். 'அம்' பெருமைப் பெயர் பின்னொட்டு. சுறவவோரையில் (மகர ராசியில்) கதிரவன் தோன்றும் நாள் என்னும் பொருளிலேயே அம்மாத முதல் நாள் (பொங்கல்) மகர சங்கராந்தி எனப்படுகிறது.

இச்சுறவ மாதவே தமிழாண்டின் தொடக்கம்.

நாள் என்பது இயல்பாகக் கதிரவன் தோற்றத்தையே தொடக்கமாகக் கொண்டுள்ளது.

கிழமை (வாரம்) என்பதும் கதிரவனிலிருந்தே தொடங்குகின்றது. கிழமையின் முதல் நாள் ஞாயிற்றுக்கிழமையே.

மாதத்தின் தொடக்கமும் கதிரவனையே அடிப்படையாகக் கொண்டுள்ளது. கதிரவன் ஓரைக்குள் தங்கிச் செல்லும் காலமே மாதம். ஆதலால் மாதத் தொடக்கம் என்பது கதிரவன் ஓரைக்குள் புகுங்காலமேயாகும். ஆகவே கதிரவனை அடிப்படையாகக் கொண்டே மாதம் தொடங்குகிறது என்பது தெளியப் படும்.

எனவே, ஆண்டின் தொடக்கமும் கதிரவனின் இயக்கத்தை ஒட்டியதாக இருத்தலே இயற்கை நெறியும் தமிழ் மரபுமாம்.

கதிரவன் இயக்கம் என்பது கடக (ஆடி) மாதம் முதல்நாள் தொடங்கி தெற்கு நோக்கிச் செல்லும் தென்செலவும் (தட்சணாயணம்), சுறவம் முதல்நாள் தொடங்கி வடக்கு நோக்கிச் செல்லும் வட செலவும் (உத்திராயணம்) என இருவகைப் படும்.

தமிழ்நாட்டு மக்கள் தாமிருக்கும் தென் திசையிலிருந்து வடசெலவு தொடங்குதலால் அச்சுறவ முதல்நாளையே கதிரவனைப் போற்றியும், பொங்கலிட்டு மகிழ்ந்தும் புதுநாளாகக் கொண்டாடியும் வருகின்றனர்.

எனவே, தமிழாண்டுத் தொடக்கம் என்பது சுறவ முதல்நாளே என்பது ஐயுறவின்றித் தெளியப்படும்.

ஞாயிறு என்னுஞ்சொல் இப்போது கிழமைப் பெயர்களுள் ஒன்றாக வழங்கப்படுவது போல் பழங்காலத்தில் மாதத்தைக் குறிக்கும் பெயராக வழங்கப்பெற்றுள்ளது. கல்வெட்டுகள் பலவற்றில் மேழம், விடை முதலிய ஓரைப் பெயரான் அமைந்த சிறப்புப் பெயரும் ஞாயிறு என்னும் பொதுப் பெயரும் தாங்கிய மாதப் பெயர்கள் இடம் பெற்றுள்ளன. மடங்கல் (ஆவணி) மாதம் 'சிம்மஞாயிறு' என்றும், கும்பம் (மாசி) மாதம் 'கும்ப ஞாயிறு' என்றும், சிலை (மார்கழி) மாதம் 'தனுர் ஞாயிறு' என்றும் குறிக்கப் பெற்றுள்ளன (தெ.க.தொ. 3-29, 32, 36).

கோமாறன் சடையற்கு யாண்டு நாலாவதற்கு எதிர் ஒன்பதாவது விருச்சிக ஞாயிற்றுத் திங்கட்கிழமை (தெ.க.தொ. 14:12).

சோழன் தலைகொண்ட கோவீரபாண்டிய தேவர்க்கு யாண்டு பன்னிரண்டாவது இவ்வாண்டு மிதுன ஞாயிற்று (தெ.க.தொ. 14:95) என வருதல் காண்க.

*(திருக்குறள் மணி புலவர் இறைக்குருவனார் இயற்றிய திருவள்ளுவராண்டு அல்லது தமிழ் ஆண்டு எனும் நூலிலிருந்து இச்செய்தி தொகுக்கப்பட்டது.)*

**தை**[7] *tai*, பெ. (n.) 1. **ஒரு திங்கள்;** the Tamil month, January - February. "தைஇத் திங்கட் டண்ணிய தரினும்" *(குறுந். 196)*. 2. **சுறவ** (மகர) **ஓரை;** capricorn in the zodiac. 3. **கொடிறு** (பூசம்) (சூடா.); the 8th naksatra *(செ.அக.)*.

ம. தை

**தை**[8] *tai*, பெ. (n.) **மரக்கன்று;** young plant or tree. தைத்தெங்கு *(நாஞ்.)*.

ம. தை, தய்யு; க. தெயி; தெ. தேக; து. தெ

**தை**[9] *tai*, பெ. (n.) **தைவேளை** (மு.அ.) பார்க்க; *tai-vēḷai*.

**தைக்குரக்கன்** *tai-k-kurakkaṉ*, பெ. (n.) **சுறவத் திங்கள் பயிரைக் காக்கை** *(யாழ்ப்.)*; watching of the crop raised in January.

*[தை + குரக்கன்]*

**தைச்சங்கிரமம்** *tai-c-caṅkiramam*, பெ. (n.) **தைப்பொங்கல்** பார்க்க; see *tai-p-poṅgal*.

*[தை + சங்கரிமம்]*

**தைச்சங்கிராந்தி** *tai-c-caṅkirāndi*, பெ. (n.) **சுறவ** (மகர) **ஓரையில் ஞாயிறு செல்லும் சுறவத் திங்களின் முதல் நாள்;** the entrance of the sun into capricorn.

*[தை + சங்கிராந்தி]*

**தைசதம்** *taiśadam*, பெ. (n.) **ஒளித் தொடர்பானது** *(சி.சி. 258, சிவாக்.)*; that which is related to light. 2. **வலிமை** *(யாழ்.அக.)*; vigour, strength. 3. **அரக்கக் குணம் மேலிட்ட செருக்கு;** sāṅkhya ahamkāra in which reyōguṇa is dominant. "மனமது தைசதத்தின் வந்து" *(சி.சி. 2, 60)*. 4. நெய் *(சங்.அக.)*; ghee.

**தைத்தமுத்து** *taitta-muttu*, பெ. (n.) **அணிகலன்களில், ஒப்பனையாகக் கற்கள் பதிப்பது போல் முத்துகளைப் பொற்கம்பியால், அமைப்பிடங்களில் வைத்துப் பொருத்தித் தைத்த முத்து;** string, beads in the ornaments where it required such beads are called taitta muttu. "கோத்த முத்து வட்டமும், அனுவட்டமும் - தைத்த முத்து சக்கத்தும், சப்பத்தியும் ஒப்பு முத்தும், குறுமுத்தும் *(தெ.க.தொ. 2.2, கல்.)*

**தைத்தேயர்** *taittēyar*, பெ. (n.) **அரக்கர்;** giant.

**தைதம்** *taitam*, பெ. (n.) **விரல்நுனி** *(யாழ்.அக.)*; tip of the finger.

**தைந்நீராடல்** *tai-n-nīrāḍal*, பெ. (n.) **சுறவத் திங்களில் கன்னிப் பெண்களின் நீராடற் சடங்கு;** ceremonial ablution of maidens in the lunar month of tai. இன்ன பண்பினின் றைந் நீராடல் *(பரிபா. 11:134)*.

*[தை + நீர் + ஆடல்]*

**தைப்பான்** *taippāṉ*, பெ. (n.) 1. **ஊசி;** needle. 2. **துன்னகாரன்;** tailor *(செ.அக.)*.

*[தை → தைப்பான்]*

**தைப்பிறப்பு** *tai-p-piṟappu*, பெ. (n.) **தைப் பொங்கல்** பார்க்க; see *tai-p-poṅgal*.

*[தை + பிறப்பு]*

**தைப்புமுத்து** *taippu-muttu,* பெ (n.) முத்து வகை; a kind of pearls (S.I.I. ii, 34).

*[தைப்பு + முத்து]*

**தைப்பூ** *tai-p-pū,* பெ. (n.) உவர்ப்பு; the efflorescent salt found on the fuller's soil (சா.அக.).

**தைப்பூசம்** *tai-p-pūšam,* பெ. (n.) சுறவத் திங்களின் முழுநிலவோடு கூடிய கொடிற்றுத் திருவிழா; the full moon in the month of tai, a day of festival.

*[தை + பூசம்]*

**தைப்பை** *tai-p-pai,* பெ. (n.) சட்டை (அக.நி.); coat, jacket, as sewn.

*[தை + பை]*

**தைப்பொங்கல்** *tai-p-pongal,* பெ. (n.) சுறவ மாதப்பிறப்பன்று பொங்கலிட்டுக் கொண்டாடப்படும் தமிழர் திருவிழா; Tamizhar festival on the first day of tai, celebrated with pongal.

*[தை + பொங்கல்]*



**தையல்** *taiyal,* பெ. (n.) 1. தைப்பு; sewing, stitching. 2. தையல்வேலை; needle work, embroidery. 3. ஒப்பனைத் துணி (இ.வ.); lace. 4. புனையப்படுவது (திருக்கோ. 60, கொளு.); that which is adorned, decorated. 5. கட்டழகு; symmeterical beauty or gracefulness. 6. பெண்; woman; "தையா றம்பலந் தின்றியோ" (கலித். 65, 13). தையலும் இல்லான் மையலும் இல்லான் (பழ.). 7. முகில்; cloud. "தானே மழைபொழி தையலுமாய் நிற்கும்" (திருமந். 10).

*[தை → தையல்]*

**தையல்பாகன்** *taiyal-pāgan,* பெ. (n.) சிவன்; Sivan as having Parvadi on his left. "தையல் பாகனுஞ் சதுமுகக் கடவுளுங் கூடி" (கம்பரா. அகலிகை. 19).

*[தையல் + பாகன்]*

**தையல்போடு-தல்** *taiyal-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) தைத்தல்; suturing (சா.அக.).

*[தையல் + போடு]*

**தையலூசி** *taiyalūši,* பெ. (n.) துன்னூசி; sewing needle.

*[தையல் + ஊசி. உள் → உளி → உசி → ஊசி]*

**தையற்காரக்குருவி** *taiyaṟkāra-k-kuruvi,* பெ. (n.) ஒருவகைக் குருவி; a kind of sparrow.

*[தையற்காரன் + குருவி]*



**தையற்காரன்** *taiyaṟkāran,* பெ. (n.) 1. தைப்போன்; tailor. 2. பின்னல் வேலை செய்வோன் (வின்.); knitter.

ம. தையல்காரன்

*[தையல் + காரன்]*

**தையற்பெட்டி** *taiyaṟ-peṭṭi,* பெ. (n.) தையற் கருவி அடங்கியபெட்டி (வின்.); work-basket, box containing articles for needle work (செ.அக.).

*[தையல் + பெட்டி]*

**தையறம்** *tai-y-aṟam,* பெ. (n.) சுறவத் திங்களில் உண்டாகும் வறட்சி (யாழ்.அக.); drought in the month of tai (செ.அக.).

*[தை + அறம்]*

**தையான்** *taiyāṉ,* பெ. (n.) தையற்காரன்; tailor (செ.அக.).

*[தை → தையலன் → தையான்]*

**தையெனல்** *tai-y-eṉal,* பெ. (n.) இசைக்குறிப்பு; onom. expr. musical sound. "தையெனக் கோவலர் தனிக்குழ லிசை கேட்டு" *(கலித். 118:13).*

*[தை[5] + எனல்]*

**தைலவருக்கச்சுருக்கம்** *taila-varukka-c-curukkam,* பெ. (n.) நெய்ம வகையிற் கண்ட ஐந்துவகை நெய்மங்களையுஞ் செய்யும் முறையைப் பற்றிச் சுருக்கமாகக் கூறும், தேரையார் செய்த தமிழ் மருத்துவ நூல்; a scientific treatise compiled in Tamil by the reputed physician Tēraiyēr in which the process of preparing the five kinds of medicated oils, their uses, dietic, rules and their vertues are given.

*[தைலவருக்கம் + சுருக்கம்]*

**தைலா** *tailā,* பெ. (n.) மரப்பெட்டி; wooden box.

**தைவரல்[1]** *taivaral,* பெ. (n.) வருடுகை; a shampoing softly pressing and stroking the limbs with hands.

**தைவரல்[2]** *taivaral,* பெ. (n.) கலைத்தொழில் எட்டனுள் குரலோசையேற்றுகை; harmonising with the key-note, one of eight kalai-t-toḻil.

*[தை[5] + வரல்]*

**தைவா-தல் (தைவருதல்)** *taivā-,* 6 செ.கு.வி. (v.i.) *1.* வருடுதல்; to shampoo. "சீறடி கல்லா விளையர் மெல்லத் தைவர *(சிறுபாண். 33).* *2.* தொட்டுச் சீர்ப்படுத்தல்; to touch, adjust. "ஊழணி தைவரல் *(தொல்.பொருள். 262).* *3.* தடவி வருதல்; to spread, extend, pervade "விசும்பு தைவரு வளியும்" *(புறநா. 2)* *4.* மாசு நீக்குதல்; to wipe off, clean by dusting "தைவரு நவமணிச் சயிலம்" *(பாரத. வாரணா. 4).* *5.* குரலோசை ஏற்றுதல் *(சீவக. 65, உரை);* to harmonise with the key-note.

*[தை + வா]*

**தைவிளை** *tai-viḷai,* பெ. (n.) தைவேளை[1] பார்க்க; see *tai-vēlai* (சா.அக.).

*[தைவேளை → தைவிளை]*

**தைவேளை[1]** *tai-vēḷai,* பெ. (n.) *1.* வளி பிடிப்பு; rheumatism. *2.* பொன்னாங்கண்ணி; sessible plant. *3.* தயிர்; curd. *4.* பொருத்தம்; fitting (சா.அக.).

*[தை + வேளை]*

**தைவேளை[2]** *tai-vēḷai,* பெ. (n.) வேளைச் செடி; five leaved eleoma (சா.அக.).

ம. தைவேள

*[தை + வேளை]*



# தொ

**தொ** *to,* த் என்ற மெய்யும் ஒ என்ற உயிரும் கூடிய கூட்டெழுத்து; the compound of 't' and 'o'.

*[த் + ஒ]*

**தொக்கசிவரி** *tokka-śivari,* பெ. (n.) வலது கால்; right leg *(சா.அக.).*

**தொக்கட்டி** *tokkaṭṭi,* பெ. (n.) தொக்கடி *(வின்.)* பார்க்க; see *tokkaḍi.*

*[தொக்கடி → தொக்கட்டி]*

**தொக்கடதைலம்** *tokkaḍa-tailam,* பெ. (n.) ஐந்தெண்ணெயோடு தில்லைப் பால், முருங்கைப்பட்டை, காட்டு வாகைப்பட்டை, மாவிலிங்கம்பட்டை, பெருங்காயம், இந்துப்பு, வெள்ளைப்பூண்டு, வசம்பு ஆகிய எட்டுச் சரக்குகளையும் பொடித்துப் போட்டுக் காய்ச்சும் நெய்மம் ; a name for the medicated oil prepared by boiling the mixture of the five oils. viz. Indian beech, castor, gingelly, margosa and poon with the following eight drugs the tiger's milk, powders of the barkes of moringa or drum stick tree, common sirisa and lingam tree and the paste of asofoetida rock salt and garlic and sweet flag *(சா. அக).*

**தொக்கடம்**[1] *tokkaḍam,* பெ. (n.). *1.* மிதித்துத் துவைக்கை; pressing, pounding, treading down. *2.* தொக்கடி[1] பார்க்க; see *tokkaḍi.*

**தொக்கடம்**[2] *tokkaḍam,* பெ. (n.). ஊதைநோய் கொண்டவர்களுக்கு உடம்பில் நெய்மத்தைப் பூசிக் கையால் அழுத்தியும் மேலேறி மிதித்தும் இதத்தை உண்டாக்குமோர்வகை மருத்துவ முறை; treatment by massage chiefly consisting in rubbing with medicated oil all over the body or the affected part of a person attacked with rheumatism neuralgia or other nervous affections then pressing and treading with the hands *(சா. அக).*

**தொக்கடம்போடு-தல்** *tokkaḍam-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) *1.* உடம்பு பிடித்தல்; to massage or press the limbs for relief. *2.* கசக்கிச் சாறு பிழிதல்; to crush and extract juice, as from leaves; to express

*[தொக்கடம் + போடு]*

**தொக்கடவு** *tokkaḍavu,* பெ (n.) குறுக்குவழி *(யாழ்.அக.);* short cut

*[தொக்கடை - தொக்கடவு]*

**தொக்கடி**[1] *tokkaḍi,* பெ. (n.) *1.* மரத்திற் பழங்களைப் பொதிந்து வைக்கும் ஓலை மறைவு; a kind of ōla covering to protect fruits on the tree. *2.* பழம் வைக்கும் சிறு கூடை; a small ōla-basket for fruits.

**தொக்கடி**[2] *tokkaḍi,* பெ. (n.) காவற்குடிசை; a small hut for watchers in a field.



**தொக்கடை** *tokkaḍai,* பெ. (n.) வறுமை *(யாழ்ப்);* poverty.

தெ. தொக்கட

**தொக்கணம்**[1] *tokkaṇam,* பெ. (n.) கையினால் குத்தி உடம்பைப் பிடிப்பது; a process consisting in stricking with fist and then pressing the body or its part of a person suffering from some oilment massage *(சா. அக).*

*[தொக்கடம்[2] → தொக்கணம்]*

**தொக்கணம்**[2] *tokkaṇam,* பெ. (n.) தொக்கடம்[1] *(பதார்த்த. 1484)* பார்க்க; see *tokkaḍam* *(செ.அக).*

*[தொக்கடம்[1] → தொக்கணம்]*

**தொக்கம்**[1] *tokkam,* பெ. (n.) செரிக்காமல் வயிற்றிற் சிக்கிக் கொள்ளும் பொருள் *(வின்);* undigested matter adhering to the bowls.

*[தொங்கு → தொக்கு → தொக்கம்]*

**தொக்கம்**[2] *tokkam,* பெ. (n.) *1.* வயிற்றுச் சிக்கல்; any hindrance to the passage of the contents of the stomach. *2.* குழந்தைகள் மண் சாம்பல் முதலியவற்றை உட்கொள்வதால் உண்டாகும் குடற்சிக்கல், வயிற்றுப்பிசம், வயிற்றுப் போக்கு முதலியவற்றையுண்டாக்கும் ஒரு வகை நோய்; a disease in children marked by distension of stomach, diarrhoea etc., due to the hindrance to the passage of the intestinal contents and by their swallowing or eating whatever they come across with as mud, ash etc., *(சா.அக).*

*[தொங்கு → தொக்கு → தொக்கம். எலும்பு முதலியன செறியாமற்றொங்கிக் கொள்ளுதல்]*

**தொக்கம்**[3] *tokkam,* பெ. (n.) வழக்கு; law-suit தொக்கக்காரன் *(யாழ். அக.).*

**தொக்கயம்** *tokkayam,* பெ. (n.) கொடி; flag. தொக்கயங்க டொக்கெனவே சூறையிட்டு *(மான்விடு. 96).*

**தொக்கார்** *tokkār,* பெ. (n.) *1.* கூட்டத்தார்; assembly, company *(w). 2.* தோழர் *(யாழ். அக.);* friends, adherents.

*[தொக்கு*[5] *→ தொக்கார்]*

**தொக்கி** *tokki,* பெ. (n.) கடற்பச்சை *(மலை.)* பார்க்க; see *kaḍarpaccai.*

**தொக்கிடம்** *tokkiḍam,* பெ. (n.). எண்ணெய் தேய்க்கை *(யாழ்.அக.);* inunction.

*[தொக்கடம் → தொக்கிடம்]*

**தொக்கிந்திரியக்காட்சி** *tokkintiriya-k-kāṭci,* பெ. (n.) ஓர் அளவை; இது தொடுதலால் அறிவது; a measurement understood by touch, contact as with objects of sense.

*[தொக்கிந்திரியம் + காட்சி]*

**தொக்கிநில்-தல்** *tokkinil-,* 14 செ.குவி. (v.i.) (பேச்சில்; எழுத்தில் அல்லது முகக்குறியில் நேரடியாக வெளிப்படுத்தப்படாத கேள்வி, பொருள், உணர்வு போன்றவை) மறைந்து நிற்றல்; to implicit. யார் நீ என்ற வினா கதவைத் திறந்தவரின் முகத்தில் தொக்கி நின்றது. எங்கு போயிருந்தாய் என்றஅவருடைய வினாவில் சினம் தொக்கி நின்றது.

*[தொக்கு → தொக்கி + நில்]*

**தொக்கு**[1] *tokku,* பெ. (n.) *1.* பொருட்டின்மை (அற்பம்); small matter, trifle. அது தொக்காய்ப் போகாது (வின்.) *2.* எளிமை; ease. சொத்துகளைத் தொக்கிலே அடித்துக் கொண்டு போனான். *3.* இளப்பமானவன்; butt of ridicule. அவன்தான் எல்லார்க்குந் தொக்கு (இ.வ.). *4.* நேர்மை; attractiveness, neatness. "வரித்தோற் கச்சை தொக்காக வரிந்திறுக்கி" *(குற்றா. குற. 29).*

**தொக்கு**[2] *tokku,* பெ (n.) துவையல் வகை (இவ.); chutney, a kind of strong relish. மாங்காய்த் தொக்கு, தக்காளித் தொக்கு.

**தொக்கு**[3] *tokku,* பெ. (n.). தொடுவுணர்ச்சியறிவு; the sense of touch. "வாயுவிற் றொக்கு மூறெனும் விகாரமும்" *(மணிமே. 27: 215). 2.* உடம்புத் தோல் (சூடா.); skin, cuticle, surface of the body. "அரிணத் தொக்கு" *(பாரத. இராச. 105). 3.* மரப்பட்டை (தைலவ.தைல.); bark of a tree. *4.* கனியின் தோல்; rind. "தொக்குக் கழிந்த சுளைபோலே" *(ஈடு. 10, 7, 5). 5.* ஆடை; cloth, raiment. *6.* பற்று; stake, material concern. அக்குத் தொக்கில்லாதவன் (செ.அக).

ம. தொக்கு

**தொக்கு**[4] *tokku,* பெ. (n.) ஐம்புலன்களில் ஒன்றான மெய்; one of the five sense organs, skin *(சா.அக).*

மறுவ. துவக்கு

**தொக்கு**[5] *tokku,* பெ. (n.) நட்பு; friendship.

**தொக்குசை** *tokkusai,* பெ. (n.) கல்லு பயிற்றங் கொடி; creeper of stone pulse *(சா.அக).*

**தொக்குத்தொக்கெனல்** *tokku-t-tokkeṉal,* பெ. (n.) *1.* ஈரடுக்கொலிக் குறிப்பு (யாழ்.அக.); onom. expr. of creaking noise, as of shocs. *2.* தள்ளாடற் குறிப்பு; expr. of rocking unsteady motion, as of a corpulent person in walking. தொக்குத்தொக்கென்று நடக்கிறான்.

*[தொக்கு + தொக்கு + எனல்]*

**தொக்குதகம்** *tokkudagam,* பெ. (n.) *நிணநீர்;* lymph *(சா.அக.).*

**தொக்குநில்-தல் (தொக்குநிற்றல்)** *tokku-nil-,* *14 செ.கு.வி.* (v.i.) *வெளிப்படாது நிற்றல் (குறள், 141, உரை);* to be understood, as a particle *(செ.அக.).*

*[தொக்கு + நில்-.]*

**தொக்கை**[1] *tokkai,* பெ. (n.) *கம்பளத்தாருள் ஒரு வகையான்;* a subject of kambaḷattār.

**தொக்கை**[2] *tokkai,* பெ. (n.) *பருமன், தடிமன் (யாழ்ப்.);* fat. *ஆள் தொக்கையாயிருப்பான் (உவ.).*

**தொக்கைக்குன்றி**[1] *tokkai-k-kunṟi,* பெ. (n.) *அறுவடையில் இழப்பு;* loss or waste in cultivation (S.I.I.v, 499).

*[தொக்கை + குன்றி]*

**தொக்கைக்குன்றி**[2] *tokkai-k-kunṟi,* பெ. (n.) *நிலங்களுக்கு இடும் பசுந்தாள் சாணம் ஆகியவற்றைச் சேர்க்கும் பொது இடத்துக்கு ஊரவையார் பெறும் வரி;* tax collected by the village committee, for the place, where the fertilizers are prepared.

**தொகக்காரன்** *toga-k-kāraṉ,* பெ. (n.) *மதிப்பிடுவோன் (வின்.);* one who estimates.

*[தொகை + காரன். தொகை → தொக (கொ.வ.)]*

**தொகம்பார்-த்தல்** *togam-pār-,* 4 செ.குன்றாவி. (v.t.) *மதிப்பிடுதல் (வின்.);* to estimate, value, as the produce of a field.

*[தொகம் + பார்-.]*

**தொகம்** *togam,* பெ. (n.) *மதிப்பு (வின்.);* estimate, total.

**தொகாநிலை** *togā-nilai,* பெ. (n.). *தொகாநிலைத் தொடர் (நன். 152, உரை) பார்க்க;* see *togānilai-t-todar.*

*[தொகு + ஆ + நிலை. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தொகாநிலைத்தொடர்** *togā-nilai-t-toḍar,* பெ. (n.). *முற்றுத்தொடர், பெயரெச்சத் தொடர், வினையெச்சத்தொடர், எழுவாய்த் தொடர், விளித்தொடர், வேற்றுமைத்தொடர், இடைத்தொடர், உரித்தொடர், அடுக்குத் தொடர் என்ற ஒன்பது வகைத்தாய் இடையில் வேற்றுமையுருபு முதலியன தொக்கு நில்லாமலும் ஒருமொழித்தன்மைப் படாமலுமுள்ள தொடர்சொற்கள் (நன். 152, உரை);* a phrase, clause or sentence of two words, as a combination of words having no ellipsis between them of nine kinds.

*[தொகு + ஆ + நிலை + தொடர். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தொகு**[1]**-தல்** *togu-,* 4 செ. கு. வி. (v.i.). *1. கூடுதல்;* to assemble, collect, accumulate. *"பலர் தொகுபுரைக்கும்" (மணிமே. 2:35).* *2. ஒன்றாதல்;* to form, as a whole or lump; to aggregate. *3. அடுக்கி வருதல்;* to appear repeatedly. *"உம்மை தொக்கவெனாவென் கிளவியும்" (தொல். சொல். 291).* *4. மொத்தமாதல் ;* to be summed up, totalled; to aggregate. *5. நெருங்குதல் (யாழ்.அக.);* to be compact, crowded. *6. மறைதல்;* to be elided, as a particle in the combination of words. *"மெய்யுருபு தொகாஅ விறுதியான" (தொல். சொல். 105).* *7. சுருங்குதல்;* to be contracted. *"தொகுபீலி கோலின" (கம்பரா. வனம்பு. 4).* *8. ஒடுங்குதல்;* to merge. *"அசுத்த தத்துவங்க டொகும் முதலில்" (கோயிற்பு. இரணியவன்ம. 2).* *9. குட்டையாதல்;* to be shortened. *"தொகுசரணந் தண்பார் தாங்க" (கோயிற்பு. நடராச. 29).* *10 வீணாதல்;* to be of no avail; to fail of its purpose. *"தொடர் நீப்பிற் றொகுமிவ ணலம் (கலித். 286).*

ம. தொகுக

**தொகு**[2]**-தல்** *togu-,* 4 செ. கு. வி. (v.i.). *1. ஒத்தல்;* to conform, agree. *"உடன் மூவர் சொற்றொக்க" (குறள், 589).* *2. உள்ளடங்குதல்;* to be included. *"தோன்றன் மலர்மணம் போற்றொக்கு (சி. போ. 7,3).*

**தொகு**[3]**-த்தல்** *togu-,* 4 செகுவி. (v.i.) *1. திரட்டிக் கூட்டுதல்;* to cause to assemble; to bring together; to gather. *"புத்தகமே சாலத் தொகுத்தும்" (நாலடி, 318).* *2. எண் கூட்டுதல்;* to sum up; to total, to add, *"இரண்டொடுந் தொகைஇ" (தொல். சொல். 112).* *3. சொல்லின் முதலிடை இறுதியில் எழுத்துகளை நீக்குதல்;* to omit, elide, as a letter or letters in the beginning, middle or end

of a word. "தொகுக்கும்வழித் தொகுத்தலும்" (தொல். சொல். 403). 4. ஈட்டுதல் (யாழ்.அக.); to earn. 5. செய்தல்; to do, make. "விருந்து துனைந்து தொகுத்தனள்" (காஞ்சிப்பு. திருநகரேற். 26). 6. சுருக்குதல்; to abridge, summarise. "தொகுத்துக் கூறல்" (தொல்.பொருள். 666).

ம. தொகுக

**தொகு⁴-த்தல்** *togu-*, 4 செ.குன்றாவி. (v.t.) மதிப்பிடுதல் (யாழ்.அக.); to estimate, value.

**தொகுத்தமொழியின்வகுத்தனகோடல்** *togutta-moliyin-vaguttana-kōdal*, பெ (n.). சொல்லின்முடிவிலப்பொருள்முடித்தல் (மாறனலங் 25) பார்க்க; see *sollin-mudiviláp-porul-muḍittal*. 2. பலவாக வகை செய்து கூறியதனை ஒரு சொல்லால் தொகுத்துக் கூறும் உத்தி (தொல். பொருள். 666); the literary device of stating by a general term what is described in detail under various heads.

**தொகுத்தல்** *toguttal*, பெ. (n.) 1. நூல் யாப்பு நான்கனுள் விரிந்த நூலைச் சுருக்கிக் கூறுவது (தொல். பொருள். 652); synopsis, one of four nūl yāppu. 2. சொல் அல்லது அசை கெடுதலாகிய செய்யுள் வேறுபாடு; elision of a syllable or syllables in words for the sake of metre. "தொகுக்கும் வழித் தொகுத்தலும்" (தொல். சொல். 403).

**தொகுத்துக்கூறல்** *toguttu-k-kūral*, பெ. (n.). முப்பத்திரண்டு உத்திகளுள் நூற் செய்தியை ஓரிடத்தே சுருக்கிக் கூறுவது (தொல். பொருள். 666); summarising, abridgement, one of 32 utti. q.v.

[தொகுத்து + கூறல்]

**தொகுத்துச்சுட்டல்** *tokkuttu-c-cuttal*, பெ. (n.). தொகுத்துக்கூறல் (நன். 14) பார்க்க; see *toguttu-k-kūral*.

[தொகுத்து + சுட்டல்]

**தொகுத்துரை** *togu-t-turai*, பெ. (n.) பொழிப்புரை (நன். 21); free rendering of the text (செ.அக.).

[தொகுத்து + உரை]

**தொகுதி¹** *togudi*, பெ. (n.) 1. கூட்டம்; assembly, collection, aggregation. "வினையின் றொகுதி யொறுத்தெனை யாண்டுகொள்" (திருவாச. 6, 6). 2. வரிசை; series, class, as of persons or things. "வாம்பரித் தொகுதி" (கந்தபு. வச்சிர. 56). 3. சவை (பிங்.); society. 4. சேர்க்கை; company, association. "வினைப்படு தொகுதியி னும்மை வேண்டும்" (தொல். சொல். 33 தெய்வச். உரை.). 5. குலம்; genus. 6. பொத்தகப் பகுதி; volume, as of a journal. இது பத்தாவது தொகுதி. 7. மந்தை; flock, herd, swarm. 8. பகுதி; section, as of a book. "மக்கட்பெயர்த் தொகுதி (சூடா.). 9. உருபு முதலியவற்றின் மறைவு; elision. "தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும்" (தொல். எழுத்து. 132, உரை). 10. மொத்தவெண்; aggregate, total. "உம்மை யெண்ணு மெனவெ னென்னுந், தம்வயிற் றொகுதி கடப்பாடிலவே" (தொல். சொல். 289).

[தொகு → தொகுதி]

**தொகுதி²** *togudi*, பெ. (n.) மக்களின் படி நிகராளிகளாகச் சட்ட மன்றம் நாடாளு மன்றம் ஆகியவற்றிற்கு உறுப்பினர்களைத் தேர்ந்தெடுக்கும் குறிப்பிட்ட எண்ணிக்கை உள்ள மக்கள் வாழும் நாட்டுப் பகுதி; an electoral division of voters; constitutency. வரும் சட்டமன்றத் தேர்தலில் அனைத்துத் தொகுதிகளும் தம் கட்சி போட்டியிடுமெனத் தலைவர் அறிவித்தார்.

[தொகு → தொகுதி]

**தொகுதி³** *togudi*, பெ. (n.) கீழ் வாயிலக்கத்தில் கோட்டுக்குக் மேல் உள்ள எண்; numerator. 3/4 என்பதில் 3 தொகுதி.

[தொகு → தொகுதி]

**தொகுதிப்பெயர்** *togudi-p-peyar*, பெ. (n.) 1. குழுவைக் குறிக்கும் பெயர்; noun of multitude, collective noun. 2. குழுஉக்குறிப் பெயர் (யாழ்.அக.); slang, cant, conventional name. 3. மொத்தவெண்; aggrigate, total. "பன்னிருகையு மென்புழியும் தொகுதிப்பெயர் வினையொடு தொடராது கையென்பதனோ டொட்டி நிற்றலின்" (தொல். சொல். 33, சேனா.).

[தொகுதி + பெயர்]

**தொகுதியெண்** *toguti-y-en*, பெ. (n.) மேல் வாயிலக்கம்; numerator.

[தொகுதி + எண்]

**தொகுதியொருமை** *togudi-y-orumai*, பெ (n.). குலத்தினை (சாதி) உணர்த்துதற்கு வரும் ஒருமை; singular noun denoting a genus, class or group. "அதன் பொருள் என்பது தொகுதி யொருமை யாதலின்" (நன். 297, உரை). எறும்புப் புற்று, பாம்புப் பண்ணை

[தொகுதி + ஒருமை]

**தொகுநிலைத்தொடர்மொழி** *togu-nilai-t-todar-moli*, பெ. (n.) வேற்றுமையுருபு முதலியன நடுவே தொக்கு நிற்கச் சொற்கள் தொடர்ந்து வருவது; a phrase, clause or sentence of two words having ellipsis between them.

[தொகுதிநிலை + தொடர்மொழி]

**தொகுப்பு**[1] *toguppu*, பெ. (n.) 1. தொகை (வின்.); sum, total. 2. எல்லை; boundary. 3. கூட்டம்; multitude, crowd. "தொகுப்புறு சிறுவர்" (அருட்பா, பிள்ளைப் பெரு. 32).

[தொகு → தொகுப்பு]

**தொகுப்பு**[2] *toguppu*, பெ. (n.) 1. ஒன்றாகத் தொகுக்கப்பட்டது அல்லது மொத்தமாகச் சேர்க்கப்பட்டது; தொகுதி; collection, compilation. பாவாணருடைய தொகுப்பில் பல அரிய நூல்களுள்ளன.

**தொகுப்பூதியப்பணியாளர்** *togupputiya-p-paniyalar*, பெ. (n.) ஒட்டுமொத்தச் சம்பளத்தில் பணியாற்றும் பணியாளர்; person appointed in consolidated pay.

[தொகுப்பூதியம் + பணியாளர்]

**தொகுப்பூதியம்** *toguppūtiyam*, பெ. (n.) அரசுப் பணியில் சில வகைப் பணியாளருக்கு அடிப்படைச் சம்பளமோ அகவிலைப் படியோ இல்லாமல் மொத்தமாக வழங்கப் படும் மாதச் சம்பளம்; consolidated pay without the distinction of basic pay, allowance, etc. in govt. services.

[தொகுப்பு+ ஊதியம்]

**தொகுபு** *togubu*, வி.எ. (adv.) கூடி; combine.

[தொகுப்பு → தொகுபு]

**தொகுரு** *toguru*, பெ (n.) துவர்ப்பு; astringence.

[துவர் → துகர் → துகரு → தொகரு → தொகுரு (கொ.வ.)]

துவர்ப்பு பார்க்க: see *tuvarppu*.

**தொகை** *togai*, பெ. (n.) 1. கூட்டம்; assembly, collection. "உன்னடியவர் தொகை நடுவே" (திருவாச. 44. 1). 2. சேர்க்கை; association. "உயர்திணைத் தொகைவயின்" (தொல். சொல். 90, இளம்.). 3. விலங்கு முதலியவற்றின் திரள்; flock, herd, swarm, school. "புள்ளின் றொகையொப்ப" (பு. வெ. 6, 20) 4. கொத்து; bunch. "தொகைப்பிச்சம்" (கம்பரா. எதிர்கோட். 7) 5. மொத்தம்; sum, amount, total. 6. பணம்; property, stock, money. 7. எண்; number. "ஏயினாகிய வெண்ணி னிறுதியும், யாவயின் வரினுந் தொகையின் றியலா" (தொல். சொல். 292). 8. கணக்கு; calculation, account, measure. "தொகையி லன்பினால்" (கம்பரா. கிளைகண்டு. 102). 9. கூட்டல்; addition. 10. தொகுத்துக் கூறுகை (நன். 50); summary, epitome, substance of a narrative, abstract of a subject. 11. தொகைச்சூத்திரம் பார்க்க; see *togai-c-cūttiram*. 12. உருபு முதலியன மறைகை; omission, as of an inflectional sign in combination of words. "ஈற்றுநின் றியலுந் தொகைவயிற் பிரிந்தே" (தொல். சொல். 78, இளம்பூ.) 13. வேற்றுமைத்தொகை, வினைத் தொகை, பண்புத்தொகை, உவமைத்தொகை, உம்மைத்தொகை, அன்மொழித்தொகை என்று அறுவகையாய் ஒரு சொன்னீர்மைப் பட்ட தொடர்ச்சொல்; compound word of six kinds. "எல்லாத் தொகையு மொருசொன் னடைய" (தொல். சொல். 420). 14. ஆசிரியம் (திவா.); a class of verse. 15. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் நூல்கள்; ancient anthologies, numbering eight. அது தொகைகளினுங் கீழ்க்கணக்கினும் இம்முறை மயங்கிவரக் கோத்தவாறு காண்க. (தொல். பொருள். 5, உரை). 16. ஐம்புலன்களின் கூட்டத்தாலாகிய ஆதன் (மணிமே. 30:192); the

individual soul, as a product of aim-pulan. 17. புலவர் கழகம்; academy. "மதுரைத் தொகை யாக்கினானும்" (தேவா. 1179,11). 18. கலந்திருப்பதை இனம் இனமாகப் பிரித்தெடுக்கை (வின்.); assortment.

[துல் → துள் → தொள் → தொழு = மாட்டு மந்தை. தொழு → தொகு. ழ – க, போலித் திரிபு.

ஒ.நோ. மழவு → மகவு. முழை → முகை. தொகு → தொகுப்பு = கூட்டம், தொகை. தொகு → தொகை (வே.க. 127-130)]

ஐந்தும் அடக்கடக் கென்பர் அறிவிலார்
ஐந்தும் அடக்குதற் கமரரும் அங்கிலை
ஐந்தும் அடக்கிடில் அசேதனமாம் என்றிட்டு
ஐந்து மடக்கி யமர்ந்திருந் தாரே (திருமந்.)

**தொகைக்காரன்** *togai-k-kāraṉ*, பெ. (n.) செல்வன்; moneyed man; rich man.

[தொகை + காரன்]

**தொகைக்குடிநீர்** *togai-k-kuḍinīr*, பெ. (n.) சரக்குகளின் தொகையைக் கொண்டு பெயரிடப்பட்ட கருக்கு வகை ; a name given to decoction according to the prescribed number of drugs.

[தொகை + குடிநீர்]

**தொகைக்குறிப்புச்சொல்** *togai-k-kuṟippu-c-col*, பெ. (n.) குறிப்பினால் தொகை கொண்ட பொருளை உணர்த்தும் எண்ணுப்பெயர் (நன். 269); numeral noun suggesting the intended object by contest.

[தொகை + குறிப்பு + சொல்]

**தொகைகட்டு[1]-தல்** *togai-kaṭṭu-*, 5 செ.குவி. (v.i.) 1. மொத்தமிடுதல்; to sum up; to make out the total; to cast up. 2. கணக்கு முடிவு செய்து பணம் கொடுத்தல்; to deliver up; to make over, as money; to pay, as into the treasury; to make a final payment (W).

[தொகை + கட்டு-.]

**தொகைகட்டு[2]-தல்** *togai-kaṭṭu-*, 5 செ.குன்றாவி (v.t.) முடித்தல் (W); to finish, conclude, bring to an end.

[தொகை + கட்டு-.]

**தொகைகாட்டு-தல்** *togai-kāṭṭu*, 5 செ.கு.வி. (v.i.) 1. கணக்கு ஒப்புவித்தல்; to give a written account. 2. கணக்கை மிகுதியாகக் காட்டுதல்; to make a sum appear large, to magnify.

[தொகை + காட்டு-.]

**தொகைச்சூத்திரம்** *togai-c-cūttiram*, பெ. (n.) குறிப்பிட்ட செய்தியின் பகுப்பை எண்ணிட்டுக் காட்டும் நூற்பா (நன். 20); sutra enumerating the classification of a topic.

[தொகை + சூத்திரம்]

Skt. sūtra → த. சூத்திரம்

**தொகைதை-த்தல்** *togai-tai-*, 4 செ.கு.வி. (v.i.) கணக்கு முடித்தல் (இ.வ.); to cast up; to close an account.

[தொகை + தை-.]

**தொகைநிலை** *togai-nilai*, பெ. (n.) 1. திரளாக நிற்கை; assembling, forming a class. 2. சுருங்கி நிற்கை (வின்.); contraction. 3. தொகைநிலைத் தொடர் (நன். 361) பார்க்க; see *togainilai-t-toḍar*. 4. வென்ற வேந்தன் தன் படைகட்குச் சிறப்புச் செய்யுமாறு அதனை ஒருங்கு தொகுக்கும் உழிஞைத் துறை (தொல். பொருள். 68); theme of a victorious king bringing his armies together to honour them. 5. போரில் இருதிறத்தாரும் ஒருங்கொழிந்ததைக் கூறும் புறத்துறை (பு. வெ. 7, 28); theme of the contending kings destroying each other on the battle field. 6. பகைவேந்தரெல்லாம் ஒருங்கு பணிதலைக் கூறும் புறத்துறை (பு. வெ. 6, 32); theme of the simultaneous surrender of hostile kings at the feet of a victorious king. 7. தொகைநிலைச் செய்யுள் பார்க்க; see *togai-nilai-c-ceyyuḷ*.

[தொகை + நிலை. தொகு → தொகை]

**தொகைநிலைச்செய்யுள்** *togai-nilai-c-ceyyuḷ*, பெ. (n.) ஒருவராலேனும் பலராலேனும் பாடப்பட்டனவாய்ப் பொருள் இடம் காலம் தொழில் என்பன பற்றியும் பாட்டு அளவு என்பன பற்றியும் ஒருங்கு திரட்டப்பட்ட செய்யுள் நூல் (தண்டி.4); anthology of poems collected on certain definite principles opp. to toḍar-nilai-c-ceyyuḷ.

[தொகை + நிலை + செய்யுள்]

ஒருவராலுரைக்கப்பட்டது - திருக்குறள்
பலரால் தொகுக்கப்பட்டது -
அகநானூறென்னும் நெடுந்தொகை
பொருளாற் றொகுத்தது - புறநானூறு
இடத்தாற் றொகுத்தது - களவழி நாற்பது
காலத்தாற் றொகுத்தது - கார் நாற்பது
தொழிலாற் றொகுத்தது - ஐந்திணை
பாட்டாற் றொகுத்தது - கலித்தொகை,
அளவாற் றொகுத்தது - குறுந்தொகை

**தொகைநிலைத்தொடர்** *togai-nilai-toḍar,* பெ. (n.) தொகை,13 (நன். 362, உரை) பார்க்க; see *togai,13.*

*[தொகை + நிலை + தொடர்]*

**தொகைநிலையுருவகம்** *togai-nilai-y-uruvagam,* பெ. (n.) **தொகையுருவகம்** (யாழ்.அக.) பார்க்க; see *togai-y-uruvagam.*

*[தொகை + நிலை + உருவகம்]*

**தொகைநூல்** *togai-nūl,* பெ. (n.) **தொகை நிலைச்செய்யுள்** பார்க்க; see *togai-nilai-c-ceyyuḷ.*

*[தொகை + நூல்]*

**தொகைப்படுத்து[1]-தல்** *togai-p-paḍuttu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. மொத்தமிடுதல் (உ.வ.); to sum up. 2. பிரித்துக்காட்டுதல் (வின்.); to reduce under various heads.

*[தொகை + படுத்து-.]*

**தொகைப்படுத்து[2]-தல்** *togai-p-paḍuttu-,* 5 செ.கு.வி. (v.i) பெரும் பொருள் திரட்டுதல் (வின்.); to make a large sum, amass wealth.

*[தொகை + படுத்து-.]*

**தொகைப்பிசகு** *togai-p-piśagu,* பெ. (n.) 1. கணக்குத் தவறு; error in reckoning an account. 2. தவறு; mistake, blunder.

*[தொகை + பிசகு]*

**தொகைப்பொருள்** *togai-p-poruḷ,* பெ. (n.) 1. பிண்டப் பொருள்; gist, summary. "இச்சூத்திரத்து அதிகரணங்காற் போந்த தொகைப் பொருளாவது" (சி. போ. பா. 1, 3, பக். 53, சுவாமிநா.). 2. தொகைநிலைத் தொடரின் பொருள் (நன். 370); meaning of a compound word.

*[தொகை + பொருள்]*

**தொகைபூட்டு-தல்** *togai-pūṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. கணக்குச் சரிக்கட்டுதல்; to balance accounts; to strike a balance. 2. கணக்கு மொத்தங் கட்டுதல்; to make out the grand total of an account.

*[தொகை + பூட்டு-.]*

**தொகைமொழி** *togai-moḻi,* பெ. (n.) பொருளணி வகை; a figure of speech. நெஞ்சினிற் பொருளை நிரப்ப வேறொரு செஞ்சொலிற் காட்டுந் திறமே தொகைமொழி (வீரசோ. 151, உரை.).

எ-டு.

வேட்டொழிவ தல்லால் விளைஞர்
விளைவயலுட்
டோட்ட கடைஞர் சுடுநந்து -
மோட்டாமை
வன்புறத்து மீதுடைக்கும் வச்சத்
திளங்கோவை
யின்புறுத்த வல்லாமோ யாம்.

*[தொகை + மொழி]*

**தொகைமோசம்** *togai-mōśam,* பெ. (n.) 1. தொகைப்பிசகு பார்க்க; see *togai-p-piśagu.* 2. பொருளிழப்பு; loss of money.

*[தொகை + மோசம்]*

Skt. mōṣa → த. மோசம்

**தொகையகராதி** *togai-y-agarādi,* பெ. (n.) 1. சதுரகராதியுள் தொகையுடைப் பொருளைக் காட்டும் பகுதி; a section of Caduragarādi being a catalogue of the categories of different branches of knowledge. 2. எண்ணுப் பெயர் சார்ந்த தொகைச் சொற்களின் பொருள் விளக்கும் அகரமுதலி; a dictionary of numerical terms.

*[தொகை + அகராதி]*

**தொகையடியார்** *togai-y-aḍiyār,* பெ. (n.) சிவனடியார்களுள் ஒன்பது பிரிவினராயுள்ள கூட்டவடியார்; the nine group of Saiva saints.

*[தொகை + அடியார்]*

**சிவனடியார்களின் ஒன்பது பிரிவுகளாவன:**

தில்லைவாழ் அந்தணர், பொய்யடிமை யில்லாத புலவர், பத்தராய்ப் பணிவார், பரமனையே பாடுவார், சித்தத்தைச் சிவன்

பாலே வைத்தார், திருவாரூர்ப் பிறந்தார், முப்பொழுதுந் திருமேனி தீண்டுவார், முழுநீறு பூசிய முனிவர், அப்பாலுமடிச்சார்ந்தார்.

**தொகையல்**[1] *togaiyal,* பெ. (n.) **துவையல்** (உ.வ.); chutney, a kind of strong relish.

*[துவையல் → தொவையல் (கொ.வ.)]*

**தொகையல்**[2] *togaiyal,* பெ. (n.) **தொவச்சல்** பார்க்க; see *tovaccal.*

**தொகையாக்கு-தல்** *togai-y-ākku-,* 8 செ.குன்றாவி. (v.t.) **தொகைப்படுத்து-தல்** (யாழ்.அக.) பார்க்க; see *togai-p-paḍuttu-.*

*[தொகு → தொகை. தொகை + ஆக்கு-.]*

**தொகையிறக்கு-தல்** *togai-y-iṟakku-,* 6 செ.குன்றாவி. (v.t.) *1.* **தொகைப்படுத்து-தல்** (யாழ்.அக.) பார்க்க; see *togai-p-paḍuttu-. 2.* **சிறிது சிறிதாகக் கொடுத்துக் கடனைக் குறைத்தல்**; to lessen one's liability gradually, as by paying in instalments.

*[தொகு → தொகை. தொகை + இறக்கு-.]*

**தொகையுருவகம்** *togai-y-uruvagam,* பெ. (n.) **ஆகிய என்ற உருபு தொக்குவரும் உருவகம்;** abbreviated metaphor, in which the word of correlation is understood. *மிக்கவுவமை விரியா துரையிற் றொக்கு நிற்பது தொகையுரு வகமே (வீரசோ. 159, உரை.).*

*[தொக்கு → தொகு → தொகை. தொகை + உருவகம்]*

*(எ-டு)*

*அங்கை மலரு மடித்தளிருங் கண்வண்டும்*
*கொங்கை முகிழுங் குழற்காரும் தங்கியதோர்*
*மாதர்க் கொடியுளதா னண்பா! வதற்கெழுந்த*
*காதற் குளதோ கரை*

**தொகையுவமம்** *togai-y-uvamam,* பெ. (n.) **பொதுத்தன்மை வெளிப்பட்டு வாராமல் ஆராய்ந்துணரும்படி மறைந்து நிற்கும் உவமை** *(தண்டி. 30);* a simile where the point of comparison is not brought out, but is implied, opp. to viri-y-uvamam.

*[தொக்கு → தொகு → தொகை. தொகை + உவமம்]*

*(எ-டு)*

*தாமரை வாண்முகத்துத் தண்டரளம்*
*போன்முறுவல்*
*காமரு வேய்புரைதோட் காரிகையீர்!*
*தேமருவும்*
*பூங்குழலின் வாசப் பொறைசுமந்து*
*நேர்ந்ததோ*
*பாங்குழலுந் தென்றற் பரிசு*

**தொகையேற்று-தல்** *togai-y-ēṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) *1.* **சிறுகச் சிறுகக் கொடுத்துக் கடனேற்றுதல்;** to increase the debt by frequently lending small sums. *2.* **எண் கூட்டுதல்;** to add up figures. *3.* **கணக்குப் பதிதல்;** to post up accounts.

*[தொகை + ஏற்று-.]*

**தொகைவிரி** *togai-viri,* பெ. (n.) **நூல்யாப்பு நான்கனுள் விரித்துக் கூறியதனைத் தொகுத்தும் தொகுத்துக் கூறியதனை விரித்தும் கூறும் முறை** *(நன். 50);* the method adopted in writing a treatise by summarising the facts elaborately treated by others and elaborating the facts briefly treated by them, one of four nūl-yāppu.

*[தொகு → தொகை. தொகை + விரி]*

**தொகைவிரியுருவகம்** *togai-viri-y-uruvagam,* பெ. (n.) **ஆகிய, ஆக என்னும் உருவக உருபுச் சொற்கள் தொக்கும் விரிந்தும் நிற்பது** *(தண்டி. 37);* metaphor in which the words of correlation are understood or marked.

எ-டு

*வையந் தகளியாக வார்கடலே நெய்யாக*
*வெய்ய கதிரோன் விளக்காகச் - செய்ய*
*சுடராழி யானடிக்கே சூட்டினேன் சொன்மாலை*
*இடராழி நீங்குகவே யென்று*

**தொங்கட்டம்** *toṅgaṭṭam,* பெ. (n.) *1.* **உடம்பின் ஓர் உறுப்பில் தொங்கும் பாகம், நஞ்சுக் கொடி முதலியன;** that which is attached to or hanging in an organ as umbilical cord etc. *2.* **குடற்றொங்கட்டம்;** measentary.

*[தொங்கு → தொங்கட்டம்]*

**தொங்கட்டான்** *toṅgaṭṭāṉ,* பெ. (n.) *1.* **தொங்கலாயுள்ள அணிவகை** (j); any ornament that hangs; a pendant. *2.* **உடையைத் தளர்வாகக் கட்டுகை;** a mode of tying cloth loosely. *3.* **கடிகார எடை;** pendulam of a clock.

*[தொங்கு → தொங்கட்டம் → தொங்கட்டான்]*



**தொங்கணி** *toṅgaṇi,* பெ. (n.) **தொங்கலணி** (வின்.); pendent ornament.

*[தொங்கு + அணி]*

**தொங்கல்** *toṅgal,* பெ. (n.) *1.* **தொங்குகை;** hanging. "தொங்கல்வார் குழல்" *(சீவக. 661)* *2.* **தொங்கற்பொருள்** (திருக்கோ.34, உரை); anything pendent, hangings. *3.* **அணிகலத் தொங்கல்** (திவா.); pendent part of an ornament. *4.* **காதணிவகை** (யாழ்.அக.); an ear-ornament. *5.* **தொங்கவிட்டுள்ள ஆடை முந்தி** (வின்.); outer end of woman's cloth either hanging or brought round the neck ; end of a man's cloth thrown over the shoulder. *6.* **அணியழகுப் பதாகைகள், தோரணங்கள்;** decorative hangings, as of cloth; festoons. "தொங்கலுங் குடையும்" *(கம்பரா. எழுச்சி. 78).* *7.* **பருத்த பூமாலை;** thick garland. "தோமரமாகத் தொங்கல் சிந்துபு மயங்கினாரே" *(சீவக. 2656).* *8.* **ஐம்பாற் கூந்தலுள் ஒருவகை** (பிங்.); a mode of dressing woman's hair, one of aim-pāl. *9.* **ஆண்மக்களின் மயிர்** (திவா.); man's hair. *10.* **மயிற்றோகை** (திவா.); tail of a pea-cock. *11.* **மயிற்குஞ்சம்** (பிங்.); pea-cock's feathers, as arranged for a fan or a parasol. *12.* **வெண் குடை** (திவா.); white umbrella, as an emblem of royalty. "மாமதி தொங்கலாக" *(திருப்பு. 871).* *13.* **சேறாடி குடை சாமரம் முதலிய விருது;** insignia of royalty. "கொற்றக் குடையும் வடிவுடைய தொங்கலுஞ் சூழ" *(ஆதியுலா. 57).* *14.* **பிணத்தை நீராட்டக் கொண்டு வரும் நீர்க்குடங்களின் மீது பிடிக்கப்படும் துணி;** cloth spread above the water-pots while carrying water to wash a corpse. "சின்னமுதத் தொங்கல் வந்திட" *(சி. சி. 2. 95).* *15.* **வயிற்றுத் தங்கல்;** any undigested matter sticking to the bowels. *16.* **விழக்கூடிய நிலையில் ஒட்டிநிற்கை** (யாழ்ப்.); anything sticking and hanging ready to fall. *17.* **முனை;** projection, cape, headland. *18.* **மூலை;** street corner, end of a street, extremity. "தொங்கலுக்குத் தொங்கல் *(வின்.).* *19.* **பெண்களின் மேலாக்குச் சீலை** (யாழ்.அக.); cloth worn as upper garment by women. *20.* **முந்துகை** (யாழ்.அக.); going in advance. *21.* **அணிகலன்களின் கடைப்பூட்டு** (யாழ்.அக.); clasp of an ornament. *22.* **குறை;** shortage. முப்பது உருவா தொங்கல். *23.* **களை கணின்மை (ஆதரவின்மை);** helplessness. அவர்பாடு தொங்கல் தான் *(உ.வ).* *24.* **ஒன்றைப் பற்றியிருக்குந் தன்மை;** dependence.

ம. தொங்கல்; க. தொங்கல்; து. தொங்கெ, தொங்கெலு; பட. தொங்கலு

*[தொங்கு → தொங்கல். 'அல்' தொ.பெ.ஈறு.]*

**தொங்கல்கழிச்சல்** *toṅgal-kaḻiccal,* பெ. (n.). **குழந்தைகளுக்குண்டாகும் ஒருவகைக் கழிச்சல் நோய்;** a kind of diarhea in childhood (சா. அக.).

*[தொங்கல் + கழிச்சல்]*

**தொங்கல்போடு-தல்** *toṅgal-pōḍu-,* 20 செ.குன்றாவி. (v.t.) **மேலாக்கிடுதல்;** to wear a cloth as upper garment.

*[தொங்கல் + போடு-.]*

**தொங்கல்விட்டம்** *toṅgal-viṭṭam,* பெ. (n.) **ஒப்பனைக் குஞ்சம்** (இவ.); decorative hangings.

*[தொங்கல் + விட்டம்]*

**தொங்கல்விடு[1]-தல்** *toṅgal-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) **தொங்கல்போடு-தல் பார்க்க;** see *toṅgal-pōḍu-.*

*[தொங்கல் + விடு-.]*

**தொங்கல்விடு²-தல்** *tongal-vidu-*, 18 செகுன்றாவி. (v.t.) கருப்பை, பிடுக்கு, பெண்முலை முதலியன தளர்ந்து கீழ் நோக்குதல்; getting loose and hanging downwards as womb, scrotum, female breast etc., (சாஅக).

**தொங்கல்விழு-தல்** *tongal-vilu-*, 3 செகுன்றாவி. (v.t.) குறைவாதல்; to be short. முப்பது உருவா தொங்கல் விழுந்திருக்கிறது.

[தொங்கல் + விழு-.]

தொங்கும் பொருளுக்கும் நிலத்திற்கும் இடையீடிருப்பது போல் வரவிற்கும் செலவிற்கும் இடையீடிருத்தல் (முதா. 60).

**தொங்கலுக்குப்பார்-த்தல்** *tongalukku-p-pār-*, 4 செகுன்றாவி. (v.t.) மந்திரத்தால் வயிற்றுத் தங்கலை நீக்க முயலுதல்; to try to remove extraneous matter sticking in the bowels by magic.

**தொங்கன்** *tongan*, பெ. (n.) கள்ளன்; robber, thief.

ம. தொங்ஙன்; தெ. தொங்க, டொங்க; நா., கொலா. டொங்க; பர். டொங்கல; கோண். தொங்க; கொண். டொஙரி; குவி. தொங்க

[தொங்கு → தொங்கி → தொங்கன்]

**தொங்காரப்பாய்ச்சல்** *tongāra-p-pāyccal*, பெ. (n.) குதிரை முதலியவற்றின் ஓட்டம் (w.); gallop, as of a horse.

[தொங்கு → தொங்கி + பாய்ச்சல் = தொங்கிப் பாய்ச்சல் → தொங்காரப் பாய்ச்சல்]

**தொங்காரம்** *tongāram*, பெ. (n.) ஏளனம்; contempt. உனக்கு என்னைப் பார்த்தால் தொங்காரமாக விருக்கிறதா?

ம. தொங்காரம்

**தொங்கான்** *tongān*, பெ. (n.) சில்லறை யணிகலன்கள்; small, miscellaneous ornaments. "வங்கானுந் தொங்கானும் மாட்டிக் கிளுகிளுத்து" (ஆதியூரவதானி.).

[தொங்கு → தொங்கன் → தொங்கான்]

**தொங்கி¹** *tongi*, பெ. (n.) தொங்குங்கல் அதாவது ஆட்டுக்கல்; a kind of stone pestle (சா. அக).

[தொங்கு → தொங்கி]

**தொங்கி²** *tongi*, பெ. (n.) கள்ளி (யாழ்.அக.); thieving woman.

[தொங்கன் (ஆ.பா.) → தொங்கி (பெ.பா.)]

**தொங்கிப்பாய்-தல்** *tongi-p-pāy-*, 3 செகுவி. (v.i.) குதித்தோடுதல்; to jump, to gallap, to skip.

[தொங்கி + பாய்-.]

**தொங்கிப்பூ** *tongi-p-pū*, பெ. (n.) கொடி சம்பங்கி (இ.வ.) பார்க்க; see *kodi-sambangi*.

[தொங்கு → தொங்கி + பூ]

**தொங்கிப்போ-தல்** *tongi-p-pō-*, 8 செகுவி. (v.i.) 1. வைத்ததுக் காணாமற் போதல்; to be lodged and lost, as a thing thrown. 2. பொருளிழத்தல்; to be in another's possession, to be misappropriated, as a deposit. 3. வழியிற் களைத்துத் தங்கல்; to tarry in the road from fatigue. 4. சாதல்; to die. 5. ஓடிப்போதல்; to run away.

[தொங்கி + போ-.]

**தொங்கிவிடு-தல்** *tongi-vidu-*, 20 செகுவி. (v.i.) தொங்கிப்போ-தல், பார்க்க; see *tongi-p-pō-*. அவன் தொங்கிவிட்டான் (நெல்லை).

[தொங்கி + விடு-.]

**தொங்கு-தல்** *tongu-*, 5 செகுவி. (v.i.) 1. நாலுதல்; to hang, to be suspended, to hang down. வறுமை தாளாது தொங்கிவிட்டான் (உ.வ.). 2. நிலைத்து நிற்றல்; to continue remain long in possession, as another's property; to be permanent. "தொங்காது போலேயிருந்தது" (ஈடு. 2, 3, 2). 3. இருத்தல்; to stay, abide. "ஆசைப் பட்டார் பக்கல் . . . தொங்கானாயிற்று" (ஈடு. 7,7,4). 4. அண்டிக்கிடத்தல்; to be dependent, servile. "தொங்கிநீயென்றுஞ் சோற்றுத் துறையர்க்கு . . . பணிசெய்" (தேவா. 393,6). அவனிடந் தொங்கிக் கொண்டிருக்கிறான். தொங்குவது குட்டிச் சுவர்,

கனாக் காண்பது மச்சு மாளிகை (பழ.) 5. துணிவாதல் (ஈடு. 7, 55, 11); to be effective, strong. 6. உண்டது வயிற்றில் தங்குதல்; to stay in the bowels, as anything eaten. "நாய்க் குடலுக்கு நறுநெய் தொங்காதாப் போல" (ஈடு.). 7. கிடைத்தல்; to be obtained, to come into possession. "கால்பாதி தொங்காதோ வென்று சுழல்வாரும்" (பணவிடு. 290). 8. குதித்தல்; to leap, to skip, as a child; to gallop. "குதிரை தொங்கிப் பாய்கிறது" (வின்). 9. சாதல் (யாழ்ப்.); to die. 10. முடிவு பெறாது தாமதித்திருத்தல் (கொ.வ.); to be in suspense. தமிழ்வழிக் கல்வி பற்றிய வழக்கு உச்சமுறைமன்றில் தொங்கலாயுள்ளது. 11. உதவி யற்றிருத்தல்; to be helpless. 'ஆள் தொங்குகிறான்' (உ.வ.).

ம. தொங்ஙுக; க., தெ., பட. தொங்கு; குட. துங்க்; கோத. தொங்க்; துட. தங்க்

[ஞாலு → நாலு → தாலு → தொலு → தொங்கு (அடி ஒன்றிட்படாமல் வானத்து நிற்றல்; ஒன்றைப் பற்றிக் கொண்டு தொங்குதல் போல ஒருவனை நெருங்கி வேண்டல்)]

**தொங்குகயிறு** *toṅgu-kayiṟu,* பெ. (n.). வள்ளத்திற்கும் கடலில் இறக்கிய வலைக்கும் இடையில் தொங்கும் கயிறு; hanging twine.

[தொங்கு + கயிறு]

**தொங்குகாது** *toṅgu-kādu,* பெ. (n.) வடிந்த காது (உ.வ.); hanging ears, stretched ears.

[தொங்கு + காது]



**தொங்குகிழவன்** *toṅgu-kiḻavaṉ,* பெ. (n.) தொண்டு கிழவன்; decrepit, old man.

மறுவ. வங்கிழவன்

[தொங்கு + கிழவன்]

**தொங்குங்கல்** *toṅguṅ-kal,* பெ. (n.). ஆட்டுக்கல் (யாழ்.அக.); grinding mill-stone.

[தொங்கும் + கல்]



**தொங்குசட்டம்** *toṅgu-šaṭṭam,* பெ. (n.) கூரைவாய்ப் பட்டையில் வைக்கும் பலகை (இ. வ.); eave board, barge board.

[தொங்கு + சட்டம்]

**தொங்குதொப்பூழ்** *toṅgu-toppūḻ,* பெ. (n.) மாட்டுக்குற்ற வகை (மாட்டுவா. 17); a defect of cows and oxen.

[தொங்கு + தொப்பூழ்]

**தொங்குந்தோட்டம்** *toṅgun-tōṭṭam,* பெ. (n.) உலக வியப்புகள் எட்டனுளொன்றான, பாபிலோன் நகரத்தமைந்துள்ள தோட்டம்; hanging garden of Babylon one of the eight wonders of the world.

[தொங்கும் + தோட்டம்]

**தொங்குநார்** *toṅgu-nār,* பெ. (n.) எலும்பின் பாகத்தைக் கவர்ந்துள்ள சவ்வு மடிப்பு; any peritoneal or other fold that serves to hold any small bone. 2. கண்ணின் பாவை மேற் கவர்ந்துள்ள மடிப்பு; the suspensory ligament of the eye lens.

[தொங்கும் + நார்]

**தொங்குநாரை** *toṅgu-nārai,* பெ. (n.) மாட்டுக் குற்றவகை (மாட்டுவா. 17); a defect of cows and oxen.

[தொங்கும் + நாரை]

**தொங்குபறிவு** *toṅgu-paṟivu,* பெ. (n.). ஒட்டியு மொட்டாமலு மிருக்கை; hanging just ready

to fall or slip off. *2. விலக வழிபார்க்கை;* being ready or waiting for a pretext to leave.

*[தொங்கு + பறிவு]*

**தொங்குபாலம்** *toṅgu-pālam,* பெ. (n.) இரு நீண்ட கம்பிகளுக்கிடையே பிணைக்கப் பட்டிருக்கும், இடையில் தூண்களில்லாத இருப்புப் பாலம் (கட்டட நாமா-11); suspension bridge.

*[தொங்கு + பாலம்]*



**தொங்குபுழுதி** *toṅgu-puḻudi,* பெ. (n.) வயலில் இறுகாது இளகி நிற்கும் புழுதி (இ.வ.); loose mud, as in fields immediately after ploughing.

மறுவ ஈளைக்கழனி, ஈளைப்புலம்

*[தொங்கு + புழுதி]*

**தொங்குபுளுகன்** *toṅgu-puḷugaṉ,* பெ. (n.) செருக்கிக் குதித்து நடக்கும் வீண் பெருமைக் காரன் *(வின்.);* vain person who walks with a springling gait.

*[தொங்கும் + புளுகன்]*

**தொங்குபெட்டி** *toṅgu-petti,* பெ. (n.) வில் வண்டியின் பின்பக்கம் அமைக்கப்படும் பெட்டி *(இ.வ.);* a box at the rear of a spring cart.



*[தொங்கு + பெட்டி]*

**தொங்குபொறி** *toṅgu-poṟi,* பெ. (n.). தொங்குபறிவு பார்க்க; see *toṅgu-paṟivu.*

*[தொங்குபறிவு → தொங்கு பொறிவு → தொங்குபொறி]*

**தொங்குபொறிவு** *toṅgu-poṟivu,* பெ. (n.) தொங்குபறிவு (யாழ்.) பார்க்க; see *toṅgu-paṟivu*

**தொங்கும்தோட்டம்** *toṅgum-tōṭṭam,* பெ. (n.) தொங்குந்தோட்டம் பார்க்க; see *toṅgun-tōṭṭam*

*[தொங்கும் + தோட்டம்]*

**தொங்குமார்** *toṅgu-mār,* பெ. (n.) தளர்ந்து கீழ் நோக்கு முலை; sagging bust *(சா.அக.).*

*[தொங்கு + மார்]*

**தொசுக்கு** *tośukku,* பெ. (n.). *1. தகாப்புணர்ச்சி;* illicit connection, as concubinage. *2. மிச்சம்;* remainder, what is left unfinished. நீ எதையுந் தொசுக் கில்லாமற் செய்யமாட்டாய்.

*[தொடு → தொடுக்கு → தொசுக்கு (முதா.86)]*

**தொட்ட** *toṭṭa,* பெ. (n.) பெரிய; big.

க., பட. தொட்ட

*[தொழு → தொடு → தொட்ட]*

**தொட்டக்கால்வாடி** *toṭṭa-k-kāl-vāḍi,* பெ. (n.) தொட்டாற்சுருங்கி பார்க்க; see *toṭṭāṟ-śuruṅgi* *(சா.அக).*

*[தொட்டக்கால் + வாடி]*

**தொட்டகுறை** *toṭṭa-kuṟai,* பெ. (n.) முற் பிறவியில் தொடங்கிவிட்ட வினைக்குறை; karma or action commenced in a previous birth and left unfinished, opp. to viṭṭa-kuṟai.

*[தொடு → தொட்ட + குறை]*

**தொட்டடி** *toṭṭaḍi,* பெ. (n.) செய்யுளின் முதலடி; the opening or first line of a poem, dist. fr. vittadi. விட்டடி தொட்டடி அவனுக்குத் தெரியாது (வின்.).

*[தொடு + அடி]*

**தொட்டது** *toṭṭadu*, பெ. (n.). செருப்பு; shoes.

*[தொடு → தொட்டது]*

**தொட்டப்பன்** *toṭṭappaṉ*, பெ. (n.) (கிறித்.) அறிவுத் தந்தை (யாழ்ப்.); god father.

க. தொட்டப்ப

*[தொட்ட + அப்பன்]*

**தொட்டபூடு** *toṭṭa-pūḍu*, பெ. (n.) ஆனை நெருஞ்சில்; elephant calt rods (சா.அக).

*[தொட்ட + பூடு]*

**தொட்டம்** *toṭṭam*, பெ. (n.) சிறு நிலம் (யாழ்ப்.); small piece of ground.

*[தொடு → தொட்டு → தொட்டம்]*

**தொட்டல்**[1] *toṭṭal*, பெ. (n.) 1. கட்டுகை (திவா.); tying, binding. 2. உண்ணுகை (சூடா.); eating. 3. தோண்டுகை (திவா.); digging. 4. தீண்டுகை; touching.

*[தொடு → தொட்டு → தொட்டல்]*

**தொட்டல்**[2] *toṭṭal*, பெ. (n.) பெருங்குறிஞ்சி; medium white silky backed cone head.

**தொட்டவிரல்தறித்தான்** *toṭṭa-viral-taṟittāṉ*, பெ. (n.) பெருங்குறிஞ்சா பார்க்க; see *peruṅ-kuṟiñjā*.

*[தொட்டவிரல் + தறித்தான்]*

**தொட்டாச்சி** *toṭṭācci*, பெ. (n.) அறிவுத்தாய் (வின்.); god mother.

*[தொட்ட + ஆய்ச்சி]*

**தொட்டாட்டுமணியம்** *toṭṭāṭṭu-maṇiyam*, பெ. (n.) குற்றேவல் (யாழ்ப்.); minor domastic duties.

மறுவ. புழுக்கு வேலை.

*[தொடு → தொட்டு + ஆட்டு + மணியம்]*

**தொட்டாட்டுவேலை** *toṭṭāṭṭu-vēlai*, பெ. (n.) தொட்டாட்டுமணியம் பார்க்க; see *toṭṭāṭṭu-maṇiyam*.

**தொட்டாப்பு**[1] *toṭṭāppu*, பெ. (n.) சிட்டைமரம் (யாழ்ப்.) பார்க்க; see *siṭṭai-maram*.

**தொட்டாப்பு**[2] *toṭṭāppu*, பெ. (n.) வலையின் துண்டம்; piece of net.

**தொட்டாய்ச்சி** *toṭṭāycci*, பெ. (n.) தொட்டாச்சி (யாழ்.) பார்க்க; see *toṭṭācci*.

*[தொட்டாய்ச்சி → தொட்டாச்சி]*

**தொட்டால்வாடி** *toṭṭāl-vāḍi*, பெ. (n.) 1. தொட்டாற்சுருங்கி பார்க்க; see *toṭṭāṟ-suruṅgi*. 2. சுண்டிவகை (M.M. 531); a species of sensitive plant.

*[தொட்டால் + வாடி]*

**தொட்டால்வேசி** *toṭṭāl-vēsi*, பெ. (n.) சிமிட்டி பார்க்க; see *cimiṭṭi* (சா.அக).

**தொட்டாற்சிணுங்கி** *toṭṭāṟ-ciṉuṅgi*, பெ. (n.) தொட்டாற்சுருங்கி (இ.வ.) பார்க்க; see *toṭṭāṟ-suruṅgi*.

**தொட்டாற்சுருங்கி**[1] *toṭṭāṟ-šuruṅgi*, பெ. (n.) தொட்டால் தன் இலைகளைச் சுருக்கிக் கொள்ளும் தன்மையுடைய சிறு இலைகளைக் கொண்ட மருந்துக்குதவும் செடி; sensitive plant (சா.அக).

*[தொட்டால் + சுருங்கி. சுருங்கு → சுருங்கி]*



**தொட்டாற்சுருங்கி**[2] *toṭṭāṟ-curuṅgi*, பெ. (n.) தொட்டவுடன் கூச்ச முண்டாக்கும் உடம்பின் பாகம் அல்லது இடம்; body marked by abnormal sensibility (சா.அக).

*[தொட்டால் + சுருங்கி]*

**தொட்டாற்சொறியன்** *toṭṭāṟ-coṟiyaṉ*, பெ. (n.). காஞ்சொறி; scorpion leaf (சா. அக).

*[தொட்டால் + சொறியன்]*

இவ்விலை உடலின் மீது பட்டவுடன் அரிப்புண்டாவதால் இப்பெயர் பெற்றது.

**தொட்டான்** *tottāṉ*, பெ. (n.) உப்பளத்தில் தெப்பத்திற்கும் பாத்திக்கும் இடையில் உள்ள நீர்த்தேக்கம்; stagnant water in between the tank division and the salt-pan (மீனவ.).

**தொட்டி**[1] *totti*, பெ. (n.) 1. நீர்த்தொட்டி (w); water-trough, tub, cistern, reservoir. 'துற்றுவ துற்றுந் துணையிதழ் வாய்த் தொட்டி" (பரிபா. 20, 51). 2. அழி (வின்.); manger, crib. 3. குப்பைத் தொட்டி; refuse bin. 4. தொட்டிக்கட்டு பார்க்க; see *totti-k-kattu*. 5. அம்பாரி; howdah. "தொட்டியுடன் பொரு சமர் முனை சீறிய தும்பிகள்" (பாரத பதினாறாம். 51). 6. கள் (அக.நி.); toddy. 7. வைப்பு நஞ்சு வகை (சங்.அக.); a prepared arsenic.

ம., க., தெ., து., பட. தொட்டி

[தொடு → தொட்டி]

தொட்டி வகைகள்

1. இரும்பு தொட்டி - iron trough.
2. செப்புத் தொட்டி - copper trough.
3. கற்றொட்டி - stone trough.
4. மரத்தொட்டி - wooden trough.

**தொட்டி**[2] *totti*, பெ. (n.) 1. தொட்டாற்சொறியன் பார்க்க; see *tottāṟ-coṟiyaṉ*. 2. குறுந்தொட்டி; rose coloured sticky mallow. 3. தொட்டிப் பாடாணம் பார்க்க; see *totti-p-pāḍāṇam*.

**தொட்டி**[3] *totti*, பெ. (n.) 1. வேலியடைப்பு (வின்.); fence, yard, pound. 2. மரம் விறகு விற்குமிடம்; enclosure for selling timber, firewood. விறகுத் தொட்டி. 3. முத்துச்சிப்பி விற்குமிடம் (யாழ்ப்.); enclosure for selling oysters at the pearl fishery. 4. சிற்றூர்; small village. "ஊரெல்லாம் பட்டி தொட்டி" (தனிப்பா. 142, 37).

ம., க. தொட்டி; தெ. தொட்டி; து. துட்டி; குவி., கொண். டொட்டி

**தொட்டி**[4] *totti*, பெ. (n.) ஒறுப்பு; fine, punishment. தொட்டிப்பணம் (வின்.).

**தொட்டி**[5] *totti*, பெ. (n.) இறைச்சிக்காக ஆடு மாடுகளை வெட்டுமிடம்; slaughter house.

**தொட்டி**[6] *totti*, பெ. (n.) தொட்டில்[1] பார்க்க; see *tottil*.

**தொட்டி**[7] *totti*, பெ. (n.) வேலிதாண்டும் கால்நடைகளை ஒறுப்புக்காக அடைக்கும் இடம்; cattle pound.

**தொட்டிக்கட்டு** *totti-k-kattu*, பெ. (n.) வீட்டமைப்பில் நடுவில் திறந்த வெளியுடைய சதுரக்கட்டு; open quandrangular section in the centre of a house. ஒரு வீட்டில் அடுக்கடுக்காய் மூன்று தொட்டிக்கட்டுகள் அமைக்கப்படாது (சர்வா. சிற். 47) (செ.அக.).

**தொட்டிக்கட்டுவீடு** *totti-k-kattu-vīdu*, பெ. (n.) நாற்புறமும் தாழ்வாரமும் இடையில் முற்றமும் அமைந்த வீடு; house with an open quandrangular section in the centre (கட்டட).

[தொட்டி + கட்டு + வீடு]



**தொட்டிக்கலவடை** *totti-k-kala-vadai*, பெ. (n.) நீர்த்தொட்டியின் அடிமனை (வின்.); foot of a laver.

[தொட்டி + கலவடை]

**தொட்டிக்கால்** *totti-k-kāl*, பெ. (n.) 1. உள் வளைந்த கால் அல்லது படப்புக்கால்; bandy legged. 2. முட்டிக் கால் தட்டி; knock knee (சா.அக.).

மறுவ. கவட்டைக்கால்.

[தொட்டி + கால்]

**தொட்டிக்காளவாய்** *totti-k-kāḷavāy*, பெ. (n.). தரையிலேயே சதுரமாகவோ, வட்டமாகவோ சுவர் அமைத்து அதன் ஒரு பக்கம் காற்றைச் செலுத்தும் வழியுடைய காளவாய்; kiln made in the floor with walls in the circular or square form, and make way the blow wind in one side.

[தொட்டி + காளவாய்]

**தொட்டிச்சி** *toṭṭicci*, பெ. (n.) தொட்டியக் குலப்பெண்; a woman of toṭṭiyar caste.

*[தொட்டியன் (ஆ.பா.) → தொட்டிச்சி (பெ.பா.)]*

**தொட்டிச்செம்பு** *toṭṭi-c-cembu*, பெ. (n.) தொட்டி நஞ்சினின்று எடுத்த செம்பு; copper extracted from totty padanam (சா. அக.).

*[தொட்டி + செம்பு]*

**தொட்டித்தொகை** *toṭṭi-t-togai*, பெ. (n.) இரும்புத் தொட்டி, செம்புத்தொட்டி நஞ்சு; the two kinds of prepared arsenics containing iron and copper respectively as ingredients (சா.அக.).

*[தொட்டி + தொகை]*

**தொட்டிப்பணம்** *toṭṭi-p-paṇam*, பெ. (n.) வேலைக்காரர்க்கிடும் தண்டத் தொகை (வின்.); fine for default of workmen.

*[தொட்டி + பணம்]*

**தொட்டிப்பனை** *toṭṭi-p-paṉai*, பெ. (n.) மலைப்பனை; hill palmyra so called probably of its trunk being used as a tub (சா.அக.).

*[தொட்டி + பனை]*

இம்மரத்தின் பகுதியைக் குடைந்து தொட்டி போல் பயன்படுத்தியமையால் இப்பெயர் அமைந்தது.

**தொட்டிப்பாகிதம்** *toṭṭi-p-pāgidam*, பெ. (n.) சிவப்பு நெல்லி; a red variety of Indian goose berry (சா.அக.).

**தொட்டிப்பாடம்** *toṭṭi-p-pāḍam*, பெ. (n.) பெரிய மீன்களிலுள்ள குடலை நீக்கித் தூய்மை செய்து உப்பிட்டு, நான்கு அல்லது ஐந்து நாட்கள் தொட்டியிலிட்டுப் பின்பு பாடஞ் செய்தல் (மீனவ.); cure the fish by removing its intestine, and then soak it in the salt for five days, and then make it suitable for cooking.

*[தொட்டி + பாடம் → பக்குவம்]*

**தொட்டிப்பாடாணசுத்தி** *toṭṭi-p-pāḍāṇa-śutti*, பெ. (n.) தொட்டி நஞ்சைத் துண்டு துண்டாய் நறுக்கிக் கிளிகட்டி நெல்லில் அவித்து எடுத்துக் கொள்ளுதல்; cut the toṭṭi pāḍāṇam into small pieces and bundle them in a piece of white cloth and keep it in the middle of paddy contained in an earthern pot which is then boiled and taking it out as soon as the husk of the paddy brakes (சா.அக.).

**தொட்டிப்பாடாணம்** *toṭṭi-p-pāḍāṇam*, பெ. (n.) இதளியமும், கந்தகமும் கூட்டிப் பாண்டத்தில் சமைத்தது; a kind of arsenic prepared by mixing mercury and sulphur to form a chemical compound by a process mentioned in Tamil medicine. 2. அயத்தொட்டிப்பாடாணம் பார்க்க; see *aya-t-toṭṭi-p-pāḍāṉam*. 3. செம்புத் தொட்டிப்பாடாணம் பார்க்க; see *śembu-t-toṭṭi-p-pāḍāṇam* (சா.அக.).

**தொட்டிப்பாலம்** *toṭṭi-p-pālam*, பெ. (n.) மேட்டு நிலத்துள் நீர் பாயுமாறு கட்டப்படும் ஒருவகைப் பாலம் (நாஞ்.); a kind of aqueduct, as trough-like.

*[தொட்டி + பாலம்]*

**தொட்டிப்பூட்டு** *toṭṭi-p-pūṭṭu*, பெ. (n.) தைக்கும் பூட்டுவகை (தஞ்சை.); a kind of padlock.

*[தொட்டி + பூட்டு]*



**தொட்டிமயமூலி** *toṭṭi-maya-mūli*, பெ. (n.) நோம்புவாலி; unknown plant (சா.அக.).

*[தொட்டி + மயமூலி]*

**தொட்டிமுற்றம்** *toṭṭi-muṟṟam*, பெ. (n.) வீட்டிலுள்ளாகத் தொட்டி போல் அமைந்துள்ள முற்றம் (இ.வ.); inner yard of a house.

*[தொட்டி + முற்றம்]*



**தொட்டிமை** *tottimai,* பெ. (n.) *1.* ஒற்றுமை *(சூடா.);* uniformity, unison. "தொட்டிமை யுடைய வீணை" *(சீவக. 2047). 2.* அழகு; beauty. "தொட்டிமை கலந்த தூசு" (பெருங். உஞ்சைக். 50, 8).

*[துள் → தொள் → தொடு → தொட்டி → தொட்டிமை (மு.தா. 196)]*

**தொட்டியக்கரு**[1] *tottiya-k-karu,* பெ. (n.) கெடுதல் சூழியத்தில் பயன்கொள்ளுங் கரு *(யாழ்.அக.);* articles used in witchcraft.

*[தொட்டி → தொட்டிய + கரு]*

**தொட்டியக்கரு**[2] *tottiya-k-karu,* பெ. (n.) தொட்டி வித்தையிற் சொல்லிய உகிர், மயிர், பிண்டம், தலை, மண்டையோடு முதலிய கரு; the essential parts or material parts multilated from the human body such as nails hair foetus or embryo skull etc., required in the performance of magic by a class of people known as tottās (கம்பளத்தார்) (சா.அக.).

*[தொட்டி → தொட்டிய + கரு]*

**தொட்டியச்சி** *tottiyacci,* பெ. (n.) தொட்டிச்சி (வின்) பார்க்க; see *totticci.*

*[தொட்டிச்சி → தொட்டியச்சி]*

**தொட்டியச்செம்பு** *tottiya-c-cembu,* பெ. (n.) தொட்டிச்செம்பு பார்க்க; see *totti-c-cembu* (சா.அக.).

*[தொட்டிச்செம்பு → தொட்டியச்செம்பு]*

**தொட்டியம்**[1] *tottiyam,* பெ. (n.) மதுரை மாவட்டத்தின் மேற்குப் பகுதி (Nels); a country identified with the western portion of Madurai District. *2.* ஒரு மொழி *(யாழ்.அக.);* a language. *3.* கெடுதல் சூழியக் கலை *(வின்.);* witchcraft and legerdemain.

**தொட்டியம்**[2] *tottiyam,* பெ. (n.) கெடுதல் செய்யும் சூழியம், தன் வயப்படுத்தல், குறி முதலிய கலைகளைக் கற்றுப் பழகிய கம்பளத்தார்; a treatise on mantric science or magic containing the art of witchcraft sorcary necromancy, love philter etc., (சா.அக.).

தொட்டியக் கலையைக் கற்றதனால் இச்சாதியருக்கு இப்பெயர் அமைந்தது போலும்.

**தொட்டியர்** *tottiyar,* பெ. (n.) ஒரு குலத்தினர்; people of totti caste.

**தொட்டியலை** *totti-y-alai,* பெ. (n.) ஒரு மீன்பிடி வலை; kind of fishing net (மீனவ.).

*[தொட்டிவலை → தொட்டியலை]*

**தொட்டியவித்தை** *tottiya-vittai,* பெ. (n.) தொட்டியச் சாதியார் செய்யும் கெடுதல் சூழியம், கருவேலை முதலிய கலை முறைகள்; the various performances in sorcary witch craft etc., done by the class of people known as tottiyas. தொட்டியப் பேய் சுடுகாடு மட்டும். *(பழ.).*

*[தொட்டிய(ர்) + வித்தை. விச்சை → வித்தை. ஒ.நோ. அச்சன் – அத்தன்]*

**தொட்டியன்** *tottiyan,* பெ. (n.) ஆந்திர நாட்டில் உழவுத் தொழில் செய்துவந்து மதுரை நாட்டில் நாயக்கன் என்ற பெயர் கொண்டு வாழுமொரு குலத்தான் (E.T.); person of a Telugu caste of cultivators, settled in the western part of the Madurai District, who assume the tittle Nāyakkan.

**தொட்டில்**[1] *tottil,* பெ. (n.) குழந்தைகளைப் படுக்க வைத்து ஆட்டற்குரிய மஞ்சம் அல்லது தூளி; cradle, swinging cot for an infant. "கிடக்கிற் றொட்டில் கிழிய உதைத்திடும்" *(திவ். பெரியாழ். 1,1, 9).* தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும் *(பழ.),* தொட்டிலும் ஆட்டிப் பிள்ளையையும் கிள்ளுவான் *(பழ.).*

மறுவ. ஏணை

ம., க., து. தொட்டில்; தெ., தொட்டிலா.



**தொட்டில்**[2] *toṭṭil,* பெ. (n.). தொட்டி[1] (யாழ்ப்.) பார்க்க; see *toṭṭi.*

*[தொட்டி → தொட்டில்]*

**தொட்டில்ஏற்றம்** *toṭṭil-ēṟṟam,* பெ. (n.) உழவுத் தொழிலில் கால்வாயிலிருந்து மேட்டுப் பகுதிக்கு ஏற்றத்தின் உதவியால் நீர் பாய்ச்சும் முறை; methods of irrigation in cultivation by spring water from the channel to the ridge with the help of picottah.

*[தொட்டில்[2] + ஏற்றம்]*



**தொட்டில்குழந்தைத்திட்டம்** *toṭṭil-kuḻandai-t-tiṭṭam,* பெ. (n.) தொட்டிற்குழந்தைத்திட்டம் பார்க்க; see *toṭṭiṟ-kuḻandai-t-tiṭṭam.*

*[தொட்டில் + குழந்தை + திட்டம்]*

**தொட்டில்பத்தை** *toṭṭil-pattai,* பெ. (n.) வண்டியின் முன் பகுதியில் ஏர்க்காலைத் தொடுமாறு பொருத்தப்பட்டுள்ள மூங்கில் பத்தைகள்; bamboo rod, joined in front of the cart, to louch the plough.

மறுவ. சப்பைக்கழி

*[தொட்டில்[2] + பத்தை]*



**தொட்டில்முண்டு** *toṭṭil-muṇḍu,* பெ. (n.) தொட்டிற்சீலை பார்க்க; see *toṭṭiṟ-sīlai.*

*[தொட்டில்' + முண்டு. முண்டு = சீலை]*

**தொட்டில்ராட்டி** *toṭṭil-rāṭṭi,* பெ. (n.) மேல் கீழாகச் சுற்றும் இராட்டின விளையாட்டு வகை; a kind of merry-go-round.

*[தொட்டில் + ராட்டு]*



**தொட்டிலிடு-தல்** *toṭṭil-iḍu,* 18 செ.குன்றாவி. (v. t.) முதன்முறையாகக் குழந்தையைத் தொட்டிலில் ஏற்றுவித்தல்; to cradle for the first time, as a child.

*[தொட்டில்[2] + இடு-.]*

**தொட்டிவயிறு** *toṭṭi-vayiṟu,* பெ. (n.) விலாப் புடைத்த வயிறு; belly like that of animals paunch belly (சாஅக.).

*[தொட்டி + வயிறு]*

**தொட்டிவலை** *toṭṭi-valai,* பெ. (n.) மீன் பிடி வலை வகையுள் ஒன்று; a kind of fishing net (மீனவ.).

*[தொட்டி + வலை]*

**தொட்டிவீடு** *toṭṭi-vīḍu,* பெ. (n.) தொட்டிக் கட்டுள்ள வீடு (நாஞ்.); a house with toṭṭ-k-kaṭṭu.

*[தொட்டி + வீடு]*

**தொட்டிற்குழந்தைத்திட்டம்** *toṭṭiṟ-kuḻandai-t-tiṭṭam,* பெ. (n.) அல்வழியிற் பிறந்த குழந்தைகளையும், விருப்பின்றிப் பிறந்த பெண் குழந்தைகளையும் காக்கும் தமிழ் நாட்டரசின் திட்டம்; cradle baby scheme of the state Government of Tamilnadu, India which takes care of illegitimate children and unwanted female children.

*[தொட்டில் + குழந்தை + திட்டம்]*

**தொட்டிற்சீலை** *toṭṭiṟ-cīlai,* பெ. (n.) குழந்தைத் தொட்டிலுக்குரிய துணிவகை; a kind of cloth used for cradle.

*மறுவ. ஏணை சீலை.*

*[தொட்டி + சீலை]*

**தொட்டு**[1] *toṭṭu,* இடை. (part.) *1.* குறித்து; touching, concerning, in reference to. அவனைத் தொட்டு எனக்கு ஆக வேண்டியது ஒன்று மில்லை. *2.* தொடங்கி; beginning with, from, since, thenceforward. "பெருஞ்செல்வந் தோன்றியக் காற்றொட்டு" *(நாலடி., 2).*

*[தொடு → தொட்டு]*

**தொட்டு**[2] *toṭṭu,* பெ. (n.) பூண்டு; plant *(சாஅக.).*

**தொட்டுக்காட்டு-தல்** *toṭṭu-k-kāṭṭu-,* 5 செ.குன்றாவி. (v.t.). ஒன்றைச் செய்து காட்டுதல்; to lead the way, show practically how a thing must be done. "தொட்டுக் காட்டாத வித்தை சுட்டுப் போட்டாலும் வாராது" *(பழ.).*

*[தொட்டு + காட்டு-.]*

**தொட்டுக்கூட்டுக்கறி** *toṭṭu-k-kuṭṭu-kaṟi,* பெ. (n.) பச்சடி முதலிய நீருணவு (நாஞ்.); a kind of liquid relish.

*[தொட்டு + கூட்டு+ கறி]*

**தொட்டுக்கொண்டுபோ-தல்** *toṭṭu-k-koṇḍu-pō-* 8 செ.குன்றாவி. (v.t.). *1.* ஒன்றைச் சுமப்பதாகத் தோன்றப் பண்ணுதல்; to pretend to carry a load with others, by just touching it. *2.* பாடையைப் பிடித்துக் கொண்டு செல்லுதல் (இ.வ.); to walk touching the bier; as near relations in a funeral procession. *3.* இறுதிச் சடங்கில் துணிமூலையைப் பிடித்தல்; to bear a pall at a funeral.

*[தொட்டு + கொண்டு + போ-.]*

**தொட்டுக்கொள்(ளு)-தல்** *toṭṭu-k-koḷ-,* 7 செ.குன்றாவி. (v.t.). *1.* எட்டிப் பிடித்தல்; to touch; to catch. "தொட்டுக் கொள் தொட்டுக் கொள் என்ன வேண்டும் படி" *(ஈடு. 1,1,1).* *2.* உணவுக்குத் துணையாக ஊறுகாய் முதலியவற்றைச் சிறிது உட்கொள்ளுதல்; to take small bites, as at pickles. தொட்டுக் கொள்ள ஊறுகாய் வேண்டும். (உ.வ.).

*[தொட்டு + கொள்-.]*

**தொட்டுச்சாப்பிடுமுறவு** *toṭṭu-c-cāppiḍum-uṟavu,* பெ. (n.) (மாலியம்) ஒருவர் தொட்ட உணவை மற்றொருவர் உண்ணும்படி மகளிருக்குள் அமைந்த நெருங்கியதோருறவு; close relationship of women making it permissible for them to take food at one another's house.

*[தொட்டு + சாப்பிடும் + உறவு]*

**தொட்டுத்தின்(னு)-தல்** *toṭṭu-tiṉ-,* 14 செ.கு.வி. (v.i.) கீழ் வகுப்பைச் சார்ந்தோர் சமைத்த உணவை, உடன் இருந்து உண்ணுதல்; to take food at the house of a low caste person. தொட்டுத் தின்றும் பட்டினியா?

*[தொட்டு + தின்]*

**தொட்டுத்தெளித்-தல்** *toṭṭu-t-teḷi,* 4 செ.குன்றாவி. (v.t.) தொட்டுத்தெறி-த்தல் பார்க்க; see *toṭṭu-t-teṟi-.*

*[தொட்டு + தெளி-.]*

**தொட்டுத்தெறி-த்தல்** *toṭṭu-t-teṟi-,* 4 செ.குன்றாவி. (v.t.) ஆலாத்தி நீரை மணமக்கள் மேல் தெளித்தல்; to sprinkle a coloured liquid, as on a newly married couple. *2.* சிறுமையாய்க் கொடுத்தல்; to give sparingly. தொட்டுத் தெறிக்காதவன்.

*[தொட்டு + தெறி-.]*

**தொட்டுத்தொட்டு** *toṭṭu-t-toṭṭu,* வி.எ. (adv.) சிறுகச் சிறுக (இ.வ.); little by little. "தொட்டுத் தொட்டு நூறு உருவா செலவாயிற்று".

**தொட்டுப்பார்-த்தல்** *tottu-p-pār-*, 4 செ.குன்றாவி. (v.t.) *கையாற் தொடல்;* feeling by touch as in fever (*சா. அக.*).

*[தொட்டு + பார்-.]*

**தொட்டுப்பிடி[1]-த்தல்** *tottu-p-pidi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *பேறு காலத்தில் பக்கத்திலிருந்து உதவி செய்தல்* (நாஞ்.); to act as midwife in childbirth.

*[தொட்டு + பிடி-.]*

**தொட்டுப்பிடி[2]-த்தல்** *tottu-p-pidi-*, 4 செ.குன்றாவி. (v.t.) *சிறுவர் விளையாட்டு வகை;* a kind of childerns game.

*[தொட்டு + பிடி-.]*

**தொட்டுப்போடு-தல்** *tottu-p-pōdu-*, 20 செ.குன்றாவி. (v.t.) *மருந்தெண்ணெயைப் புண், காயம் முதலியவற்றுக்கிடுதல்;* basmearing or applying medicated oils or ointments to wounds, sores etc., (*சா.அக.*).

**தொட்பம்** *totpam*, பெ. (n.) *திறம்* (*அக.நி.*); cleverness skill.

*[ஒட்பம் → தொட்பம்]*

**தொடக்கப்பள்ளி** *todakka-p-palli*, பெ. (n.) *ஒன்று முதல் ஐந்து வகுப்பு வரை உள்ள பள்ளிக்கூடம்;* primary school, elementary school. ஆறகழூரிலுள்ள தொடக்கப் பள்ளியில் ஆயிரம் பேர் படிக்கின்றனர்.

*[தொடக்கம் + பள்ளி]*

**தொடக்கம்** *todakkam*, பெ. (n.) *1. தோற்றம்;* origin. *2. ஆதி* (*திவா.*); beginning, commencement. "ஊரது உண்டது என்றற் றொடக்கத்தன" (நன். 242. மயிலை.). *3. முயற்சி* (*வின்.*); means for an attempt. *4. செல்வம்* (*யாழ்அக.*); wealth. *5. வகுப்பு, குலம்* (*யாழ்அக.*); class.

*[தொடு → தொடங்கு → தொடக்கம் (மு.தா. 86)]*

**தொடக்கறை** *todakkarai*, பெ. (n.) *உடல்;* human body. "மும்மல பாண்டத் தொடக் கறையை" (*தாயு. பாயப்புலி. 18*).

*[தொடக்கு[3] + அறை-.]*

**தொடக்கிழுப்பு** *todakkiluppu*, பெ. (n.) தொடக்குவலிப்பு பார்க்க; see *todakku-valippu* (*சா.அக.*).

*[தொடக்கு + இழுப்பு]*

**தொடக்கினி** *todakkini*, பெ. (n.) *கருவு;* foetus in the womb (*சா.அக.*).

*[தொடக்கு → தொடக்கினி]*

**தொடக்கு[1]-தல்** *todakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. கட்டுதல்;* to tie. 'நினைத் துன்பத்தாற் றொடக்கினேன்' (*சீவக. 579*). *2. அகப்படுத்துதல்;* to catch hold of ensnare. "விளை பொருள் மங்கையர் முகத்தினும் . . . சொல்லினுந் தொடக்கும்" (*கல்லா. 62, 28*). *3. அணிதல்;* to wear, put on. 'பாதுகை திருவடி தொடக்கி" (*விநாயகபு. 80, 278*). *4. பொருத்துதல்;* to make to agree.

*க.* தொடகு; *தெ.* தொடகு

**தொடக்கு[2]-தல்** *todakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *சிக்கிக் கொள்ளுதல்;* to get entangled, obstructed. "சங்கநுங்க விலைக்கதலிப் புதன் மீது தொடக்கி" (*பெரியபு. ஆனாய. 4*).

*க.* தொடகு

**தொடக்கு[3]-தல்** *todakku-*, 5 செ.குன்றாவி. (v.t.) *தொடங்குதல்;* to begin.

*[தொடங்கு → தொடக்கு]*

**தொடக்கு[4]** *todakku*, பெ. (n.) *1. கட்டு;* tying, binding, entanglement."படைச்சொற் பாசத் தொடக்குள் ளுறீஇ" (*பெருங். மகத. 2, 13*). *2. பிணைப்பு;* bondage. "தொடக் கெலா மறுத்தநற் சோதீ" (*திருவாச. 37*). *3. பற்று;* connection, attachment. "தொடக்கறுத்தோர் சுற்றமே" (*கம்பரா. சரபங். 27*). *4. தீட்டு;* uncleanness, as of a woman in her periods or in childbirth. *5. குஞ்சம்;* decorative hangings. "தொடக்கொடு தூக்கி" (*சீவக. 1343*). *6.* தொடக்கு வடிவு (*வின்.*) பார்க்க; see *todakku-vadivu*.

*ம.* தொடக்கு

*[தொடக்கு → தொடக்கு[3]]*

**தொடக்குப்பைத்தியம்** *todakku-p-paittiyam,* பெ. (n.) மாதவிலக்குக் கோளாறினால் பெண்களுக்கு ஏற்படும் ஒருவித மன வெறிநோய்; a variety of insanity or mania as one of the concomitants of a hysteric condition (சா.அக.).

*[தொடக்கு[3] + பைத்தியம்]*

**தொடக்குபடு-தல்** *todakku-padu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. **தீட்டு படல்;** being unclean through menses. 2. **சாவு, பிள்ளைப்பேறு முதலியவற்றால் ஏற்படும் தீட்டு;** ceremonial uncleanliness through death, child birth etc., (சா.அக.).

*[தொடக்கு + படு-.]*

**தொடக்குவடிவு** *todakku-vadivu,* பெ. (n.) **அணிகல வகை** (வின்.); an ornament.

*[தொடக்கு + வடிவு]*

**தொடங்கி** *todangi,* இடை (part.) **ஆதிமுதல்;** from, ever since. "தொடங்கிப் பிறப்பின்னா தென் றுணரும் பேரறிவி னாரை" (நாலடி., 123).

**தொடங்கிவை-த்தல்** *todangi-vai-,* 8 செ.குன்றாவி. (v.t.) முதல் **கட்டப் பணியை நடைபெறச் செய்தல்;** to inaugurate. திட்டப் பணிகளை முதலமைச்சர் தொடங்கி வைத்தார்.

*[தொடங்கி + வை]*

**தொடங்கு[1]-தல்** *todangu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. **தோற்றுவித்தல்;** to begin, commence, originate. "அலர் தொடங்கின்றாலூரே" (ஐங்குறு. 75). 2. **முயலுதல்;** to undertake, enter upon, engage in. 3. **ஒத்தல்;** to resemble "இருவர் நூற்கு மொருசிறை தொடங்கி" (நன்.8).

ம. தொடங்ஙுக; துடங்ஙுக; க. தொடங்கு; தெ. தெடகு, தொட்டு; து. தொடங்குனி; கூ. தோண்ட; மா. தெட்கெ

**தொடங்கு[2]** *todangu,* பெ. (n.) 1. **காலணி;** foot-wear. 2. **விலங்கு;** animal.

**தொடர்[1]-தல்** *todar-,* 3 செ.கு.வி. (v.i.) 1. **இடையறாது வருதல்;** to follow uninterrupt-edly; to continue in unbroken succession. "தொடர்ந்த குவளைத் தூநெறி யடைச்சி" (பதிற்றுப். 27, 2). 2. **பிணைந்து நிற்றல்;** to be linked. "தாடொறுந் தொடர்ந்த தழங்குபொற் கழலின்" (கம்பரா. திந்தனை. 6). 3. **அமைதல்;** to form. "வாரண வுரித்தொகுதி நீவி தொடர" (கம்பரா. விராதன். 14). 4. **மிகுதல்;** to increase. "தம்முட்பகை தொடர்ந்து" (பரிபா. 7, 72). 5. **நெருங்குதல்;** to be close-knit. "வரைமலை யெல்லா நிறைந்து முறழ்ந்து நிமிர்ந்துந் தொடர்ந்தும்" (பரிபா. 19, 82).

க. தொடர்

*[தொடு → தொடர்]*

**தொடர்[2]-தல்** *todar-,* 2 செ.குன்றாவி. (v.t.) 1. **பின் பற்றுதல்;** to follow after, cling to, pursue. "அவரை. . . அரக்கியர் தொடர்குவர்" (கம்பரா. ஊர்தேடு.22). 2. **ஊக்கத்தோடு மேற்கொள்ளுதல்** (வின்.); to insist upon, persist in with energy, persevere in. 3. **பயிற்சி செய்தல்;** to practise, pursue, as study. "வடகலை தொடர்வார்" (கோயிற்பு. திருவிழா.32). 4. **தேடுதல்;** to seek out, find out, trace. "மறையிலீறுமுன் றொடரொணாத நீ" (திருவாச. 5, 95). 5. **வழக்குக் கிழுத்தல்;** to prosecute, sue. அந்தக் கடனுக்கு உன்னைத் தொடரப் போகிறேன் (யாழ்.அக.). 6. **கட்டுதல்** (திவா.); to connect, tie, bind. "சிறுமணி தொடர்ந்து" (நற். 220). 7. **பற்றுதல்;** to seize. 'யானுன்னைத் தானை தொடரவும்" (பு.வெ. 12, பெண்பாற். 18). 8. **பெறுதல்;** to get, obtain. "சாந்தினணி தொடர்ந்து" (பு.வெ. 12, பெண்பாற். 11). 9. **வினவுதல்;** question, enquire. 'தோடவிழ் தார் யானுந் தொடர" (பு. வெ. 11, பெண்பாற். 10). 10. **தாக்குதல்** (வின்.); to assail, attack. 11. **நெருங்குதல்;** to be near or close to. 12. **தொங்கவிடுதல்;** to hang. "மாலை தொடரி" (அகநா. 86).

தெ. தொடரு.

**தொடர்[3]** *todar,* பெ. (n.) 1. **தொடர்கை;** following, succession. 2. **தொடரி** (சங்கிலி); chain. "தொடர்ப்படு ஞமலியின்" (புறநா. 74). 3. **விலங்கு;** fetters. 'தொடர் சங்கிலிகை" (திவ். பெரியாழ். 1, 7, 1). 4. **வரிசை** (வின்.); series. 5. **சொற்றொடர்;** phrase; clause; sentense; compound-word. இறைக்குருவனார் தம் கட்டுரையில் கழக இலக்கியத் தொடர்களை மிகுதியாக எடுத்தாண்டுள்ளார். 6. **நட்பு;** friendship, love. "நல்லார் தொடர் கைவிடல்"

(குறள், 450). 7. உறவு (சூடா.); connection, relation. 8. கால்வழி; lineal succession. 9. பழைமை (யாழ்.அக.); long-standing connection. 10. பூமாலை (யாழ்அக.); flower garland. 11. நூல் (யாழ்அக.); thread. 12. பிசின் (யாழ்அக.); gum, glue.

**தொடர்**[4] *todar,* பெ. (n.) 1. நாய்; dog. 2. கோவை; Indian caper. 3. குடற்றொடர்; that portion of the alimentary canal either above or below the region of intestines (சா.அக.).

**தொடர்**[5] *todar,* பெ. (n.) குறிப்பிட்ட கால இடைவெளியில் ஒருமுறை எனத் தொடர்ந்து வருவது; seriol. மாதிகையில் வந்த கட்டுரைத் தொடர் முடிந்துவிட்டது.

**தொடர்**[6] *todar,* பெ. (n.) வழக்குத் தொடுத்தல்; file a suit. எதிர்க்கட்சித் தலைவர் அமைச்சர் மீது இழப்பீட்டு வழக்குத் தொடர்ந்தார்.

**தொடர்ஓட்டம்** *todar-ōttam,* பெ. (n.) 1. ஓட்டத் தூரத்தின் நான்கில் ஒரு பகுதியை ஒருவர் கடந்த பிறகு தன் கையில் உள்ள கட்டையைத் தந்து மற்றவர் அந்த இடத்திலிருந்து ஓட்டத்தைத் தொடர்ந்து ஓடி நிறைவேற்றும் ஓட்டப் போட்டி; relay race. 4 x 4 மீட்டர் பெண்களுக்கான தொடர் ஓட்டம். 2. விளையாட்டுப் போட்டி, விழா முதலியன நடைபெறும் இடத்துக்கு ஒருவரைத் தொடர்ந்து ஒருவர் ஓடி ஒன்றைக் கொண்டு வருதல்; running in relays as in bringing the torch etc. சென்னையில் நடந்த பாவாணர் நூற்றாண்டு விழாவுக்கு அவர் பிறந்த ஊரான நெல்லையிலிருந்து ஒளிப்பந்தத்தைத் தொடர் ஓட்டமாகக் கொண்டு வந்தனர்.

[தொடர் + ஓட்டம்]

**தொடர்கண்ணி** *todar-kanni,* பெ. (n.). தொழுகண்ணி பார்க்க; see *tolu-kanni* (சா.அக.).

**தொடர்கதை** *todar-kadai,* பெ. (n.) வார, மாத இதழ்களில் பகுதி பகுதியாகத் தொடர்ந்து வெளியிடப்படும் நீண்ட கதை; serial in periodicals.

[தொடர் + கதை]

**தொடர்குரு** *todar-guru,* பெ. (n.) கொப்புளங்கள் நெருங்கத் தோன்றும் ஓர் அம்மை நோய்; confluent variola (சா.அக.).

[தொடர் + குரு. குரு - கொப்புளம்]

**தொடர்கோவை** *todar-kōvai,* பெ. (n.) 1. தொடரி (சங்கிலி); chain. 2. கட்டளை; commanding word. 3. தொடர்; connection. 4. நூல்; thread. 5. பஞ்சு; cotton thread. 6. பழைமை; ancient. 7. பிசின்; paste. 8. பூமாலை; garland. 9. மணம்; smell. 10. விலங்கு; animal.

[தொடர் + கோவை]

**தொடர்ச்சி** *todarcci,* பெ. (n.) 1. தொடர்கை; pursuit, following, continuance. 2. தொடர்பு; association, connection, touch. 'முந்தை யறிவின் றொடர்ச்சியினால்" (பெரியபு. சண்டேசு. 13). 3. உறவு முறை; relationship. 4. கொடிவழித் தொடர்பு; heriditary succession, lineal descent. 5. நட்பு; friendship, intimacy. 'தொல்குடியின் மாண்டார் தொடர்ச்சியும்" (திரிகடு. 1). 6. வரிசை; series, train, range, row, chain. "கருந்தேன் றொடர்ச்சியும்" (கல்லா. 26, 30). 7. பூங்கொத்து (பிங்.); cluster or bunch of flowers. 8. காரணிய கருமியப் பொருட்டு; chain of causes and effects. "தொடர்ச்சி . . . வித்து முளைதா ளென்றிந் நிகழ்ச்சியிலவற்றை நெல்லென வழங்குதல்" (மணிமே. 30:200). 9. வழக்குத் தொடர்ச்சி (யாழ்.22); claim in a law-suit. 10. பேய்பிடிக்கை (வின்.); demoniacal possession. 11. தொடுசு (உவ.); illicit connection, concubinage. 12. முயற்சி (யாழ்அக.); effort.

[தொடு → தொடர் → தொடர்ச்சி]

**தொடர்ச்சிக்காரன்** *todarcci-k-kāran,* பெ. (n.). எடுத்துரைப்போன் (வாதி) (வின்.); claimant, prosecutor, plaintiff.

[தொடர்ச்சி + காரன். 'காரன்' பெயரீறு.]

**தொடர்ச்சிப்பண்ணு-தல்** *todarcci-p-pannu,* 15 செ.கு.வி. (v.i.) வழக்கிடுதல் (வின்.); to prosecute in law, file a suit.

[தொடர்ச்சி + பண்ணு-.]

**தொடர்ச்சொல்** *todar-c-col,* பெ. (n.) 1. தொடர் மொழி (வின்.); compound word. 2. சொற்களின் தொடர் (யாழ்.அக.); phrase; clause; sentense.

[தொடர் + சொல்]

**தொடர்சிரங்கு** *todar-cirangu,* பெ. (n.) ஒன்றன் பின் ஒன்றாய்க் கிளைக்கும் சிரங்கு; itch rising one after the other (சா.அக.).

[தொடர் + சிரங்கு]

**தொடர்சொல்** *todar-col,* பெ. (n.) தொடர்ச் சொல் பார்க்க; see *todar-c-col.*

[தொடர் + சொல்]

ஒற்று மிகுந்தும் மிகாமலும் வரும் இயல்புடையது இச்சொல்

**தொடர்சொற்புணர்த்தல்** *todar-cor-punarttal,* பெ. (n.) உத்தி முப்பத்திரண்டனுள் ஒன்றற் கொன்று தொடர்புள்ள சொற்களைச் சேர்த்துக் கூறுவது (நன். 14); grouping related words, one of 32 utti.

[தொடர் + சொல் + புணர்]

**தொடர்ந்தார்** *todarndār,* பெ. (n.) நண்பர் (சூடா.); friends, companion.

[தொடு → தொடர் → தொடர்ந்தார்]

**தொடர்ந்து** *todarndu,* பெ. (n.) 1. இடை விடாமல்; continuously, without break. மூன்று நாட்களாகத் தொடர்ந்து காய்ச்சல். 2. அடுத்து, உடனே; following immediately, after. இடி மின்னலைத் தொடர்ந்து அடைமழை பெய்ததது; கூட்டத்தைத் தொடர்ந்து விருந்து உண்டு.

[தொடர் → தொடர்ந்து]

**தொடர்ந்தேற்றி** *todarntērri,* பெ. (n.) 1. விடா முயற்சி (வின்.); perseverance, persistence. 2. தொடர்ச்சி (யாழ்.அக.); continuity.

[தொடர்ந்து + ஏற்றி]

**தொடர்ந்தேற்றியாய்அரை-த்தல்** *todarn-dērriyāy-arai-,* 4 செ.குன்றாவி. (v.t.) கை யோயாமல்அரை-த்தல் பார்க்க; see *kai-ōyāmal-arai-* (சா.அக.).

**தொடர்நிலைச்செய்யுட்குறியணி** *todar-nilai-c-ceyyut-kuri-y-ani,* பெ. (n.) வெல்ல வேண்டும் பொருளின் கரணியத்தை வெளிப்படையாகக் கூறும் அணிவகை (அணியி. 60); a figure of speech in which the cause that is to be inferred is plainly stated in words.

[தொடர்நிலை + செய்யுள் + குறி + அணி]

**தொடர்நிலைச்செய்யுட்பொருட்பேறணி** *todar-nilai-c-ceyyut-porut-pērani,* பெ. (n.) தண்டத்தைத் தின்ற எலி அதிலேயுள்ள அப்பத்தையுந் தின்றிருப்பது பெறப்படுவது போல வெளிப்படையான செய்தியை யுணர்த்தும் அணிவகை (அணியி. 50); a figure of speech in which a statement leads to an inference by the application of taṇḍāpūbigā-niyāyam.

[தொடர்நிலைச்செய்யுள் + பொருட் பேறணி]

**தொடர்நிலைச்செய்யுள்** *todar-nilai-c-ceyyul,* பெ. (n.) ஒரு கதைமேல் நாற் பொருளும் வனப்பும் அமைய இயற்றப்படும் செய்யுணூல் (சீவக. 1, உரை); narrative poem, epic poem.

[தொடர்நிலை + செய்யுள்]

இது, பொருள் தொடர்நிலைச் செய்யுளும், சொற்றொடர் நிலைச் செய்யுளும் என இரு வகைத்து.

**தொடர்ப்பாடு** *todar-p-pādu,* பெ. (n.) 1. தொடர்ச்சி (யாழ்.அக.); continuity. 2. பற்று; connection, attachment. "மற்றுந் தொடர்ப் பாடெவன்கொல்" (குறள், 345). 3. காம நுகர்ச்சி; sexual enjoyment. உய்யு மேற்றொடர்ப் பாட்டினிங் கியாவையும் எய்தி னார்களு முய்பவென் றோதினான் (சீவக. 1426).

[தொடர் → தொடர்பாடு]

**தொடர்ப்பூ** *todar-p-pū,* பெ. (n.) விரிபூ (பிங்.); full-blown blossim.

[தொடர் + பூ]

**தொடர்பற** *todarpara,* பெ. (n.) முழுவதும்; entirely, without the least trace. "இப்புனத்துத் தினையுள்ளது இன்று தொடர்பறக் கொய்தற்றது" (திருக்கோ. 143. அவ).

[தொடர்பு + அற]

**தொடர்பின்மையணி** *todarpinmai-y-ani,* பெ. (n.) தொடர்பின்றி வினை நிகழ்ந்ததாகக்

கூறும் அணி (அணியி. 37); a figure of speech in which a fact is stated without any relevancy.

*[தொடர்பு + இன்மை + அணி]*

**தொடர்பு**[1] *todarbu,* பெ. (n.) 1. தொடர்ச்சி, 1, 2, 3, 4, 6, 8, பார்க்க; see *todarcci.* 2. நட்பு; attachment, friendship. 'அஞ்சுக கேள்போற் பகைவர் தொடர்பு" (குறள், 882). 3. பாட்டு (பிங்.); verse, poem. "ஏனோர் வளங்கெழு தொடர்பு போலும் மற்றைய பழமும்" (பிரபுலிங். ஆரோக. 36). 4. நெறி; முறைமை; rule, principle. "உயிரெலா . . . பிரிந்துபோந் தொடர்பு" (சேதுபு. கந்தமா. 82). 5. ஒட்டுகை (வின்.); stickiness.

*[தொடு → தொடர் → தொடர்பு]*

**தொடர்பு**[2] *todarpu,* பெ. (n.) 1. உடற்றொடர்பு; carnal intercourse. 2. உறவு; chemical affinity (சா.அக.).

*[தொடு → தொடர் → தொடர்பு]*

**தொடர்புகொள்-தல்** *todarbu-kol-,* 7 செ.குன்றாவி. (v.t.) 1. செய்திப் பரிமாற்றம் கொள்ள வழி ஏற்படுத்துதல்; get in touch with. மருத்துவரைத் தொலைபேசியில் தொடர்பு கொண்டு நிலைமையை விளக்கினேன் (உ.வ.). பேராசிரியரோடு மடல் வழியாகத் தொடர்பு கொண்டேன் (உ.வ.). இந்த வேலையில் சேர விருப்பம் உள்ளவர்கள் நேரடியாகத் தொடர்பு கொள்ளவும் (உ.வ.).

*[தொடர்பு + கொள்]*

**தொடர்புநோய்** *todarbu-nōy,* பெ. (n.). பிறப்பிலேயே வாய்த்த நோய்; hereditary disease (சா.அக.).

*[தொடர்பு' + நோய்]*

**தொடர்புயர்வுநவிற்சி** *todarpuyarvu-navirci,* பெ. (n.) தொடர்பில்லாதிருப்பத் தொடர்பையும் தொடர்பிருப்பத் தொடர் பின்மையையும் கூறும் உயர்வு நவிற்சியணி; a variety of hyperbole in which an imaginary connection is stated between two objects.

*[தொடர்பு + உயர்வு நவிற்சி]*

**தொடர்முருந்து** *todar-murundu,* பெ. (n.) மெதுவெலும்பு; loose cartilage (சா.அக.).

மறுவ. முருக்கெலும்பு

*[தொடர் + முருந்து]*

**தொடர்முழுதுவமை** *todar-mulutuvamai,* பெ. (n.) உவமானச் சொற்றொடரிலும், உவமேயச் சொற்றொடரிலும், பொதுத் தன்மையைத் தெரிவிக்குஞ் சொல் தனித்தனி வரும் அணி (அணியி. 17); a figure of speech in which the point of comparison is clearly stated both in the sentence containing the upamānam and in the sentence containing the upamēyam.

*[தொடர் + முழுதும் + உவமை]*

**தொடர்முறி** *todar-muri,* பெ. (n.) ஒருவர் மீது இனி வழக்குத் தொடர்வதில்லை என்று உறுதி செய்து எழுதிக் கொடுக்கும் ஆதரவுச் சீட்டு (W.G); a deed or promise in writing not to pursue a person further at law.

*[தொடர் + முறி]*

**தொடர்மொழி** *todar-moli,* பெ. (n.) 1. இரண்டெழுத்துக்கு மேற்பட்ட எழுத்து களைக் கொண்ட சொல்; a word of more than two letters. "இரண்டிறந் திசைக்குந் தொடர் மொழி யுளப்பட" (தொல்.எழுத்து. 45). 2. சொற்களால் ஆகுந்தொடர்; a phrase, clause or sentence made up of words. "தொடர் மொழி பலபொருளன" (நன். 260).

*[தொடர் + மொழி]*

**தொடர்வட்டி** *todar-vatti,* பெ. (n.) வட்டிக்கு வட்டி; compound interest.

*[தொடர் + வட்டி]*

**தொடர்வண்டி** *todar-vandi,* பெ. (n.) பல பெட்டிகளைக் கொண்ட வண்டித் தொடர்; train.

மறுவ. தொடரி

*[தொடர் + வட்டி]*



**தொடர்வு** *todarvu,* பெ. (n.) தொடர்ச்சி பார்க்க; see *todarcci.* "சுற்றிய சுற்றத் தொடர்வறுப்பான்" *(திருவாச. 8, 20).*

**தொடர்வைப்பு** *todar-vaippu,* பெ. (n.) தொடர்வைப்புக்கணக்கு பார்க்க; see *todar-vaippu-k-kanakku.*

*[தொடர் + வைப்பு]*

**தொடர்வைப்புக்கணக்கு** *todar-vaippu-k-kanakku,* பெ. (n.) வங்கி, அஞ்சல் நிலையம் முதலியவற்றில் குறிப்பிட்ட ஆண்டுகள் வரைத் திங்கள்தோறும் தொடர்ந்து ஒரு தொகையைச் சேமித்து வட்டியோடு திரும்பப் பெறுதல்; recurring deposit in a bank or post office, etc.

*[தொடர்வைப்பு + கணக்கு]*

**தொடரர்** *todarar,* பெ. (n.) மேவினர் (அக.நி); dependents.

**தொடரல்** *todaral,* பெ. (n.) கடல் (அக.நி); sea.

*[தொடு → தொடர் + அல் = தொடரல்]*

**தொடராமுறி** *todarā-muri,* பெ. (n.) விடுதலையாவணம் (யாழ்.அக.); deed of renunciation or relinquishment. 2. தொடர்முறி பார்க்க; see *todar-muri.*

*[தொடர் + ஆ + முறி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தொடரி**[1] *todari,* பெ. (n.) 1. செடி வகை; a species of jujube. 2. முட்செடி வகை; a thorny straggling shurb. "கடுவுந் தான்றியுங் கொடுமுட் டொடரியும்" *(பெருங்.உஞ்சைக். 52, 38).* 3. புலித்தொடக்கி; tiger stopper.

*[தொடு → தொடர் → தொடரி]*

**தொடரி**[2] *todari,* பெ. (n.) தொடர்வண்டி பார்க்க; see *todar-vandi.*

ம. தொடரி, கூரி

**தொடரி**[3] *todari,* பெ. (n.) மாழை வளையத் தொடர்; chain.

*[தொடல் → தொடர் → தொடரி (வேக. 257)]*



**தொடரிசைக்குறி** *todar-isai-k-kuri,* பெ. (n.) சொல்லும் பொழுது இரண்டு மாத்திரைக் காலம் நிறுத்தும் பொருட்டு இடும் அரைப்புள்ளி (யாழ்ப்.); semi-colon.

*[தொடர் + இசை + குறி]*

**தொடரிடு-தல்** *todar-idu-,* 20 செ. குன்றாவி. (v.t.) இடைவிடாது செய்தல்; to work at continuously. "பாவிநான் தொடரிட்ட தொழில்க ளெல்லாம்" *(தாயு. மலைவளர். 4).*

*[தொடர் + இடு-.]*

**தொடரியம்** *todar-iyam,* பெ. (n.) பொருள் முற்றுப்பெறுமாறு எழுவாய், பயனிலை ஆகியவற்றைக் கொண்ட சொற்கூட்டு; set of words completed in itself, containing subject and predicate.

*[தொடர் + இயம்]*

வாக்கியம் என்பது வடசொல்

**தொடரியல்** *todariyal,* பெ. (n.) சொற்றொடர் அமைப்பின் விதிமுறைகளையும் சொற் றொடர்களுக்கிடையிலான உறவையும் விளக்கும் மொழியியற் பிரிவு; syntax.

*[தொடர் + இயல்]*

**தொடரெழுத்து** *todar-eluttu,* பெ. (n.) அவனடித் தான், வந்தடித்தான் என்னுமிடங்களில் னகரமும் தகரமும் போல் நிலைமொழி யீற்றையும் வருமொழி முதலையும் தழுவி நிற்கும் எழுத்து (யாழ்.அக.); the letter formed by the combination of the final consonant or the final shortened 'u' of a word and the initial

vowal of the succeeding word as ன in அவனடித்தான் and த in வந்தடித்தான்.

[தொடர் + எழுத்து]

**தொடரொழுக்கு** *todar-olukku,* பெ. (n.) தடையில்லாத ஒழுக்கு; uninterrupted or free flow of anything (சா.அக.).

[தொடர் + ஒழுக்கு]

**தொடல்** *todal,* பெ. (n.) தொடரி[3] பார்க்க; see *todari.*

[தொடு → தொடர் → தொடல்]

**தொடலவம்** *todalavam,* பெ. (n.) நெட்டி; pith (சா.அக.).

**தொடலி** *todali,* பெ. (n.) தொடரி[1] (யாழ்.அக.) பார்க்க; see *todari.*

[தொடு → தொடரி → தொடலி]

**தொடலை** *todalai,* பெ. (n.) 1. தொங்கவிடுகை; hanging, suspension. "தொடலை வாளர்" (மதுரைக். 636). 2. மாலை; garland. "தொடலைக் குறுந்தொடி" (குறள், 1135). 3. மகளிர் விளையாட்டுவகை (திவா.); a girls' game. 4. மணிக்கோவைகளால் தொடுக்கப்பட்ட மேகலை; jewelled girdle. "தொடலை யல்குற் றொடித்தோண் மகளிர்" (புறநா. 339).

[தொடு → தொடல் → தொடலை (வே.க. 251)]

**தொடவல்** *todaval,* பெ. (n.) மாலை (அக.நி.); garland.

[தொடு → தொடவு → தொடவல் (வே.க. 257)]

**தொடாக்காஞ்சி** *todā-k-kāñji,* பெ. (n.) போர்ப் புண்ணுற்ற தன் கணவனைப் பேய் தீண்டுதலை நீக்கிய மனைவி தானுந் தீண்டா திருத்தலைக் கூறும் புறத்துறை (பு.வெ. 4,19); a theme describing the devils being scared away by the ghastly wounds of a warrior lying in the battle field.

[தொடு + ஆ + காஞ்சி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]

**தொடாச்சாதி** *todā-c-cādi,* பெ. (n.) தீண்டாக் குலம்; untouchable caste. மறுவ. கீழ்ச்சாதி

[தொடு + ஆ + சாதி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]

**தொடாப்பூ** *todā-p-pū,* பெ. (n.) 1. விரிந்த பூ; blossomed flower. 2. பெண்குறி மலர்; கன்னிப்பூ; an organ of the female genital (சா.அக.).

[தொடு + ஆ + பூ. 'ஆ' எதிர்மறை இடைநிலை]

**தொடி** *todi,* பெ. (n.) 1. வளைவு; curve, bend. "தொடிவளைத் தோளும்" (சிலப். 10:128). 2. கைவளை (பிங்.); bracelet. "குறுந்தொடி கழித்தகைச் சாபம்பற்றி" (புறநா. 77). 3. தோள் வளை; armlet. "நீப்ப நீங்காது வரின்வரை யமைந்து ... போக்கில் பொலந்தொடி" (நற். 136). 4. வீரவளை; armlet, warrior's armlet. "வலிகெழு தடக்கை தொடியொடு சுடர்வர" (மதுரைக். 720). 5. பூண்; ring, ferrule, ornamental knob of an elephant's tusk. "தொடித்தலை விழுத்தண்டூன்றி" (புறநா. 243). 6. பாறைக் கிணறுகளில் படியாக உதவ வெட்டப்படும் சுற்றுவட்டம் (இ.வ.); circular projections in stone wells serving as steps. 7. பலம் என்னும் பண்டைய எடையளவு; a standard weight. "தொடிப்புழுதி கஃசா வுணக்கின்" (குறள், 103).



**தொடிசு**[1] *todišu,* பெ. (n.) கூத்திவைப்பு; illegitimate connections, concubinage.

[தொடு → தொடுசு → தொடிசு (மு.தா. 86)]

**தொடிசு**[2] *todisu,* பெ. (n.) 1. உடந்தை; support. 2. தொடர்வு; connection.

[தொடுசு → தொடிசு]

**தொடித்தலைவிழுத்தண்டினார்** *toḍi-t-talai-viḻu-t-taṇḍiṉār*, பெ. (n.) புறநானூற்றில் 243ஆம் பாடலை இயற்றிய புலவர்; an ancient poet, author of 243rd poem in puṟa-nāṉūṟu.

*[தொடித்தலை விழுத்தண்டு → தொடிதலை விழுத்தண்டினார்]*

**தொடிமகள்** *toḍi-magaḷ*, பெ. (n.) விறலி பார்க்க; see *viṟali*. *"தொடிமகண் முரற்சிபோல்" (கலித். 36, 4).*

*[தொடி + மகள்]*

**தொடியோள்** *toḍi-yōḷ*, பெ. (n.) பெண்; woman.

*[தொடி → தொடியோள்]*

**தொடியோள்பெளவம்** *toḍi-yōḷ-pauvam*, பெ. (n.) குமரியாறு; the ancient river kumari.

*[தொடியோள் + பெளவம்]*

குமரியாற்றைக் கடல்கொண்டபின், அவ்விடத்துள்ள கடல் குமரிக்கடல் எனப்பட்டது. இப்போது அப்பக்கத்துள்ள நிலக்கோடி குமரிமுனையென்னப்படுகிறது.

கோவலன் காலத்தில் குமரியாறு இருந்தமை, மாடலன் என்னும் மறையோன் அதில் நீராடி விட்டுத் திரும்பும்போது, மதுரையில் கோவலனைக் கண்டதாகக் கூறும் சிலப்பதிகாரச் செய்தியால் அறியலாகும். கோவலன் இறந்து சில ஆண்டுகட்குப் பின், குமரியாற்றைக் கடல் கொண்டது. அதன்பின் சிலப்பதிகாரம் இயற்றப் பட்டதினால், 'தொடியோள் பெளவமும்" என்று தெற்கிற் கடலெல்லை கூறப்பட்டது.

'தொடியோள் பெளவம்' என்பதற்கு அடியார்க்கு நல்லார் கூறிய குறிப்புரையாவது:

"தொடியோள் - பெண்பாற் பெயராற் குமரியென்பதாயிற்று. ஆகவே, தென்பாற் கண்ணதோர் ஆற்றிற்குப் பெயராம். ஆனால், நெடியோன் குன்றமும் தொடியோள் நதியுமென்னாது பெளவமுமென்றது என்னையெனில், முதலூழியிறுதிக்கண், தென் மதுரையகத்துத் தலைச்சங்கத்து, அகத்தியனாரும் குமரவேளும் முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனும் என்றிவருள்ளிட்ட, நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர், எண்ணிறந்த பரிபாடலும் முதுநாரையும் முதுகுருகும் களரியாவிரையுள்ளிட்டவற்றைப் புனைந்து தெரிந்து, நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றி யாண்டு இரீஇயினார், காய்சின வழுதிமுதற் கடுங்கோனீறாயுள்ளார் எண்பத் தொன்பதின்மர்; அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியருள் ஒருவன், சயமா கீர்த்தியனாகிய நிலந்தருதிருவிற் பாண்டியன் தொல்காப்பியம் புலப்படுத்து இரீஇயினான். அக்காலத்து அவர்நாட்டுத் தென்பாலி முகத்திற்கு வடவெல்லையாகிய பஃறுளி யென்னும் ஆற்றிற்கும் குமரியென்னுமாற்றிற்கு மிடையே, எழுநூற்றுக்காவதவாறும், இவற்றின் நீர்மலிவானென மலிந்த ஏழ்தெங்க நாடும், ஏழ்மதுரைநாடும், ஏழ்முன் பாலை நாடும், ஏழ்பின் பாலை நாடும், ஏழ்குன்ற நாடும், ஏழ்குணகாரை நாடும், ஏழ்குறும்பனைநாடும் என்னும் இந்த நாற்பத்தொன்பது நாடும் குமரி கொல்ல முதலிய பன்மலைநாடும், காடும் நதியும் பதியும் தடநீர்க் குமரி வடபெருங் கோட்டின் காறும், கடல்கொண்டொழி தலாற் குமரியாகிய பெளவமென்றாரென் றுணர்க. இஃது என்னை பெறுமாறெனின், 'வடிவேலெறிந்த . . . கொடுங்கடல் கொள்ள' என்பதனாலும், கணக்காயனார் மகனர் நக்கீரனாருரைத்த இறையனார் பொருளுரையானும், உரையாசிரியராகிய இளம்பூரணவடிகள் முகவுரையானும் பிறவாற்றானும் பெறுதும்' என்பது.

இதில், பஃறுளியாற்றிற்கும் குமரிக்கும் இடையிலுள்ள சேய்மை 700 காவதம் என்று கூறப்பட்டுள்ளது. இப்போது ஒரு காவதம் பத்துமைல் என்றும் சொல்லப்படுகிறது. முற்காலத்தில் அது எத்துணைச் சேய்மையைக் குறித்ததோ தெரியவில்லை. இக்கால அளவுப்படி கொண்டாலும், தென்துருவத்திற்கும் குமரி முனைக்கும் இடையிலுள்ள சேய்மை ஏறத்தாழ 7000 மைல் என்பதைத் திணைப்படத்தினின்றும் அறியலாம். தென்துருவ அண்மையில் விக்றோரியா நாடு (Victoria Land) என்றொரு நிலப்பகுதியுமுள்ளது. அப்பகுதியும் குமரி முனையும் ஒருகால் இணைக்கப்பட்டு ஒரு நெடுநிலப் பரப்பாகவும் இருந்திருக்கலாம். ஆனாலும், தென்துருவ வரையில், தமிழ்நாடு இருந்திருக்க முடியாது. ஆஸ்திரேலியாவும் இந்தியாவும் ஆப்பிரிக்காவும் ஒருகாலத்தில் இணைக்கப்பட்டிருந்தனவென்று மேனாட்டுக் கலைஞர் கூறியிருப்பதினின்றும், இம்முக்கண்டங்களுக்கும் நிலைத்திணை,

பறவை, விலங்கு, மாந்தன்குலம், மொழி முதலியவற்றிலுள்ள பல ஒப்புமைகளினின்றும், தெற்கே 3000 கல்தொலைவுவரை தமிழர் வதிந்திருக்கலாமென்று தோன்றுகிறது.

குமரியாறு கடலில் அமிழ்ந்தது கடைக்கழகக் காலமாதலின், இடைக்கழக நூலாகிய தொல்காப்பியப் பாயிரத்திற் குமரியென்று குறிக்கப்பட்டது குமரியாறேயாகும். இது,

"தொல்காப்பியம் அதன் வழிநூலென்பதூஉம், அது தானும் பனம்பாரனார்,

"வடவேங்கடந் தென்குமரி" (பாயிரம்)

எனக் குமரியாற்றினை எல்லையாகக் கூறிப் பாயிரஞ் செய்தமையிற் ...... கடலகத்துப் பட்டுக் குமரியாறும் பனை நாட்டோடு கெடுவதற்கு முன்னையதென்பதூஉம்" என்று பேராசிரியர் கூறியதினின்றறியப்படும்.

ஆகவே, தெற்கில் கடலையெல்லையாகக் கூறும் நூல்களெல்லாம், குமரியமிழ்ந்ததற்குப் பிற்பட்டனவே யாகும்.

"வடதிசை மருங்கின் வடுகுவரம் பாகத்
தென்றிசை யுள்ளிட்டெஞ்சிய மூன்றும்
வரைமருள் புணரியொடு கரைபொருது
கிடந்த
நாட்டியல் வழக்கம் . . ."

எனத் தெற்குக் குமரியன்றிக் கடலெல்லை யாகிய காலத்துச் சிறு காக்கைபாடினியார் செய்தநூல்" என்று பேராசிரியர் கூறியதுங் காண்க (ஓ.மொ. 42-44).

**தொடு**[1] *toḍu*, பெ. (n.) **பழுவெலும்பு;** collar bone.

*[தோள் → தொள் → தொடு]*

**தொடு**[2]**-தல்** *toḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) *1.* **தீண்டுதல்;** to touch, come in contact with feel or perceive by the touch. "தொடிற்சுடி னல்லது" *(குறள், 1159). 2.* **பிடித்தல்;** to handle, take hold of, use. "தொட்ட மூவிலைச் சூலந் துளக்குவார்" *(கந்தபு. வீரபத். 38).* 3. **பொருந்துதல்;** to be connected, united with or joined to. *4.* **அணிதல்;** to put on, as a ring, clothes. "சுறாவே றெழுதிய மோதிரந் தொட்டாள்" *(கலித். 84, 23).* 5. **தோண்டுதல்;** to dig, scoop out, excavate. "குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்" *(புறநா. 6).* குளம்தொட்டு வளம் பெருக்கி *(உ.வ.). 6.* **துளைத்தல்;** to pierce through. "உழலை மரத்தைப்போற் றொட்டன வேறு" *(கலித். 106).* 7. **தொடங்குதல்;** to begin. "அன்று தொட் டனங்கனே யாயினான்" *(கம்பரா. தாடக. 1).* 8. **செலுத்துதல்;** to discharge, as an arrow or other missile. "கடுங்கணைக டம்மைத் தொட்டனன்" *(கந்தபு.சூரபன்மன்வ. 191). 9.* **உண்ணுதல்** *(சூடா.);* to eat. *10.* **நினைத்தல்;** to think. "நின்பெருமுலை மூழ்க வென்னுளத் தினிற் றொடாமுன்" *(கல்லா. 52, 5).* 11. **இசைக் கருவி இசைத்தல்;** to play, as a musical instrument; to beat, as a drum. "கலித்த வியவ ரியந்தொட் டன்ன" *(மதுரைக். 304).* 12 **கட்டுதல்;** to fasten, insert. "கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டு" *(புறநா. 77).* 13. **அடித்தல்;** to strike, beat. "ததிமுகாதிகளை நான் தொட்டுத் தருகிறேன்" *(ஈடு. 3, 5 பிர.).* 14. **பிழிதல்;** to strain, squeeze out as juice. "நறவுந் தொடுமின்" *(புறநா. 262).* 15. **ஆணையிடுதல்;** to swear upon. "தொட்டு விடுத்தே னவனை" *(சீவக. 1876). 16.* **எடுத்தல்;** to take up, lift. "பதுமுகன் சிலை தொட்டானே" *(சீவக. 1862).* 17. **வெளுத்தல்;** to wash, as clothes. "இவற்றைத் தொட்டபடி" *(ஈடு. 10,5,6).* 18. **மகளிரொடு கூடுதல்** (இ.வ.); to have intercourse. *19.* **செருப்பணிதல்;** to wear, as shoes. "பாதஞ் சேரத்தொடு நீடுசெருப்பு" *(பெரியபு. கண்ணப்ப. 62).*

*[தள் → தொள் → தொடு]*

தொடுதல் (அல்லது முட்டுதல்) என்பது, உள்ளிருந்து தொடுதல் வெளியிருந்து தொடுதல் என இருவகைத்து. கருப்பைக் குள்ளிருந்து தாய் வயிற்றைக் குழவிமுட்டுதல் உள்ளிருந்து தொடுதல். தாய் வயிற்றினின்று பிறந்த உயிர்கள் தம்மை அடுத்தவற்றைத் தொடுவது வெளியிலிருந்து தொடுதல். மரத்துள்ளிலிருந்து துளிரும் நிலத் துள்ளிலிருந்து முளையும் முண்டி வருவது போல, தாய் வயிற்றினுள்ளிருந்து குழவியும் முண்டி வெளிவருவது அதற்குத் தோற்றம் (மு.தா. 154).

**தொடு**[2]**-தல்** *toḍu-*, செ.கு.வி. (v.i.) **உண்டாதல்;** to occur, happen, come into being. "பழிபாவமுந் தொடுமே" *(விநாயகபு. 77, 35).*

**தொடு**[3]**-த்தல்** *toḍu-*, 17 செ.குன்றாவி. (v.t.) *1.* **இயைத்தல்;** to connect, join. *2.* **விடாது புரிதல்;** to frame one after another or weave,

as an argument. "மாறுபடு தர்க்கந் தொடுக்க வறிவார்" (தாயு. ஆனந்தமான. 3). 3. கட்டுதல்; to bind, fasten, enchain, tie, continue, as a series. "சிறுதாம்பு தொடுத்த பசலைக் கன்றின்" (முல்லைப். 12). 4. பூட்டுதல்; to set, fix, as the arrow in a bow. 'தொடுத்தாங்க வம்பு" (சீவக. 2320). 5. எய்தல்; to discharge, shoot, as an arrow or other missile. "கணை தொடுக்குங் கொடியோன் போல்" (கலித். 120). 6. பூ முதலியன இணைத்தல்; to link together; to string, as beads. "மலராய்ந்து பூத்தொடுப்பாள்" (நாலடி, 393). 7. சேர்த்து வைத்தல்; to store, preserve. "காந்தட் டொடுத்த தேன் சோர" (கலித். 40). 8. வளைத்தல்; to surround, hem in, besiege. "தொடுத்துங் கொள்ளாதமையலென்" (புறநா. 164). 9. வளைத்துக் கைக் கொள்ளுதல்; to seize by surrounding. "தமதெனத் தொடுக்குவராயின்" (புறநா. 135). 10. தொடங்குதல் ; to commence. "மற்றிவற்றை நோற்பான் றொடுக்குறின்" (உபதேசகா. சிவவிரத. 410). 11. உண்டாக்குதல்; to create. "சங்கற்ப மொன்றிற் றொடுக்குந் தொடுத்தழிக்கும்" (தாயு.எங்குநிறை. 4). 12. மேற் கொள்ளுதல்; to undertake. "தொடுத்த கருமம் வழுவாது" (காசிக. கணபதி. 1). 13. பாப் புனைதல்; to make, compose, as verses, poem. "ஆசறு கவி தொடுத்த" (சீகாளத்பு. நக்கீ. 131). 14. அழுத்தமின்றி மேலெழ வைத்தல் (வின்.); to join slightly, as beads or threads: to work superficially: to put on negligently, as a garment or an ornament. 15. அணிதல்; to wear, as clothes. "குஞ்சியி னாள்கதிர் நெற் றொடுத்து" (கம்பரா. கங்கை. 32). 16. உரிமையின்றிப் புணர்தல்; to carry on a licentious intrigue. 17. கதைகட்டுதல் (உ.வ.); to fabricate, concoct a false story. 18. வழக்குத் தொடர்தல்; to pursue in law; to sue. "பெண்டீர் தொடுத்தாண் டவைப்போர் புகலும்" (திரிகடு. 71). 19. சொற் கூட்டுதல் (அக.நி.); to frame or build, as sentences. 20. வசை பெருக்குதல்; to shower abuses. 21. வகுத்தல்; to classify.

**தொடு⁴-த்தல்** *todu-*, செ.கு.வி. (v.i.) 1. வகுக்கப் படுதல் (திருக்கோ. 267); to be apportioned. 2. நெருங்கியிருத்தல்; to be close-packed, dense. "தொடுத்த மாதவிப் பந்தரின்" (கம்பரா. சித்திர. 23). 3. அறிமுகமாதல் (இ.வ.); to become known.

**தொடு⁵** *todu-*, பெ. (n.) 1. மருத நிலம்; field, agricultural land. 2. தோட்டம்; garden. 3. ஏமாற்று; deceit, guile.

**தொடுக்கம்** *todukkam*, பெ. (n.) பொன் (பிங்.); gold

**தொடுக்கு** *todukku*, பெ. (n.) தொசுக்கு பார்க்க; see *tośukku*.

[தொடு → தொடுக்கு (மு.தா. 86)]

**தொடுகடல்** *todu-kadal*, பெ. (n.) கீழ்க்கடல்; eastern ocean. "குணாஅது கரைபொரு தொடுகடற் குணக்கும்" (புறநா. 6).

[தொடு + கடல்]

**தொடுகடி** *todu-kadi*, பெ. (n.) மேற்கடி; bite.

**தொடுகயிறு** *todu-kayiru*, பெ. (n.) உழவுக் கயிறு; rope used in ploughing.

ம. தொடு கயறு

[தொடு + கயிறு]

**தொடுகழல்** *todu-kalal*, பெ. (n.) செருப்பு (அக.நி.); slippers.

[தொடு + கழல்]

**தொடுகறி** *todukari*, பெ. (n.) உணவுடன் சேர்த்துச் சாப்பிடுவதற்கான காய்கறி போன்ற உணவு பொருள்; dish prepared to go with courses of a meal. இரண்டு வகைத் தொடு கறியுடன் விருந்து ஏற்பாடு செய்துள்ளேன்.

[தொடு + கறி]

**தொடுகிலும்** *todugilum*, வி.அ. (adv.) ஒரு பொழுதும் (யாழ்ப்.); it all, in any wise.

**தொடுகுறி** *todukuri*, பெ. (n.) கிணறு வெட்டும் முன் அவ்விடத்தில் உள்ள நீரின் ஆழம், தன்மை அறிவதற்குப் பின்பற்றப்படும் வழக்கு; a measurement used to know the depth of the well before digging.

[தொடு + குறி]

உடம்பின் ஒரு பகுதியை நெற்றி, கை, கால், கண், காது, மூக்கு எனத்தொட்டு அதற்கு வகுக்கப்பட்ட நெறிகளின் மூலம் நீரியல்பு அறிதலாகும் (கட்டட).

**தொடுகை** *todugai,* பெ. (n.) 1. தொடுதல்; touching. 2. பிடித்தல்; taking hold of (சா.அக.).

*[தொடு → தொடுகை]*

**தொடுசு** *todušu,* பெ. (n.) தொடிசு பார்க்க; see *todišu.*

**தொடுசுவை** *todu-švai,* பெ. (n.). உணவுடன் கொள்ளும் ஊறுகாய், துவையல் முதலியன; a relish to food condiment (சா.அக.).

*[தொடு + சுவை]*

**தொடுத்து** *toduttu,* இடை. (part.) முதல்; from, ever since. அன்று தொடுத்து.

*[தொடு → தொடுத்து]*

**தொடுத்துவிடு-தல்** *toduttu-vidu-,* 18 செ.குன்றாவி. (v.i.) 1. சேர்த்துக் கட்டுதல்; to fasten together; to take on. 2. நெறிதவறிச் சேர்த்தல் (வின்.); to unite persons irregularly in marriage. 3. நீக்குதல் (வின்.); to put out, as an apprentice. 4. ஒவ்வொன்றாய் அல்லது ஒவ்வொருவராய்ப் போம்படி செய்தல் (இ.வ.); to cause to go in single file.

*[தொடுத்து + விடு-.]*

**தொடுத்துவை-த்தல்** *toduttu-vai,* 4 செ.குவி. (v.i.) எளிதாக இணைத்தல்; to attach, fasten or stich lightly.

*[தொடுத்து + வை-.]*

**தொடுதுணை** *todu-tuṇai,* பெ. (வி.) உதவி; help.

*[தொடு + துணை]*

**தொடுதோல்** *todu-tōl,* பெ. (n.) செருப்பு; sandals, slippers (பட்டினப். 265).

மறுவ. காலணி

*[தொடு + தோல்]*

**தொடுப்பி** *toduppi,* பெ. (n.) புறங்கூறுவோன்; slanderer, tale-bearer.

*[தொடு → தொடுப்பி]*

**தொடுப்பு**[1] *toduppu,* பெ. (n.) பொருத்து; joint (சா.அக.).

*[தொடு → தொடுப்பு]*

**தொடுப்பு**[2] *toduppu,* பெ. (n.) 1. தொடர்பு; sexual relation, intercourse. 2. கள்ளக் கணவன்; paramour (சா.அக.).

*[தொடு → தொடுப்பு]*

*[தொடுப்பாவது இருபொருட்குண்டான தொடர்பு. அது ஒன்றையொன்று தொட்டபின் நிகழ்வது (மு.தா. 86)]*

**தொடுப்பு**[3] *toduppu,* பெ. (n.) 1. எய்கை; discharging. 2. தொடர்ந்திருக்கை; continuity. 3. கட்டுகை; fastening, changing, linking. 4. கட்டு; tie, bandage. 5. தொடரி (சங்கிலி) (யாழ்.அக.); chain. 6. விதைப்பு; sowing. "தொடுப்பினாயிரம் வித்தியது விளைய" (மதுரைக். 11). 7. கலப்பை (பிங்.); plough. 8. தந்திரம் (யாழ்.அக.); stratagem. 9. வளைத்து உழுகை; ploughing in rounds. "தொடுப்பே ருழவர்" (சிலப். 29:230). 13. குறளை (திவா.); slander, aspersion. 11. தொடுசு; illicit connection. அவனுக்கும் அவளுக்கும் வெகு காலமாகத் தொடுப்புண்டு. 12. கூட்டுறவு (வின்.); close intimacy. 13. செய்கைத் தொடர்ச்சி; pursuit, prosecution. 14. காலணி (வின்.); sandals. 15. கள்ளக்கணவன் அல்லது கூத்தி; paramour, concubine. 16. கட்டுக்கதை (வின்.); fabrication, concoction. 17. மரக்கொம்பு; branch of a tree. 18. பழக்கம் (யாழ்.அக.); practice. 19. தொடக்கம் (யாழ்.அக.); commencement.

ம. தொடுப்பு

*[தொடு → தொடுப்பு]*

**தொடுப்பு**[4] *toduppu,* பெ. (n.) களவு; theft. "தொடுப்புண்டாய் வெண்ணெயை யென்று" (திவ். பெரியாழ். 2, 3, 9, வியா. பக். 297).

**தொடுப்புக்கட்டு-தல்** *toduppu-k-kaṭṭu-,* 12 செ.குன்றாவி. (v.t.) மனவுறுதியோடு பின்பற்றுதல்; to pursue with malice.

*[தொடுப்பு + கட்டு-.]*

**தொடுப்புக்கத்தி** *toduppu-k-katti,* பெ. (n.) பட்டாக்கத்தி (வின்.); a sword with an iron gard covering the arm upto the elbow.

*[தொடுப்பு + கத்தி]*

**தொடுப்புக்காரன்** *toduppu-k-kāraṉ,* பெ. (n.) 1. கள்ளக் கணவன்; paramour. 2. நெருங்கிய நண்பன்; intimate friend.

*[தொடுப்பு + காரன்]*

**தொடுப்புரசம்** *toduppu-rašam,* பெ. (n.) வேதையில் மாற்றுயரச் செய்யும் கொங்கணவர் பொன்னாக்கப் பாவியத்தில் சொல்லியுள்ள பொன்னின் தரமுயர்த்தும் பத்து வகை இதளியச் சத்துகளுள் ஒன்று; one of mercury preparations contemplated in Konganavar's work in Alchemy which is capable to increase the fineness of gold in transmutation of metals (சா.அக.).

**தொடுப்பெலும்பு** *toduppu-elumbu,* பெ. (n.) பொருத்தெலும்பு; bones of a joint.

*[தொடுப்பு + எலும்பு]*

**தொடுபதம்** *todu-padam,* பெ. (n.) சோறு (w); boiled rice.

*[தொடு + பதம்]*

**தொடுபிடியாக** *todu-pidi-y-āka,* வி.எ. (adv.) 1. இடைவிடாமல்; continuously; in quick succession. 2. விரைவாக; with all speed, expeditiously. வேலை தொடுபிடியாக நடக்கிறது.

*[தொடு + பிடி + ஆக]*

**தொடுவழக்கு**[1] *todu-valakku,* பெ. (n.) தொடர்ந்து வரும் வழக்கு (W.G.); a long - pursued litigation. 2. விடாது பற்றிவரும் வழக்கம்; persistent habit. "திரும்புமோ தொடுவழக்காய்" (தாயு. பரிபூ. 5).

*[தொடு + வழக்கு]*

**தொடுவழக்கு**[2] *todu-valakku,* பெ. (n.) கள்ள வழக்கு; litigation on false hood.

*[தொடு + வழக்கு]*

**தொடுவாய்** *todu-vāy,* பெ. (n.) 1. கூடுமிடம் (யாழ்ப்.); confluence or junction, as of two rivers or of a river with the sea. 2. புறங்கூறுகை (அக.நி.); slander, aspersion.

*[தொடு + வாய்]*

**தொடுவான்**[1] *todu-vāṉ,* பெ. (n.) பிணையடி மாடுகளைத் தொடுக்குங் கயிறு (யாழ்ப்.); rope attached to a pole with a swivel to which the inner yoke of oxen is tied, the others being tied ox to ox.

*[தொடு → தொடுவான்]*



**தொடுவான்**[2] *todu-vāṉ,* பெ. (n.) அடிவானம்; horizon, as the place where the heavens touch the earth.

*[தொடு + வான். வான் = வானம்]*

**தொடுவான்கயிறு** *toduvāṉ-kayiṟu,* பெ. (n.). தொடுவான்[1] (வின்.) பார்க்க; see *toduvāṉ*.

*[தொடுவான் + கயிறு]*

**தொடுவானம்** *todu-vāṉam,* பெ. (n.) தொடுவான்[2] பார்க்க; see *toduvāṉ*.

*[தொடுவான் → தொடுவானம்]*

**தொடுவிண்டு** *todu-viṇḍu,* பெ. (n.) தொடரி[1] பார்க்க; see *todari* (சா. அக.).

*[தொடு + விண்டு]*

**தொடுவிலங்கு** *todu-vilaṅgu,* பெ. (n.) இருவரைத் தளைக்கும் விலங்கு (யாழ்.அக.); fetters binding two persons to each other.

*[தொடு + விலங்கு]*



**தொடுவு** *toduvu,* பெ. (n.) *1.* கொல்லை (சது.); paddock, in closed ground adjoining a house. *2.* களவு; theft. "வெண்ணெய் தொடுவுண்ட" (திவ். திருவாய். 3, 5, 3. ஜீ).

[தொடு → தொடுவு. வீட்டைத் தொடர்ந்த கொல்லை (மு.தா. 86)]

**தொடுவை**[1] *toduvai,* பெ. (n.) *1.* தொடுத்திருப்பது; which is joined or appended. *2.* புதிய யானையைப் பயிற்றும் யானை; tame elephant to which a wild one is enchained for taming. *3.* பாங்கன்; associate, crony. *4.* வைப்புக் காதலர்; man and woman living in concubinage.

**தொடுவை**[2] *toduvai,* பெ. (n.) ஒன்றின் சேர்க்கை; anything or part appended something subsidiary hanging or attached (சா.அக.).

[தொடு → தொடுவை]

**தொடுவைவள்ளம்** *toduvai-vallam,* பெ. (n.) துணைச் சிறுபடகு (வின்.); boat attached to a dhoney.

[தொடுவை + வள்ளம்]

**தொடை**[1]**-த்தல்** *todai-,* 4 செ.குன்றாவி. (v.t.) துடை-த்தல் பார்க்க; see *tudai-*. "துன்பந் தொடைக்குந் துணைவன் காண்" (அருட்பா. 9, திருமு. நெஞ்சறி. 190).

[துடை → தொடை (கொ.வ.)]

**தொடை**[2] *todai,* பெ. (n.) *1.* வீரரின் ஐம்பெருஞ் செய்கைகளுளொன்றாகிய அம்பெய்கை; discharging, shooting. "செந்தொடை பிழையா வன்க ணாடவர்" (புறநா. 3). (சீவக. 1676, உரை). *2.* பின்னுகை; braiding, weaving. "தொடையுறு வற்கலை யாடை" (கம்பரா. முதற்போ. 109). *3.* இடையறாமை; unbroken succession or continuity. "தொடையிழி யிறாலின் றேனும் (கம்பரா. நாட்டுப்.9). *4.* கட்டுகை; fastening, tying. "தொடை மாண்ட கண்ணியன்" (கலித். 37). *5.* எற்று; kicking, stroke. "ஒருதொடையான் வெல்வது கோழி" (நான்மணி. 54). *6.* தொடர்ச்சி; series, train, succession. "தாபதர் தொடை மறை முழக்கும்" (கல்லா. 39, 10). *7.* வடம்; string. "முத்துத் தொடை" (பரிபா. 6, 16). *8.* சந்து; joints of the body. "வணங்கு தொடைப் பொலிந்த வலிகெழு நோன்றாள்" (புறநா. 78). *9.* கொத்து; cluster, bunch. "தொடைமலர் வெறுக்கை யேந்தி" (சீவக. 2708). *10.* பூமாலை (பிங்.); flower garland. *11.* மலர் முறுக்கு; compactness of an unblown flower. "தொடையவிழ் தண்குவளை (பு.வெ.பொது. 1). *12.* யாழ் நரம்பு; lute string. *13.* வில்லின் நாண் (பிங்.); bowstring. "தொடையை நிரம்ப வாங்கி விடாத முன்பே" (சீவக. 2320). *14.* அம்பு (சூடா.); arrow. *15.* படிக்கட்டு; stairs, step. "குறுந்தொடை நெடும்படிக்கால்" (பட்டினப். 142). *16.* கருத்து முரண்; question, criticism. "தொடைவிடை யூழாத் தொடைவிடை துன்னி" (பு.வெ. 8, 19). *17.* தொடர்மொழி (அக.நி.) பார்க்க; see *todar-moli*. *18.* தாறு; bunch of fruits. "பூமாண்ட தீந்தேன் றொடைகீறி" (சீவக. 31). *19.* மதிற்சுற்று (திவா.); surrounding wall, bulwark, fortification. *20.* சுவர்ப்புறத்து வைத்த உத்திரந் தாங்கு கட்டை (வின்.); block projecting from a wall to support a beam. *21.* பாட்டு; stanza, verse. *22.* மோனைத் தொடை, எதுகைத் தொடை, முரண் தொடை, இயைபுத் தொடை, அளபெடைத் தொடை என்ற ஐவகையான செய்யுள் தொடுக்கும் வகை (இலக்.வி. 723); mode of versification of five kinds viz, mōṉai-t-todai, edugai-t-todai, muraṉ-todai, iyaibu-t-todai, alapedai-t-todai. *23.* தொடைக்கயிறு பார்க்க; see *todai-k-kayiṟu*. "எழுநுகத் தோடிணைப்பகடு தொடுத்த தொடை" (ஏரெழு. 10). *24.* சட்டம்; law. "தொன்மனுநூற் றொடைமனுவாற் றொடைப்புண்டது" (பெரியபு. மனுநீதி. 37).

ம. துட; க., து., குட., பட. தொடெ; தெ. தொட; துட. த்வட்; குவி. துந்து (இடுப்பு); கொலா. துட் (இடுப்பு)

[தொடு → தொடை]

**தொடை**[3] *todai,* பெ. (n.) முத்து எடுக்கும்போது ஒரு குளிப்பில் கவர்ந்து வரும் சரக்கு (W.G.); the produce of a single diving, in pearl-fishery.

[தொடு → தொடை]

**தொடை**[4] *todai,* பெ. (n.) *1.* மாந்தரின் இடுப்புக்கும் முழங்காலுக்கும் இடையே உள்ள பகுதி; of human beings thigh. *2.* விலங்குகளில் பின்னங்கால்களின் மேல்

உள்ள சதைப்பற்று மிகுந்த பகுதி; of animals upper part of the hind legs, shank.

[தொடு → தொடை]



**தொடைக்கயிறு** *todai-k-kayiṟu,* பெ. (n.) கலப்பை நுகத்தொடு எருதை இணைக்கும் சிறுகயிறு (இ.வ.); small rope used in tying the plough-ox to the yoke.

[தொடு → தொடை + கயிறு]



**தொடைக்கவுட்டி** *todai-k-kavuṭṭi,* பெ. (n.) தொடைச்சந்து பார்க்க; see *todai-c-candu* (சா.அக.).

[தொடை + கவுட்டி]

**தொடைகிள்ளு-தல்** *todai-kiḷḷu-,* 6 செ.குன்றாவி. (v.t.) தொடைநிமிண்டு-தல் பார்க்க; *todai-nimiṇḍu-.*

[தொடை + கிள்ளு-.]

**தொடைகொள்(ளு)-தல்** *todai-k-koḷ-,* 13 செ.குன்றாவி. (v.t.) கண்டறிதல்; to learn, understand. "வடிவிலே தொடைகொண்டே னென்கிறார்" (ஈடு. 2,5,5).

[தொடை + கொள்-.]

**தொடைச்சந்து** *todai-c-candu,* பெ. (n.) 1. கவட்டி; that part in the fold between the thigh and the scrotum. 2. துடைச்சந்து; the lowest part of the abdominal wall near its junction with the thigh. 3. தொடைநடு பார்க்க; see *todai-nadu* (சா.அக.).

[தொடை + சந்து]

**தொடைச்சந்துநோய்** *todai-c-candu-nōy,* பெ. (n.) கவட்டி நோய்; disease of the groin (சா.அக.).

[தொடை + சந்து + நோய்]

**தொடைச்சந்துபொருத்து** *todai-c-candu-poruttu,* பெ. (n.) இடுப்புப் பொருத்து; hip joint.

மறுவ. பந்துகிண்ண மூட்டு

[தொடை + சந்து + பொருத்து]

**தொடைச்சந்துரோகம்** *todai-c-candu-rōgam,* பெ. (n.) தொடைச்சந்துநோய் பார்க்க; see *todai-c-candu-nōy* (சா.அக.).

[தொடை + சந்து + ரோகம்]

Skt. rōga → த. ரோகம்

**தொடைதட்டிவேளாளர்** *todai-taṭṭi-vēḷāḷar,* பெ. (n.) பண்டிதர்; barbers, as honing their razors on the thigh, used in contempt (செ.அக.).

[தொடை + தட்டி + வேளாளர்]

**தொடைதட்டு-தல்** *todai-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தொடையில் அடித்துக் கொண்டு வீர முரைத்தல்; to show one's bravery or defiance by striking the thigh. "குண்டோதரன் கண்டு கொண்டாற் றொடைதட்டிக் கொள்ளுவனே" (தனிப்பா. 1, 403, 23). 2. சண்டைக்கழைத்தல் (உ.வ.); to make a challenge to battle (செ.அக.).

[தொடை + தட்டு-.]

**தொடைதட்டுதல்** *todai-taṭṭudal,* பெ. (n.) பிணத்தினருகில் நீர்க் குடத்தை உடைத்தபின் தொடையைத் தட்டிக்கொண்டு சுற்றிவருஞ் சடங்கு; (brāh.) ceremony of tapping one's thigh and going round a corpse in funeral ceremonies (செ.அக.).

[தொடை + தட்டு-.]

**தொடைநடு** *toḍai-naḍu,* பெ. (n.) இரு தொடைகளுக்கும் இடைப்பட்ட இடை வெளி; space between the thighs (சா.அக.).

*[தொடை + நடு]*

**தொடைநடுங்கி** *toḍai-naḍuṅgi,* பெ. (n.) மிக அஞ்சுபவன் (உ.வ.); extremely timid person, coward.

*[தொடை + நடுங்கி]*

**தொடைநடுங்கு-தல்** *toḍai-naḍuṅgu-,* செ.கு.வி. (v.i.) மிகவும் அஞ்சுதல்; feel timid. செயலாளருடன் பேச ஏன் தொடை நடுங்குகிறாய்?

*[தொடை + நடுங்கு]*

**தொடைநரம்பு** *toḍai-narambu,* பெ. (n.) தொடையின் பின்புறமுள்ள ஒரு பெரிய நரம்பு; a big nerve that passes down the back of the thigh (சா.அக.).

*[தொடை + நரம்பு]*

**தொடைநரம்புவாதம்** *toḍai-narambu-vādam,* பெ. (n.) குளிர்ச்சியான உணவுகளை மிகுதியாக உண்பதால் உண்டாகும் ஊதை நோய்; a painful affection of the large nerve passing down the back of the thigh due to consuming cooling substances, sedentary habit etc., (சா.அக.).

*[தொடை + நரம்பு + வாதம்]*

**தொடைநாளம்** *toḍai-nāḷam,* பெ. (n.) தொடையின் அரத்த நரம்பு (இங்.வை.); femoral vein.

*[தொடை + நாளம்]*

**தொடைநிமிண்டு-தல்** *toḍai-nimiṇḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தொடையைக் கிள்ளுதல்; to pinch the thigh, as a punishment. 2. தூண்டி விடுதல் (உ.வ.); to stimulate. 3. நினைவுபடுத்தல்; to call one's attention, remind, as by pinching.

*[தொடை + நிமிண்டு-.]*

**தொடைநேர்ப்பேசி** *toḍai-nēr-p-pēsi,* பெ. (n.) நீளப்போக்குள்ள தொடைச்சதை; straight muscle of the thigh (சா.அக.).

**தொடைப்பற்று** *toḍai-paṟṟu,* பெ. (n.) தொடையென்னுமுறுப்பு (உ.வ.); thigh.

*[தொடை + பற்று]*

**தொடைப்பாடு** *toḍai-p-pāḍu,* பெ. (n.) குடை காலணி; appendage, as sandals, etc.

*[தொடு + பாடு]*

**தொடைமுரண்** *toḍai-muraṇ,* பெ. (n.) முரண்டொடை; antithesis, in the first foot of a verse. "செம்மை பசுமை தொடை முரண்" (சீவக. 2, உரை).

*[தொடை + முரண்]*

**தொடையகராதி** *toḍai-y-agarāḍi,* பெ. (n.) சதுரகராதிப் பிரிவினுள் எதுகையாக வருவதற்குரிய சொற்களைக் கூறும் அகரமுதலி; a section of Catur-agarāti, being a dictionary of rhyming words.

*[தொடை + அகராதி]*

**தொடையகற்றும்பேசி** *toḍai-y-agaṟṟum-pēši,* பெ. (n.) தொடையைக் கவர்ந்துள்ள நார்ப் பாகத்தை இறுகச் செய்யும் சதை; the muscle that tightens the fibrous sheath of the thigh (சா.அக.).

**தொடையடிகூழை** *toḍai-y-aḍi-kūḻai,* பெ. (n.) தொடை முட்டுக்குக் கீழ்வாராமல் மயிரின்றியிருக்கும் வாலையுடைமையாகிய மாட்டுக் குற்றவகை (மாட்டுவா. 18); a defect of cattle which consists in having a short hairless tail.

*[தொடை + அடி + கூழை]*

**தொடையல்**[1] *toḍaiyal,* பெ. (n.) 1. தொடர்ச்சி; succession, continuation. "நீள்விசித் தொடையல்" (பொருந.18). 2. கட்டுகை; fastening, tying, weaving. "தொடையலங் கோதை" (சீவக.464). 3. தோளணி மாலை (பிங்.); flower garland worn over shoulders. 4. வாசிகை (திவா.) பார்க்க; see *vāšigai.* 5. தேன்கூடு; honey comb. "நெய்ம்முதிர் தொடையல் கீறி" (சீவக. 1198).

*[தொகு → தொடு → தொடை → தொடையல்]*

**தொடையல்**[2] *todaiyal,* பெ. (n.) அழிவு; ruin, destruction. "பையன் தொட்டது தொடையல் தான்".

*[தொடை → தொடையல்]*

**தொடையானந்தம்** *todai-y-āṉandam,* பெ. (n.) அளபெடைத் தொடைப்பாட்டினுள் பாட்டுடைத் தலைவனது பெயர்சார்த்தி அளபெடுப்பத்தொடுக்கும் குற்றம் (யாப்.வி. 522); use of aḷapeḍai before or after the name of a hero in a poem, considered as a defect.

*[தொடை + ஆனந்தம்]*

**தொடையெலும்பு** *todai-y-elumbu,* பெ. (n.) தொடையிலுள்ள எலும்பு; thigh bone, femur.

*[தொடை + எலும்பு]*

**தொடையெலும்புக்கவை** *todai-y-elumbu-k-kavai,* பெ. (n.) தொடைச்சந்துபொருத்து பார்க்க; see *todai-c-candu-poruttu* (சா.அக.).

*[தொடை + எலும்பு + கவை]*

**தொடைவாதம்** *todai-vādam,* பெ. (n.) 1. தொடையில் ஏற்படும் ஊதை நோய்; painful affection of the muscles of the thigh. 2. அகவை முதிர்ச்சியால் தொடை நரம்பில் ஏற்படும் இழுப்பு நோய்; inflammation of the nerve of the thigh (சா.அக.).

*[தொடை + வாதம்]*

**தொடைவாழை** *todai-vāḻai,* பெ. (n.) 1. அடித் தொடையிற் புறப்படும் வெள்ளை நோய்; abscess in the thigh or near the groin. 2. வீக்கக்கால்; milk leg, white leg, swelled leg. 3. மருந்துச் செடிவகை (யாழ்ப்); a plant, used in curing tumour.

*[தொடை + வாழை]*

**தொடைவில்லை** *todai-villai,* பெ. (n.) சிறிய வட்டத் தலையணை; small round cushion (செ.அக.).

*[தொடை + வில்லை]*

**தொண்டகம்** *tondagam,* பெ. (n.) 1. குறிஞ்சி நிலப்பறை (திவா.); a small drum used in kuriñci tracts. "தொண்டகச் சிறுபறைப் பாணி" (நற்.104). 2. ஆகோட்பறை; drum beaten while capturing the enemy's cows. "தொண்ட கப்பறை துடியொ டார்த்தெழ" (சீவக. 418).

**தொண்டகை** *tondagai,* பெ. (n.) ஆதொண்டை; thorny or ceylon on caper (சா.அக.).

**தொண்டச்சி** *tondacci,* பெ. (n.) தொண்டி[4], பார்க்க; see *tondi*[4].

*[தொண்டி → தொண்டித்தி → தொண்டிச்சி → தொண்டச்சி]*

**தொண்டத்தி** *tondatti,* பெ. (n.) பெண்மை நலப்பாடு நோக்கி வகுத்த நால்வகைப் பெண்டிருள் ஒரு பிரிவு; one of the four classes of women classified accroding to lust (சா.அக.).

*[தொண்டி → தொண்டித்தி → தொண்டத்தி]*

**தொண்டப்பறையன்** *tonda-p-paṟaiyaṉ,* பெ. (n.) வேளாண் முதலிய தொழில் செய்பவன்; a sub-division of the paraiya caste which includes domestic servants.

*[தொண்டு + பறையன்]*

**தொண்டர்**[1] *tondar,* பெ. (n.) 1. அடிமைகள்; slaves. 2. அடியார்; devotees, as slaves of God. "தொண்டர் குழாந் தொழுதேத்த வருள் செய்வானை" (தேவா. 228, 3). 3. உலகப் பற்றில் ஈடுபட்டவர்; persons who are slaves to worldly pleasures. "எம்மானை யடைகிலாத் தொளை யிலாச் செவித் தொண்டர்" (தேவா. 429, 3).

*[துல் → துள் → தொள் → தொழு → தொழும்பு → தொண்டு → தொண்டர்]*

**தொண்டர்**[2] *tondar,* பெ. (n.) ஒரு கட்சியிலோ பொதுநல அமைப்பிலோ ஊதியமில்லாமல் பணி செய்பவர்; worker in a party, volunteer in a service organization. தேர்தல் நேரத்தில் தொண்டர்கள் இல்லாவிட்டால் கட்சிக்கு வெற்றி வாய்ப்பே இல்லை (உ.வ.). தமிழியக்கத் தொண்டர்களைத் தளைப்படுத்தியது தகாது (உ.வ.).

*[தொண்டு → தொண்டர்]*

**தொண்டர்சீர்பரவுவார்** *tondar-cīr-paravuvār,* பெ. (n.) பெரிய புராணமியற்றிய ஆசிரியராம் சேக்கிழார்தம் பட்டப் பெயர்; the title given

to Cēkkiḻar, the author of Periyapuranam. "தொண்டர்சீர் பரவுவா ரெனப்பெயர் சுமத்தி" (சேக்கிழார்பு. 95).

[தொண்டர் + சீர் + பரவுவார்]

**தொண்டரடிப்பொடி** *toṇdar-aḍi-p-poḍi,* பெ. (n.) ஆழ்வார் பதின்மரு ளொருவர் (திவ்திருமாலை. 45); a Vaisnava saint, as the dust lying on the feet of devotees, one of ten āḻvār.

[தொண்டர் + அடிப்பொடி]

**தொண்டலக்குழி** *toṇḍala-k-kuḻi,* பெ. (n.) இறைவைக் கூனைநீர் வால் வழியாக விழும் பள்ளம்; water pit where the drawing water from the well is poured.

[தொண்டலம்² + குழி (வே.க. 285)]



**தொண்டலம்¹** *toṇḍalam,* பெ. (n.) 1. யானைத் துதிக்கை (சூடா.); elephant's trunk. "சூர்மக னுந்து தொண்டலம் பற்றி" (கந்தபு. அமரர்சி. 83). 2. கள் (திவா.); toddy (செ.அக.).

[துல் → துள் → தொள் → தொண் → தொண்டு → தொண்டலம்]

**தொண்டலம்²** *toṇḍalam,* பெ. (n.) கமலை இறைவையின் கூனைத் தோல்வால்; trunk of leather container which used for drawing water from well.

[தொள் → தொண்டு → தொண்டலம் (வே.க. 285)]

**தொண்டன்¹** *toṇḍaṉ,* பெ. (n.) ஒரு மீன்; a kind of fish.

**தொண்டன்²** *toṇḍaṉ,* பெ. (n.) தொண்டர்² பார்க்க; see *toṇḍar.*

**தொண்டாடு-தல்** *toṇḍāḍu-,* 11 செ.குவி. (v.i.) பணி செய்தல்; to serve. தொண்டாடித் திரிவேனை (தேவா. 677, 5).

[தொண்டு + ஆடு-.]

**தொண்டான்** *toṇḍāṉ,* பெ. (n.) தோலால் செய்யப்பட்டு கமலைச் சாலின் கீழ்ப்புறம் நீர் வெளியேறும் பகுதியில் கட்டப் பட்டிருப்பது; trunk of leather container which used for drawing water from well.



**தொண்டான்கயிறு** *toṇḍāṉ-kayiṟu,* பெ. (n.) தொண்டானுடன் இணைக்கப்பட்டு நுகத் தடியில் கட்டப்பட்ட கயிறு; coir used to tie with yoke and leather trunk in kamalai.

[தொண்டான் + கயிறு]



**தொண்டான்குச்சி** *toṇḍaṉ-kucci,* பெ. (n.) தொண்டானையும், தொண்டாங் கயிற்றையும் இணைக்கும் பகுதியில் உள்ள குச்சி; a stick

which connects trunk of leather container and rope.

*[தொண்டான் + குச்சி]*

**தொண்டி**[1] *tondi,* பெ. (n.) *1.* இராமநாதபுரம் மாவட்டத்திலுள்ளதும் முன்பு சோழர்க்குரிய தாயிருந்ததுமானதொரு துறைமுகப் பட்டினம்; an ancient sea-port of the Cholas in Ramanatha puram district. "தொண்டியென்னும் பகுதியிலுள்ள அரசரால்" *(சிலப். 14:107, உரை). 2.* மலை நாட்டில் சேரர்க்குரிய பழையதொரு துறைமுகப்பட்டினம்; an ancient sea-port of the Cheras in Malabar. கட்டுவன் றொண்டியன்ன *(ஐங்குறு. 178). 3.* தொண்டிக்கள் (கூடா) பார்க்க; see *tondi-k-kal.*

**தொண்டி**[2] *tondi,* பெ. (n.) *1.* துளை (இவ.); hole. *2.* தொண்டு[4] பார்க்க; see *tondu*[4]. *3.* வேலிகளைத் தாண்டாதிருக்க மாட்டின் கழுத்தில் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்குங் கட்டை; block of wood suspended from the neck of an animal to prevent it from passing through hedges.

*[தொண்டு → தொண்டி = துளை. ஒ.நோ. தொண்டை (throat) = தொளையுள்ளது (ஒ.மொ. 120)]*



**தொண்டி**[3] *tondi,* பெ. (n.) *1.* கலப்பைக் கிழங்கு; Malabar glory-lily. *2.* மரவகை; blood drop ordure tree. *3.* மதகரிவேம்பு பார்க்க; see *madakari-vembū*

**தொண்டி**[4] *tondi,* பெ. (n.) பரத்தை; dancing girl. "வேட்கைமது மொண்டு தருந் தொண்டியர்கள்" *(தாயு. எந்நாட். மாதரைப். 14).*

*[தொண்டு → தொண்டி]*

**தொண்டி**[5] *tondi,* பெ. (n.) கடற்கழி; small arm of the sea.

**தொண்டி**[6] *tondi,* பெ. (n.) தொண்டு செய்பவள் *(நாநார்த்த. 296);* maid-servant.

*[தொண்டு → தொண்டி]*

**தொண்டி**[6] *tondi,* பெ. (n.) சிறுதோட்டம்; small garden.

*[தொள் → தொண்டி (மு.தா. 156)]*

**தொண்டி**[7] *tondi,* பெ. (n.) திறை (வரி) (மீனவ.); tax.

**தொண்டி**[8] *tondi,* பெ. (n.) களவுபோன பொருள் (நாஞ்.); stolen article.

**தொண்டிக்கட்டை** *tondi-k-kattai,* பெ. (n.) வேலிகளைத் தாண்டாதிருக்க மாட்டின் கழுத்தில் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்குங் கட்டை; block of wood suspended from the neck of an animal to prevent it from passing through hedges.

*[தொண்டி[2] + கட்டை]*

**தொண்டிக்கள்** *tondi-k-kal,* பெ. (n.) நெல்லாற் சமைத்த கள்; toddy made from paddy. "உண்டுந் தொண்டிக் களிதனை" *(சீவக. 1233).*

*[தொண்டி + கள்]*

**தொண்டிச்சி** *tondicci,* பெ. (n.) தொண்டி[4] (யாழ்.அக.) பார்க்க; see *tondi* (செ.அக.).

*[தொண்டு → தொண்டி → தொண்டித்தி → தொண்டிச்சி]*

**தொண்டிப்பூடு** *tondi-p-pūdu,* பெ. (n.) நத்தைச் சூரிச் சக்களத்தி; a plant skin to bristly button weed (சா.அக.).

*[தொண்டி[1] + பூடு]*

**தொண்டியோர்** *tondiyōr,* பெ. (n.) *1.* சோழ குலத்தோர்; the Cholas. "வங்க வீட்டத்துத் தொண்டிரயோ ரிட்ட வகிலும்" *(சிலப். ஊர்காண். 107). 2.* சேரர்; the Cheras. "தொண்டியோர் பொருந" *(பதிற்றுப். 88).*

*[தொண்டி → தொண்டியோர் (மு.தா. 156)]*

**தொண்டில்** *tondil,* பெ. (n.) யானைக் கை; trunk of elephant.

*[தொள் → தொண்டு → தொண்டில்]*

**தொண்டிவாரம்** *tondi-vāram*, பெ. (n.) பயிரிடுங் குடியானவனுக்குரிய விளைச்சற் பகுதி; cultivation share in the produce.

*[தொண்டி + வாரம்]*

**தொண்டீச்சுரம்** *tondī-c-curam*, பெ. (n.) ஈரோட்டிலுள்ள திருக்கோயில்; a temple in Erōḍu.

**தொண்டீரன்** *tondīran*, பெ. (n.) தொண்டைமான் (M.M. 908) பார்க்க; see *tondaimān*.

*[தொண்டைமான் → தொண்டீரன்]*

**தொண்டு**[1] *tondu*, பெ. (n.) 1. அடிமைத்தனம் (பிங்.); slavery. 2. கடவுள் வழிபாடு (சூடா.); devotedness to a deity; devoted service. "தொண்டு பூண்டு" *(திவ்.திருமாலை. 5).* 3. அடிமையாள்; slave, devoted servant. "தொண்டாயிரவர் தொகுபவே" *(நாலடி., 224).* 4. ஒழுக்கங்கெட்டவன்-ள்; person of loose character. 5. கொண்டித்தொழு; cattle pound. 6. ஒரு வகை உள்ளான் (வின்.); a kind of snipe. 7. தேங்காய் பலா முதலியவற்றின் மேற்றொலி (நாஞ்.); husk, as of coconut. 8. பூடுவகை (யாழ்.அக.); a plant.

க. தொள்ட்டு; தெ. தொட்டி

*[துல் → துள் → தொள் → தொழு → தொழும்பு → தொண்டு]*

**தொண்டு**[2] *tondu*, பெ. (n.) பழைமை (திவா.); antiquity, old times, former times. "தொண்டு போல வெவ்வுலகமுந் தோன்றுதல் வேண்டும்" *(விநாயகபு. 82, 55).*

*[தொல் → தொன் → தொண் → தொண்டு]*

**தொண்டு**[3] *tondu*, பெ. (n.) ஒன்பது; nine. "தொண்டுபடு திவவின்" *(மலைபடு. 21).* "தொண்டு தலையிட்ட பத்துக்குறை யெழுநூற் றொன்பஃ தென்ப வுணர்ந்திசி னோரே" *(தொல்.பொருள். 413).*

*[தொள் + து → தொண்டு]*

ஒன்பதிற்கு முதலாவது வழங்கின பெயர் தொண்டு என்பது. தொண்டு + பத்து = தொண்பது - தொன்பது -ஒன்பது. தொண்பது முதலில் 90 என்னும் எண்ணைக் குறித்தது. அறுபது, எழுபது, எண்பது என்னும் பிற பத்தாம் இட எண்ணுப் பெயர்களுடன், தொன்பது என்பதை ஒப்பு நோக்குக (ஒ.மொ. 66).

ஒன்பது என்னும் பெயருக்கு, ஒன்று குறைந்த பத்து என்று பொருள் கூறுவது பொருந்தப் புகலல் என்னும் உத்திபற்றியது. இக்கூற்றிற்கு உருதுவிலும் இந்தியிலும் உள்ள, உன்னீஸ் (19), உன்தீஸ் (29), உன்சாலிஸ் (39), உன்சாஸ் (49), உன்சட் (59), உன்த்தர் (69), உன்யாசி (79) என்னும் எண்ணுப் பெயர்கள் ஒருகால் சான்றாகலாம். ஆனால், அங்கும், அப்பெயர்கள் ஒழுங்கற்ற முறையில மைந்தவையென்பதை, நவாசீ (89), நின்னாநபே (99) என்னும் பெயர்களாளறியலாம் (ஒ.மொ.68).

**தொண்டு**[4] *tondu*, பெ. (n.) 1. ஒடுக்கவழி; gap, narrow passage. 2. உருவு சுருக்கு (அகநி.); snare, noose. 3. வேலிகளைத் தாண்டாதிருக்க மாட்டின் கழுத்தில் கட்டித் தொங்கவிடப் பட்டிருக்கும் கட்டை; block of wood suspended from the neck of an animal to prevent it from passing through hedges.

ம. தொண்டு; க. தொண்டி

**தொண்டு**[5] *tondu*, பெ. (n.) தன்னலம் கருதாமல், எதையும் எதிர்பாராமல் ஒன்றின் நன்மைக்காகவும் வளர்ச்சிக்காகவும் செய்யும் பணி; service. நாட்டுப்புற மக்களுக்குத் தொண்டு செய்ய மருத்துவர்கள் முன்வர வேண்டும் *(உ.வ.).* பாவாணர் தமிழ்மொழி மீட்புக்குச் செய்த தொண்டு அளப்பரிதாகும் *(உ.வ.).*

*[துல் → துள் → தொள் → தொழு → தொழும்பு → தொண்டு]*

**தொண்டுகிழவன்** *tondu-kilavan*, பெ. (n.) முதிர்ந்த கிழவன்; ripe, old man. "தொண்டுகிழவனிவனாரென" *(திருப்பு. 59).*

*[தொண்டு + கிழவன்]*

**தொண்டுதுரவு** *tondu-turavu*, பெ. (n.) 1. பணிவிடை; service. 2. உளவு; movements, concerns, affairs of a person, as watched, by a theif or spy.

*[தொண்டு + துரவு]*

**தொண்டுநிறுவனம்** *tondu-niruvanam*, பெ. (n.) ஒன்றின் நன்மைக்காக அல்லது வளர்ச்சிக்காகப் பணியாற்றும் அமைப்பு; service organization or society, voluntary

agency. நாற்பது தொண்டு நிறுவனங்கள் கூட்டாக முயன்று இக்கண்காட்சியை ஏற்பாடு செய்துள்ளன.

*[தொண்டு + நிறுவனம்]*

**தொண்டுப்பட்டி** *tonḍu-p-paṭṭi,* பெ. (n.) மாட்டை அடைக்குங் கொண்டி (எங்களூர், 20); cattle pound.

*[தொண்டு + பட்டி]*

**தொண்டுப்பணி** *tonḍu-p-paṇi,* பெ. (n.) ஊழியம் (நாஞ்.); menial service.

*[தொண்டு + பணி]*

**தொண்டூழியம்** *tonḍūḻiyam,* பெ. (n.) தொண்டுப் பணி (நாஞ்.) பார்க்க; see *tonḍu-p-paṇi.*

*[தொண்டு + ஊழியம்]*

**தொண்டை**[1] *tonḍai,* பெ. (n.) 1. மிடறு (பிங்.); throat, gullet. 2. குரல்வளை; windpipe, larynx. தொண்டையிலே தூறு முளைக்க (பழ.). 3. குரல்; voice, singing voice. அவனுக்கு நல்ல தொண்டையுண்டு. 4. யானைத் துதிக்கை (பிங்.); elephant's trunk. "கருநாகத் தொண்டைக் கயமுனிக் கூட்டங்கள்" (திருப்போ.சந். அலங்கா. 18).

*[தொன் → தொண் → தொண்டை = தொளையுள்ளது (ஒ.மொ. 119, 120)]*

**தொண்டை**[2] *tonḍai,* பெ. (n.) 1. ஆதொண்டை (சூடா.) பார்க்க; see *ādonḍai.* 2. கோவை (பிங்.) பார்க்க; see *kōvai.* 3. சிறு கடல்மீன் வகை; sea fish, bluish green. 4. தொண்டை மண்டலம் பார்க்க; see *tonḍai-manḍalam.* "ஆறோ டீரெட்டுத் தொண்டை" (அஷ்டப். நூற்றெட்டுத். தனியன். 6).

**தொண்டைஅடைப்பான்** *tonḍai-aḍaippāṉ,* பெ. (n.) தொண்டையடைப்பான் பார்க்க; see *tonḍai-y-aḍaippāṉ.*

**தொண்டைக்கட்டி** *tonḍai-k-kaṭṭi,* பெ. (n.) 1. தொண்டையிலுண்டாகும் புண்கட்டி; swelling in the throat. 2. உண்ணாக்கு நோய்; tonsilitis.

*[தொண்டை + கட்டி]*

**தொண்டைக்கட்டு** *tonḍai-k-kaṭṭu,* பெ. (n.) 1. கரகரப்பால் தொண்டை அடைத்துக் கொள்ளுகை; hoarse throat. 2. உண்ணவும் பேசவும் முடியாதவாறு தொண்டை புண்படுகை (பதார்த்த. 24); sore-throat, pharyngitis. 3. தொண்டை நோய்வகை; inflammation of the larynx, laryngitis (செ.அக.).

*[தொண்டை + கட்டு]*

**தொண்டைக்கதிர்** *tonḍai-k-kadir,* பெ. (n.) கதிர் வெளிப்படுதற்குரிய பருவம் (இவ.); the stage of growing crop when it is ready to shoot forth ears (செ.அக.).

*[தொண்டை + கதிர்]*

**தொண்டைக்கபம்** *tonḍai-k-kabam,* பெ. (n.) கோழை, சளி; phlegm (சா.அக.).

*[தொண்டை + கபம்]*

**தொண்டைக்கம்மல்** *tonḍai-k-kammal,* பெ. (n.) 1. தொண்டையழற்சி; inflammation of the throat. 2. குரலடைப்பு; hoarseness. 3. குரல் கம்மல்; inflammation of the larynx a condition attended with dryness and soreness of the throat, hoareness cough etc. (சா.அக.).

*[தொண்டை + கம்மல். கமறுதல் → கம்மல்]*

**தொண்டைக்கரகரப்பு** *tonḍai-k-karakarappu,* பெ. (n.) தொண்டையறுப்பு; irritation of throat (சா.அக.).

*[தொண்டை + கரகரப்பு]*

**தொண்டைக்கழலை** *tonḍai-k-kaḻalai,* பெ. (n.) தொண்டைக்குள்ளாக இருக்கும் கேடயக் கோளம் பருத்து அதனால் கழுத்தின் முன்பாகம் கழலைக் கட்டியைப் போற் காணப்படும் வீக்கம்; enlargement of thyroid body causing a swelling in the front part of the neck (சா.அக.).

*[தொண்டை + கழலை]*

**தொண்டைக்களகளப்பு** *tonḍai-k-kaḷakaḷappu,* பெ. (n.) தொண்டைக்குள்ளிரைச்சல் பார்க்க; see *tonḍai-k-kuḷ-iraiccal.*

*[தொண்டை + களகளப்பு]*

**தொண்டைக்கனப்பு** *tonḍai-k-kaṉappu*, பெ. (n.) தொண்டைக்கட்டு (இவ) பார்க்க; see *tonḍai-k-kaṭṭu* (செ.அக.).

*[தொண்டை + கனப்பு]*

**தொண்டைக்கனைப்பு** *tonḍai-k-kaṉaippu*, பெ. (n.) கனைத்தல்; braying like horse (சா.அக.).

*[தொண்டை + கனைப்பு]*

**தொண்டைக்காறல்** *tonḍai-k-kāṟal*, பெ. (n.) சளியை வெளிப்படுத்த கனைத்தல்; making harsh cry or sound to bring out phlegm, forcible expectration (சா.அக.).

*[தொண்டை + காறல்]*

**தொண்டைக்குத்தல்** *tonḍai-k-kuttal*, பெ. (n.) தொண்டைக்குத்து பார்க்க; see *tonḍai-k-kuttu* (சா.அக.).

*[தொண்டை + குத்தல். குத்து → குத்தல்]*

**தொண்டைக்குத்து** *tonḍai-k-kuttu*, பெ. (n.) 1. உண்ணாக்கு வளர்ச்சி; elongation of the uvula touching the throat. 2. தொண்டை வலி; shooting pain of the throat (சா.அக.).

*[தொண்டை + குத்து]*

**தொண்டைக்குத்துக்குத்து-தல்** *tonḍai-k-kuttu-k-kuttu-*, 5 செ.குவி. (v.i.) ஓயாமல் வாயாடுதல்; to argue unceasingly. உன்னோடு தொண்டைக் குத்துக்குத்த யாரால் முடியும்? (உ.வ.) செ.அக.).

*[தொண்டை + குத்து + குத்து]*

**தொண்டைக்குழி** *tonḍai-k-kuḻi*, பெ. (n.) தொண்டையின் அடிக்குழி; a depression at the base of the neck just above the sternum (சா.அக.).

*[தொண்டை + குழி]*

**தொண்டைக்குள்ளிரைச்சல்** *tonḍai-k-kuḷ-iraiccal*, பெ. (n.) குரட்டை விடுவதாலும் இருமலாலும் தொண்டைக்குள் ஏற்படும் வலி; throat pain.

*[தொண்டைக்கு + உள் + இரைச்சல்]*

**தொண்டைக்குறுகுறுப்பு** *tonḍai-k-kuṟukuṟuppu*, பெ. (n.) தொண்டைக்குள்ளிரைச்சல் பார்க்க; see *tonḍai-k-kuḷ-iraiccal*.

*[தொண்டை + குறுகுறுப்பு]*

**தொண்டைக்கோளம்** *tonḍai-k-kōḷam*, பெ. (n.) வாயின் அடிப்பாகத்தில் முன் தொண்டையின் இரு பக்கத்திலும் வாதுமைக் கொட்டையைப் போல் தடித்த சதைப்பற்று; a small almond shape mass of flesh between the pillars of the fauces on eihter side in the region of the pharynx. 2. தொண்டை அல்லது கழுத்திலிருக்கும் கோளங்கள்; glands in general of the throat or the neck. 3. கழுத்தின் நிணநீர்க் கோளம்; lymph glands of the neck. 4. கேடயக்கோளம்; thyroid gland (சா.அக.).

*[தொண்டை + கோளம்]*

**தொண்டைகத்து-தல்** *tonḍai-kattu-*, 5 செ.குவி. (v.i.) பெருங்குரலிடுதல் (யாழ்ப்.); to bawl (செ.அக.).

*[தொண்டை + கத்து-.]*

**தொண்டைச்சங்கு** *tonḍai-c-caṅgu*, பெ. (n.) குரல் வளை முருந்து; shield shaped cartilage of the larynx (சா.அக.).

*[தொண்டை + சங்கு]*

**தொண்டைச்சளி** *tonḍai-c-caḷi*, பெ. (n.) கோழை, சளி; phlegm (சா.அக.).

*[தொண்டை + சளி]*

**தொண்டைச்சீதளக்கட்டி** *tonḍai-c-cīdaḷa-k-kaṭṭi*, பெ. (n.) தொண்டைத்தூறு பார்க்க; see *tonḍai-t-tūṟu* (சா.அக.).

*[தொண்டை + சீதளம் + கட்டி]*

**தொண்டைச்செவிடு** *tonḍai-c-cevidu*, பெ. (n.) தொண்டையடைப்பினால் ஏற்படும் செவிடு; deafness due to obstruction in the throat arising from enlargement of some glands.

*[தொண்டை + செவிடு]*

**தொண்டைத்தாபம்** *tonḍai-t-tābam*, பெ. (n.) 1. தொண்டையழற்சி; inflammation of the throat and in its adjacent parts. 2. தொண்டைக் கோளவழற்சி; inflammation of tonsils (சா.அக.).

*[தொண்டை + தாபம்]*

**தொண்டைத்திறப்பு** *tonḍai-t-tiṟappu*, பெ. (n.) மிடறடைப்பு நீக்குகை; relief from the obstruction in the passage of the throat (சா.அக.).

*[தொண்டை + திறப்பு]*

**தொண்டைத்தூறு** *toṇḍai-t-tūṟu,* பெ. (n.) தொண்டையில் ஏற்படும் சதை வளர்ச்சி; a disease of throat giving rise to vegetation or fleshy growth of papillae or false membrane (சா.அக.).

[தொண்டை + தூறு]

**தொண்டைதிறத்தல்** *toṇḍai-tiṟattal,* பெ. (n.) 1. இசைக் குரல் இனிமைப்படுகை; clearing of the throat, becoming clear in tone, as in singing. 2. உரக்கக்கத்துகை; bawling out.

[தொண்டை + திறத்தல்]

**தொண்டைநாடு** *toṇḍai-nāḍu,* பெ. (n.) தொண்டைமண்டலம் பார்க்க; see *toṇḍai maṇḍalam.* "பேண நீடிய முறையது பெருந் தொண்டை நாடு" (பெரியபு. திருக்குறிப்பு. 4) (செ.அக.).

[தொண்டை + நாடு]

**தொண்டைநாளம்** *toṇḍai-nāḷam,* பெ. (n.) குரல்வளை; wind pipe, larynx.

[தொண்டை + நாளம்]

**தொண்டைநெரி-த்தல்** *toṇḍai-neri-,* 4 செ.குன்றாவி. (v.i.) 1. மூச்சு விடாதபடி தொண்டையை அமுக்குதல்; to compress the throat so as to choke. 2. தொண்டை நெரியச் செய்தல்; crush the throat causing fracture (சா.அக.).

[தொண்டை + நெரி-.]

**தொண்டைநோய்** *toṇḍai-nōy,* பெ. (n.) தொண்டை தொடர்பான குரல்வளை, காற்றுக் குழாய் முதலிய உறுப்புகளில் ஏற்படும் நோய்கள்; diseases in general of the throat organs such as larynx, trachkea, gullet etc. (சா.அக.).

[தொண்டை + நோய்]

**தொண்டைநோவு** *toṇḍai-nōvu,* பெ. (n.) 1. தொண்டைக்கட்டு; sore throat, pharyngitis. 2. உள்நாக்கு நோய்; tansilitis.

[தொண்டை + நோவு]

**தொண்டைப்பிடி** *toṇḍai-p-piḍi,* பெ. (n.) 1. தொண்டையடைப்பு பார்க்க; see *toṇḍai-y-aḍaippu.* 2. கடினமாய் நெருக்குகை; extreme pressure, as for paying a debt. கொடுத்த கடனுக்குத் தொண்டையைப் பிடிக்கிறான்.

[தொண்டை + பிடி]

**தொண்டைப்புகைச்சல்** *toṇḍai-p-pugaiccal,* பெ. (n.) தொண்டை புகைந்திருமுகை; catarrh, bronchitis, laryngitis, irritation of the throat (செ.அக.).

[தொண்டை + புகைச்சல்]

**தொண்டைப்புண்** *toṇḍai-p-puṇ,* பெ. (n.) தொண்டை உள்ளுறுப்புகளுக்கு ஏற்படும் வேக்காடு, புண், குருதிக்காயம் முதலியன; disease of the throat such as inflammation, soreness ulceration etc., of the internal parts as tonsils, larynx, pharynx, oesphagus etc known as tansilitis, larngitis,pharyngitis etc.

[தொண்டை + புண்]

**தொண்டைப்புற்று** *toṇḍai-p-puṟṟu,* பெ. (n.) 1. தொண்டக்குள் ஏற்படும் சிலந்தி, புண்கட்டி; cancer of the throat. 2. புற்றைப் போல் தொண்டைக்குள் ஏற்படும் சீழ் கூடிய சதை வளர்த்தி; growth of flesh inside the throat (சா.அக.).

[தொண்டை + புற்று]

**தொண்டைப்பூச்சி** *toṇḍai-p-pūcci,* பெ. (n.) நெற் பயிரில் விழும் பூச்சி வகை; a paddy pest (செ.அக.).

[தொண்டை + பூச்சி]

**தொண்டைமண்டலசதகம்** *toṇḍai-maṇḍala-šadagam,* பெ. (n.) தொண்டை மண்டலத்தின் பெருமைகளைப் பற்றிப் படிக்காசுப் புலவர் இயற்றிய நூறகம் (சதகம்); poem of 100 stanzas an Toṇḍaimaṇḍalam by Paḍikkāšu-p-pulavar (செ.அக.).

[தொண்டை + மண்டல + சதகம்]

**தொண்டைமண்டலம்** *toṇḍai-maṇḍalam,* பெ. (n.) காஞ்சியைத் தலைநகராகக் கொண்டதும் ஆர்க்காடு, செங்கற்பட்டு, நெல்லூர் மாவட்டங்களை உள்ளடக்கியது மான தமிழகப் பகுதி; an ancient division of the Tamil country, which included the districts

of Arcot, Ceṅgelpaṭṭu and Nellūre with Kāñjipuram as the capital.

*[தொண்டை + மண்டலம்]*

**தொண்டைமண்டலவேளாளர்** *toṇḍai-maṇḍala-vēḷālar,* பெ. (n.) *வேளாளப் பிரிவினர்;* a section of the vēḷāla caste.

*[தொண்டை + மண்டலம் + வேளாளர்]*

**தொண்டைமணி** *toṇḍai-maṇi,* பெ. (n.) *குரல்வளை;* adam's apple (C.G.).

*[தொண்டை + மணி. முள் → (மள்) → மண் → மணி]*

**தொண்டைமாரி** *toṇḍai-māri,* பெ. (n.) *தொண்டைக்கட்டி;* swelling in the throat, goitre.

*[தொண்டை + மாரி]*

**தொண்டைமான்** *toṇḍaimāṉ,* பெ. (n.) *1. தொண்டைமண்டல அரசன்;* ruler of Tondaimandalam. "தொண்டைமா னுழைச் சென்ற ஔவைக்கு" *(புறநா. 95, குறிப்பு.). 2. புதுக்கோட்டையரசர் பட்டப்பெயர்;* title of the Raja of Pudukkōṭṭai. *3. கள்ளர் மறவர் முதலிய சில குலத்தாரின் பட்டப்பெயர்;* title of certain castes, as kaḷḷar, maṟavar, piḷḷai, cēṇiyar.

*[தொண்டைமகன் → தொண்டைமான்]*

**தொண்டைமான்இளந்திரையன்** *toṇḍai-māṉ-iḷantiraiyaṉ,* பெ. (n.) *கிள்ளிவளவனுக்கும் பீலிவளைக்கும் மகனாகப் பிறந்து தொண்டை நாட்டை ஆண்டவன்;* a king who was the son of the Cōḷa king Kiḷḷivaḷavaṉ and Pīlivaḷai, who ruled Toṇḍaināḍu.

*[தொண்டைமான் + இந்திரையன்]*

**தொண்டைமுடிச்சு** *toṇḍai-muḍiccu,* பெ. (n.) *குரல்வளைவெளியிற் காணப்படும் முருந்தினாலாக்கப்பட்ட பிதுக்கம்;* the prominence in front of the neck cause by the cartilages which enclose the larynx *(சா.அக.).*

*[தொண்டை + முடிச்சு]*

**தொண்டையடைத்தல்** *toṇḍai-aḍaittal,* பெ. (n.) *எவ்வகைக் காரணத்தினாலாவது தொண்டையில் பொதுப்பட உண்டாகும் அடைப்பு;* obstruction in general in the passage of the throat due to any cause. *2. தொண்டைச் சுருக்கத்தினால் மூச்சு விட முடியாமல் ஏற்படும் அடைப்பு;* a disease or symptom characterised by spasmodic suffocative attacks *(சா.அக.).*

*[தொண்டை + அடைத்தல்]*

**தொண்டையடைப்பான்** *toṇḍai-aḍaippāṉ,* பெ. (n.) தொண்டை முழுவதும் வீங்கி விழுங்க முடியாமலும், உள்காற்று தொடர்பால் வாய், குரல்வளை முதலிய இடங்களில் அழற்சி கண்டு மூச்சு விட முடியாமலும் மிகுதியான காய்ச்சல் காய்ந்து கோழை, சளி கோளாறினால் ஏற்படும் ஒருவித *அடைப்பான் நோய்;* a disease in which large swelling occurs along the whole throat so as to obstruct completely the passage of food solid or liquid. It is marked by suffocation and high fever on a result dangerous phlegom in the system. *2. ஆடு மாடுகளுக்கு உண்டாகும் அடைப்பான் நோய்;* inflammation of the throat in cattle. *3. குரலடைக்கும் ஒரு நோய்;* a maligrant sore throat *(சா.அக.).*

*[தொண்டை + அடைப்பான்]*

**தொண்டையடைப்பு** *toṇḍai-aḍaippu,* பெ. (n.) *தொண்டை நோய் வகை;* a throat disease. "ஆதியான் மடத்திற் றம்பல முமிழ்ந்தோ ரருந் தொண்டை யடைப்பு நோயாளர்" *(கடம்ப.பு. இலீலா. 132).*

*[தொண்டை + அடைப்பு]*

**தொண்டையிடு-தல்** *toṇḍai-y-iḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) *கூவுதல் (இ.வ.);* to bawl.

*[தொண்டை + இடு-]*

**தொண்டையிளநீர்க்கட்டி** *toṇḍai-y-iḷa-nīr-k-kaṭṭi,* பெ. (n.) *உள்நாக்கு நோவு;* tonsilitis *(செ.அக.).*

*[தொண்டை + இளநீர் + கட்டி]*

**தொண்டையுடைதல்** *toṇḍai-uḍaital,* பெ. (n.) *பருவத்தாற் குரல் மாறுகை (உ.வ);* breaking of voice, as at manhood.

*[தொண்டை + உடைதல்]*

**தொண்டையைத்தீட்டு-தல்** *tondaiyai-t-tittu-,* 5 செ.கு.வி. (v.i.) தொண்டையிடு-தல் (நாஞ்.) பார்க்க; see *tondai-y-idu-.*

*[தொண்டை + தீட்டு]*

**தொண்டையோர்** *tondaiyōr,* பெ. (n.) தொண்டை மண்டலவரசர்; kings of Tondaimandalam. "கொண்டியுண்டித் தொண்டையோர் மருக" (பெரும்பாண். 454).

*[தொண்டை → தொண்டையோர்]*

**தொண்டைவலி** *tondai-vali,* பெ. (n.) தொண்டை நோவு; pain in the throat (சா.அக.).

*[தொண்டை + வலி]*

**தொண்டைவலிப்பு** *tondai-valippu,* பெ. (n.) தொண்டைக்குள் ஏற்படும் நரம்புச் சுருக்கம்; spasmodic contraction of the musles of the throat especially in a disease of the pharnyx (சா.அக.).

*[தொண்டை + வலிப்பு]*

**தொண்டைவளர்ச்சி** *tondai-valarcci,* பெ. (n.) தொண்டையினுட்சவ்வு பருத்துத் தொண்டையை அடைத்தல்; growth of the false membranes obstructing the throat as in diptheria (சா.அக.).

*[தொண்டை + வளர்ச்சி]*

**தொண்டைவிடு-தல்** *tondai-vidu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. தெளிவாய்க் குறிப்பிடுதல்; to let out the voice, as in singing; to utter clearly and loudly. 2. பெருங்குரலிடுதல்; to bawl, howl. "தொண்டை விடுவன வண்டம் வெடிபட" (திருவாலவா. 29, 3).

*[தொண்டை + விடு-]*

**தொண்டைவீக்கம்** *tondai-vikkam,* பெ. (n.) தொண்டைவேகல் பார்க்க; see *tondai-vēgal.*

*[தொண்டை + வீக்கம்]*

**தொண்டைவேகல்** *tondai-vēgal,* பெ. (n.) தொண்டை வீங்குதலாகிய நோய்வகை; inflammation of the throat, quinsy, tonsilitis (செ.அக.).

*[தொண்டை + வேகல்]*

**தொண்டைவை-த்தல்** *tondai-vai-,* 4 செ.கு.வி. (v.i.) கூவுதல் (வின்.); to bawl.

*[தொண்டை + வை-.]*

**தொண்டொண்டொடெனல்** *tondon-dodenal,* பெ. (n.) பறையினொலிக் குறிப்பு; onom. expr. of the sound of drumming. "தொண்டொண் டொடென்னும் பறை" (நாலடி, 25).

*[தொண் + தொண் + எனல்]*

**தொண்ணா-த்தல்** *tonnā-,* 6 செ.கு.வி. (v.i.) கெஞ்சி நிற்றல் (நெல்லை.); to cirnge. அவனிடம் போய் தொண்ணாந்து நிற்காதே.

**தொண்ணூறு** *tonnūru,* பெ. (n.) ஒருபத் தொழிய நின்ற நூறு; ninety.

ம. தொண்ணூறு

*[தொண்டு + நூறு = தொண்ணூறு]*

ஒன்பது + பஃது = தொண்ணூறு எனக் காட்டுகிறது தொல்காப்பிய நூற்பா (தொல். எழுத்து. 445). இம்முடிவு எவ்வகையிலும் பொருந்தாததொன்றாம். ஒன்பது என்னும் எண்ணுக்குப் பழம்பெயர் தொண்டு என்பது. "தொண்டு தலையிட்ட" (தொல். 1258) என்று ஆசிரியரும் "தொண்டுபடு திவவு" (மலைபடு. 21) என்று பெருங்குன்றூர்ப் பெருங் கௌசிகனாரும் கூறுதல் காண்க. தொண்டு என்னும் சொல் தொல்காப்பியர் காலத்திலேயே வழக்கற்றுப் போய்விட்டது. அவர் காலத்திற்கு முன் தொண்டு தொண்பது தொண்ணூறு தொள்ளாயிரம் என்பன முறையே 9, 90, 900, 9000 என்னும் எண்களைக் குறிக்கும் பெயர்களாயிருந்தன. தொண்டு என்னும் ஒன்றாமிடப் பெயர் வழக்கறவே, தொண்பது என்னும் பத்தாமிடப் பெயர் ஒன்றாமிடத்திற்கும் தொண்ணூறு என்னும் நூறாமிடப் பெயர் பத்தா மிடத்திற்கும், தொள்ளாயிரம் என்னும் ஆயிரத்தாமிடப் பெயர் நூறாமிடத்திற்கும் வழங்கவே 9000 என்னும் பெயரைச் சேர்க்க வேண்டியதாயிற்று, முதற் பத்து எண்ணுப் பெயர்களில் ஒன்பது என்பதைத் தவிர மற்றவையெல்லாம் ஒரு சொல்லா யிருப்பதையும், ஒன்பது என்பது இரு சொல்லாய்ப் பது (பத்து) என்று முடிவதையும், தொண்ணூறு என்பது நூறு என்றும் தொள்ளாயிரம் என்பது ஆயிரம் என்றும் முடிவதையும் நோக்குக. தொண்பது என்பதின் திரிபான ஒன்பது என்னும் சொல்லுக்குப் பொருந்தப் புகலும் முறை பற்றி ஒன்று குறைந்த பத்து என்று பொருள் கூறுவர் சிலர். அதுவே அதன் பொருளாயின் தொண்ணூறு தொள்ளாயிரம் என்பவற்

றிற்கும் அப்பொருள் ஏற்க வேண்டும். அங்ஙனம் ஏலாமையின் அது போலியுரை யென மறுக்க. ஆகவே தொண்டு + பத்து = தொண்பது; தொண்டு + நூறு = தொண்ணூறு; தொண்டு + ஆயிரம் = தொள்ளாயிரம் என்று புணர்ப்பதே முறையென்றும், தொண்டு என்னும் எண்ணுப் பெயர் வழக்கற்றதினால் அதன் மேலிடப் பெயர்கள் மூன்றும் ஒவ்வோ ரிடமாய்த் தாழ்ந்து வந்து வழங்கின என்றும் அறிந்து கொள்க. (பாவாணர், தொல். எழுத்து. 445, அடிக்குறிப்பு).

**தொண்ணை** *tonnai*, பெ. (n.) பெருந்தடி; stout stick or club.

*[துள் → தொள் → தொண் → தொண்ணை (மு.தா. 208)]*

**தொண்ணைத்தடி** *tonnai-t-tadi*, பெ. (n.) பெருந்தடி; stout stick or club.

*[தொண்ணை + தடி]*

தொண்ணை எனினும் தடி எனினுமொக்கும். தொண்ணைத்தடி யென்பது மீமிசை

**தொண்மணி** *tonmani*, பெ. (n.) முத்து, மாணிக்கம் போன்ற ஒன்பது வகையான மணிக்கற்கள்; the nine gems or precious stones.

*[தொண்பது → தொண் - ஒன்பது. தொண் + மணி.]*

**தொணதொண-த்தல்** *tona-tona-*, 4 செ.கு.வி. (v.i.) வெறுப்புண்டாம்படி அலப்பிப் பேசுதல் (இ.வ.); to vex with ceaseless talk. தொண தொணக்காமல் கொஞ்சநேரம் சும்மா யிரு *(உ.வ.)*.

**தொணதொணப்பு** *tona-tonappu*, பெ. (n.) வெறுப்புண்டாம்படி அலப்பிப் பேசுகை; chattering, babbling. அம்மாவின் தொண தொணப்பு தாங்காமல் வீடு மாறிவிட்டோம்.

**தொணலைக்கவலை** *tonalai-k-kavalai*, பெ. (n.) கவலை மீனுள் ஒரு வகை; kind of fish in kavalai species.

*[தொணலை + கவலை]*

**தொத்தல்** *tottal*, பெ. (n.) 1. வலியற்றவன்-வள்-து; emaciated, weak person or animal. தொத்தல் மாடு. 2. பயனிலி, பதடி; useless person or thing. "ஆகாத தொத்தலுன் னூர்பேரென்ன" *(ஆதியூரவதானி. 27)*.

**தொத்தன்** *tottan*, பெ. (n.) அடிமையாள் (வின்.); slave.

*[தொத்து → தொத்தல் → தொத்தன்]*

**தொத்தாள்** *tottal*, பெ. (n.) 1. அடிமை (நிகண்டு); slave. 2. தொத்தா பார்க்க; see *totta*.

*[தொத்து → தொத்தாள்]*

**தொத்தி** *totti*, பெ. (n.) 1. கொடி; creeper. 2. ஒருமரம்; an unknown tree *(சா.அக.)*.

*[தொற்றி → தொத்தி]*

**தொத்திப்பிடி-த்தல்** *totti-p-pidi-*, 4 செ.குன்றாவி. (v.t.) 1. ஒட்டிக் கொள்ளுதல்; to cling to. 2. சார்பாகப் பற்றுதல்; to cleave to for support. 3. அடைக்கலம் புகுதல்; to take refuge with one; to seek one's friendship obsequiously. 4. கூட்டி விடுதல்; to bring, fetch, as a woman to her paramour.

*[தொத்தி + பிடி]*

**தொத்தியேறு-தல்** *totti-y-eru*, 5 செ.கு.வி. (v.i.) 1. கைகால்களாற் பற்றியேறுதல்; to climb by clinging, as a horse. 2. தன்மேம்பாடு காட்டுதல் (வின்.); to assume authority or dominance, as climbing on others.

*[தொத்தி + ஏறு-.]*

**தொத்து**[1] *tottu*, பெ. (n.) 1. தொற்று பார்க்க; see *torru*. 2. பூங்கொத்து; bunch of flowers *(சா.அக.)*.

*[துல் (துற்று) → தொற்று → தொத்து (மு.தா. 156)]*

**தொத்து**[2]**-தல்** *tottu-*, 5 செ.கு.வி. (v.i.) 1. தொத்தியேறு-தல் பார்க்க; see *totti-y-eru-*. "நரருமினித் தொத்துவர்" *(திருவாலவா. 29, 1)*. 2. ஒட்டுதல்; to cling, adhere. "உடுமீன் தொத்தப் பொலி கனகக்கிரி வெயில் சுற்றிய தொத்தான்" *(கம்பரா. பிரமாத். 117)*. 3. தொங்குதல்; to hang. "செச்சைக் கண்டத் தொத்தூன் போல" *(ஞான. பாயிர. 5, 12)*. 4. கூடுதல்; to be obtained. "சத்திபதிப்பிற் சம்பிர தாயந் தொத்துவதென்பது" *(ஞான. 62, 9)*. 5. படர்தல்; to climb up, spread, as the vine.

*[தொற்று → தொத்து]*

**தொத்து**[3]**-தல்** *tottu-*, 5 செ.குன்றாவி. (v.t.) 1. பற்றுதல்; to hold, grasp, as a stick.

"கோற்றொத்து கூனனும்" (பதினொ. திருத்தொண். 48). 2. தொடர்தல்; to follow, pursue. "விருத்திரனைக் கொல்லத் தொத்திய பாவம்" (உத்தரரா. அசுவமே. 8). 3. நோயொட்டுதல்; to catch, as a disease; to infect.

[தொற்றி → தொத்து]

**தொத்து**[4] *tottu,* பெ. (n.) பூ முதலியவற்றின் கொத்து (திவா.); cluster, bunch, as of flowers. "தொத்தீன் மலர்ப்பொழிற் றில்லை" (திருக்கோ. 121). 2. திரள்; mass, bundle. "தொத்தொளி முத்துத்தாமம்" (சீவக. 2653). 3. தொடர்பு; connection. "தொத்தற விட்டிட" (திருமந். 2245). 4. பற்று; attachment. "சித்தந் தொத்தற" (ஞானவா. சரகு. 23). 5. சார்பு (பிங்.); dependance. 6. அடிமை (பிங்.); slave, dependant, menial. 7. பழைமையாய் வரும் நட்பு (திவா.); long-established intimacy. 8. வைப்பாட்டி (பல்பொருட் சூளா.); concubine. 9. தொற்று நோய்க்குணம்; contagion, infection. 10. சார்புப் பொருள்; anything attached to another as support.

[துல் (துற்று) → தொள்து → தொத்து (மு.தா. 156)]

**தொத்துக்குட்டி** *tottu-k-kutti,* பெ. (n.) உடன் பற்றித் திரிபவன் (இவ.); a dependent, satellite (செ.அக.).

[தொற்று → தொத்து + குட்டி]

**தொத்துகாமாலை** *tottu-kāmālai,* பெ. (n.) காமாலை நோய் வகை; a kind of jaundice (சா.அக.).

[தொற்று + காமாலை. தொற்று → தொத்து]

ஒ.நோ. பற்று → பத்து

**தொத்துச்செடி** *tottu-c-cedi,* பெ. (n.) 1. மண்ணில் படாமல் வெளியிற் காற்றுப்பட்டுக் கொண்டிருக்கும்படித் தொங்கி நிற்கும் வேர்களுள்ள செடி; plants the roots of which do not enter into the ground but hang in the air as air creeper. 2. தனக்கென ஊட்ட மில்லாமலே ஒரு செடியின் வேரில் வளரும் மற்றொரு செடி; a plant growing on another plant but not deriving its nourishment from it. 3. புல்லுருவி; a plant which grows upon another plant and also feeds its juice.

[தொத்து + செடி. தொற்று → தொத்து]

**தொத்துநோய்** *tottu-nōy,* பெ. (n.) ஒட்டு நோய்; infection or contagious disease.

[தொற்று + நோய் → தொற்றுநோய் → தொத்து நோய்]

**தொத்துப்பல்** *tottu-p-pal,* பெ. (n.) தெற்றுப்பல் பார்க்க; see *teṟṟu-p-pal* (சா.அக.).

[தெற்று → தெத்து → தொத்து + பல்]

**தொத்துவான்** *tottu-vāṉ,* பெ. (n.) தொத்துநோய் பார்க்க; see *tottu-nōy.*

[தொற்று → தொத்து → தொத்துவான்]

**தொத்துவேலை** *tottu-vēlai,* பெ. (n.) 1. ஒட்டி வைத்து இணைக்கும் வேலைப்பாடு; joining work; welding. 2. சரியாக முடிக்காத வேலை; pieced and unsound work.

[தொற்று → தொத்து + வேலை]

**தொத்துளிப்பாய்** *tottuḷi-p-pāy,* பெ. (n.) பாய் வகை; mat made of rushes. "தொத்துளிப் பாயாலே வேய்ந்த" (பெரும்பாண். 50, உரை).

[தொத்துளி + பாய்]

**தொத்தூன்** *tottūṉ,* பெ. (n.) தொங்கு சதை; hanging flash, dewlap. "செச்சைக் கண்டத் தொத்தூன் போல" (ஞானா. பாயி. 5, 12).

[தொத்து + ஊன். தொற்று → தொத்து]

**தொதல்** *todal,* பெ. (n.) தித்திப்புப் பண்டவகை; a confection.

**தொதவம்** *todavam,* பெ. (n.) நீலமலையில் பேசப்படும் திருந்தாத தமிழிய (திராவிட)க் குடும்ப மொழிகளுளொன்று; one of the uncultivated languages of Dravidian family spoken at Nilgiris hills.

[தொழு → தொது → தொத → தொதவம்]

**தொதவர்** *todavar,* பெ. (n.) நீலமலையில் வாழ்பவரும் எருமை மந்தை ஓம்புதலை முதன்மையாகக் கொண்டவருமான மலைவாழ் வகுப்பினர்; todars of Nilgiris hills

the people who are having the buffalo rearing as prime occupation.

*[தொழு → தொது → தொத → தொதவர்]*

**தொதி** *todi,* பெ. (n.) பப்பரப்புளி பார்க்க; see *pappara-p-puli.*

*[துது → தொது → தொதி]*

**தொந்தக்காரர்** *tonda-k-kārar,* பெ. (n.) 1. உறவினர்; persons connected by ties of relationship; relations. 2. பழம்பகைவர்; inveterate foes.

*[தொந்தம் + காரர்]*

**தொந்தகாமாலை** *tonda-kāmālai,* பெ. (n.) 1. கருவில் ஏற்பட்ட காமாலை; congenital form of jaundice. 2. நாட்பட்ட காமாலை; haeniolytic jaundice of a chronic nature. 3. செயற்கையாய் உண்டான காமாலை; the acquire form of jaundice (சா.அக.).

*[தொந்தம் + காமாலை]*

**தொந்தசலம்** *tonda-šalam,* பெ. (n.) ஊதை, பித்தம், கோழை, சளி குறைபாட்டினால் உடம்பில் உண்டாகும் கெட்ட நீர்; morbid fluid in the system collected through the derangement of the three humours (சா.அக.).

**தொந்தசுரம்** *tonda-šuram,* பெ. (n.) நாட்பட்ட காய்ச்சல்; fever continuing from a long time (சா.அக.).

*[தொந்து → தொந்தம் + சுரம். தொந்து = பழைமை]*

**தொந்தநோய்** *tonda-nōy,* பெ. (n.) 1. பழைமையான நோய்; old disease. 2. நாட்பட்ட நோய்; long continued or chronic disease. 3. பிறப்பிலேயே வாய்த்த நோய்; hereditary disease. 4. சேர்க்கையால் உண்டான நோய்; venereal syphilitic or other urinary diseases (சா.அக.).

*[தொந்தம் + நோய். தொத்து → தொந்து. தொந்தம். தொந்தம் = பழைமை]*

**தொந்தநோயர்** *tonda-nōyar,* பெ. (n.) 1. பழைய நோயினால் தாக்குண்டவன்; one suffering from a chronic disease. 2. குடும்ப நோயில் தாக்குண்டவன்; one tained with the affliction of family or hereditary disease.

*[தொந்தம் + நோயர்]*

**தொந்தப்படு-தல்** *tonda-p-padu-,* 20 செ.கு.வி. (v.i.) 1. ஒட்டுநோய் பற்றுதல்; to cleave, as a chronic or hereditary disease. 2. உடலில் வளி தொடர்பானவை ஒன்றுடனொன்று பிணைந்திருத்தல்; to be disordered, deranged, brought into conflict, as the different humours of the body. 3. தொடர்புறுதல் (இ.வ.); to be connected (சா.அக.).

*[தொந்தம் + படு]*

**தொந்தப்பழி** *tonda-p-pali,* பெ. (n.) தலைமுறை தலைமுறையாகத் தொடரும் பகை; hatred, malice, perpetuated from generation to generation, vendetta. 2. தலைமுறை தலைமுறையாக நிற்கும் பழிப்பு; stigma or stain that will continue for generations.

*[தொந்தம் + பழி]*

**தொந்தப்பாடு** *tonda-p-pādu,* பெ. (n.) தொடர்பு (நாஞ்.); connection.

*[தொந்தம் + பாடு]*

**தொந்தப்பாலை** *tonda-p-pālai,* பெ. (n.) தொந்தம்பாலை பார்க்க; see *tondam-pālai.*

*[தொந்தம்பாலை → தொந்தப்பாலை]*

**தொந்தம்**[1] *tondam,* பெ. (n.) 1. இரட்டை; pair. 2. பழைமை; oldness. 3. நெருக்கம்; intimacy. 4. சேர்க்கை; addition, adherence. 5. பாலியற் தொடர்பு; sexual union. 6. கால்வழி; hereditary (சா.அக.).

*[தொந்து → தொந்தம்]*

**தொந்தம்**[2] *tondam,* பெ. (n.) எதிரெதிரான இரண்டு இணைகள்; pairs or couples of opposites as heat and cold, desire and aversion, light and darkness, weal and woe, wet and dry etc. (சா.அக.).

**தொந்தம்**[3] *tondam,* பெ. (n.) 1. தொடர்பு; connection. "தொல்லை வல்வினைத் தொந்தந்தா

னென்செயும்" (தேவா. 4,4). 2. பகை; hatred, animosity, malice. நரர்க்கும் வானரர்க்கு முண்டோ தொந்தம் (இராமநா. கிஷ். 8). 3. படைக்கல வகை; a kind of weapon. "சவளமும் தொந்தமும் விட்டேறும்" (தக்கயாகப். 559, உரை). 4. நெருங்கிய பழக்கம்; familiarity, close intimacy. 5. தொடுப்பு; improper intimacy. அவனுக்கும் அவளுக்குந் தொந்தமுண்டு.

**தொந்தம்பாலை** *tondam-pālai,* பெ. (n.) நிலப்பாலை; blue dying rosebay (சா.அக.).

**தொந்தமயினம்** *tonda-mayiṉam,* பெ. (n.) பச்சைக் கடலை; green bengal gram (சா.அக.).

**தொந்தமலம்** *tonda-malam,* பெ. (n.) பழைய மலம்; long retained stool (சா.அக.).

[தொந்தம் + மலம்]

**தொந்தமிடு-தல்** *tonda-miḍu-,* 20 செ.குவி. (v.i.) சேர்க்கையினால் சரக்குகளை உறவாக்கல்; to set up chemical combination by addition of drugs or agents (சா.அக.).

[தொந்தம் + இடு-]

**தொந்தமுறு-தல்** *tondam-uṟu-,* 20 செ.குவி. (v.i.) ஒன்றுபடுதல்; to unite. "தொந்தமுறச் சேர்குடிநீர்" (தைலவ.தைல. 135).

[தொந்தம் + உறு-]

**தொந்தமேறு-தல்** *tondam-ēṟu-,* 5 செ.குவி. (v.i.) சேர்க்கையினால் சரக்குகளின் உறவாக்கு தலை அதிகப்படுத்தல்; to increase of chemical affinity by addition of other agents in alchamy (சா.அக.).

[தொந்தம் + ஏறு]

**தொந்தயுத்தம்** *tonda-yuttam,* பெ. (n.) இருவர் தமக்குள் செய்யும் போர்; duel, hand to hand fight. "தொந்தயுத்த நின்று ஞற்றினார்" (சேதுபு. சீதைகுண்ட. 12).

[தொந்தம் + யுத்தம்]

Skt. yudda → த. யுத்தம்

**தொந்தரவு** *tondaravu,* பெ. (n.) துன்பம் (உவ.); trouble, vexation, difficulty. பொதுமக்களுக்கு எந்தத் தொந்தரவும் இல்லாமல் ஊர்வலம் நடத்தத் தமிழியக்கத் தொண்டர்கள் முடிவு செய்தனர்.

ம. தொந்தரம்; க. தொந்தரெ; தெ. தொந்தர

[துன் → (துய்) → துயர் → துயரம். துன் → தொன் → தொய் → தொய்யல் = துன்பம். தொய் → தொ → தொந்தரவு (மு.தா. 285)]

**தொந்தரி-த்தல்** *tondari-,* 4 செ.குன்றாவி. (v.t.) வருத்துதல்; to trouble, vex, annoy. ஏன் சும்மா வந்து தொந்தரிக்கிறாய்? (உவ.).

[தொந்தரை → தொந்தரி]

**தொந்தரை** *tondarai,* பெ. (n.) தொந்தரவு பார்க்க; see *tondaravu.* "ஆசாபாசத் தொந்தரை யிட்டவர்மேல் வீழ்வார்பால்" (திருப்பு. 623).

[தொய் → தொ → தொந்தரை]

**தொந்தரோகம்** *tonda-rōgam,* பெ. (n.) தொந்த நோய் பார்க்க; see *tonda-nōy* (சா.அக.).

[தொந்தம் + ரோகம்]

Skt. rōga → த. ரோகம்

**தொந்தரோகி** *tonda-rōgi,* பெ. (n.) தொந்த நோயர் பார்க்க; see *tonda-nōyar* (சா.அக.).

[தொந்தம் + ரோகி]

Skt. rōgin → த. ரோகி

**தொந்தவழுக்கை** *tonda-vaḻukkai,* பெ. (n.) சரவடிசரவடியாக ஏற்பட்ட தலை வழுக்கை; hereditary baldness (சா.அக.).

[தொந்தம் + வழுக்கை]

**தொந்தவாதம்** *tonda-vādam,* பெ. (n.) ஒரு ஊதை மற்றொரு மாத்திரை ஊதையோடு கலந்திருத்தல்; vāta humour in combination with another measure of vātam (சா.அக.).

[தொந்தம் + வாதம்]

**தொந்தவியாதி** *tonda-viyādi,* பெ. (n.) தொந்தநோய் பார்க்க; see *tonda-nōy* (சா.அக.).

[தொந்தம் + வியாதி. தொந்தம் → பழைமை]

Skt. vyādhi → த. வியாதி

**தொந்தவினை** *tonda-viṉai,* பெ. (n.) முற்பிறப்பிற் செய்த இருவினைப் பயன் (வின்.); fruit of former actions, good or evil.

*[தொந்தம் + வினை]*

**தொந்தனை** *tondaṉai,* பெ. (n.) இணை விழைச்சு; sexual union. "பரத்தை மாதர் தொந்தனைத் துவட்சி நீங்கான்" (குற்றா.தல. கவுற்சன. 26).

**தொந்தார்த்தம்** *tondārttam,* பெ. (n.) 1. இரட்டைப் பொருள்; double entendre. அவன் தொந்தார்த்தத்தோடு பேசுகிறான்; 2. தொந்த வினை (வின்.) பார்க்க; see *tonda-viṉai.*

*[தொந்தம் + அர்த்தம்]*

Skt. artha → த. அர்த்தம்

**தொந்தார்த்தனை** *tondārttaṉai,* பெ. (n.) ஒருவர்க்கொருவர் கூறும் கடுஞ்சொல்; reciprocal abuse. 2. ஒருவர்க்கொருவரோ டுள்ள பகை; mutual hatred (செ.அக.).

**தொந்தி[1]-த்தல்** *tondi-,* 4 செ.குவி. (v.i.) ஊதை, பித்தம், கோழை, சளி நோய்கள் ஒன்றோ டொன்று முரணுதல்; to be in conflict, as the different humours of the body with one another, to be complicated as a disease. 2. பற்றுதல் (யாழ்.அக.); to adhere, clave, to be united, familiar with. 3. தாறுமாறாதல்; to become disorderly, to be spoiled. 4. தொந்தித்தல்; becoming complicated as disease (சா.அக.).

**தொந்தி[2]-த்தல்** *tondi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கலத்தல்; to compound, as medicines, mix. சரி கூட்டி தொந்தித்து (பணவிடு. பக். 22). 2. தொடர்தல்; to be perpetuated, to continue, as the fruit of karma.

**தொந்தி[3]** *tondi,* பெ. (n.) 1. பெருவயிறு; large belly, abdomen. "தொந்திகொ டந்திபடும் பெருந்துறை" (திருவாலவா. 27, 36). 2. தசை மடிப்பு (வின்.); fold or callop of fat. 3. நோய்வகை; obesity, enteroptosis. 4. பரவ மகளிர்அணியுங்கைக்காப்பு; bracelet of parava women (செ.அக.).

ம. தொந்தி

**தொந்தி[4]** *tondi,* பெ. (n.) 1. வயிறு; belly. 2. கீழ்வயிறு; abdomen. 3. தொப்பை; pot belly.

**தொந்திக்கணபதி** *tondi-k-kaṇapadi,* பெ. (n.) பெருவயிற்றுப் பிள்ளையார்; big-bellied Ganēsā (செ.அக.).

*[தொந்தி + கணபதி]*

**தொந்திக்கெளுத்தி** *tondi-keḷutti,* பெ. (n.) ஏரியிலும் குளங்களிலும் மேயும் மீன்; fish that roams in the lake and ponds.

*[தொந்தி + கெளுத்தி]*

இதன் அடிவயிறு பருத்துக் காணப்படும்.



**தொந்தித்தரை-த்தல்** *tondittu-arai,* 4 செ.கு.வி. (v.i.) இரண்டு சரக்குகளும் ஒன்றுபடக் கலந்த பிறகு அரைத்தல்; to grind after the drugs had chemically combined as in sulphur and mercury (சா.அக.).

*[தொந்தித்து + அரை-.]*

**தொந்திதள்ளுதல்** *tondi-taḷḷudal,* பெ. (n.) 1. பெருவயிறாகை (உவ.); becoming pot-bellied. 2. வளைந்து போகை; being curved or folded. பட்டம் தொந்தி தள்ளியிருக்கிறது (தஞ்சை.).

*[தொந்தி + தள்ளு]*

**தொந்திப்பாதல்** *tondi-p-pādal,* பெ. (n.) ஒன்றோடொன்று பின்னிக் கொள்ளல்; pulse becoming complicated by combined with one another (சா.அக.).

*[தொந்திப்பு + ஆதல்]*

**தொந்திப்பு[1]** *tondippu,* பெ. (n.) 1. நட்பு; union, friendship. 2. நீராப்பகை; perpetuation of hatred. 3. நோய்க் கலப்பு; complication of disease (செ.அக.).

**தொந்திப்பு**[2] *tondippu,* பெ. (n.) 1. நெருக்கம்; intimacy. 2. பழந்தொடர்பு; oldy relation. 3. ஒன்றோடொன்றின் தொடர்பு; relative connection, mutual connection (சாஅக.).

**தொந்திப்பு**[3] *tondippu,* பெ. (n.) 1. இரட்டிப்பு; double. 2. வேறுபாடு; difference.

**தொந்திமணல்** *tondi-maṇal,* பெ. (n.) புதை மணல் (இ.வ.); quicksand, bed of loose sand, readily swallowing animals (செஅக.).

*[தொந்தி + மணல்]*

**தொந்திவயிறு** *tondi-vayiṟu,* பெ. (n.) தொப்பை வயிறு; pot belly (சாஅக.).

*[தொந்தி + வயிறு]*

**தொந்திவிழு-தல்** *tondi-viḻu-,* 3 செ.கு.வி. (v.i.) வயிறு பெருத்தல்; to get pot belly (சாஅக.).

*[தொந்தி + விழு-.]*

**தொந்திவைத்தல்** *tondi-vaittal,* பெ. (n.) 1. தொந்திதள்ளுதல் பார்க்க; see *tondi-taḷḷu-dal.* 2. செல்வனாகை; becoming prosperous (செஅக.).

*[தொந்தி + வைத்தல்]*

**தொந்துவநோய்** *tonduva-nōy,* பெ. (n.) பல நோய்களின் கலப்பு; complicated diseases (சாஅக.).

*[தொந்துவம் + நோய்]*

**தொந்துவம்** *tonduvam,* பெ. (n.) கலப்பு; mixture, union (சாஅக.).

*[தொந்து → தொந்துவம்]*

**தொந்தை** *tondai,* பெ. (n.) தொந்தம்பாலை பார்க்க; see *tondam-pālai.*

**தொந்தோமெனல்** *tondōm-eṉal,* பெ. (n.) தாளவொலிக் குறிப்பு (சூடா. 12, 123); onom. expr. of beating time.

*[தொம் + தோம் + எனல்]*

**தொப்பக்கடமான்** *toppa-k-kaḍamāṉ,* பெ. (n.) வயிறு பருத்துக் காணப்படும் முட்களில்லாத தொரு கடல்மீன்; thornless sea fish which has large stomach.

*[தொப்பை + கடமான்]*

**தொப்பக்கெடுத்தை** *toppa-k-keḍuttai,* பெ. (n.) வயிறு பெருத்த கெடுத்தை என்னும் நச்சுத் தன்மையுள்ள கடல்மீன் (தஞ்சை. மீனவ.); poisonous sea fish, called keḍuttai.

*[தொப்பை + கெடுத்தை]*

**தொப்பக்கெண்டை** *toppa-k-keṇḍai,* பெ. (n.) வயிறு பெருத்த கெண்டை மீன் (தஞ்சை. மீனவ.); keṇḍai fish which has large belly.

*[தொப்பை + கெண்டை]*

**தொப்பணம்** *toppaṇam,* பெ. (n.) பிள்ளையார் வணக்கம் முதலியவற்றில் வலக்கையால் இடக்காதையும் இடக்கையால் வலக் காதையும் பிடித்து உட்கார்ந்தெழுந்திருக்கை; a form of obeisance to Ganēsā, in which the hands are crossed over each other, the fingers grasp the ear-lobes and the motions of sitting and standing are gone through alternately. "வளர்கை குழைபிடி தொப்பண குட்டொடு வனச பரிபுர பொற்பத வர்ச்சனை" (திருப்பு. விநாயகர்துதி, 5).



**தொப்பணம்போடு-தல்** *toppaṇam-pōḍu-,* 20 செ.கு.வி. (n.) பிள்ளையார் வணக்கம் போன்றவற்றில் இடக்கையால் வலக் காதையும் வலக்கையால் இடக்காதையும் பிடித்து உட்கார்ந்தெழுந்திருத்தல்; to form of obeisance to Ganēsā in which the hands are crossed over each other the fingers grasp the ear-lobes and motions of sitting and standing are gone through alternately.

*[தொப்பணம் + போடு]*

**தொப்பளம்** *toppaḷam,* பெ. (n.) பாதிவெந்த காய்கறி கொண்ட குழம்புவகை (இ.வ.); half boiled vegetable soup.

தெ. தப்பளமு

**தொப்பற** *toppaṟa,* வி.எ. (adv.) நன்றாய்; soundly, thoroughly. என்னைத் தொப்பற அடித்தார்கள் (இ.வ.).

**தொப்பறை** *toppāṟai,* பெ. (n.) எளியநிலை; miserable condition. தொப்பறைக் குடித்தனம் (தஞ்சை.).

**தொப்பாரம்**[1] *toppāram,* பெ. (n.) 1. துணியிற் கட்டித் தோள்மேற் கொண்டுபோகப்படும் பெருமூட்டை (யாழ்.அக.); a large bundle of things tied in a cloth, as carried over the shoulders; pack. 2. புற்கட்டு; a large truss of grass. 3. நெடுஞ்சப்பாத்து (யாழ்.அக.); a kind of spurge.

*[தோள் + பாரம் → தோள்பாரம் → தோப்பாரம் → தொப்பாரம்]*

**தொப்பாரம்**[2] *toppāram,* பெ. (n.) 1. சிறு கொப்புளம்; vessicle, pustule. 2. பெருங் குவியல்; big hoap, pile (சா.அக.).

**தொப்பாரம்**[3] *toppāram,* பெ. (n.) முகமூடி வகை; a kind of veil.

தெ. தொப்பாரமு

**தொப்பாரம்**[4] *toppāram,* பெ. (n.) மணிமுடி வகை; a kind of crown. "குற்றுடை வாளுங் கட்டிக் குலவு தொப்பாரங் கட்டி" (திருவாலவா. 4, 12).

தெ. தபாரமு

**தொப்பாரம்**[5] *toppāram,* பெ. (n.) பெரிய கட்டடம் (வின்.); large building.

தெ. சப்பாரமு

**தொப்பி**[1] *toppi,* பெ. (n.) கள்; toddy.

*[தோப்பி → தொப்பி]*

**தொப்பி**[2] *toppi,* பெ. (n.) முழவின் (மிருதங்கத்தின்) இடப்பக்கம்; left side of a mirudangam.

**தொப்பி**[3] *toppi,* பெ. (n.) நெல்லி; Indian-gooseberry (சா.அக.).

**தொப்பிக்கட்டை** *toppi-k-kaṭṭai,* பெ. (n.) வைக்கோற்புரி சூட்டி நீரில் நடப்பட்ட மரம் (யாழ்ப்.); sticks or posts set up in shallow waters to indicate the course of the channel, as a hanging straw on the top to make them conspicuous.

*[தொப்பி + கட்டை]*

**தொப்பிச்சாடி** *toppi-c-cāḍy,* பெ. (n.) கள்சாடி; toddy jar (சா.அக.).

*[தோப்பி → தொப்பி + சாடி]*

**தொப்பிமடல்** *toppi-maḍal,* பெ. (n.) பாக்கு மரத்தின் பாளை (யாழ்ப்.); integument of the areca flower (சா.அக.).

*[தொப்பி + மடல்]*

**தொப்புட்கழலை** *topput-kaḻalai,* பெ. (n.) கொப்பூழிலேற்படுங் கழலை; tumour of the umbilics (சா.அக.).

*[தொப்புள் + கழலை]*

**தொப்புட்குழி** *topput-kuḻi,* பெ. (n.) தொப்புளின் பள்ளம்; naval depression (சா.அக.).

*[தொப்புள் + குழி]*

**தொப்புட்கொடி** *topput-koḍi,* பெ. (n.) கொப்பூழ்க்கொடி (உ.வ.); umbilical cord, navel string.

*[தொப்புள் + கொடி]*

**தொப்புட்கொடியுறவு** *topput-koḍi-y-uravu,* பெ. (n.) மொழிவழியான இனவுணர்வு; ethinical relationship through mother tongue. ஈழத்தவருக்கும் தமிழருக்கும் தொப்புள் கொடியுறவு உள்ளது.

*[தொப்புள்கொடி + உறவு]*

கருவில் வளரும் சேய்க்குத் தாயுடன் இணைக்கப்பட்டுள்ள தொப்புட் கொடி வழியே உணவு புகட்டப்படுவது போன்ற உருவகம்.

**தொப்புத்திப்பெனல்** *toppu-t-tippeṉal,* பெ. (n.) தொப்பெனல் பார்க்க; see *toppeṉal.*

*[தொப்பு + திப்பு + எனல்]*

**தொப்புத்தொப்பெனல்** *toppu-t-toppeṉal,* பெ. (n.) தொப்பெனல் பார்க்க; see *toppeṉal.*

**தொப்புள்** *toppuḷ,* பெ. (n.) கொப்பூழ்; navel (சா.அக.).

**தொப்புள்கட்டி** *toppuḷ-kaṭṭi,* பெ. (n.) கோழை, சளியினால் கொப்பூழின் கீழேனும், மேலேனும் கட்டியைப் போல் வீக்கத்தை யுண்டாக்கும் ஊதை நோய்; a kind of rheumatic abscess like swelling below the navel (சா.அக.).

[தொப்புள் + கட்டி]

**தொப்புள்கடுப்பு** *toppuḷ-kaḍuppu,* பெ. (n.) கொப்பூழ் அழற்சி; inflammation of the navel.

[தொப்புள் + கடுப்பு]

**தொப்புள்கழலை** *toppuḷ-kaḻalai,* பெ. (n.) கொப்பூழண்டை காணப்படும் கழலை அல்லது நீர்க்கட்டி; a watery tumour or cyst at the navel (சா.அக.).

**தொப்புள்கொடி** *toppuḷ-koḍi,* பெ. (n.) தாய்க்கும், கருவிலிருக்கும் குழந்தைக்கும் தொடர்புடையதாயிருக்கும் நஞ்சுக்கொடி; the navel string or umbilical cord (சா.அக.).

[தொப்புள் + கொடி]

**தொப்புள்பிதுக்கம்** *toppuḷ-pidukkam,* பெ. (n.) தொப்புள் புடைத்து வெளித்தள்ளல்; protrusion of navel tissue (சா.அக.).

[தொப்புள் + பிதுக்கம்]

**தொப்புள்மந்திரம்** *toppuḷ-mandiram,* பெ. (n.) (பிராமண) மணமக்களின் முதற் சேர்க்கைச் சடங்கிற் கூறும் மந்திரம்; a mantra uttered in the ceremony of consummation.

[தொப்புள் + மந்திரம்]

**தொப்புள்வீக்கம்** *toppuḷ-vīkkam,* பெ. (n.) கொப்பூழ் வீக்கம்; swelling of the umbilicus (சா.அக.).

[தொப்புள் + வீக்கம்]

**தொப்புளறு-த்தல்** *toppuḷ-aṟu-,* 5 செ.கு.வி. (v.i.) பிறந்த குழந்தையின் நஞ்சுக் கொடி அறுத்தல்; cutting off the umbilical card of a new born baby (சா.அக.).

[தொப்புள் + அறு]

**தொப்புளான்** *toppuḷāṉ,* பெ. (n.) பெரிய தொப்புளையுடையவன்; one having a large navel (சா.அக.).

[தொப்புள் + உளான்]

**தொப்புளொழுக்கு** *toppuḷ-oḻukku,* பெ. (n.) தொப்புளில் உண்டாகும் குருதியொழுக்கு; hemorrhage from the navel (சா.அக.).

[தொப்புள் + ஒழுக்கு]

**தொப்பென்றுவிழு-தல்** *toppeṉṟu-viḻu-,* 3 செ.கு.வி. (v.i.) நிலம் அல்லது நீருக்குள் சுமை கொண்டு விழுதல்; falling of a heavy body on the ground or into the water.

[தொப்பு + என்று + விழு-.]

**தொப்பெனல்** *toppeṉal,* பெ. (n.) 1. கீழ்விழுதற் குறிப்பு; falling with a thumbing noise. 2. அடிவிழுதற் குறிப்பு; sound of falling blow (செ.அக.).

**தொப்பை**[1] *toppai,* பெ. (n.) 1. தொந்தி; paunch belly. 2. கொப்புளம்; boil. 3. கடல்மீன்; a sea fish. 4. திண்மையின்றிப் பருத்தது; that which has swelled without firmness or soft and weak. 5. பருத்துச் சரிந்த வயிறு; a relaxed condition of the abdominal walls in which they hangdown loose over the pubil by thier own weight (சா.அக.).

தெ. தொப்ப

[துல் → துள் → துண்பு → தும்பு → தொம்பு → தொம்பை → தொப்பை (வே.க. 282)]

**தொப்பை**[2] *toppai,* பெ. (n.) மத்தளத்தில் அடிக்கும் நடுவிடம் (இ.வ.); the central portion of the head of a drum.



**தொப்பைக்கணபதி** *toppai-k-kaṇapadi,* பெ. (n.) தொந்திக்கணபதி பார்க்க; see *tondi-k- kaṇapadi.*

[தொப்பை + கணபதி]

**தொப்பைக்காரன்** *toppai-k-kāraṉ,* பெ. (n.) பணக்காரன் (இ.வ.); wealthy person, as having a big paunch.

[தொப்பை + காரன்]

**தொப்பைக்கூத்தாடி** *toppai-k-kuttāḍi,* பெ. (n.). கோமாளி (இ.வ.); clown, as having a made-up pot-belly.

[தொப்பை + கூத்தாடி]

**தொப்பைக்கெண்டைச்சாலா** *toppai-k-keṇḍai-c-cālā,* பெ. (n.) வயிற்றின் அடிப்பகுதி பருத்துக்காணும் ஆற்று மீன் வகை (தஞ்சை. மீனவ.); river fish with a big lower part.

**தொப்பைக்கெளுத்தி** *toppai-k-keḷutti,* பெ. (n.) அடி வயிறு பெருத்த கெளுத்தி மீன் (செங்கை. மீனவ); keḷutti fish with a large size stomach.

[தொப்பை + கெளுத்தி]

**தொப்பைச்சாலா** *toppai-c-cālā,* பெ. (n.) உடல் பருத்துக் காணப்படும் ஒரு சாலாமீன்; sālā fish, which has big size body.

[தொப்பை + சாலா]

**தொப்பைதள்ளு-தல்** *toppai-taḷḷu-,* 15 செ.கு.வி. (v.i.) வயிறு பருத்துச் சரிதல்; hanging of the abdominal walls through relaxation (சா.அக.).

[தொப்பை + தள்ளு-]

**தொப்பைமிளகாய்** *toppai-milagāi,* பெ. (n.) குட மிளகாய்; large plump chillies; bell pepper, capsicum (சா.அக.).

[தொப்பை + மிளகாய்]



**தொப்பைமீன்** *toppai-mīṉ,* பெ. (n.) ஒரு வகைக் கடல் மீன்; a sea fish (சா.அக.).

[தொப்பை + மீன்]

**தொம்பக்கூத்தாடி** *tompa-k-kūttāḍi,* பெ. (n.) தொம்பன் (இ.வ.) பார்க்க; see *tombaṉ.*

[தொம்பம் + கூத்தாடி]

**தொம்பதம்** *tompadam,* பெ. (n.) 'தத்வமஸி' என்னும் மறைத் தொடரில் 'த்வம்' எனுஞ் சொல் (திருப்பு 348); the word 'tvam' in the sacred sentence tat-tvam-asi "தொம்பத்துப் பண்புரைத்து" (திருப்பு. 348).

**தொம்பம்** *tombam,* பெ. (n.) கழைக்கூத்து (யாழ்.அக.); pole-dancing.



**தொம்பரக்குடித்தனம்** *tombara-k-kuḍittaṉam,* பெ. (n.) செலவாளிக்குடும்பம் (உ.வ.); domestic life of extravagance and waste, lack of domestic economy.

[தொம்பரம் + குடித்தனம்]

**தொம்பரம்**[1] *tombaram,* பெ. (n.) பலருக்குச் சமைத்த ஊண்; a mess prepared for many, an open table, as in a palace (W).

தெ. தொம்மரமு

**தொம்பரம்**[2] *tombaram,* பெ. (n.) சமையற் பானை; cooking pot. அந்த அரிசியைத் தொம்பரத்திற் போட்டுச் சமையல் செய்யுங்கள் (தமிழறி. 46).

**தொம்பரம்**[3] *tombaram,* பெ. (n.) தொப்பாரம்[5] பார்க்க; see *toppāram.*

**தொம்பரவன்** *tombaravaṉ,* பெ. (n.) தொம்பன் பார்க்க; see *tombaṉ.*

[தொம்பன் → தொம்பரவன்]




தொம்பக் கூத்தாடி





தொம்பை மாலை

**தொம்பரை**[1] *tombarai,* பெ. (n.) ஊர்சுற்றி (இ.வ.); a vagabond.

*[தொம்பன் → தொம்பரை]*

**தொம்பரை**[2] *tombarai,* பெ. (n.) நெற்குதிர்; granary. *தொம்பரைக டோறுமுன்னாட் டாழ்வின்றி வைத்திடு நெற் றான்யமதை (பஞ்ச. திருமுக. 193).*

*[தொம்பறை → தொம்பரை]*



**தொம்பல்** *tombal,* பெ. (n.) *கலப்பையி லொட்டுஞ்சேறு (இ.வ.);* the mud that sticks to the plough-share.

**தொம்பறை** *tombarai,* பெ. (n.) *1. களஞ்சியம்;* granary, barn. *2. தொம்பை', 2 பார்க்க;* see *tombai*[1]*,2. 3.* பெருவயிறன்; pot-bellied person, as resembling a grain basket.

**தொம்பன்** *tomban,* பெ. (n.) *கழைக்கூத்தன்;* a person belonging to the tribe of tumblers, acrobats and bole-dancers. "தொம்பர் போலலாகு கொண்டு" *(இராமநா. உயுத். 88).*

க. தொம்பம்

**தொம்பன்கூத்தாடி** *tomban-kūttāḍi,* பெ. (n.) தொம்பன் பார்க்க; see *tomban.*

*[தொம்பன் + கூத்தாடி]*

**தொம்பை**[1] *tombai,* பெ. (n.) *1. மூங்கிலாலான நெற்குதிர்;* grain bin, high wicker-basket used as a receptacle for grain. "அவனைத் தொம்பை மேவுவித்து" *(பஞ்சதந். மித்திர. 183).* தொம்பைக் கூண்டிலே எலியைக் காவல் வைத்துக் கட்டினது போல *(பழ.). 2.* தொம்பை மாலை (இ.வ.) பார்க்க; see *tombai-mālai. 3.* இறைத்திருமேனி புறப்பாட்டின் போது முன் கொண்டு செல்லப்படும் பொருள்களுளொன்று (இ.வ.); a paraphernal article carried before an idol.

*[துல் → துள் → துண்பு → தும்பு → தொம்பு → தொம்பை (வே.க. 282)]*

**தொம்பை**[2] *tombai,* பெ. (n.) *1. குந்தாணி;* large mortar. *2. பறை;* large drum.

*[தும்பு → தொம்பை (மு.தா. 277)]*



**தொம்பை**[3] *tombai,* பெ. (n.) எருமைக்கு வரும் நோய்களுள் ஒன்று; a disease that affects the buffaloes.

**தொம்பை**[4] *tombai,* பெ. (n.) தேரில் தொங்க விடப்படும் துணிக்கூடு; festoons.



**தொம்பைக்கூடு** *tombai-k-kūḍu,* பெ. (n.) தொம்பை', 1 பார்க்க; see *tombai.* "பலதொம்பைக் கூட்டிற் சம்பா நெற்கட்டி வைக்கிறேன்" *(விறலிவிடு. 824).*

*[தொம்பை + கூடு]*

**தொம்பைக்கூண்டு** *tombai-k-kūṇḍu,* பெ. (n.) தொம்பை' பார்க்க; see *tombai.*

*[தொம்பை + கூண்டு]*

**தொம்பைநாற்று** *tombai-nāṟṟu,* பெ. (n.) அடிப்பாகம் பருத்து மண் இறுகலாகப் பிடித்துள்ள நெல் நாற்று; rice-plant with its root grown stout in hardened clay *(செ.அக.).*

மறுவ. தொளிம்பை

*[தொம்பை + நாற்று. தொளி → தொளும்பை → தொம்பை. தொளி = சேறு]*

**தொம்பைபாய்-தல்** *tombai-pāy-,* 1 செ.கு.வி. (v.i.) நெல் நாற்றின் வேர்ப்பாகம் பருத்து மண் இறுகலாகப் பிடித்திருத்தல் (நாஞ்.); to grow stout in root stuck in hardened clay, as rice-plant.

*[தொம்பை + பாய்-.]*

**தொம்பைமாலை** *tombai-mālai,* பெ. (n.) தேர் முதலியவற்றின் ஆடைத் தொங்கல் வகை; a kind of cylindrical cloth-ornament hung about a chariot or pandal.

*[தொம்பை + மாலை]*

**தொம்மனை** *tommaṉai,* பெ. (n.) தொம்பை [1] (வின்.) பார்க்க; see *tombai.*

*[தொம்பை → தொம்மணை]*

**தொம்மெனல்** *tom-m-eṉal,* பெ. (n.) ஒலிக் குறிப்பு; onom. expr. of drum-beat. "தொம்மென . . . குடமுழவெழு முழக்கம்" *(கோயிற்பு. நடராச.).*

*[தொம் + எனல்]*

**தொம்மை** *tommai,* பெ. (n.) 1. தொம்பை பார்க்க; see *tombai.* "வடமேற்கில் தானியத் தொம்மை யமைக்கவும்" *(சர்வா.சிற். 17).* 2. பருமன்; bulkiness, corpulence.

**தொமலாடி** *tomalāḍi,* பெ. (n.) எட்டி; nuxuomica strychnine *(சா. அக.).*

**தொய்[1]-தல்** *toy-,* 1 செ.கு.வி. (v.i.) 1. இளைத்தல்; to languish, pine, grow weak. 2. சோர்தல்; to be weary, fatigued; to fail in energy; to droop, faint, flag. "தொய்யுமான் போலத் துவக்குண்டேன்" *(விறலிவிடு. 407).* இத்தனை பேருக்கிடையில் நமக்கு எங்கே வேலை கிடைக்கப் போகிறது என்ற நினைப்பில் மனம் தொய்ந்தாள். 3. துவளுதல்; to become slack, to be loose, supple, yielding. "தொய்யு மரவணைக்குள்" *(திருப்பு. 1173).* நிறையத் துணிகள் தொங்குவதால் கொடி தொய்யத் தொடங்கி விட்டது. 4. வளைதல்; to bend through weakness or want of support. கட்டடம் தொய்கிறது. 5. வயிறு முதலியன வாடுதல் (வின்.); to sink in, as the belly through hunger or disease. உணவின்றி வயிறு தொய்கிறது. 6. கெடுதல்; to perish; to be ruined. "தொய்யா வெறுக்கைகொடு" *(பெரும்பாண் 434).* 7. பயன் குறைதல் (வின்.); to be past the prime, as trees; to be reduced in fruitlessness. 8. மூச்சுத் திணறுதல் (வின்.); to breathe short and hard, as while suffering from asthma. 9. வினை செய்தல்; to labour, do work. "தொய்யா வுலகத்து நுகர்ச்சியுங் கூடும்" *(புறநா. 214).*

*[துல் → துள் → தொள் → தொய் (மு.தா. 281)]*

**தொய்[2]-தல்** *toy-,* 1 செ.குன்றாவி. (v. t.) உழுதல்; to plough. "தொய்யாது வித்திய துளர்படு துடவை" *(மலைபடு. 122).*

*[தொள் → தொளி = சேறு. தொள் → தொய்]*

**தொய்[3]** *toy,* பெ. (n.) குற்றம்; fault, blemish, deficiency. "தொய்யறப் பெய்த . . . பவளச் செப்பும்" *(சீவக. 2474).*

**தொய்தவம்** *toydavam,* பெ. (n.) பரம்பை அல்லது வன்னி மரம்; Indian mesquit *(சா.அக.).*

**தொய்படு-தல்** *toy-paḍu-,* 20 செ.கு.வி. (v.i.) நனைதல்; to be moistened, wet. "நும்மியந் தொய்படாமல்" *(மலைபடு. 365).*

*[தொய் + படு-.]*

**தொய்யகம்[1]** *toy-y-agam,* பெ. (n.) தலைக் கோலத்தின் ஓர் உறுப்பு; a part of a head ornament. "தொய்யகந் தாழ்ந்த கதுப்பு" *(கலித். 28). (சிலப். 6: 107).*

*[தொய் → தொய்யகம்]*



**தொய்யகம்**[2] *toy-y-agam,* பெ. (n.) தலைப் பாளை; the first flower sheath or spathe of palmyra, coconut or areca nut (சா.அக.).

**தொய்யப்போடு-தல்** *toyya-p-pōḍu-,* 20 செ.குன்றாவி. (v.t.) பயனோக்கிச் சிறிது காலந் தாழ்த்தல் (உ.வ.); to delay purposively. வேலையைத் தொய்யப் போட்டான் (உ.வ.) (செ.அக.).

[தோங்கப் போடுதல் → தொங்கப் போடுதல் → தொய்யப் போடுதல். தோங்கப்போடுதல் = நிறுத்தி வைத்தல்]

**தொய்யல்**[1] *toyyal,* பெ. (n.) 1. சோர்கை; fainting, languishing, despondency. "அறியாத் தொய்யற் சிந்தையாம் யாவரை யாதென்று துதிப்பேம்" (கம்பரா. ஊர்தே. 18). 2. துன்பம் (சூடா.); affliction. 3. சேறு (பிங்.); mud. 4. உழவு; ploughing.

[தொள்ளல் → தொய்யல்]

**தொய்யல்**[2] *toyyal,* பெ. (n.) களிப்பு (திவா.); delight, pleasure, gladness, joy.

**தொய்யவாங்கு**[1]**-தல்** *toyya-vāṅgu-,* 5 செ.கு.வி. (v.i.) மெல்ல மூச்சு வருதல்; to be very slow in breathing.

[தொய்ய + வாங்கு]

**தொய்யவாங்கு**[2]**-தல்** *toyya-vāṅgu,* 5 செ.குன்றாவி. (v.t.) நிலை தாழ்த்துதல்; to reduce a person by draining away his property.

[தொய்ய + வாங்கு-.]

**தொய்யவிடு**[1]**-தல்** *toyya-viḍu-,* 18 செ.குன்றாவி. (v.t.) 1. கயிறு முதலானவற்றைத் தளர விடுதல்; to slacken, as a rope. 2. விலையேறுதற் பொருட்டு விற்பனைப் பொருளைக் கட்டி வைத்தல்; to hold back for a time with a view to raise the price, as merchandise. 3. நிறுத்தி வைத்தல்; to put off, delay.

[தொய்ய + விடு-.]

**தொய்யவிடு**[2]**-தல்** *toyya-viḍu-,* 20 செ.கு.வி. (v.i.) இணங்குதல்; to be yielding.

**தொய்யா** *toyyā,* பெ. (n.) தொய்யாக்கீரை பார்க்க; see *toyyā-k-kīrai.*

**தொய்யாக்கீரை** *toyyā-k-kīrai,* பெ. (n.) கீரை வகை; the smallest Indian amaranth, a weed of gardens and a wholesome potherb.

[தொய்யா + கீரை]

**தொய்யாவுலகம்** *toyyā-v-ulagam,* பெ. (n.) துறக்கம்; heaven, as the world where nobody need work. "தொய்யா வுலகத்து நுகர்ச்சி" (புறநா. 214, 9).

[தொய் + ஆ + உலகம்]

**தொய்யில்** *toyyil,* பெ. (n.) மகளிர் முலையிலும் தோளிலும் எழுதுங்கோலம்; decorative make-up, by sandal paste and fragrant paste on women's breast and shoulder. "'சுணங்கணி மென்முலைமேற் றொய்யிலெ ழுதுகோ" (கலித். 111:14).

[தொய் → தொய்யில்]

**தொய்வு**[1] *toyvu,* பெ. (n.) 1. இளைப்பு; fatigue. 2. ஈளை; asthma. 3. மூச்சு முட்டல்; hard breathing (சா. அக.).

[தொய்வு = தடை படல்]

**தொய்வு**[2] *toyvu,* பெ. (n.) 1. கட்டின் தளர்ச்சி; laxity, looseness, as of a rope. துணிபோடும் கொடிக் கயிறு தொய்வடைந்து விட்டது. 2. சோர்வு; faintness. தமிழின, தமிழ்மொழியின் விடுதலைக்காகப் பாவலரேறு தம் இறுதி மூச்சுவரைத் தொய்வின்றிப் பாடுபட்டார் (உ.வ.).

வேலையில் தொய்வு ஆகி விட்டான். 3. மூச்சுத் திணறல் (யாழ்அக.); difficulty of breathing.

**தொரட்டி**[1] *toratti*, பெ. (n.) இரும்பு முள்; iron crook.



**தொரட்டி**[2] *toratti*, பெ. (n.) தொரட்டி முட்செடி; Ceylon caper (சாஅக.).

*[துரட்டி → தொரட்டி]*

**தொரட்டி**[3] *toratti*, பெ. (n.) ஒரு மீன்; kind of fish.

**தொரட்டிமுள்ளி** *toratti-mulli*, பெ. (n.) வெள்ளைத் துரட்டி; raghota caper which is a curved thorny variety (சாஅக.).

*[தொரட்டி + முள்ளி]*

**தொரம்** *toram*, பெ. (n.) கட்டுமரத்தின் இரு விளிம்பாய் அமையுந்தடி (மரத்தடி) (நெல்லை. மீனவ.); wooden rod on both side of the raft.

**தொரா** *torā*, பெ. (n.) வீட்டின் பூந் தொட்டியில் வைத்துப் பயிராக்கக் கூடிய மூலிகை; it is the most important of pot herb in our houses and garden. இது மூலிகைக்கெல்லாம் அரசனாகக் கருதப்படும் (சாஅக.).

மறுவ. துரா, தரா.

**தொல்** *tol*, பெ.அ (adj.) 1. பழைய; old. 2. இயற்கையான; natural. தொல்லெழில் (கலித். 17, 5). 3. தொன்மையான; ancient. தொல்பழங் காலம்.

**தொல்கதை** *tol-kadai*, பெ. (n.) தொன்மம்; purāna. "சூதனோதியது மூவாறு தொல்கதை" (கந்தபு. அவையடக். 8). தொல்கதை பேசிக் காலத்தைக் கழிக்காதே. (இ.வ.).

*[தொல் + கதை]*

**தொல்காப்பியச்சூத்திரவிருத்தி** *tol-kāppiya-c-cūttirra-virutti*, பெ. (n.) தொல்காப்பியத்தின் முதல் நூற்பாவுக்குச் சிவஞான முனிவர் வரைந்த விரிவுரை (விருத்தியுரை); an elaborate commentary on the pāyiram and the first sutra of Tolkāppiyam by Civa-ñāṉa-muṉivar.

*[தொல்காப்பியம் + சூத்திரம் + விருத்தி]*

**தொல்காப்பியத்தேவர்** *tol-kāppiya-t-tēvar*, பெ. (n.) 13ஆம் நூற்றாண்டிலிருந்தவரும் திருப்பாதிரிப்புலியூர்க் கலம்பகம் இயற்றிய வருமான ஆசிரியர் (தமிழ்நா. 30); a poet, author of Tiruppātiri-puliyūr-k-kalampagam.

*[தொல்காப்பியம் + தேவர்]*

**தொல்காப்பியப்புலவர்** *tol-kāppiya-p-pulavar*, பெ. (n.) தொல்காப்பியனார் பார்க்க; see *tolkāppiyaṉār*. தொல்காப்பியப்புலவர் தோன்ற விரித்துரைத்தார் பல்காய னார்பகுத்துப் பண்ணினார் (வீரசோ. 150, உரை.).

**தொல்காப்பியம்** *tol-kāppiyam*, பெ. (n.) மிகப் பழையதும் தொல்காப்பியனார் இயற்றியது மான தமிழிலக்கண நூல்; the most ancient Tamil grammar extant, by Tolkāppiyaṉār.

*[தொல் + காப்பியம்]*

தொல்காப்பியம் இன்றுள்ள முதல் தொன்னூல் மட்டுமன்றி, பண்டைத் தமிழ் நாகரிகத்தையும் பண்பாட்டையும் தாங்கி நிற்கும் ஒருபெருந் தூணாகும். அஃதின்றேல், கடைக்கழகத்திற்கு முந்திய தமிழும் தமிழ் வரலாறும் அதனால் தமிழர் வரலாறும் அறவே இல்லாமற் போம்; தமிழன் உலகுள்ள வளவும் ஆரியனுக் கடிமையாகவே இருந்துழல்வான். குமரிநாட்டுத் தமிழன் தன் நுண்மாண் நுழைபுலத்தால் வகுத்த பொருளிலக்கணம், அதற்கு அச்சிறப்பைத் தந்துள்ளது (தவ.வ. 205).

**தொல்காப்பியர்** *tol-kāppiyar*, பெ. (n.) தொல்காப்பியனார் பார்க்க; see *tol-kāppiyaṉār*.

*[தொல் + காப்பியர்]*

**தொல்காப்பியர்காலம்** *tol-kāppiyar-kālam,* பெ (n.) தொல்காப்பியர் வாழ்ந்த காலம்; the age of Tolkappiyar.

*[தொல்காப்பியர் + காலம்]*

*காலம்* : தொல்காப்பிய அரங்கேற்றத்திற்குத் தலைமை தாங்கிய அதங்கோட்டாசானை "நான்மறை முற்றிய" என்றும், தொல்காப்பியரை "ஐந்திரம் நிறைந்த" என்றும், தொல்காப்பியச் சிறப்புப் பாயிரம் இயற்றிய பனம்பாரனார் அடைகொடுத்துக் குறிப்பதனால் ஆரிய மறையை நாலாக வகுத்த வேதவியாசர் காலத்திற்கும், ஐந்திரத்திற்கும் பிற்பட்ட 'அட்டாத்யாயீ'யை இயற்றிய பாணினி காலத்திற்கும், தொல்காப்பியர் இடைப்பட்டவர் ஆவர். பாரதக் காலத்தினராகிய வேதவியாசர் காலம் கி.மு. 1000, பாணினி காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டு.

தொல்காப்பியர் இடைக்கழகத்திற்கும் கடைக் கழகத்திற்கும் இடைப்பட்டவர். அகத்தியர்க்கு மிகப்பிற்பட்டவர். அவரை அகத்தியர் மாணவர் என்பது காலவழுவாகும். அகத்தியர் பாரதத்திற்கு முந்தியவர், தொல்காப்பியர் பிந்தியவர். இருவரும் இடைக்கழகத்திற்குப் பிற்பட்டவரே.

தொல்காப்பியர்க்குக் கழகத் தொடர் பின்மையினாலேயே அவர் நூல் அதங் கோட்டாசான் தலைமையில் அரங்கேற்றப் பெற்றது.

கடைக்கழகக்காலம் கி.மு. 5ஆம் நூற்றாண்டு முதல் கி.பி. 4ஆம் நூற்றாண்டு வரை என்பது, பண்டைத் தமிழ்நாட்டு வரலாற்றாராய்ச்சி யாளர் பேரா. இராமச்சந்திர தீட்சிதர் முடிபு.

"விண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு"

*(தொல். 1336)*

என்று தொல்காப்பியர் தம்காலத் தமிழகத்தை வண்ணித்திருப்பதால், எள்ளளவும் எதிர்ப்பின்றி மூவேந்தரே முடியுடையோராய் முத்தமிழ் நாட்டையும் தம் முன்னோர் போல் அறம் பிழையாது ஆட்சி செய்துவந்த நற்காலம் தொல்காப்பியரதென்பது அறியப் படும்.

மூவேந்தரும் தம்முள்ளும் தம் குறுநில மன்னரொடும் அடிக்கடி நிகழ்த்திய போரால் அமைதியின்மை தமிழகத்தில் நிலவி யிருந்தமையே, கடைக்கழக இலக்கியம் அளிக்கும் காட்சியாகும். ஆதலால் தொல்காப்பியர் அத்தகைய காலத்திற்கு மிக முற்பட்டவர் என்பது தெளிவு.

"ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய உயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல"

*(தொல். 510)*

என்ற இலக்கண வரம்பு திருக்குறளிலும் கடைக்கழகச் செய்யுளிலும் மீறப்படுவதால், தொல்காப்பியர் காலம் கடைக்கழகத்திற்கு மிக முற்பட்டதாதல் வேண்டும்.

இனி, மேற்குறித்த 1336ஆம் நூற்பாவில் தொல்காப்பியர் "நாற்பெயரெல்லையகம்" என்றொரு தொடர்மொழியால் தமிழகத்தைக் குறித்திருப்பது உற்று நோக்கத்தக்கது. நால் வேறுபெயர் கொண்ட எல்லைக்குட்பட்ட நிலப்பரப்பு என்பது அத்தொடரின் பொருள்.

நால்வேறு பெயர்கொண்ட எல்லையாவன: வடக்கில் வடுகநாடும் தெற்கில் குமரியாறும் கிழக்கில் கீழைக்கடலும், மேற்கில் குட மலையும்.

முதற்காலத்தில் குடமலைக்குக் கீழ்ப்பட்ட கொங்குநாடே திருச்சிக் கருவூரைத் தலை நகராகக் கொண்ட சேர நாடாயிருந்தது.

"சேரர் கொங்கு வைகாவூர் நன்னாடதில்"

என்று அருணகிரிநாதர் பாடுதல் காண்க.

பிற்காலத்தில் கொங்குநாடு ஒரு நிலையான போர்க்களமாய் மாறியதாலும், தொல்காப்பியர் காலத்திற்குப்பின் மேலைக் கடற்கரை சற்று விரிவடைந்ததினாலும், சேரன் தன் அகநாட்டுத் தலைநகரையும் மேலைத் துறைநகராகிய வஞ்சிக்கு மாற்றி அதற்குக் கருவூர் என்றும் பெயரிட நேர்ந்தது.

மேலைக்கடற்கரையின் விரிவு பற்றியே, பரசுராமர் தம் தவ நிலையத்திற்கு இடம் வேண்டி, ஓர் அம்பெய்து மேலைக்கடலைப் பின்வாங்கச் செய்தார் என்ற கதையும் எழுந்தது.

'நாற்பெயரெல்லை' என்றது நாற்றிசை எல்லைகளையேயன்றி நால்வேறு மண்டலங்களையன்று. மேலும், பிற்காலத்துருவான மண்டலங்கள் நான்கல்ல, ஐந்தாகும். அவை, பாண்டி மண்டலம், சோழமண்டலம், சேரமண்டலம் அல்லது மலை மண்டலம், தொண்டைமண்டலம், கொங்கு மண்டலம் என்பனவாகும்.

*சேரநாட்டார் கிழக்கிலிருந்து சென்றவர் என்பதற்கு, அவர் நாட்டமைப்பிற்கு நேர் முரணான கிழக்கு மேற்கு என்னும் சொற்களே போதிய சான்றாம்.*

*இதுகாறும் கூறியவற்றால், தொல்காப்பியர் காலம் கி.மு. 7ஆம் நூற்றாண்டென்று கொள்வதே மிகப்பொருத்தமாம் (ஒ.மொ. 82-84).*

**தொல்காப்பியன்** *tol-kāppiyaṉ*, பெ. (n.) தொல்காப்பியனார் பார்க்க; see *tolkāppiyaṉār*. 'சீர்த்தித் தொல்காப்பியன் முதற் பன்னிரு புலவரும்" (பு.வெ.சிறப்புப்பா.).

*[தொல்காப்பியம் → தொல்காப்பியன்]*

**தொல்காப்பியனார்** *tol-kāppiyaṉār*, பெ. (n.) ***காப்பியக் குடியிற் பிறந்தவரும் அகத்தியனார் மாணாக்கரும் தொல்காப்பியமியற்றிய வருமாகிய ஆசிரியர்*** ; author of Tolkāppiam, reputed to be a disciple of Agattyar, as born in kappiya-k-kuḍi. *இடைச் சங்கமிருந்தார் அகத்தியனாருந் தொல்காப்பியனாரும் (இறை. 1, பக். 5).*

*[தொல்காப்பியர் → தொல்காப்பியனார்]*

தொல்காப்பியர் மதிப்புரவு கருதித் தொல்காப்பியனார் என்றழைக்கப்படுவது முண்டு.

தொல்காப்பியரின் இயற்பெயர் திரண தூமாக்கினியென்று சொல்லப்படுவதால், தொல்காப்பியர் என்னும் பெயர் சிறப்புப் பெயரேயாகும். இப்பெயருக்குப் பழைமையான காவிய மரபைச் சார்ந்தவரென்று பொருள் கூறப்படுகின்றது. தொல்காப்பியர் கவியென்ற முனிவரின் மரபினராயின், காவியர் அல்லது காப்பியர் என்றழைக்கப்படுதல் இயல்பே. ஆனால், பல்காப்பியர் என்று இன்னொரு புலவர் பண்டைக் காலத்தில் தமிழ் நாட்டிலிருந்தார். தொல்காப்பியர் என்னும் பெயருக்குப் பழைமையான காவிய மரபினர் என்னும் பொருள் பொருந்துமாயினும், பல்காப்பியர் என்னும் பெயருக்குப் பல காவிய மரபினர் என்று பொருள்கூறல் பொருந்தாது. ஆகவே, காப்பியர் என்னும் பெயருக்கு வேறொரு பொருளிருத்தல் வேண்டும்.

*அகத்தியர் காலத்திற்கு முன், சிறிது காலம் தமிழ்நாட்டில் தமிழாராய்ச்சி குன்றி யிருந்தமை, சில சான்றுகளால் அறியக் கிடக்கின்றது. தொல்காப்பியப் பாயிரத்தில், 'முந்து' நூல் கண்டு என்று கூறியிருப்பதாலும், பிற சான்றுகளாலும், தொல்காப்பியர் அகத்தியர்க்குத் தெரியாத சில பழைய தமிழ் நூல்களைக் கண்டுபிடித்தாரென்றும், அதனால் தொல்காப்பியரெனப்பட்டார் என்றும் தெரிகின்றது. தொன்மையான காப்பியங்களையறிந்தவர் தொல்காப்பியர் என்றும், பல காப்பியங்களையறிந்தவர் பல்காப்பியர் என்றும் கூறப்பட்டனர். தொல்காப்பியர் இயற்றிய நூல் தொல்காப்பியம் என்றும், பல்காப்பியர் இயற்றிய நூல் பல்காப்பியம் என்றும் அதனதன் ஆசிரியராற் பெயர்பெற்றன (ஒ.மொ. 61).*

*தொல்காப்பியர் தம்மை ஆரியவேத அறிஞர் என்று காட்டிக் கொள்வதாலும், சில ஆரியக் கருத்துகளைப் புகுத்தியிருப்பதாலும், தமிழர் களவியலை ஆரியர் காந்தருவத்திற் கொப்பாகக் கூறியிருப்பதாலும் நான்மறை முற்றிய அதங்கோட்டாசான் தலைமையில் தம் நூலை அரங்கேற்றியதாலும் தொல்காப்பியத்திலுள்ள சில வழுக்களாலும் தொல்காப்பியர் ஆரியர் என்று துணியப்படும் (ஒ.மொ.62).*

**தொல்குணம்** *tolguṇam*, பெ. (n.) ***பழமையாகிய பண்பு***; characteristic of antiquity. *எங்கோமா னெவ்வகைய னேந்திய தொல்குணத்தா லேனோரு மவ்வகைய ராமிவற்றி னால் (வீரசோ. 157, உரை).*

*[தொல் + குணம்]*

**தொல்பதி** *tolpadi*, பெ. (n.) ***பழைமையான ஊர்***; ancient city.

*[தொல் + பதி]*

**தொல்பொருள்** *tol-poruḷ*, பெ. (n.) ***பண்டைய மக்களின் பண்பாட்டைக் காட்டும் வகையில் கிடைக்கும் கட்டடப் பகுதிகள், கருவிகள், கலங்கள் போன்றவையும் அவற்றின் சிதைவும்***; archaeological value.

*[தொல் + பொருள். தொல் – பழைய]*

**தொல்பொருள்துறை** *tol-poruḷ-turai*, பெ. (n.) தொல்லியல்துறை பார்க்க; see *tolliyal-turai*.

*[தொல்பொருள்துறை – தொல்லியல் துறை]*

**தொல்பொருளாராய்ச்சி** *tol-poruḷ-ārāiccy,* பெ. (n.) **பழம் பண்பாட்டினை வெளிப் படுத்தும் ஆய்வு;** archaeology.

*[தொல்பொருள் + ஆராய்ச்சி]*

**தொல்மரம்** *tolmaram,* பெ. (n.) **ஆலமரம்;** banyan tree *(சா.அக.).*

**தொல்லகம்** *tollgam,* பெ. (n.) **முன்னோார் வாழ்ந்த இடம்;** place of birth of one's ancestors. *ஆரியர்களின் தொல்லகம் தமிழ்நாடன்று; அவர்கள் வந்தேறிகளே.*

**தொல்லியல்** *tolliyal,* பெ. (n.) **தொல்லியல் துறை** *பார்க்க;* see *tolliyal-tuṟai.*

*[தொல்லியல்துறை – தொல்லியல்]*

**தொல்லியல்துறை** *tolliyal-tuṟai,* பெ. (n.) **பண்டைய மக்களின் பண்பாட்டுக் கூறுகளை ஆய்வு செய்யும் துறை;** archeological department.

*[தொல் + இயல் + துறை]*

**தொல்லுகம்** *tollugam,* பெ. (n.) **பாவட்டை;** pavetta *(செ.அக.).*

**தொல்லெழில்** *tol-l-eḻil,* பெ. (n.) **இயற்கையழகு;** natural beauty. "தொல்லெழி றொலைபிவள்" *(கலித். 17:5).*

*[தொல் + எழில்]*

**தொல்லை**[1] *tollai,* பெ. (n.) **பழைமை;** antiquity, ancientness. "தொல்லைக்க ணின்றார் தொடர்பு" *(குறள், 806).*

தெ. தொல்லி

*[தொல் → தொல்லை (முதா. 274)]*

**தொல்லை**[2] *tollai,* பெ. (n.) *1.* **துன்பம்;** trouble, perplexity, difficulty. *மனத்தொல்லை யொழிவது என்று? 2.* **செயல், வினை, வேலை** *(அக.நி.);* work. *அவனுக்குப் பலதொல்லைகளிருக்கின்றன.*

ம. தொல்ல

*[துல் → துன் → துன்பு. துல் → தொல் → தொல்லை (முதா. 285)]*

**தொல்லையார்** *tollaiyār,* பெ. (n.) **தேவர்;** celestials, as the ancients. "தொல்லையா ரமுதுண்ண" *(தேவா. 35).*

*[தொல்லை → தொல்லையார்]*

**தொல்லைவையகம்** *tollai-vaiyagam,* பெ. (n.) **துறக்கம்;** heaven, as the ancient world. "தொல்லைவையகத் தேறுதொண்டர்கள்" *(தேவா. 66, 3).*

*[தொல்லை + வையகம்]*

**தொல்வரவு** *tol-varavu,* பெ. (n.) **பழைய குடிவரவு;** birth in an ancient family. "தொல்வரவுந் தோலுங் கெடுக்கும்" *(குறள், 1043).*

*[தொல் + வரவு]*

**தொல்வரைவு** *tol-varaivu,* பெ. (n.) **அடிப்பட்ட குடியொழுக்கம்;** ancient custom, rule of conduct. "செய்யாரே தொல் வரைவிற் றீர்ந்ததொழில்" *(ஆசாரக். 57).*

*[தொல் + வரைவு]*

**தொல்வினை** *tol-viṉai,* பெ. (n.) **பழவினை;** karma. "தொல்வினைப் பயன்றுய்ப்ப" *(கலித். 118:3).*

*[தொல் + வினை]*

**தொலகை** *tolagai,* பெ. (n.) **செம்பாதியாய்ப் பிளந்து எடுக்கப்பட்ட மூங்கிற் கழி** (குமரி. மீனவ.); bamboo rod, attained by making into two halves.

*மறுவ. பிளாச்சி*

**தொலி**[1]**-த்தல்** *toli-,* 4 செ.குன்றாவி. (v.t.) *1.* **உரித்தல்;** to stip off, as rind, bark; to flay. "தொலி எடு". *2.* **உமி அல்லது தோடு போக உரித்தல்** (இ.வ.); to husk, hull, pound. *3.* **புடைத்தல்;** to beat severely. *'அவனைத் தொலித்துவிட்டார்கள்'.*

**தொலி**[2] *toli,* பெ. (n.) *1.* **தோல்;** skin, rind. "வெங்காயத் தொலி". *2.* **உமி;** husk. நெல்லுத் தொலி

ம. தொலி

**தொலி**[3] *toli,* பெ. (n.) **மேற்றோல்;** the natural outer coating of an animal separated from the body. ஆட்டுத் தொலியை உரித்துக் கொடு *(இ.வ.) (சா.அக.).*

**தொலியக்கரம்பை** *toliya-k-karambai,* பெ. (n.) **நத்தைச் சூரி** (மலை.); bristly buttonweed.

*[தொலி + ஆ + கரம்பை]*

**தொலியல்** *toliyal,* பெ. (n.) உமி போக்கிய அரிசி (வின்); husked rice.

மறுவ. கொழியல் அரிசி

*[தொலி + அல். தொலி = தோல். தோல் அல்லாத அரிசி)]*

**தொலியாக்கலப்பை** *toliyā-k-kalappai,* பெ. (n.) தொலியக்கரம்பை பார்க்க; see *toliya-k-karambai.*

*[தொலி + ஆ + கலப்பை]*

**தொலுக்குநண்டு** *tolukku-naṇḍu,* பெ. (n.) ஒருவகைக் கடல் சிறு நண்டு (குமரி. மீனவ.); a small size sea crab.

**தொலும்பு** *tolumbu,* பெ. (n.) மாட்டின் மயிர் நிறத்தின் வகையைக் குறிக்க வழங்கும் தரகர் பேச்சுமொழி; a particular colour of cows (in broker's language).

**தொலை¹-தல்** *tolai-,* 4 செ.கு.வி. (v.i.) 1. அழிதல்; to become extinct, perish, die. "தொலையாக் கற்ப" (பதிற்றுப். 43, 31). 2. முடிதல்; to be exhausted, terminated, expended, expiated, liquidated. 3. வழி முதலியன கழிதல்; to end, as a way or distance; to expire, as time. "தொலையாத கானங் கடந்த வந்நாள்" (அஷ்டப். திருவரங்கக். 16). 4. முற்றுதல்; to be over, finished. "எடுத்த வினை எப்போது தொலையும்"? 5. சோர்தல்; to be weary. "நாத்தொலைவில்லா யாயினும்" (மணிமே. 24:99). 6. தோற்றல்; to be defeated, outrivalled; to fail in comparison. "ஒருவனை யொருவ னடுதலுந் தொலைதலும்" (புறநா.76). 7. வருந்துதல்; to suffer. "சுடுதொழி லரக்கராற் றொலைந்து" (கம்பரா. திருவவ.). 8. காணாமற் போதல்; to be lost. 'பொத்தகந் தொலைந்தது'. 9. நீங்குதல்; to leave; to depart for good. "என்னைவிட்டுத் தொலைந்தான்".

*[துல் → தொல் → தொலை]*

**தொலை²-த்தல்** *tolai-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. அழித்தல்; to destroy, kill, exterminate, as in battle. "விலங்கலன்ன போர்முதற் றொலைஇ" (மலைபடு. 461). 2. கழித்தல்; to spend, pass, as time. "துதித்து முழுநாட் டொலைப்போருளத்தான்" (சிவப். பிரபந். வெங்கையுலா. 285). 3. நீக்குதல்; to remove, wipe off. 4. முற்றுப் பெறச் செய்தல் (வின்.); to bring to an end, settle. 5. முடித்தல்; to finish. "தங்கடன் முறை தொலைத்து" (உபதேசகா. சிவவிரத. 311). 6. சிதைத்தல்; to spoil. 7. கெட்டுபோக்குதல்; to lose. அரும்பாடுபட்டுச் சேர்த்த நற்பெயரை இச்சிறு செயலால் தொலைத்தான். 8. தோற்பித்தல்; to discomfit surpass, rout. "ஏறுமலை தொலைத்தார்க்கு" (திருக்கோ. 113).

*[துல் → தொல் → தொலை]*

**தொலை³** *tolai,* பெ. (n.) 1. அழிவு; ruin. "தொலைமக்க டுன்பந் தீர்ப்பார்" (நாலடி, 205). 'உன்னைத் தொலைச்சுடுவேன்' 2. தொலைவு; distance, great distances. "அந்நிலை நெடுந் தொலைபோதி" (உபதேசகா. சிவநாம. 146). 3. அக்கரைச் சீமை; foreign country beyond the seas, as distant. "என் மகள் தொலைக்குப் போயிருக்கிறாள்" (செட். நா).

*[துல் → தொல் → தொலை]*

**தொலை⁴** *tolai,* பெ. (n.) ஒப்பு; resemblance, equality.

**தொலைக்காட்சி** *tolai-k-kāṭci,* பெ. (n.) ஒரு நிகழ்ச்சியையோ காட்சியையோ ஒளிப்பதிவு செய்து மின்காந்த அலைகளாக மாற்றி ஒளிபரப்பி அதைப்படமாகக் காணும் முறை; television.

*[தொலை + காட்சி]*

**தொலைக்காட்சிநிலையம்** *tolai-k-kāṭci-niliyam,* பெ. (n.) ஒரு நிகழ்ச்சியையோ காட்சியையோ ஒளிப்பதிவு செய்து மின்காந்த அலைகளாக மாற்றி ஒளிபரப்பும் நிலையம்; television station.

*[தொலைக்காட்சி + நிலையம்]*

**தொலைக்காட்சிப்பெட்டி** *tolai-k-kāṭci-p-peṭṭi,* பெ. (n.) தொலைக்காட்சி நிலையத்திலிருந்து ஒளிபரப்பப்படுவதை உள்வாங்கிக் காட்சிகளாக மாற்றிக்காட்டும் திரை முதலியவை உள்ள பெட்டி போன்ற கருவி; television set.



[தொலைக்காட்சி + பெட்டி]

**தொலைகடல்** *tolai-kaḍal,* பெ. (n.) சாக்கடல்; dead sea.

[தொலை + கடல்]

**தொலைச்சு-தல்** *tolaiccu-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. கொல்லுதல்; to kill, destroy. "முளவுமாத் தொலைச்சிய பைந்நிணப் பிளவை" (மலைபடு. 176). 2. முடித்தல்; to exhaust. "வெங்கட் டொலைச்சியு மமையார்" (புறநா. 29). 3. செலுத்துதல்; to pay, discharge as a debt. "நாளாதந்து நறவு நொடை தொலைச்சி" (பெரும்பாண். 141).

[தொலை → தொலைச்சு]

**தொலைத்தொடர்பு** *tolai-t-toḍarbu,* பெ. (n.) தொலைபேசி தொலைவரி முதலியன மூலம் ஓரிடத்திலிருந்து செய்திகளை அனுப்புதலும் பெறுதலுமான செயற்பாடு; telecommunication.

[தொலை + தொடர்பு]

**தொலைதாரி** *tolai-tāri,* பெ. (n.) பல்லிப்பூடு; lizard plant (சா.அக.).

**தொலைதூரக்கல்வி** *tolai-tūra-k-kalvi,* பெ. (n.) கல்வி நிறுவனங்களில் சேர்ந்து பயிலாமலேயே கல்விப்பட்டம் பெறும் பல்கலைக்கழக அமைப்பு; distance education; correspondence education.

**தொலைதூரக்கல்விமையம்** *tolai-tūra-k-kalvi-maiyam,* பெ. (n.) அஞ்சல் வழியில் கல்வி கற்பிக்கும் மையம்; distance education directorate.

மறுவ. தொலைதூரக்கல்வி இயக்ககம், தொலைதூரக்கல்வி நிறுவனம்

[தொலைதூரக்கல்வி + மையம்]

**தொலைதூரத்தொடர்பகம்** *tolai-tūra-t-toḍarbagam,* பெ. (n.) தொலைபேசி மூலம் தொலைவிலுள்ள இடங்களை இணைக்கும் நிலையம்; trunk exchange.

[தொலைதூரம் + தொடர்பகம்]

**தொலைதூரம்** *tolai-tūram,* பெ. (n.) மிக்க தொலைவு (உ.வ.); great distance. "தொலைதூரப் பயணமோ?" (செ.அக.)

[தொலை + தூரம்]

Skt. dūra → த. தூரம்

**தொலைந்துபோ-தல்** *tolaindu-pō-,* 8 செ.கு.வி. (v.i.) 1. இறத்தல்; to die. 2. காணாமற் போதல்; to loss. பள்ளிக்குச் சென்றவன் வீடு திரும்பாமல் எங்கோ தொலைந்து போய்விட்டான்.

[தொலைந்து + போ-]

**தொலைநகல்** *tolai-nagal,* பெ. (n.) தொலைப்பதிவு பார்க்க; see *tolai-p-pativu.*

[தொலை + நகல்]

**தொலைநோக்கி** *tolai-nōkki,* பெ. (n.) தொலைவில் உள்ள பொருள்களைத் தெளிவாகப் பார்ப்பதற்கேற்ற வகையில் ஆடிகள் பொருந்திய குழல் வடிவக் கருவி; binoculars, telescope.

[தொலை + நோக்கி]



**தொலைநோக்கு** *tolai-nōkku,* பெ. (n.) எதிர்காலத்தில் ஏற்படவேண்டிய நலனைக் கருத்தில் கொண்ட கணிப்பு; forsightedness. பொருளாதாரத் திட்டங்களைத் தொலை நோக்குடன் தீட்டுவதே அறிவுடைமை.

*[தொலை + நோக்கு]*

**தொலைப்பதிவு** *tolai-p-padivu,* பெ. (n.) தொலை எழுதி மூலம் அனுப்பப்படும் தந்தி முறைச் செய்தி; telex.

*[தொலை + பதிவு]*

**தொலைபு** *tolaipu,* பெ. (n.) அழிகை; perishing, destruction. "படைதொலைபறியா மைந்துமலி பெரும்புகழ்" (பெரும்பாண். 398).

*[தொலை → தொலைபு]*

**தொலைபேசி** *tolai-pēši,* பெ. (n.) பேச்சொலியை மின்னலையாகவும் மின்னலைகளைப் பேச்சொலியாகவும் மாற்றி கம்பிமூலம் அனுப்பித் தொலைவில் உள்ளவர்கள் தொடர்புகொண்டு பேசிக் கொள்வதற்குதவும் கருவி; telephone.

*[தொலை + பேசி]*

**தொலைபேசிஇணைப்பகம்** *tolai-pēši-iṇaippagam,* பெ. (n.) தொலைபேசித் தொடர்பகம் பார்க்க; see *tolai-pēši-t-toḍarbagam.*

*[தொலைபேசி + இணைப்பகம்]*

**தொலைபேசிஇணைப்பு** *tolai-pēši-iṇaippu,* பெ. (n.) தொலைபேசிக்கருவிக்கும் தொலைபேசித் தொடர்பகத்திற்கும் உண்டாக்கிக் கொள்ளும் இணைப்பு; telephone connection.

*[தொலைபேசி + இணைப்பு]*

**தொலைபேசிக்கட்டணம்** *tolai-pēši-k-kaṭṭaṇam,* பெ. (n.) தொலைபேசியைப் பயன்படுத்துவோரிடமிருந்து அரசு தண்டும் கட்டணம்; charges for telephone usages.

*[தொலைபேசி + கட்டணம்]*

**தொலைபேசிக்கையேடு** *tolai-pēši-k-kai-y-ēḍu,* பெ. (n.) தொலைபேசி பயன் படுத்தாளர்களின் பெயர் முகவரியை அகரநிரலில் பதிந்திருக்கும் கையேடு; telephone directory.

*[தொலைபேசி + கையேடு]*

**தொலைபேசித்துறை** *tolai-pēši-t-tuṟai,* பெ. (n.) தொலைபேசியைப் பேணும் துறை; telephone department.

*[தொலைபேசி + துறை]*

**தொலைபேசித்தொடர்பகம்** *tolai-pēši-t-toḍarbagam,* பெ. (n.) தொலைபேசிகளுக் கிடையே தேவைப்படுகிற இணைப்பை ஏற்படுத்தித் தருகிற நிலையம்; telephone exchange.

*[தொலைபேசி + தொடர்பகம்]*

**தொலைபேசித்தொடர்பு** *tolai-pēši-t-toḍarbu,* பெ. (n.) 1. தொலைபேசிஇணைப்பு பார்க்க; see *tolai-pēši-iṇaippu.* 2. தொலைபேசி வழியேத் தொடர்பு கொள்கை; communication through telephone.

*[தொலைபேசி + தொடர்பு]*

**தொலைபேசிப்பட்டியல்** *tolai-pēši-p-paṭṭiyal,* பெ. (n.) தொலைபேசியைப் பயன் படுத்தியதற்கான கட்டணத்தை நுகர்வோருக்கு அளிக்கும் பட்டியல்; telephone bill.

*[தொலைபேசி + பட்டியல்]*

**தொலையாநோய்** *tolaiyā-nōy,* பெ. (n.) 1. தீராத நோய்; an incurrable disease. 2. நாட்பட்ட நோய்; long continued disease. 3. எளிதில் மருத்துவத்துக்கு வயப்படாத நோய்; chronic disease not amenable to treatment (சா. அக.).

*[தொலை + ஆ + நோய். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தொலையெழுதி** *tolai-y-eḻuti,* பெ. (n.) ஒரு முனையில் தட்டச்சு செய்து அனுப்பப்படும் செய்தியை மறுமுனையில் தானாகத் தட்டச்சுப் பதிவு செய்யும் மின் கருவி; teleprinter.

*[தொலை + எழுதி]*

**தொலைவரி** *tolai-vari,* பெ. (n.) மின்கம்பி வழியேயனுப்புஞ் செய்தி; telegram.

*[தொலை + வரி]*

**தொலைவிலுணர்தல்** *tolaivilunardal,* தொ.பெ. (vbl.n.) ஐம்புலத் தொடர்பின்றித் தொலைவிலிருப்பவர் உள்ளத்தை மன ஆற்றலால் இயக்குந்திறம்; telepathy.

*[தொலைவில் + உணர்தல்]*

**தொலைவு** *tolaivu,* பெ. (n.) 1. முடிவு; completion. "தொலைவில்லாச் சத்தமுஞ் சோதிடமும்" *(நாலடி, 52).* 2. அழிவு; end, extinction, destruction. "தொலைவிலார் புரமூன்றும்" *(தேவா. 44, 8).* 3. தோல்வி; defeat, failure. "தொலைவில் வெள்வேல் விடலையொடு" *(அகநா. 7).* 4. சோர்வு; fatigue, weariness. "நாத்தொலைவில்லா யாயினும்" *(மணிமே. 24: 99).* 5. குறைகை; dwindling, decrease. "தொலை விடத்துத் தொல்படைக் கல்லா லரிது" *(குறள், 262).* 6. சேய்மை நிலை (தூரம்); distance.

*[தொலை - தொலைவு]*

**தொலைவெட்டு**[1] *tolai-vettu,* பெ. (n.) தொலைவு (இ.வ.); great distance.

*[தொலைவு + எட்டு]*

**தொலைவெட்டு**[2] *tolai-vettu,* பெ. (n.) ஆழமான கடல் (முகவை. மீனவ.); deep sea.

*[தொலை + வெட்டு]*

**தொழவகா** *tolavagā,* பெ. (n.) பவளமல்லிகை; coral jasmine.

**தொழி**[1] *toli,* பெ. (n.) பழைய போக்கில் அணியம் செய்யப்படும் உப்பள முறையில் இருக்கும் தொட்டானின் மறுபெயர்; another name for tottān in old method of salt preparation *(மீனவ.).*

**தொழி**[2]**-த்தல்** *toli-,* 11 செ.கு.வி. (v.i.) 1. சினத்தல்; to be angry, enraged. "சிங்கம்போற் றொழித் தார்த்து" *(சீவக. 2306).* 2. ஒலித்தல்; to sound, tinkle. "தொழித்த ... கலனுஞ் சிந்தி" *(சீவக. 2969).*

**தொழி**[3]**-தல்** *toli-,* 3 செ.கு.வி. (v.i.) சிதறுதல்; to be split, scattered. "தொழிந்துமட்டொழுக" *(சீவக. 2673).*

**தொழிமரம்** *tolimaram,* பெ. (n.) சேற்றுக் காலாக உழுதநிலத்தைச் சமஞ் செய்யப் பயன்படுத்தும் பரம்புப் பலகை (நாஞ்.); board used to smoothened the ploughed surface of a wet land for cērru-k-kāl cultivation.

*[தொளி = சேறு; தொளி → தொழி + மரம்]*



**தொழில்** *tolil,* பெ. (n.) 1. செயல்; act, action, deed, work. "பிறிது தொழி லறியா வாகலின்" (புறநா. 14). 2. பணி; office, calling, profession. 3. ஏவல்; order, command. "தொன்றுமொழிந்து தொழில்கேட்ப" *(மதுரைக். 72).* 4. திறமை; workmanship. அவனிடம் தொழிலுண்டு. 5. உழவு, தொழில், வரைவு, வணிகம், விச்சை, சிற்பம் என்ற அறுவகைப் பட்ட செயல் (திவா.); occupations pertaining to karumapumi, six in numbers viz., ulavu, tolil, varaivu, vanigam, viccai, sirpam. 6. அருளிப்பாட்டுச் செயல்; three fold functions of god. "தோற்றுவித்தளித்துப் பின்னுந் துடைத்தரு டொழில்கள் மூன்றும்" *(சி.சி.1, 33).* 7. வினைச் சொல்; verb. "பெயருந் தொழிலும் பிரிந்தொருங் கிசைப்ப" *(தொல். எழுத்து. 132).* 8. வேலை; occupation, work. 9. தந்திரம்; treachery, intrigue, cunning. நீ என்னிடத்தில் தொழில் பண்ணாதே. 10. பயன்படுத்தும் முறை; method of using. "அவற்றது தொழிலுந் தோன்றவே" *(சீவக. 1217).* 11. களவு (அகநி.); theft. 12. பெருமை (அக.நி.); greatness (செ.அக.).

ம. தொழில்

*[துல் → துன் → தொன் → தொனில் → தொழில்]*

உலகில் முதன்முதல் தோன்றிய விளைப்பு அல்லது உண்டாக்கத் தொழில், நிலத்தைத் தோண்டி அல்லது கொத்தி அல்லது உழுது வித்திய பயிர்த் தொழிலாதலின், தோண்டுதலைக் குறிக்கும் தொள் என்னும்

மூலத்தினின்று திரிந்த தொழில் என்னும் பெயர்ச்சொல், முதற்கண் உழவுத் தொழிலையும் பின்னர்ப் பிற தொழிற் பொதுவையும் குறித்தது.

*E. till, to prepare and use soil for crops, tiller = plough man. tillage = ploughing (வேக. 289)]*

**தொழில்காரர்** *tolil-kārar,* பெ. (n.) வினைத் திறமுடையார் (தஞ்சை.மீனவ.); one who is skilled in fishing.

*[தொழில் + காரர்]*

**தொழில்செய்வோர்** *tolil-šeyvōr,* பெ. (n.) கம்மியர் (பிங்.); artisans.

*[தொழில் + செய்வோர்]*

**தொழில்துறை** *tolil-turai,* பெ. (n.) 1. தொழில் தொடங்குதல், மேம்படுத்துதல் முதலியவற்றைப் பேணும் அரசுத்துறை; department of industry of Government. தொழில்துறையின் ஒத்திசைவுக்குப் பிறகே தொழில் தொடங்க வியலும். 2. தொழில் தொடர்புடையது; industiral sector. கடந்த ஐந்தாண்டுகளாக தமிழ்நாடு தொழில்துறையில் முதலிடத்திலுள்ளது.

*[தொழில் + துறை]*

**தொழில்நிறுவனம்** *tolil-niruvanam,* பெ. (n.) பேரளவில் முதலீடு செய்து தொழில்நடத்தும் நிறுவனம்; industrial concern. பன்னாட்டுத் தொழில் நிறுவனங்களின் கையோங்கியதால் உள்நாட்டுத் தொழில்கள் நசிந்தன.

*[தொழில் + நிறுவனம்]*

**தொழில்நுட்பக்கல்லூரி** *tolil-nutpa-k-kallūri,* பெ. (n.) பொறிகள் தொடர்புடைய தொழில்முறைக் கல்வியைப் பாடமாகக் கொண்டு தொழிற்பயிற்சி அளிக்கும் கல்லூரி; educational institution providing training in traders connected with machines and tools; polytechnic.

*[தொழில்நுட்பம் + கல்லூரி]*

**தொழில்நுட்பக்கல்வி** *tolil-nutpa-k-kalvi,* பெ. (n.) ஆக்கத்தில் நேரடியாகப் பயன்படுத்தக் கூடிய தொழில்பற்றிய அறிவையும் வழிமுறைகளையும் கற்பிக்கும் கல்வி முறை; technical education.

*[தொழில்நுட்பம் + கல்வி]*

**தொழில்நுட்பக்கலைச்சொல்** *tolil-nutpa-k-kalai-c-col,* பெ. (n.) அறிவியல்துறை போன்றவற்றில் வழங்கும் அயன் மொழிச் சொற்களைத் தாய்மொழியில் வடிவமைத்தல்; technical terms.

*[தொழில்நுட்பம் + கலைச்சொல்]*

**தொழில்நுட்பம்** *tolil-nutpam,* பெ. (n.) ஆக்கத்தில் பயன்படுத்தக்கூடிய தொழில் பற்றிய அறிவும் வழிமுறைகளும்; technology. மூலவளங்கள் இருந்தும் சில நாடுகள் தொழில் நுட்பத்தை அயல்நாடுகளிலிருந்து பெற வேண்டிய நிலையில் உள்ளன.

*[தொழில் + நுட்பம்]*

**தொழில்நுட்பவணி** *tolil-nutpa-v-ani,* பெ. (n.) தெரிந்து கொண்டு வேறுபடமொழியாது அரிதாக நோக்கியுணருந் தன்மையுடைய அணிகளிரண்டனுளொன்று; a kind of rhetoric.

*[தொழில்நுட்பம் + அணி]*

மற்றது குறிப்பு நுட்பவணி. இதனைத் தொழில் நுணுக்கமென்பார் வீரசோழிய மியற்றினார்.

எ-டு.

பாடல் பயிலும் பணிமொழி
தன்பணைத்தோள்
கூட லவாவாற் குறிப்புணர்த்தும் - ஆடவற்கு
மென்றீந் தொடையாழின் மெல்லவிர
தைவந்தாள்
இன்றீங் குறிஞ்சி யிசை.

குறிஞ்சிக்குக் காலம் இடையாம மாகலால், இடையாமத்திற் கூட்டம் நேர்ந்ததென கூறியது தொழில்நுட்பவணி.

**தொழில்நுணுக்கம்** *tolil-nunukkam,* பெ. (n.) தொழில்நுட்பம் பார்க்க; see *tolil-nutpam.*

*[தொழில் + நுணுக்கம்]*

**தொழில்மயமாக்கு-தல்** *tolil-mayam-ākku,* 5 செ.குன்றாவி. (v.t.) தொழில் வளர்ச்சி பெறச் செய்தல்; industrialize.

*[தொழில்மயம் + ஆக்கு-.]*

**தொழில்மாறுதல்** *tol̤il-māṟudal,* பெ. (n.) 1. வேலை மாறுகை; changing one's profession or work. 2. வேலையினின்று நீக்கப்படுகை; dismissal.

[தொழில் + மாறுதல்]

**தொழில்மானிபம்** *tol̤il-māṉibam,* பெ. (n.) தொழில்மானியம் பார்க்க; see *tol̤il-māṉiyam* (செ. அக.).

[தொழில் + மானிபம்]

**தொழில்மானியம்** *tol̤il-māṉiyam,* பெ. (n.) ஊழியக்காரருக்கு விடப்பட்ட வரியில்லா நிலம்; service inam, rent - free land assigned to village servants in lieu of their services.

[தொழில் + மானியம்]

**தொழில்முடக்கம்** *tol̤il-muḍakkam,* பெ. (n.) தொழில் செய்ய மறுத்திருக்கை; strike (செ.அக.).

[தொழில் + முடக்கம்]

**தொழில்முனைவோர்** *tol̤il-muṉaivōr,* பெ. (n.) கைமுதல் போட்டு ஒரு தொழிலைத் தொடங்கத் திட்டமிடுபவர்; entrepreneurship.

[தொழில் + முனைவோர்]

**தொழில்வரி** *tol̤il-vari,* பெ. (n.) நகராட்சி போன்ற உள்ளாட்சி அமைப்புகள் தங்கள் எல்லைக்குள் தொழில் செய்வோரிடம் தண்டும் வரி; profession tax.

[தொழில் + வரி]

**தொழிலாகுபெயர்** *tol̤ilāgu-peyar,* பெ. (n.) வற்றலென்பது போலத் தொழிலின் பெயர் அதனையுடைய பொருட்கு ஆவது (நன். 290); metonymy in which action is put for the agent (செ. அக.).

[தொழில் + ஆகு + பெயர்]

**தொழிலாளன்** *tol̤ilāḷaṉ,* பெ. (n.) தொழிலாளி 1, 2 பார்க்க; see *tol̤ilāḷi* (செ.அக.).

[தொழில் + ஆளன்]

**தொழிலாளி**[1] *tol̤ilāḷi,* பெ. (n.) 1. வேலைக்காரன்; labourer. 2. வினைத் திறனுள்ளவன்; a capable worker. 3. குடிமகன் அல்லது ஊர்ப்பிள்ளை; barber.

[தொழில் + ஆளி]

**தொழிலாளி**[2] *tol̤ilāḷi,* பெ. (n.) 1. பொன்னாக்கம் செய்பவன்; an alchemist. 2. கருவாளி; a magician (சா.அக.).

[தொழில் + ஆளி]

**தொழிலி** *tol̤ili,* பெ. (n.) தொழிலை உடையவள்; career women.

[தொழில் → தொழிலி]

**தொழிலுவமம்** *tol̤il-uvamam,* பெ. (n.) தொழிலைப் பொதுத்தன்மையாகக் கொண்ட உவமையணிவகை (தண்டி. 29); simile where the point of comparison is action (செ.அக.).

எ-டு.

"அரிமா வன்ன வணங்குடைத் துப்பிற்
றிருமா வளவன்"

"களிற்றிரை தெரீஇப் பார்வ லொதுக்கின்
ஒளித்தியங்கு மரபின் வயப்புலி போல"

[தொழில் + உவமம்]

**தொழிலுவமை** *tol̤il-uvamai,* பெ. (n.) தொழிலுவமம் பார்க்க; see *tol̤il-uvamam* (செ.அக.).

[தொழில் + உவமை]

**தொழிலெடு**[1]**-த்தல்** *tol̤il-eḍu-,* 4 செ.குவி. (v.i.) 1. பணியேற்றல்; to obtain office, enter upon an occupation. 2. குறும்பு காட்டத் தொடங்குதல் (இ.வ.); to begin doing mischeif. பணியிற் சேர்ந்து ஆறு திங்கள் ஆவதற்குள் அவன் தொழிலெடுத்து விட்டான்.

[தொழில் + எடு-.]

**தொழிலெடு**[2]**-த்தல்** *tol̤il-eḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) பணியினின்று விலக்குதல் (J.); to dismiss one from office.

[தொழில் + எடு-.]

**தொழிலோர்** *tol̤ilōr,* பெ. (n.) தொழிலாளர்; artisans, labourers.

[தொழில் → தொழிலோர்]

**தொழிற்கல்வி** *tolir-kalvi,* பெ. (n.) தொழிலைப் பயிற்றுவிக்கும் கல்வி; professional education.

*[தொழில் + கல்வி]*

**தொழிற்காய்ச்சல்** *tolirkayccal,* பெ. (n.) தொழிலில் ஏற்பட்டுள்ள ஒருவரின் வளர்ச்சியைக் கண்டு அதே தொழில் செய்யும் மற்றொருவருக்கு ஏற்படும் பொறாமை; professional jealousy. "இவருக்கு எந்த மருத்துவமும் பயனளிக்காது. ஏனென்றால் இந்தத் தொழிற்காய்ச்சலுக்கு மருந்தே இல்லை".

*[தொழில் + காய்ச்சல்]*

**தொழிற்குறிப்பு** *tolir-kurippu,* பெ. (n.) வினைக்குறிப்பு பார்க்க; see *vinai-k-kurippu.* "பெயரே யேனைத் தொழிற்குறிப் பிரண்டினுள்ளும்" *(சேதுபு. திருநாட்டுப். 109).*

*[தொழில் + குறிப்பு]*

**தொழிற்குறைவிசேடம்** *tolir-kurai-višēdam,* பெ. (n.) தொழிற்குறைவிசேடவணி பார்க்க; see *tolir-kurai-višeda-v-ani.* "அது குணக்குறை விசேடமும், தொழிற்குறை விசேடமும் சாதிக்குறை விசேடமும் பொருட்குறை விசேடமும் உறுப்புக்குறை விசேடமும் என விகற்பிக்கப்படும்" *(வீரசோ. 171, உரை).*

*[தொழில் + குறிப்பு]*

**தொழிற்குறைவிசேடவணி** *tolir-kurai-višēda-v-ani,* பெ. (n.) அணியிலக்கண வகை; a kind of rhetoric.

ஏங்கா முகில்பொழியா நாளும் புனறேங்கும்
பூங்கா விரிநாடன் போர்மதமா-நீங்கா
வளைபட்ட தாளணிகண் மாறெதிர்ந்த தெவ்வர்
தளைப்பட்ட தாட்டா மரை

இச்செய்யுளில் சோழனுடைய யானைகள், போரணி பூண்ட மாத்திரத்தாலே, பகைவர் தோல்வியுற்று விலங்கிடப்பட்டனரென்பது கருத்து.

போரணி பூண்டு போய்ப் பகைவருடன் எதிர்த்துப் போர் செய்தாலாகிய தொழில்களில் போரணி அணிதல் மாத்திரமே கூறிக் குறைவுபாடு விளக்கி செயலில் உயர்வு தோன்றச் சொன்னமையால் இது தொழிற் குறை விசேடவணியாயிற்று. 'ஏங்கா முகில் பொழியா நாளும் புனல் தேங்கும்' என்றதிலும் இவ்வணியமைந்திருத்தல் காண்க. ஏங்கா - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

**தொழிற்கை** *tolirkai,* பெ. (n.) கையால் மெய்ப்பாடு காட்டுகை *(சிலப். 3, 18, உரை);* hand-pose *(செ.அக.).*

*[தொழில் + கை]*

**தொழிற்சாலை** *tolir-šālai,* பெ. (n.) வினைக் களம்; workshop, place of business, office *(செ.அக.).*

*[தொழில் + சாலை]*

**தொழிற்பகை** *tolir-pagai,* பெ. (n.) தொழிற் போட்டியால் உண்டான பகை; professional revenge.

*[தொழில் + பகை]*

**தொழிற்பட்டிகை** *tolir-pattigai,* பெ. (n.) மகளிர் அரையிலணியும் ஒப்பனையோடு கூடிய பட்டிகை என்னும் அணி; ornament which woman wear in their waist.

*[தொழில் + பட்டிகை. தொழில் = வேலைப்பாடு, ஒப்பனை]*

**தொழிற்படு-தல்** *tolirpadu-,* 20 செ.கு.வி. (v.i.) *1.* செயற்படுதல்; to be formed, constructed, produced; to be operated upon. *2.* வேலையிற் புகுதல்; to engage in an office, enter upon a work.

*[தொழில் + படு-.]*

**தொழிற்படுத்துஞ்சொல்** *tolir-paduttuñcol,* பெ. (n.) ஏவல் வினை; verb denoting, command. "சொற்பொரு ளெல்லாந் தொழிற் படுத்துஞ் சொல்லானே உணர்தற்பாலன" *(சி.போ.பா. அவையடக். மீமாஞ். சுவாமிநா.)* *(செ.அக.).*

*[தொழில் + படுத்தும் + சொல்]*

**தொழிற்பண்பு** *tolir-panbu,* பெ. (n.) செய்கை குறிக்கும் பண்புச் சொல்; action, considered as a quality nadattal dist. fr. kuna-p-panbu. "பண்புகள் குணப்பண்புந் தொழிற் பண்பும் ஆகிய இரண்டனுள் அடங்குமாயினும்" *(நன். 442, விருத்.)*

*[தொழில் + பண்பு]*

**தொழிற்பயில்வு** *tolir-payilvu,* பெ. (n.) வினை மேன்மேலும் நிகழ்கை (திவா.); repeated action *(செ.அக.).*

*[தொழில் + பயில்வு]*

**தொழிற்பாடு** *toḻiṟ-pāḍu,* பெ. (n.) வேலை (யாழ்.அக.); labour.

*[தொழில் → தொழிற்பாடு]*

**தொழிற்புரட்சி** *toḻiṟ-puraṭci,* பெ. (n.) புதிய கருவிகளின் கண்டுபிடிப்பால் தொழில் துறையில் ஏற்பட்ட பெரும் மாற்றம்; industrial revolution.

*[தொழில் + புரட்சி]*

**தொழிற்புலையர்** *toḻiṟ-pulaiyar,* பெ. (n.) கீழ்ச்சாதியர் (கன்மசண்டாளர்); one who is considered an outcaste because of his base actions. "கொலைத் தொழிலினையுடையவராகிய மாக்கள் தொழிற்புலையராகுவர்" *(குறள், 329, மணக்.).*

*[தொழில் + புலையர்]*

**தொழிற்பெயர்** *toḻiṟ-peyar,* பெ. (n.) 1. வினைப் பெயர்; verbal noun. "ஞகாரை தொழிற்பெயர் முன்னர் அல்லது கிளப்பினும் வேற்றுமைக் கண்ணும்" *(தொல்.எழுத்து.296).* 2. வினையா லணையும் பெயர்; personal noun derived from a verbal root. "தொழிற்பெயராயி னேகாரம் வருதலும்" *(தொல். சொல். 141).*

*[தொழில் + பெயர்]*

**தொழிற்பேட்டை** *toḻiṟ-pēṭṭai,* பெ. (n.) குடியிருப்புப் பகுதியிலிருந்து விலகிப் பேரளவில் தொழிற்சாலைகள் அமைப்பதற்காக அரசு ஏற்படுத்தித் தந்திருக்கும் இடம்; cluster of industries in a place set aside by the government; industrial estate.

*[தொழில் + பேட்டை]*

**தொழிற்றன்மை** *toḻiṟṟaṉmai,* பெ. (n.) தொழிலிலுள்ள பலவிதமான தன்மைகளை உள்ளவாறே அலங்கரித்துக் கூறுவதாகிய அணி வகை; a kind of rhetoric.

*[தொழில் + தன்மை]*

சூழ்ந்து முரன்றணவி வாசந் துதைந்தாடித்
தாழ்ந்து மதுநுகர்ந்து தாதருந்தும் -
வீழ்ந்தபெரும்
பாசத்தார் நீங்காப் பரஞ்சுடரின்
பைங்கொன்றை
வாசத்தார் நீங்காத வண்டு.

இஃது இலக்கியத்திற் சிறுபான்மை; இலக்கணத்துள்ளே பயின்று வருவதெனக் கொள்க.

**தொழிற்று** *toḻiṟṟu,* பெ. (n.) தொழிலை உடையது; that which has job.

*[தொழில் + து → தொழில்து → தொழிற்று (குறிப்பு வினைமுற்று)]*

**தொழிற்றுறை** *toḻiṟṟuṟai,* பெ. (n.) 1. வணிகம் (யாழ்.அக.); trade, business. 2. தொழிற்சாலை பார்க்க; see *toḻiṟ-cālai.*

*[தொழில் + துறை]*

**தொழின்முதல்** *toḻiṉ-mudal,* பெ. (n.) ஏவுதற் குரியோன்; directing agent. "ஏவற் கருத்தாவைத் தொழின்முத லென்றும்" *(நன். 29, சங்கர.).*

*[தொழில் + முதல்]*

**தொழின்மொழி** *toḻiṉ-moḻi,* பெ. (n.) வினைச்சொல் (வின்.); verb.

*[தொழில் + மொழி]*

**தொழீஇ** *toḻii,* பெ. (n.) 1. தொழில் செய்பவள் *(கலித். 103,40);* working woman. 2. பணிப்பெண்; maid servant, female slave. "தொழீஇயுட னுண்ணார்" *(சிறுபஞ். 38).*

*[தொழில் + இ]*

**தொழு**[1]**-தல்** *toḻu-,* 1 செ.குன்றாவி. (v.t.) வணங்குதல்; to worship, adore, pay homage to. "தொழுதகை யுள்ளும் படையொடுங்கும்" *(குறள், 828).*

க. துளில்; ம. துழுக

*[துல் → துள் → தொள் → தொழு]*

**தொழு**[2] *toḻu,* பெ. (n.) 1. மாட்டுக்கொட்டில்; cattle stall, manger. "ஏறுதொழூஉப் புகுத்தனர்" *(கலித். 101).* 2. பட்டிமாடுகளை அடைக்குமிடம்; pound. 3. சிறு குற்றவாளிகளுக்குத் தண்டனையாகக் கால்களை மாட்டி வைக்கும் குட்டையென்னும் மரச்சட்டம்; stocks. 4. சிறைக்கூடம்;. prison. "வயிற்றிற் றொழுவைப் பிரித்து" *(திவ். பெரியாழ். 5,2,3).* 5. இல்வாழ்க்கை; married life. "தொழுவிற் றோன்றிய தோமறு கேவலக்கிழவன்" *(சீவக. 856).* 6. குட்ட நோய் வகை; a kind of leprosy. "துக்கத் தொழுநோ யெழுபவே" *(நாலடி, 123).* 7. தொழு பஃறி

(இரேவதி விண்மீன்) (பிங்.); rēvati naṭsatiram. *8.* கட் குடுவையிருக்கும் ஏணி; stand for toddy jars. "தொழுவிற் குடக்கணீ கொண்டுவா" (பு.வெ 1,4). *9.* உழலைமரம் (சூடா.); turnpike. *10.* காட்டு விலங்குகளை அடைக்குங் கூடு; cage for wild animals. "தொழுவினிற் புலியனான்" (கம்பரா. மூலபல. 181). *11.* நீர்நிலை (இலக்அக.); tank, pond.

[துல் → துள் → தொள் → தொழு (வே.க. 258)]

**தொழுக்கட்டை** *tolu-k-kaṭṭai,* பெ. (n.) தொழு², 3 பார்க்க; see *tolu.*

[தொழு + கட்டை]

சிறுகுற்றவாளிகளுக்குத் தண்டனையாகக் கால்களை மாட்டி வைக்கும் குட்டை என்னும் மரச்சட்டம் (வே.க. 284).

**தொழுக்கண்ணி**[1] *tolu-k-kaṇṇi,* பெ. (n.) மருந்துப்பு; a quintessence salt useful in medicine (சா.அக.).

**தொழுக்கண்ணி**[2] *tolu-k-kaṇṇi,* பெ. (n.) தென்னிந்திய மலைகளின் மேல் முளைக்கும் மருந்துப்பூடு; a medical drug found on hills in South India (சா. அக.).

**தொழுக்கண்ணிப்பால்** *tolu-k-kaṇṇi-p-pāl,* பெ. (n.) ஒரே தாயின் முலைப்பால்; breast milk of a particular woman or of one and the same woman (சா.அக.).

[தொழுகண்ணி + பால்]

**தொழுக்கல்லீர்** *tolu-k-kallīr,* பெ. (n.) தொழமாட்டாதவர்; person who do not worship.

**தொழுக்கன்** *tolu-k-kaṉ,* பெ. (n.) அடிமை; slave. "தொழுக்க னென்னை ஆள்வீர்" (அருட்பா. ii, திருமுரு. கொடிவிண். 7).

[தொழு → தொழுக்கன்]

**தொழுக்கொட்டான்** *tolu-k-koṭṭāṉ,* பெ. (n.) நான்கிலைப் பூவந்தி; four leaved soapnut (சா.அக.).

**தொழுகள்ளன்** *tolu-kaḷḷaṉ,* பெ. (n.) பாசாங்கு செய்பவன்; fawning hypocrite.

[தொழு + கள்ளன்]

**தொழுகு** *tolugu,* பெ. (n.) மாட்டுத்தொழு (பிங்.); cattle-stall, manger.

[தொழு → தொழுகு (வே.க. 255)]

**தொழுகுலத்தோர்** *tolu-kulattōr,* பெ. (n.) பார்ப்பனர்; brahmins.

[தொழு + குலத்தோர். தொழு + குலம் = தொழுக்குலம் → தொழுகுலம். தொழு = மாட்டுக் கொட்டில். ஆரியர் ஆநிரை மேய்த்தலைத் தொழிலாகக் கொண்டமையின் ஆரியப்பார்ப்பனர் தொழுக் குலத்தோர் எனப்பட்டனர். அவரிடையே வழங்கும் கோத்திரம் (வமிசம்) என்னும் சொல் மாட்டுக் கொட்டில் என்றும், துஹித்ரி (மகள்) என்னும் சொல் பால்கறப்பவர் என்றும் பொருள்படுவது, ஆரியர் இந்தியாவிற்கு வந்தபோது முல்லை நாகரிகத்தினரே என்பதைக் காட்டும் (ஒ.மொ. 324)]

**தொழுகுலம்** *tolu-kulam,* பெ. (n.) *1.* பார்ப்பனர்; the brahmin castes. "தொழுகுலச் சிறுவன்" (திருவிளை. யானை. 32). *2.* குல தெய்வம்; family deity. "துலங்கு கின்றே னடியே னுடையாயென் றொழுகுலமே" (திருவாச. 6, 28). *3.* குலமாகத் தொழத்தக்கவர்; persons who make their family worthy of being worshipped. "எந்தொழுகுலந் தாங்களே" (திவ். திருவாய். 3, 7, 18).

[தொழும் + குலம்]

**தொழுகுலர்** *tolu-kular,* பெ. (n.) தொழு குலத்தோர் (பிங்.) பார்க்க; see *tolu-kulattōr.*

[தொழுகுலம் → தொழுகுலர்]

**தொழுகை** *tolugai,* பெ. (n.) *1.* வணங்குகை; worshipping, adoration. "தொழுகைய ரழுகையர் துவள்கைய ரொருபால்" (திருவாச. 20, 4). *2.* தெய்வ விண்ணப்பம்; prayer.

[தொழு → தொழுகை]

**தொழுகையாசிரியர்** *tolugai-y-āsiriyar,* பெ. (n.) கோயிற்பூசை செய்வோர் (அருச்சகர்); archagars.

[தொழுகை + ஆசிரியர்]

**தொழுத்தை**[1] *toluttai,* பெ. (n.) *1.* அடிமைப் பெண்; slave-woman. "தொழுத்தை யோந் தனிமையும்" (திவ். திருவாய். 10, 3, 4).

2. கற்பில்லாதவள் (சூடா.); immoral woman. 3. பணிப்பெண்; maidservant. "தொழுத்தையாற் கூறப்படும்" (நாலடி, 326).

[தொழு → தொழுத்தை]

**தொழுத்தை²** *toluttai*, பெ. (n.) சொறிகளுள் மிகப் பெரியது; kind of skin disease which has itching sensation (மீனவ.).

**தொழுதகு-தல்** *tolutagu-*, 3 செ.கு.வி. (v.i.) 1. நன்கு மதித்தல்; to esteem, admire. "தொண்டையுங் கனியுமுத்துந் தொழுதக வணிந்து" (சீவக. 2076). 2. விரும்புதல்; to love, desire. "களிற்றொடாடித் தொழுதகக் கழிப்பர்" (சீவக. 2807).

[தொழு + தகு-.]

**தொழுதகுதெய்வம்** *tolutagu-teyvam*, பெ. (n.) அருந்ததி; Arundhati as worthy of worship. "தொழுதகு தெய்வ மன்னாள்" (சீவக. 1912).

[தொழுதகு + தெய்வம்]

**தொழுதகை¹** *toluta-kai*, பெ. (n.) இருகை குவித்துக் கும்பிடுகை; worshipping, by folded hands. "தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார் அழுதகண் ணீரும் அனைத்து" (குறள், 828)

[தொழு → தொழுத + கை]

**தொழுதகை²** *toluta-kai*, பெ. (n.) தொழத்தக்க நிலையில் என்று பொருள்படும் சொல்; to esteem, admire. "கன்னெழில் வளருழியு ளெல்லா யாண்டுந் தொழுதகை விளங்கும் யாண்டே" (தெ. க. தொ. 3:1. பக். 7)

[தொழு + தகை]

இச்சொல் முதல் இராசராசன் மெய்க் கீர்த்தியில் இடம் பெற்றுள்ளது.

**தொழுதகையீர்** *toludagaīr*, பெ.எ (adv.) வணக்கத்திற்குரியீர்; his worshipped, a respective term.

[தொழுதகை → தொழுதகையீர்]

**தொழுதணை** *tolutaṇai*, பெ. (n.) தழுதணை பார்க்க; see *talutaṇai* (சா. அக.).

**தொழுதி** *toluti*, பெ. (n.) 1. கூட்டம்; multitude, crowd, herd. "இரும்பிடித் தொழுதியொடு" (புறநா. 44). 2. பறவைக் கூட்டம் (திவா.); flock of birds. 3. பறவையொலி (சூடா.); chirping of birds. 4. திரட்சி; denseness, fullness, as of a birds feather. "தொழுதிச் சிறகிற் றுயராற்றுவன" (சீவக. 1157).

[தொழு → தொழுதி (வேக. 255)]

**தொழுதுகொண்டிரு-த்தல்** *tolutu-koṇḍiru-*, 3 செ.கு.வி. (v.i.) கலந்துபோதல்; to get inextricably, mixed up. "கஞ்சியுஞ் சோறுந் தொழுது கொண்டிருக்கிறது".

[தொழுது + கொண்டு + இரு-.]

**தொழுந்தகை** *tolundagai*, பெ. (n.) தொழத்தக்கவ-ன்-ள்; a great personage, as worthing of reverence.

[தொழும் + தகை]

**தொழுநோய்** *tolu-nōy*, பெ. (n.) குட்ட நோய் வகை; a kind of leprosy. "அங்கமெலாங் குறைந்தழுகு தொழுநோயராய்" (தேவா. 1231, 10).

[தொழு + நோய்]

**தொழுநோயன்** *tolu-nōyaṉ*, பெ. (n.) குட்ட நோயன்; a leprosy.

[தொழு + நோயன்]

**தொழுப்பிறப்பு** *tolu-p-piṟappu*, பெ. (n.) தன் தொழுவிலேயே பிறந்து வளர்ந்தமாடு (நாஞ்.); that which is born and bred on one's own farm, as an ox.

[தொழு + பிறப்பு]

**தொழுப்பு** *toluppu*, பெ. (n.) உழுதொழில் வளைப்பு (வின்.); winding furrows in ploughing (செ.அக.).

[தொடுப்பு → தொழுப்பு]

**தொழும்பன்** *tolumbaṉ*, பெ. (n.) 1. அடியவன்; slave. "உனக்கே தொழும்பன்" (தாயு. கருணாகர. 8). 2. இழிஞன்; base person. "ஈசனைப் பயில்கிலார் சிலர் பாவித் தொழும்பரே" (தேவா. 429, 2).

[தொழு → தொழும்பு → தொழும்பன்]

**தொழும்பன்விரால்** *tolumbaṉ-virāl*, பெ. (n.) ஆற்றுமீன் வகையுள் ஒன்று; kind of river fish.

[தொழும்பன் + விரால்]

**தொழும்பாள்** *tolumbāḷ,* பெ. (n.) தொழும்பன் பார்க்க; see *tolumbaṉ.* "தொழும்பாளாக வோலை கொடுக்குதுமே" (வெங்கைக்கோ. 332).

*[தொழு → தொழும்பாள்]*

**தொழும்பாளன்** *tolumbāḷaṉ,* பெ. (n.) தொழும்பன் பார்க்க; see *tolumbaṉ.* "தொழும்பாள ரெய்ப்பினில் வைப்பனே" (திருவாச. 5, 98).

*[தொழும்பு + ஆளன்]*

**தொழும்பி** *tolumbi,* பெ. (n.) அடிமைப்பெண் (நன். 304. மயிலை); slave-woman.

*[தொழு → தொழும்பி]*

**தொழும்பு** *tolumbu,* பெ. (n.) 1. அடிமை (திவா.); slavery, servitude. 2. அடிமைத் தொழில்; servile work, drudgery. 3. அடிமையாள்; slave. "பலவாறே தொழும்பாகு மங்கு" (சி.போ. 1, 3). 4. கடவுளின் அருளிப்பாடு; devotion to the service of God. "தொழும்பாயார்க் களித்தால்" (திவ். திருவாய். 3, 1, 9).

*[தொழு → தொழும்பு]*

**தொழுமகளிர்** *tolu-magaḷir,* பெ. (n.) குற்றேவல் மகளிர்; maidservants. "சிறு தொழுமகளி ரஞ்சனம் பெய்யும்" (ஐங்குறு. 16).

*[தொழு + மகளிர்]*

**தொழுமரம்** *tolu-maram,* பெ. (n.) தொழுக் கட்டை (உ.வ.); stocks.

*[தொழு + மரம்]*

**தொழுமறை** *tolu-maṟai,* பெ. (n.) உடலெங்குஞ் சிறுவட்டங்கள் விழுவதாகிய மாட்டுக் குற்றவகை (மாட்டுவா. 19); a defect of cattle in which there are small round patches all over the body.

*[தொழு + மறை]*

**தொழுமாடு**[1] *tolu-māḍu,* பெ. (n.) 1. சல்லிக்கட்டு மாடு; bull trained for the baiting sport. 2. சல்லிக்கட்டு (E.T. iii, 89); sport of bull-baiting (செ.அக.).

*[தொழு + மாடு]*



**தொழுமாடு**[2] *tolu-māḍu,* பெ. (n.) பட்டி மாடு; straying cattle.

*[தொழு + மாடு]*

**தொழுவம்** *toluvam,* பெ. (n.) மாட்டுக் கொட்டில்; cattle stall, manger. "பல்லான் தொழுவத் துறுமணிக் குரலே" (குறுந். 190). தொழுவம் புகுந்த மாடு சாணியிடாமற் போமா (பழ.).

மறுவ. பட்டி, கட்டுத்தறி

ம. தொலுட்டு; தெ. தொர்ரு பட்டு; பட. தோ

*[துள் → தொள் → தொழு → தொழுவு → தொழுவம்]*

**தொழுவர்** *toluvar,* பெ. (n.) 1. தொழில் செய்வார்; servants. "நீர்த்தெவு நிரைத் தொழுவர்" (மதுரைக். 89). 2. உழவர்; agriculturists, plough men. "நெல்லரி தொழுவர்" (புறநா. 209).

*[தொழுவன் → தொழுவர் (வே.க. 285)]*

**தொழுவறை** *tolu-v-aṟai,* பெ. (n.) மாட்டுக் கொட்டில்; cattle-shed. "தொழுவறை வவ்விக் கன்றுடைப் பெருநிரை மன்றுநிறை தருஉம்" (அகநா. 253).

*[தொழு + அறை]*

**தொழுவன்** *toluvaṉ,* பெ. (n.) 1. பயிரிடுவோன்; cultivator, husbandman. 2. தொழிலாளி; a workman, artisan. தொழுவானெல்லாம் உழுவான் தலைக்கடையில் (பழ.).

மறுவ. உழவன், குடியானவன்

*[தொழு → தொழுவன்]*

**தொழுவாடு** *tolu-vādu,* பெ. (n.) *1.* வழக்கம்; habit. இதே உனக்குத் தொழுவாடாப் போச்சு. *2.* இயற்கை; nature.

*[தொழு + வாடு]*

**தொழுவில்மாட்டு-தல்** *toluvil-māṭṭu-,* 8 செ.குன்றாவி. (v.t.) தொழுவிலடி-த்தல் பார்க்க; see *toluvil-adi-.*

*[தொழு + இல் + மாட்டு-.]*

**தொழுவிலடி-த்தல்** *toluvil-adi-,* 4 செ.குன்றாவி. (v.t.) கட்டையிலடித்தல் (உ.வ.); to confine in the stocks, as a criminal.

*[தொழுவில் + அடி-.]*

தொழுக்கட்டை பார்க்க

**தொழுவிளிப்பூசல்** *tolu-vili-p-pūsal,* பெ. (n.) வழிபாட்டு முழக்கம்; loud shouts of praise. "துறவோரிறந்த தொழுவிளிப் பூசலும்" *(மணிமே. 6:75).*

*[தொழு + விளி + பூசல்]*

**தொழுவு**[1] *toluvu,* பெ. (n.) வணங்குகை; worshipping, adoration. 'கால்வாய்த் தொழுவு" *(ஆசாரக். 63).*

*[தொழு → தொழுவு]*

**தொழுவு**[2] *toluvu,* பெ. (n.) மாட்டுக்கொட்டில்; cattle stall.

*[தொழு → தொழுவு]*

**தொழுவுரம்** *tolu-v-uram,* பெ. (n.) ஆடுமாடு முதலியவற்றின் சாணம்; manure.

*[தொழு + உரம்]*

**தொழுவை** *toluvai,* பெ. (n.) மடு; deep place in a river or a channel.

*[தொழு → தொழுவை]*

**தொழுனை**[1] *tolunai,* பெ. (n.) குட்டநோய் வகை; a kind of leprosy. "ஊனுகு தொழுனையின்" *(ஞானா. 19, 6).*

**தொழுனை**[2] *tolunai,* பெ. (n.) யமுனை; the river Jumuna. "வார்புனற் றொழுனை வார்மணலகன் றுறை" *(அகநா. 59).*

**தொள்(ளு)**[1]**-தல்** *tol-,* 8 செ.குன்றாவி. (v.t.) துளைத்தல்; to perforate, bore with an instrument. "செந்தீத் தொட்ட கருந்துளைக் குழலின்" *(பெரும்பாண். 129).*

*[துல் → துள் → தொள்]*

**தொள்(ளு)**[2]**-தல்** *tol-,* 8 செ.கு.வி. (v.i) நெகிழ்தல் (வின்.); to become weak, infirm.

*[துல் → துள் → தொள்]*

**தொள்கல்** *tolkal,* பெ. (n.) துளைக்கை (பிங்.); perforating.

*[துல் → துள் → தொள்கு → தொள்கல்]*

**தொள்கு** *tolgu,* பெ. (n.) துளையுள்ள வலை; net for trapping. "தொள்கின்றலை யெய்திய மானென" *(கம்பரா. சடாயுவு. 130).* *2.* தோண்டப்பட்ட சேறு; slush, mire. "யானை தொள் கொடுங் கிடந்த தென்ன" *(கம்பரா. வாலிவ. 73)* (இலக்.அக.). *3.* பள்ளம் (வின்.); excavation, pit.

*[துள் → தொள் → தொள்கு (வே.க. 283)]*

**தொள்ளம்** *tollam,* பெ. (n.) *1.* தெப்பம் (திவா.); float, raft. "தேர்களூர் தொள்ள மாதிகளா" (விநாயகபு. 37, 33). *2.* சேறு; mud, mire. "தொள்ளத்தின் வளைபாய்ந் தாழுங் கடலென" (இரகு. இலவணன். 15).

*[துள் → தொள் → தொள்ளம்]*

**தொள்ளல்** *tollal,* பெ. (n.) துளை (உ.வ.); hole (செ.அக.).

*[துள் → தொள் → தொள்ளல்]*

**தொள்ளற்காது** *tollar-kādu,* பெ. (n.) தொள்ளைக்காது பார்க்க; see *tollai-k-kādu* (சா.அக.).

*[தொள்ளைக்காது → தொள்ளற்காது]*

**தொள்ளற்சரீரம்** *tollar-carīram,* பெ. (n.) *1.* பருத்த உடம்பு; flabby body. *2.* மெலிந்த உடம்பு; weak body (சா.அக.).

*[தொள்ளல் + சரீரம்]*

Skt. sarīra → த. சரீரம்

**தொள்ளாடி** *tollādi,* பெ. (n.) *1.* நலிந்தோன்; weak, infirm person or thing. *2.* நெகிழ்ந்த உடல்வாகு கொண்டவன்-ள்-து; flaccid person or beast. *3.* நலிவுறுகை; growing lax, as the muscles.

*[தொள் → தொள்ளாடி]*

**தொள்ளாடு-தல்** *tollādu-,* 6 செ.கு.வி. (v.i.) 1. வலி தளர்தல் (வின்.); to become weak. 2. தள்ளாடுதல்; to move with falterring steps, as an aged person.

*[துள் → தொள் → தொள்ளாடு]*

**தொள்ளாயிரம்** *tollāyiram,* பெ. (n.) ஒன்பது நூறு; nine hundred. "தொள்ளாயிரங் கடும்போர்க்கணை துரந்தான்" (கம்பரா. நிகும்பலை. 124).

ம. தொள்ளாயிரம்

*[தொள் + ஆயிரம்]*

தொண்ணூறு பார்க்க

**தொள்ளாளி**[1] *tollāli,* பெ. (n.) தொழிலாளி பார்க்க; see *tolilāli.*

*[தொழிலாளி → தொள்ளாளி]*

**தொள்ளாளி**[2] *tollāli,* பெ. (n.) மந்திரவாதி; witch man. மீன்பாடு குறைந்தால் இவனிடம் தாயத்து வாங்கிச் சடங்கு செய்வர் (மீனவ.).

**தொள்ளி** *tolli,* பெ. (n.) சேறு; mud, soft mire. "மைகுழைத்தன்ன தொள்ளியஞ் செறுவில்" (கல்லா. 36, 1).

*[தொள் → தொள்ளி]*

**தொள்ளியடி-த்தல்** *tolli-y-adi-,* 4 செ.குன்றாவி. (v.t.) 1. தொளியடி-த்தல் பார்க்க; see *toli-y-adi-.* 2. கெடுத்தல்; to damage, as one's reputation (செ.அக.).

*[தொள்ளி + அடி]*

**தொள்ளை** *tollai,* பெ. (n.) 1. துளை; hole. "தொள்ளைப் புலாற்பை" (திருப்பு. 289). 2. குழி; pit. "தொள்ளை மன்றத் தாங்கண்" (புறநா. 333). 3. துளையுடைப்பொருள் (யாழ். அக.); anything tubular. 4. மரக்கலம் (திவா.); sailing vessel. 5. குற்றம்; fault, defect. "தொள்ளை யுணர்வின் ளவர்கள் சொல்லின்" (சீவக. 496). 6. மரக்கால் (தைலவ. தைல. 135, 17); standard measure of capacity. 7. அறியாமை; ignorance. "தொள்ளை பூத்தலர்ந்த நெஞ்சிற் றக்கன்" (கூர்மபு. தக்கன்வே. 6).

ம. தொள்ள; க., பட. தொள்ளெ

*[துல் → தொள் → தொள்ளை]*

**தொள்ளைக்காதர்** *tollai-k-kādar,* பெ. (n.) ஊர்தோறும் திரிந்து பித்தளை ஏனம் விற்குமொரு குலத்தார் (இ.வ.); a caste of itinerant vendors of brasware from Tirunelvely and Palghat, as having pierced ear-lobes (செ.அக.).

*[தொள்ளைக்காது → தொள்ளைக்காதர்]*

**தொள்ளைக்காது** *tollai-k-kādu,* பெ. (n.) 1. பெருந்துளையுள்ள காது; ear with a big perforation in its lobe, opp. to ili-k-kādu. 2. அணி நீங்கிய தொளைக்காது; perforated ear left unadorned and empty.

*[தொள்ளை + காது]*

**தொள்ளைக்காதுச்செட்டி** *tollai-k-kādu-c-cetti,* பெ. (n.) கற்சட்டி வணிகர்; trader in stone-vessels.

*[தொள்ளை + காது + செட்டி]*

**தொளத்தி** *tolatti,* பெ. (n.) தளத்தி; loose-fitting.

*[தொள் → தொள → தொளத்தி]*

**தொளதொள-த்தல்** *tolatola-,* 4 செ.கு.வி. (v.i.) 1. துளையில் இறுக்கமாயில்லாமை, தளர்தல்; to be loose-fitting, lax. 2. இளகிப் போதல்; to be soft, as from over-ripeness, from moisture; to be thin, as pap. 3. உளறுதல்; to babble, rattle away. "அவன் தொளதொளக் கிறான்". 4. மன உறுதியற்று இருத்தல்; to waver, to be undecided.

*[தொள் → தொளதொள]*

தொள தொளத்தலாவது துளையின்கண் ஒன்று இன்னொன்றுள் இறுகப் பொருந்தாதவாறு இருத்தல்.

**தொளதொளப்பு** *tolatolappu,* பெ. (n.) நெகிழ்வு; slakness, looseness.

*[தொளதொள → தொளதொளப்பு]*

**தொளதொளெனல்** *tolatolenal,* பெ. (n.) 1. நெகிழ்வுக் குறிப்பு; expr. of being slack, loose. 2. உளறுதற் குறிப்பு; rattling talk. "தொளதொள வென்று பேசுகிறான்".

*[தொளதொள + எனல்]*

**தொளாபாரம்** *toḷāpāram,* பெ. (n.) பழைய செயல் (இ.வ.); ancient thing or affair.

**தொளாமணி** *toḷāmaṇi,* பெ. (n.) துளைக்காத முழு மணி; a pearl which is not pored.

*[துள் → தொள் + ஆ + மணி. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தொளி**[1] *toḷi,* பெ. (n.) தொள்ளி பார்க்க; see *toḷḷi.* உழாநுண்டொளி (சிலப். 10. 120).

*[தொள் → தொள்ளி → தொளி]*

**தொளிகலக்கு-தல்** *toḷi-kalakku-,* 8 செ.கு.வி. (v.i.) தொளியடி-த்தல் பார்க்க; see *toḷi-aḍi-.* (செ.அக.).

*[தொளி + கலக்கு-.]*

**தொளிப்பருவம்** *toḷi-p-paruvam,* பெ. (n.) தொளிவிரைப்பு பார்க்க; see *toḷi-viraippu* (செ.அக.).

*[தொளி + பருவம்]*

**தொளியடி-த்தல்** *toḷi-y-aḍi-,* 4 செ.கு.வி. & செ.குன்றாவி (v.i. & v.t.) வயலிற் சேறு கலக்குதல்; to plough a flooded field.

மறுவ. சேடையோட்டுதல்

*[சேறு → சேடு]*

**தொளிவிச்சின்னம்** *toḷivi-c-cinnam,* பெ. (n.) குரற்கம்மல் பார்க்க; see *kuraṟ-kammal* (சா.அக.).

**தொளிவிரைப்பு** *toḷi-viraippu,* பெ. (n.) வயலைச் சேறாக்கி விதைக்கை; sowing in the slush of a field, opp. to puluti-viraippu (செ.அக.).

*[தொளி[1] + (விதைப்பு →) விரைப்பு]*

**தொளுக்கு**[1]**-தல்** *toḷukku-,* 8 செ.குன்றாவி. (v.t.) 1. தொடுத்தல்; to tie loosely. 2. தளரக் கட்டுதல்; to wear or attach loosely, as clothes.

**தொளுக்கு**[2] *toḷukku,* பெ. (n.) ஊழற் சதை பிடித்தவன் (இ.வ.); flabby person.

**தொளுக்குக்கொண்டை** *toḷukku-k-koṇḍai,* பெ. (n.) அவிழ்ந்த மயிர்முடி (வின்.); loosened coil of a woman's hair.

*[தொளுக்கு + கொண்டை]*

**தொளுத்தை** *toḷuttai,* மீன் வகை; a kind of fish.

**தொளை-த்தல்** *toḷai-,* 4. செ.குன்றாவி. (v.t.) 1. துளையிடுதல்; to perforate, bore. "மணித் தோளையுந் தொளைத்தான்" (கம்பரா. நிகும்பலை. 123). 2. தொந்தரவு செய்தல் (இ.வ.); to tease. 3. செய்தி தெரிதற் பொருட்டு ஆழம் பார்த்தல் (இ.வ.); to probe.

*[துளை → தொளை]*

**தொளை**[2] *toḷai,* பெ. (n.) 1. மூங்கில்; bamboo. 2. ஓட்டை; opening, hole. "தொளை கொடாழ் தடக்கை" (கம்பரா. சித்திர. 29). 3. கண்; eye. 4. உட்டுளை; a cavity in a sore or an ulcers. 5. பெண்; woman.

*[துளை → தொளை (வே.க. 284)]*

**தொளைக்காது** *toḷai-k-kāḍu,* பெ. (n.) தொள்ளைக்காது பார்க்க; see *toḷḷai-k-kāḍu* (சா.அக.).

*[துளை → தொளை + காது]*

**தொற்பதம்** *toṟ-padam,* பெ. (n.) தொம்பதம் பார்க்க; see *tompadam.* "தொற்பத மேவித் துரிசற்று" (திருமந். 1421).

**தொற்றம்பு** *toṟṟampu,* பெ. (n.) ஊடுருவிச் செல்லாமல் உடம்பின் மேல்படும் அம்பு; arrow which causes only a surface wound. 'அது தன்னிலும் தொற்றம்பன்றிக்கே மறுபாடுருவத் தைப்பதுமாயிருந்தது' (திவ். இயற். திருவிருத். 75, வியா. பக். 385).

*[தொற்று + அம்பு]*

**தொற்றி** *toṟṟi,* பெ. (n.) 1. ஏறுகை; to climb. 2. ஒட்டு; combine. 3. தொற்றனேவல்; commanding word. 4. பற்று; grip. 5. பொருத்து; joint. 6. மூலைக்கையோடணைத்த மரம்; a piece of wood attached to the hip of roof.

**தொற்று**[1]**-தல்** *toṟṟu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. தொடுத்தல்; to attach, tack. "அதன் கழுத்திலே காக்கைப் பொன்னைத் தொற்றி" (ஈடு. 3, 1, 10). 2. ஒட்டித்தொடர்தல்; to affect, as a contagious disease. தொற்றுநோய்

**தொற்று**[2]**-தல்** *to<u>rr</u>u-*, 7 செ.குவி. (v.i.) 1. *படர்தல்;* to spread, as a vine. "புரைதீர் தவந்தொற்று கொள்கொம் பெனுந் தெய்வமுனி" *(உபதேசகா. சிவபுண்ணிய. 93).* 2. *கைகால்களால் பற்றியேறுதல்;* to climb

**தொற்று**[3]**-தல்** *to<u>rr</u>u-*, 5 செ.குன்றாவி. (v.t.) *பற்றியிருத்தல்;* to be connected with. "இங்குக் கழிக்கிற அகங்காரம் ஸுக்ஷ்மசரீரம் விடுமளவும் இவனைத் தொற்றிக் கிடக்கும்" *(ரஹஸ்ய. 959).*

**தொற்று**[4] *to<u>rr</u>u*, பெ. (n.) 1. *தொடர்பு;* connection. "கர்ப்பத்திலே தொற்றில்லாமை" *(திவ்.திருப்பா. 5, வியா. 82).* 2. *நோயின் ஒட்டுத் தொடர்பு;* contagion. 3. *மூலைக்கையோடு அணைத்த மரம் (யாழ்.அக.);* a piece of wood attached to the hip of a roof.

**தொற்றுக்காய்ச்சல்** *to<u>rr</u>u-k-kāiccal*, பெ. (n.) *ஒட்டுக் காய்ச்சல்;* contagious fever, epidemic fever. 2. *மாரிக் காய்ச்சல்;* plague pertilence *(சா.அக.).*

*[தொத்து → தொற்று + காய்ச்சல்]*

**தொற்றுத்தொடிசு** *to<u>rr</u>u-t-toḍisu*, பெ. (n.) *சிறுபிழை (யாழ்.அக);* triffling error.

*[தொற்று + தொடிசு]*

**தொற்றுநோய்** *to<u>rr</u>u-nōy*, பெ. (n.) 1. *ஒருவரைத் தொடுவதினாலும் முடை நாற்றத்தை நுகர்வதாலும் ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு ஒட்டும் நோய்;* disease communicated by mediate or immediate contact or by eflluvia from one person to another person - contagious disease. 2. *பழைய நோய்;* an old disease. 3. *குட்டம்;* leprosy.

*[தொத்து → தொற்று + நோய்]*

**தொற்றுநோயாளி** *to<u>rr</u>u-nōyāḷi*, பெ. (n.) *ஒட்டுநோயுற்றவன்;* one attacked of contagious disease *(சா.அக.).*

*[தொத்து → தொற்று + நோயாளி]*

**தொற்றுப்பல்** *to<u>rr</u>u-p-pal*, பெ. (n.) *மிகுதியாகத் தோன்றும் பல் (திவ். பெரியாழ். 1.1., வியா. பக். 13);* irregular, extra tooth.

*[தொற்று + பல்]*

**தொற்றுரோகி** *to<u>rr</u>u-rōgi*, பெ. (n.) *தொற்று நோயாளி பார்க்க;* see *to<u>rr</u>u-nōyāḷi (செ.அக.).*

*[தொற்று + ரோகி]*

Skt. rōgin → த. ரோகி

**தொற்றுவியாதி** *to<u>rr</u>u-viyādi*, பெ. (n.) *தொற்றுநோய் பார்க்க;* see *to<u>rr</u>u-nōy (சா.அக.).*

*[தொற்று + வியாதி]*

Skt. vyādhi → த. வியாதி

**தொறட்டு** *toraṭṭu*, பெ. (n.) *துறட்டு பார்க்க;* see *turaṭṭu.*

**தொறு**[1] *toru*, பெ. (n.) 1. *ஆவின் கூட்டம்;* herd of cows. "தொகைமலி தொறுவையாளுந் தோன்றல்" *(சீவக. 474).* 2. *தொழு (பிங்.);* cattle-stall. 3. *இடைச்சாதி;* shepherd caste. "நலத்தகு தொறுவினுள்ளேன்" *(சீவக. 477).* 4. *கூட்டம் (பிங்.);* crowd, multitude. "படைப்பெருந் தொறுவொடும் படர்ந்து" *(கந்தபு. யுத்த. முதனாட். 15).* 5. *மிகுதி (யாழ்.அக.);* plenty, abundance.

*[தொழு → தொறு]*

**தொறு**[2] *toru*, பெ. (n.) 1. *அடிமையாள் (பிங்.);* slave. 2. *அடிமைத்தனம் (W.G.);* slavery *(செ.அக.).*

*[தொழு → தொறு]*

**தொறு**[3] *toru*, இடை. (part.) *தான் புணர்ந்த மொழியின் பொருண்மையினைப் பலவாக்கி அடுத்தடுத்து ஆங்காங்கே என்பனபட நிற்கும் ஓரிடைச்சொல்;* a distributive suffix of place, time. 'நவிறொறும் நூனயம் போலும்" *(குறள், 783) (நன். 420, மயிலை).*

**தொறுத்தி** *torutti*, பெ. (n.) *இடைச்சி;* shepherdess. "தொறுத்தியர் திகைத்து நின்றார்" *(சீவக. 488).*

*[தொழு → தொறு → தொறுத்தி]*

**தொறுதொறுவெனல்** *torutoru-v-enal*, பெ. (n.) 1. *ஓயாது பேசுதல்;* gossipping indulging in lengthy, discourse. 2. *பயன்படாது பேசுதல்;*

talking much and with little purpose. 'தொறுதொறுவென்று பேசாதே' (சாஅக.).

மறுவ. தொணதொண

[தொறு + தொறு + எனல்]

**தொறுநிலை** *toṟu-nilai,* பெ. (n.) 1. ஆக்கள் (பசுக்கள்) கட்டும் கொட்டம்; shed. "எம்மூர் எல்லாச்சேர தொறு நிலையும்" (S.I.I. vi. 167).

[தொறு + நிலை]

**தொறுப்பட்டி** *toṟu-p-paṭṭi,* பெ. (n.) ஆயிரம் மாடுகள் அடைக்கப்பெறும் அளவுள்ள நிலம், ஒரு தொறுப்பட்ட நிலம்; a measure of land, as sufficient for thousand cattle to fold. "பொத்தனம் கிழர்களும், தொறுப்பட்டி நிலம் குடுத்தார்கள்" (செங்கம் நடுகற்கள் - கல்வெட்டு).

[தொறு + பட்டி]

**தொறுப்பு-தல்** *toṟuppu-,* 5 செ.குன்றாவி. (v.t.) அலப்புதல்; to harass.

[தொணப்பு – தொறுப்பு]

**தொறுப்போ-தல்** *toṟu-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) ஆநிரை கவரப்படுதல்; to be captured in herds, as cattle. மாடு தொறுப் போகா நிற்க (செஅக.).

[தொறு + போ]

**தொறுவத்து** *toṟuvattu,* பெ. (n.) நஞ்சுண்டான் பார்க்க; see *nañjuṇḍāṉ* (செஅக.).

**தொறுவன்** *toṟuvaṉ,* பெ. (n.) இடையன் (திவா.); shepherd (செஅக.).

[தொழுவன் → தொறுவன்]

**தொறுவி** *toṟuvi,* பெ. (n.) தொறுத்தி (சூடா.) பார்க்க; see *toṟutti* (செ. அக.).

**தொறுவிடம்** *toṟu-v-iḍam,* பெ. (n.) மாட்டுத் தொழு (பிங்.); cattle shed (செ. அக.).

[தொழு → தொறு + இடம்]

**தொறுவிடுவித்துப்பட்டான்** *toṟu-viḍuvittu-p-paṭṭāṉ,* பெ. (n.) பகைவரிடமிருந்து ஆநிரைகளைப் போரிட்டு மீட்டுக் கொண்டு வந்து தங்களூரில் இடுவித்த பின்னர் இறப்பவர் (செங்கம் நடுகற்கள் - கிபி. 7ஆம் நூற்றாண்டு); die after recovering the herd of cows seized by the enemy. இச்செயல் கரந்தைத் திணைக்குரியதாகும்.

[தொறு + விடுவித்து + பட்டான். படு → பட்டான்]

**தொறுவிடுவித்துப்பட்டான்கல்** *toṟu-viḍuvittu-p-paṭṭāṉ-kal,* பெ. (n.) தம்மூர் ஆநிரைகளைப் பகைவரிடமிருந்து மீட்டுப் போரில் இறந்தவன் நினைவாக நாட்டப்பட்டக் கல்; memorial stone of a deceased warrior, who died when he rescued the cattle seized by the enemy. (செங்கம் நடுகற்கள், கி.பி. 7ஆம் நூற்றாண்டு, கரந்தைத் திணை)

[தொறுவிடுவித்து + பட்டான் + கல்]

**தொறுவு** *toṟuvu,* பெ. (n.) 1. தொறு[1] பார்க்க; see *toṟu.* 2. செய்தொழில்; work, trade, craft, occupation (செஅக.).

[தொறு → தொறுவு]

**தொன்மரம்** *toṉmaram,* பெ. (n.) ஆலமரம் (பிங்.); common banyan, as the ancient tree. "தூங்குசிறை வாவலுறை தொன்மரங்க ளென்ன" (சீவக. 498).

[தொல் + மரம்]

**தொன்மை[1]** *toṉmai,* பெ. (n.) 1. பழைமை (திவா.); oldness, antiquity. "தொன்மை யுடையார் தொடர்பு" (நாலடி., 216). 2. உரைவிரவிப் பழைமையாகிய கதை பொருளாகச் செய்யப்படுவது (தொல். பொருள். 549); narrative poem interspersed with prose, having for its subject an ancient story.

[தொல் → தொன்மை (வே.க. 274)]

**தொன்மை[2]** *toṉmai,* பெ. (n.) தன்மை (சங்கற்ப நிராகரணம்); nature. தொன்மை நாடி நன்மைவிடாதே (பழ.).

[தொல் → தொன்மை]

**தொன்மைக்காட்சிஅனுமானம்** *tonmai-k-kāṭci-aṉumāṉam,* பெ. (n.) ஓர் அளவை; a logic.

*[தொன்மை + காட்சி + அனுமானம்]*

அஃது ஒரு பூவைக்காணாமலே மணத்தால் இன்ன பூ என்று அறிவது.

**தொன்மையோர்** *toṉmaiyōr,* பெ. (n.) தொன்முதுரிமையர் (வின்.); ancients (செ.அக.).

*[தொன்மை → தொன்மையோர்]*

**தொன்மொழி** *toṉmoḻi,* பெ. (n.) 1. பழமொழி; proverb, maxim. "பொற்கிரிசேர் கருங்கொடியும் பொன்னிறமாமெனச் சொன்ன தொன்மொழியும்" (பதினொராம். பட்டின. திருக்கழு. 40). 2. பழைமையான மொழி; ancient language. "தோலென மொழிப தொன்மொழிப் புலவர்" (தொல். பொருள். 551). இன்று வழங்கும் தொன்மொழிகளுள் தமிழே மூத்தது (உ.வ.).

*[தொல் + மொழி]*

**தொன்றி** *toṉṟi,* பெ. (n.) தொண்டி பார்க்க; see *toṇḍi* (சா.அக.).

**தொன்று** *toṉṟu,* பெ. (n.) 1. பழைமை; oldness, antiquity. "தொன்றுமொழிந்து தொழில் கேட்ப" (மதுரைக். 72). 2. பழையது; that which is old, ancient. "தொன்றாகிப் புதிதாகி" (விநாயகபு. கடவு. 8). 3. ஊழ்; fate. "தொன்று சுண்ணத்திற் றோன்றிய வேறுபாடு" (சீவக. 903).

*[தொல் → தொன்று]*

**தொன்றுதொட்டு** *toṉṟu-toṭṭu,* கு.வி.எ. (adv.) பழங்காலம் முதல்; from of old, from time immemorial. "தொன்றுதொட்டனாதி வித்தி னிடத்தினில்" (சிசி.2.10).

*[தொன்று + தொட்டு]*

**தொன்றூயம்** *toṉṟūyam,* பெ. (n.) பாலாட்டங் கொடி பார்க்க; see *pālāṭṭaṅ-koḍi* (சா. அக.).

**தொன்னிலம்** *toṉṉilam,* பெ. (n.) பண்டை நாடு; ancient country. தொன்னிலம் முழுதும் தோன்றிய கல்வி (பழ.).

**தொன்னீர்** *toṉṉīr,* பெ. (n.) கடல் (பிங்.); sea as ancient (செ.அக.).

*[தொல் + நீர்]*

**தொன்னூல்** *toṉṉūl,* பெ. (n.) 1. தொன்மம் (சூடா.); puranas. 2. தொன்னூல்விளக்கம் (வின்.) பார்க்க; see *toṉṉūl-viḷakkam* (செ.அக.).

*[தொன்மை + நூல்]*

**தொன்னூல்விளக்கம்** *toṉṉūl-viḷakkam,* பெ. (n.) வீரமாமுனிவர் செய்த தமிழ் இலக்கண நூல்; a Tamil grammar by Beschi @ Viramā-muṉivar (செ.அக.).

*[தொன்னூல் + விளக்கம்]*

**தொன்னை** *toṉṉai,* பெ. (n.) 1. இலைக்கலம்; a cup made of plantain or other leaf pinned up at the corners. "செவிக்கனகத் தொன்னையா லுண்டு" (சிவரக. சதானந்த. 2). "கைக்கே யிலைகொண்டு தொன்னையுங் கொண்டு" (தனிப்பா.). 2. எச்சிற் கல்லை போன்ற இழிந்தோன் (வின்.); mean wretch.

தெ., க. தொன்னெ

*[துல் → துள் → துன் → தொன் → தொன்னை (வே.க. 274)]*

E. tun = 1 large cask for wine, beer, etc, esp. formerly as measure of capacity (252 wine gallons) [brewer's fermenting - vat; OE. tunne, OHG = ON = tunna, F. Gaulish tunna]

**தொன்னைக்காது** *toṉṉai-k-kādu,* பெ. (n.) தொன்னை போல் மடங்கிய காது (உ.வ.); prominent ear slightly bent, as cup shaped (செ.அக.).

*[தொன்னை + காது]*

**தொனப்பு-தல்** *toṉa-p-pu-,* 5 செ.கு.வி. (v.i.) தொனுப்பு-தல் (இ.வ.) பார்க்க; see *toṉuppu-,* (செ.அக.).

**தொனி**[1] *toṉi,* பெ. (n.) 1. துளையிலிருந்து உண்டாகும் ஒலி (திவா.); sound, noise, intonation, twang, peal. "திசைப்புற வருந்தொனி

யெழுந்த பொழுதே" (கலிங்.382). 2. தொனியர்த்தம் பார்க்க; see *toṉi-y-arttam*.

**தொனி²-த்தல்** *toṉi-*, 5 செ.கு.வி. (v.i.) 1. ஒலித்தல்; to sound, to twang, to emit vocal or instrumental sound. "கோவியர் மழலை தொனித்த குழலிசைத் தோய்" (அழகர்கல. 1). 2. குறிப்புப் பொருள் தோன்றுதல்; to suggest itself, as a meaning.

த. தொனி; வ. த்வனி

*[தொள் → தொல் → தொன் → தொனி (சு.வி. 35)]*

**தொனி³-த்தல்** *toṉi-*, 5 செ.குன்றாவி. (v.t.) சொல்லுதல்; to say, tell. "அதன் றன்மை தொனித்துணர்த்துறின்" (உபதேசகா. சிவவிரத. 185).

**தொனிசங்கு** *toṉi-šaṅgu*, பெ. (n.) ஊதுசங்கு; conch use to blow.

*[தொனி + சங்கு]*

**தொனிப்பொருள்** *toṉi-p-poruḷ*, பெ. (n.) ஆற்றலால் அன்றிக் குறிப்பாலறியப்படும் பொருள்; suggested or implied meaning.

*[தொனி + சங்கு]*

**தொனியர்த்தம்** *toṉi-y-arttam*, பெ. (n.) தொனிப்பொருள் பார்க்க; see *toṉi-p-poruḷ*.

**தொனுதொனு-த்தல்** *toṉutoṉu-*, 4. செ.கு.வி. (v.i.) துணதுண-த்தல் (உ.வ.) பார்க்க; see *tuṇatuṇa-*.

*[துணதுண-த்தல் → தொனுதொனு-த்தல்]*

**தொனுதொனுப்பு** *toṉutoṉuppu*, பெ. (n.) 1. அலப்புகை (வின்.); babbling, idle gossip. 2. துன்புறுத்துகை; worrying (செ.அக.).

*[துணதுணப்பு → தொனுதொனுப்பு]*

**தொனுப்பன்** *toṉuppaṉ*, பெ. (n.) அலப்புவோன் (வின்.); babbler, vain talker (செ.அக.).

*[தொனுப்பு → தொனுப்பன்]*

**தொனுப்பு-தல்** *toṉuppu-*, 4 செ.கு.வி. (v.i.) அலப்புதல் (உ.வ.); to chatter, babble, blab (செ.அக.).

# தோ

**தோ**[1] *tō,* த் என்ற மெய்யும் ஓ என்ற உயிரும் சேர்ந்த கூட்டெழுத்து; the compound of 't' and 'ō'.

*[த் + ஓ]*

**தோ**[2] *tō,* இடை. (part.) நாயைக் கூப்பிடுமொலி; vocable used in calling a dog or other animals.

**தோக்கியம்** *tōkkiyam,* பெ. (n.) தோக்குமம் (யாழ்.அக.) பார்க்க; see *tōkkumam.*

**தோக்கு**[1] *tōkku,* பெ. (n.) பறவை சுடும் துமுக்கியில் கெட்டித்த சிறு மாழைக்குண்டு (நெல்லை); thick bullets used to shoot birds.

**தோக்கு**[2] *tōkku,* பெ. (n.) கைத்துமுக்கி; hand-gun.

*[துமுக்கி → துமுக்கு → தோக்கு]*

**தோக்குமம்** *tōkkumam,* பெ. (n.) *1.* காதுக் குறும்பி; ear wax. *2.* முகில்; cloud.

**தோக்குளம்** *tōkkuḷam,* பெ. (n.) பருத்திச் செடி வகை (மலை.); common cotton.

**தோக்கை** *tōkkai,* பெ. (n.) *1.* முன்றானை; front end of a cloth. "அடலெடுத்த வேற்கணார் தோக்கைபற்றி" (திவ். பெரியதி. 4.4:3). *2.* கொய்சகம்; plaited folds of a woman's cloth. "தோக்கையந் துகிலினாடன்" (சீவக. 2477). *3.* சீலை (அகநி.); cloth, garment. *4.* மேற்போர்வை (சது.); upper covering, scarf, cloak.

*[தொகு → தோகு → தோகை → தோக்கை]*

**தோகடம்** *tōgaḍam,* பெ. (n.) குழந்தைப் பருவம்; child hood (சா.அக.).

**தோகதம்** *tōkadam,* பெ. (n.) *1.* கருவுற்ற பெண்கள் சில உணவுப் பொருள்களின் மேல் கொள்ளும் ஆசை; morbid desire of a pregnant woman for particular objects. *2.* நெஞ்சு நோய்; disease of the heart. *3.* வெறுப்புணர்வு; neusea.

**தோகாரை** *tōkārai,* பெ. (n.) காரல் மீன் (மீனவ.); alactis indica.



**தோகை** *tōgai,* பெ. (n.) *1.* மயிற்பீலி (பிங்.); tail of a pea-cock. *2.* மயில்; pea-cock. "அன்னமுந் தோகையும்" (சீவக. 346). *3.* பெண்; woman. "தோகை பாகற்கு" (கம்பரா. திருவவ. 10). தோகை அழகைத் தொட்டுப் பொட்டிட்டுக் கொள்ளலாம். (பழ.). *4.* சிறகு (பிங்.); feather, plumage. *5.* விலங்கின் வால் (திவா.); tail of an animal. "தோகைமண் புடைக்குங் காய்புலி (கல்லா. 6). *6.* ஆடை; cloth for wear, garment. பொன்னந் தோகையு மணியரிச் சிலம்பும் (கல்லா. 41:14). *7.* முன்றானை (திவா.); front end of a cloth. *8.* கொய்சகம்; plaited folds of a woman's cloth. "தூசுலா நெடுந் தோகையி னல்லவர்" (சீவக. 1320). *9.* நெல் கரும்பு வாழை முதலியவற்றின் தாள்; sheath, as of sugarcane, of a plantain stem. 'பரிய தோகையை யுடைய சிறிய தினை" (புறநா. 168, உரை.). தோகைச் செந்நெல் (பெருங். மகத. 2, 18). *10.* பெருங் கொடி (பிங்.); long flag, streamer, banner. *11.* தொங்கல் (வின்.); anything hanging down, as a flag, as woman's hair. *12.* பனங்கிழங்கின் வாற்றோல் (வின்.); hallow head of a palmyra root. *13.* ஆண் குறியின் நுனித்தோல்; foreskin, prepuce. *14.* பெண்மயிர் (யாழ்.அக.); women's hair. *15.* மீன் வகை; a kind of fish. "குளக்கன் றோகை பருந்துவாயன்" (பறாளை. பள்ளு.15).

*[தொகு → தொகை → தோகை = தொங்கும் கரும்பு, சோளம் முதலியவற்றின் தாள், தொங்கும் மயிற்பீலி (மு.தா. 304)]*

**தோகைக்குழல்** *tōgai-k-kulal,* பெ. (n.) முதியோர் கூந்தல்; virginian silk (சா.அக.).

*[தோகை + குழல்]*

**தோகைநோய்** *tōgai-nōy,* பெ. (n.) மாட்டு நோய் வகை; a disease of cattle.

*[தோகை + நோய்]*

ஒருகா. சோகை → தோகை

**தோகைப்பகை** *tōgai-p-pagai,* பெ. (n.) ஓந்தி (உரி.நி.); chameleon, as the enemy of pea-cock.

*[தோகை + பகை. தோகை = மயில்]*

**தோகைப்பாகன்** *tōgai-p-pāgaṉ,* பெ. (n.) சிவ பெருமான்; Lord Sivan.

*[தோகை + பாகன். தோகை = பெண்]*

**தோகைமஞ்ஞை** *tōgai-maññai,* பெ. (n.) தோகைமயில் பார்க்க; see *tōgai-mayil* துணையில் தோகை மஞ்சை.

*[தோகை + மஞ்ஞை]*

மயில் → மஞ்ஞை

**தோகைமயில்** *tōgai-mayil,* பெ. (n.) ஆண் மயில்; male peacock. 'பேடுந் தோகைமயிலும் சேரவிருந்தன' (சீவக. 65, உரை).

*[தோகை + மயில்]*

**தோகைமுகப்பூடணம்** *tōgai-muga-p-pūḍaṇam,* பெ. (n.) மஞ்சள் (தைலவ.தைல.); turmeric, as used to beautify a woman's face.

*[தோகை + முகம் + பூடணம். தோகை = பெண்]*

**தோசக்காய்** *tōša-k-kāy,* பெ. (n.) 1. வெள்ளரிக் காய்; common cucumber. 2. கக்கரிக்காய்; field cucumber (சா.அக.).

**தோசி** *tōši,* பெ. (n.) நற்பேறு இல்லாதவன்-ள்; unclucky person. தோசிப் பெண்ணுக்கேற்ற சொறியாங் கொள்ளி மாப்பிள்ளை (பழ.).

**தோசிக்கொக்கு** *tōši-k-kokku,* பெ. (n.) கொக்குவகை; green heron. 2. தோசி பார்க்க; see *tōši.*

*[தோசி + கொக்கு]*



**தோசை** *tōšai,* பெ. (n.) அரிசிமாவில் செய்யும் ஒருவகைச் சிற்றுண்டி; rice-cake tiffin. "வடைசுகியன் றோசை வகைகள்" (விறலிவிடு.).

*[தோய்த்து செய்வது தோசை. (தோய் → தோயை → தோசை)]*

**தோசைக்கல்** *tōšai-k-kal,* பெ. (n.) அடுப்பில் வைத்துத் தோசை சுடுங் கலம்; griddle, pan for baking tōšai, usually of iron.

*[தோசை + கல்]*



**தோசைக்காய்** *tōšai-k-kāy,* பெ. (n.) வெள்ளரி வகை (இ.வ.); melon.

**தோசைகுத்து-தல்** *tošai-kuttu-,* 4 செ.குன்றாவி. (v.i.) தோசைவார்-த்தல் பார்க்க; see *tōšai vār-.*

*[ஊற்று → ஊத்து (கொ.வ.) தோசை + குத்து (இ.வ.)]*

**தோசைச்சட்டுவம்** *tōšai-c-caṭṭuvam,* பெ. (n.) தோசைத்திருப்பி பார்க்க; see *tōšai-t-tiruppi.*

**தோசைச்சுடு-தல்** *tōšai-c-cuḍu-,* 20 செ.குன்றாவி. (v.i.) தோசைவார்-த்தல் பார்க்க; see *tōšai-vār-.*

*[தோசை + சுடு-.]*

**தோசைத்திருப்பி** *tōšai-t-tiruppi*, பெ. (n.) கல்லில் வார்க்குந் தோசையைத் திருப்பிடவு மெடுக்கவும் உதவுங் கருவி; a kind of spit used to turn tošai from one side to another and remove it from the griddle.

மறுவ. தோசைச் சட்டுவம்

*[தோசை + திருப்பி]*



**தோசைவார்-த்தல்** *tōšai-vār-*, 4 செ.குவி. (v.i.) தோசை சுடுதல்; to bake rice-cakes.

*[தோசை + வார்-.]*

**தோஞ்சல்** *tōñjal*, பெ. (n.) குடலில் தொங்கும் ஒரு சவ்வு; a membraneous expansion which floats upon the intestines.

*[தொங்கல் → தொஞ்சல் → தோஞ்சல்]*

**தோஞ்சை** *tōñjai*, பெ. (n.) தோஞ்சல் பார்க்க; see *tōñjal* (சா.அக.).

*[தோஞ்சல் → தோஞ்சை]*

**தோஞ்சைப்பெருங்குடல்** *tōñjai-p-peruṅguḍal*, பெ. (n.) பெருங்குடல் நடுவிலிருக்கும் நரம்புக் கூட்டம்; net work of nerves in the middle of the colon.

*[தோஞ்சை + பெருங்குடல்]*

**தோட்கட்டு** *tōṭ-kaṭṭu*, பெ. (n.) 1. தோட்சந்தி; shoulder-joint. 'தோட்கட்டும் குடமுழாவை யொக்கும் தோள்களும் ஐராவதத்தின் கையை யொக்கும்' (சீவக. 1461, உரை). 2. தோள்; shoulder.

*[தோள் + கட்டு]*

**தோட்காப்பு** *tōṭ-kāppu*, பெ. (n.) தோள் வளை; armlet.

*[தோள் + காப்பு]*

**தோட்கோப்பு** *tōṭ-kōppu*, பெ. (n.) கட்டுச் சோறு; boiled rice tied up for a journey, as slung over the shoulder in walking. "தோட்கோப்புக் காலத்தாற் கொண்டு ய்ம்மின்" (நாலடி. 20).

*[தோள் + கோப்பு]*

**தோட்சுமை** *tōṭ-šumai*, பெ. (n.) 1. தோளிற் றாங்கப்படும் சுமை; burden carried on shoulder. 2. காவடி (யாழ்.அக.) பார்க்க; see *kāvaḍi*. 3. மூட்டை (இ.வ.); pack, bundle.

*[தோள் + சுமை]*



**தோட்சேலை** *tōṭ-šēlai*, பெ. (n.) தோள்சேலை பார்க்க; see *tōḷ-šēlai*.

**தோட்சேலைப்போராட்டம்** *tōṭ-šēlai-p-pōrāṭṭam*, பெ. (n.) தோள்சேலைப்போராட்டம் பார்க்க; see *tōḷ-šēlai-p-pōrāṭṭam*.

**தோட்டக்கள்ளன்** *tōṭṭa-k-kaḷḷaṉ*, பெ. (n.) தோட்டப்பயிரை அழிக்கும் பறவை வகை; a bird destructive to garden-plants.

*[தோட்டம் + கள்ளன்]*

**தோட்டக்காரன்** *tōṭṭa-k-kāraṉ*, பெ. (n.) 1. தோட்ட வேலை செய்பவன்; gardener, husbandman. தோட்டக்காரன் வாழ்வு காற்றடித்தால் போச்சு (பழ.). 2. தோட்டத்தின் சொந்தக்காரன்; proprietor of a garden. 3. தோட்டத்தின் காவற்காரன்; watchman of a garden.

*[தோட்டம் + காரன். 'காரன்' - பெயரீறு]*

**தோட்டக்கால்** *tōṭṭa-k-kāl*, பெ. (n.) கிணற்றுப் பாய்ச்சலுள்ள கொல்லை நிலம் (வின்.); garden lands watered by means of a well and rendered

fit for the growth of vegetables, tobacco, fruit-tree, crops of grain.

*[தோட்டம் + கால்]*

**தோட்டக்கீரை** *tōṭṭa-k-kīrai*, பெ. (n.) அரைக்கீரை, சிறுகீரை, தண்டுக்கிரை முதலிய தோட்டத்திற் பயிராகும் கீரை வகைகள்; garden greens or spinach cultivated in garden and fields especially those belonging to amaranthus family (சாஅக.).

*[தோட்டம் + கீரை]*

**தோட்டக்குழி** *tōṭṭa-k-kuḻi*, பெ. (n.) கொல்லைக் கொட்டாரத்தில் அவரை, புடலை போடும் குழி; pit at the backyard to sow, beans and snake guard.

*[தோட்டம் + குழி]*

**தோட்டக்குடிசை** *tōṭṭa-k-kuḍišai*, பெ. (n.) கொடிவீடு, வேனிற் கொட்டகை; summer-house.

*[தோட்டம் + குடிசை]*

**தோட்டக்கூறு** *tōṭṭa-k-kūṟu*, பெ. (n.) 1. மரங்கள் வளர்ப்பதற்குத் தகுதியான நிலப்பகுதி; land fit for growing trees. 2. மா, பலா, வாழை முதலிய பயன்தரு மரங்கள் வளர்க்கப்பட்ட தோட்டத்தின் ஒரு பகுதி; a part of a garden where, mango, jack and banana trees are grown (கல்அக.).

*[தோட்டம் + கூறு]*

**தோட்டச்சம்பா** *tōṭṭa-c-cambā*, பெ. (n.) சம்பா நெல்வகை (இவ.); a kind of reddish paddy (செஅக.).

*[தோட்டம் + சம்பா]*

**தோட்டத்துமுட்பாறை** *tōṭṭattu-mutpāṟai*, பெ. (n.) கடலடிப் பாறை ஒன்றின் பெயர்; name of a rock beneath the sea. "நெட்டுக் குப்பத்தின் நேர் கிழக்கே 60 பாகத் தொலைவாய் காணத்தரும் கடலடிப் பாறை (மீனவ.)

**தோட்டந்துரவு** *tōṭṭanduravu*, பெ. (n.) தோட்டமும் பாசனத்துக்குதவும் பெருங் கிணறும்; land property and large well for irrigation purpose. அவர் தோட்டந்துரவு உடையவர்.

*[தோட்டம் + துரவு]*

**தோட்டந்தூரம்** *tōṭṭan-tūram*, பெ. (n.) செவிடு (இவ.); deafness.

*[தோட்டம் + தூரம். தோடு → தோட்டம்]*

Skt. dūr → த. தூரம்

**தோட்டப்பயிர்** *tōṭṭa-p-payir*, பெ. (n.) காய்கறிப் பயிர்கள் (இவ.); garden vegetables.

ம. தோட்டப்பயறு

*[தோட்டம் + பயிர்]*

**தோட்டப்பாழானநிலம்** *tōṭṭa-p-pāḻāṉa-nilam*, பெ. (n.) பயன்தரும் மரங்களோடு இருந்து, பின்னர்ப் பாழாகி, வறிதாகக் கிடக்கும் நிலம்; barren land where once trees grew flourisly. "இவ்வூர் மும்முடிச் சோழப் பெருந் தெருவில் வியாபாரி ஆச்செருமான், வயிரமேகன் தோட்டப் பாழான நிலத்தின் வடவருகேய்" (முதல் இராசராசன் கல்வெட்டு, தெ.க.தொ. 3:1, கல். 15).

*[தோட்டம் + பாழான + நிலம்]*

**தோட்டப்பைரி** *tōṭṭa-p-pairi*, பெ. (n.) பைரிப்புள் வகை; a peregrine falcon.

*[தோட்டம் + பைரி]*

**தோட்டம்** *tōṭṭam*, பெ. (n.) 1. வளர்ப்புச் செடிகளின் தொகுதி; garden, orchard, plantation. "வயலுந் தோட்டமும்" (பெருங். உஞ்சைக். 39, 63). 2. சோலை (பிங்.); grove. தோட்டம் நிலைத்தல்லவோ தென்னம்பிள்ளை வைக்கவேணும் (பழ.). 3. வீட்டுக் கொல்லை (இவ.); back yard, enclosure. தோட்டத்தில் பழமிருக்கத் தூரப்போவானேன் (பழ.).

ம. தோட்டம்; க. தோட, தோண்ட; தெ., பட., து., குட. தோட; கோத. தோட்டம்; துட. த்வோடம்; கூ. டுட; குவி. தொந்த; துட. தோண்ட

*[துள் → தொள் → தோள் → தோண்டு → தோடு → தோட்டம்]*

**தோட்டல்** *tōṭṭal*, பெ. (n.) 1. துளைத்தல்; to drill. "கேள்வியாற் றோட்கப் படாத செவி" (குறள், 418).

2. தோண்டுதல்; to dig. "தெவ்வேந்த ருடறோட்ட நெடுவேலாய்" *(கம்பரா. குலமுறை. 8).*

*[தொள் → தோள் → தோட்டல்]*

**தோட்டவாரியம்** *tōtta-vāriyam,* பெ. (n.) தோட்டக் கண்காணிப்பு; supervision of gardern (T.A.S.ii, 78).

*[தோட்டம் + வாரியம்]*

**தோட்டழுத்தமானமாடு** *tōttaluttamāna-mādu,* பெ. (n.) மெல்லிய தோலையும் மினு மினுப்பான மயிரையும் கொண்ட அழகான மாடு (நெல்லை); cow which has silky skin and hair.

*[தோல் + அழுத்தமான மாடு. அழுத்தம் = நயம். ஒ.நோ. அழுத்தமான சேலை = நயமான சேலை]*

**தோட்டா** *tōttā,* பெ. (n.) கோலா மீன் (நெல்லை. மீனவ.); garfish, garpike.

**தோட்டி**[1] *tōtti,* பெ. (n.) 1. ஆணை; authority. "எருமையிருந் தோட்டி" *(பரிபா. 8:36).* 2. காவல்; watch, guard. "உடன்றோர் மன்னெயிறோட்டி வையா" *(பதிற்றுப். 25:5).* 3. கதவு; door. "நாடுடை நல்லெயிலணங் குடைத் தோட்டி" *(மதுரைக். 693).* 4. மனைவாயில் (பிங்.); gateway, gate. 5. சூழகழிருக்கை (சது.); town surrounded with a moat. 6. கட்டழகு (திவா.); exquisite beauty. "இம்பரினில்லாத் தோட்டியிரதியை" *(விநாயகபு. 44:19).* 7. செங்காந்தள் (மலை.); Malabar glory lily. 8. நெல்லி (மலை.); emblic myrobalan.

**தோட்டி**[2] *tōtti,* பெ. (n.) 1. துறட்டி; elephant hook or goad. யானைமே லிருந்தோன் றோட்டிக் கயலொான் றீயாது" *(மணிமே. 27:4).* 2. கொக்கி (வின்.); hook, clasp. 3. பகைவரை வருத்த நிலத்துப் பதிக்கப்படும் கூரிய படைக்கலன்; sharp weapon planted in the ground to keep off enemies. 'தோட்டி முண் முதலியன பதித்த காவற்காடு' *(தொல். பொருள்.65, உரை).*

ம. தோட்டி; க. தோடி, லோடி; தெ. தோடி; து. தோண்டி; பர். டோடன்; குரு. டோடோ; த. தோட்டி; வ. த்ரோட்டி, த்ரோத்ர, தோத்ர

*[துறடு → துறட்டி → தோட்டி]*



**தோட்டி**[3] *tōtti,* பெ. (n.) 1. வெட்டியான்; a menial servant of a village. 2. குப்பை முதலியன வாருவோன்; scavenger. தோட்டி போல் உழைத்துத் துரைபோல் சாப்பிட வேண்டும்.

*[தொள் → தோள் → தோண்டு → தோண்டி → தோட்டி]*

**தோட்டி**[4] *tōtti,* பெ. (n.) ஏரி நீரை நிலங்களுக்குப் பங்கிட்டுத் தருபவர்; a village servant who, looks after the distribution of water for irrigation.

*[தோண்டி → தோட்டி]*

**தோட்டிச்சி** *tōtticci,* பெ. (n.) தோட்டிப் பெண்; a woman of tōtti-p-paraiyan caste.

*[தோட்டி (ஆ.ப.) – தோட்டிச்சி (பெ.பா.)]*

**தோட்டிச்சிமூக்குத்தி** *tōtticci-mūkkutti,* பெ. (n.) மலைகளா பார்க்க; see *malaikalā.*

*[தோட்டிச்சி + மூக்குத்தி]*

**தோட்டிப்பறையன்** *tōtti-p-paraiyan,* பெ. (n.) வெட்டியான்; a division of the paraiya caste who act on village scavengers or messengers.

*[தோட்டி + பறையன்]*

**தோட்டிமை**[1] *tōttimai,* பெ. (n.) வெட்டியான் வேலை; occupation of a village messenger or scavenger.

*[தோட்டி → தோட்டிமை]*

**தோட்டிமை**[2] *tōttimai,* பெ. (n.) ஒற்றுமை (சூடா.); symmetry, harmony.

*[தோன் → தோனி → தோனிமை → தோட்டிமை]*

**தோட்டுக்கணவா** *tōṭṭu-k-kaṇavā*, பெ. (n.) *மீன் வகை;* a kind of fish in kanavay species.

*[தோட்டு + கணவா]*



**தோட்டுக்காது** *tōṭṭu-k-kādu*, பெ. (n.) *ஓலைச் சுருள் முதலியன இட்ட காது;* ear-wearing tōḍu. *2. காதினடித்தண்டு;* ear-lobe *(செ.அக.).*

*[தோடு + காது]*

**தோட்டுச்சக்கரம்** *tōṭṭu-c-cakkaram*, பெ. (n.) *சக்கரவாணம்;* wheel rocket.

*[தோடு + சக்கரம்]*

**தோட்டுச்சிரங்கு** *tōṭṭu-c-ciraṅgu*, பெ. (n.) *கொப்புளச் சிரங்கு (யாழ்ப்.);* itch with large scabby ulcers *(செ.அக.).*

*[தோடு + சிரங்கு - தோட் சிரங்கு → தோட்டுச்சிரங்கு]*

**தோட்டுப்பாய்** *tōṭṭu-p-pāy*, பெ. (n.) *நெல் காயப்போடும் பெரிய பாய்;* mat use to dry the paddy in the sun (நெல்லை.). தோட்டுப்பாய் முடைகிறவனுக்குத் தூங்கப் பாயில்லை *(பழ.).*

*[தோடு + பாய். தோடு = ஓலை, இலை, கோரை. இதைத் தோட்டப்பாய் என்பது தஞ்சை வழக்கு]*

**தோட்டுப்புழுக்கொடியல்** *tōṭṭiu-p-puḻu-k-koḍiyal*, பெ. (n.) *பனங்கிழங்குப் புழுக்கல் (யாழ்ப்.);* palmyra roots, boild, cut in thin slices and dried in the sun.

*[தோடு + புழுக்கு + ஒடியல்]*

**தோட்பட்டி** *tōṭ-paṭṭi*, பெ. (n.) *உடையின் தோட்பாகம்;* yoke of a garment, shoulder piece of a cloak *(செ.அக.).*

*[தோள் + பட்டி]*

**தோட்பட்டை** *tōṭpaṭṭai*, பெ. (n.) *தோட்புறத் தெலும்பு;* shoulder blade, scapula *(செ.அக.).*

*[தோள் + பட்டை]*



**தோட்பலகை** *tōṭ-palagai*, பெ. (n.) தோட்பட்டை (இவ.) பார்க்க; see *tōṭ-paṭṭai.*

*[தோள் + பலகை]*

**தோட்புடைகொள்(ளு)-தல்** *tōṭpuḍai-koḷ(ḷu)-*, 12 செ.கு.வி. (v.i.) *எதிர்த்து நிற்றற் குறியாகத் தோள் தட்டுதல்;* to strike the shoulder, as a combatant in challenging. "அல்லாக்காற் றோப்புடைக் கொள்ளா வெழும் *(நாலடி, 312).*

*[தோள் + புடை + கொள்ளு-.]*

**தோட்புரவு** *tōṭpuravu*, பெ. (n.) *தோட்டமாக அமைந்த நிலத்திற்குரியதாக அரசு பெறும் வரி;* tax collected by the government for the land fit to grow trees.

**தோடகச்சிரங்கு** *tōḍaga-c-ciraṅgu*, பெ. (n.) தோட்டுச்சிரங்கு (யாழ்.அக.) பார்க்க; see *tōṭṭu-c-ciraṅgu.*

*[தோடகம் + சிரங்கு]*

**தோடகம்** *tōḍagam*, பெ. (n.) *1. தாமரை (மலை);* lotus. *2. கொப்புளம் (யாழ்.அக.);* pustule, blister.

**தோடங்காய்** *tōḍaṅ-gāy*, பெ. (n.) *தோடை மரத்தின் காய்;* citrus fruit *(செ.அக.).*

*[தோடை + காய்]*

**தோடஞ்சிரங்கு** *tōḍañ-jirangu,* பெ. (n.) தோட்டுச்சிரங்கு (யாழ்அக.) பார்க்க; see *toṭṭu-c-cirangu* (செஅக.).

**தோடயம்** *tōḍayam,* பெ. (n.) நாடகத்தின் முன்மொழிப்பாட்டு; song at the beginning of a drama invoking the aid of the gods. "தோடயஞ் சொல்வேனே" (இராமநா. பாலகா. 1).

**தோடர்** *tōḍar,* பெ. (n.) தொதவர் பார்க்க; see *todavar.*

[தொழு → தொழுவர் → தொதுவர் → தோடர்]

**தோடர்மால்** *tōḍarmāl,* பெ. (n.) தொதவர் பார்க்க; see *todavar.*

**தோடா** *tōḍā,* பெ. (n.) 1. கையணி வகை; an armlet. 2. கல்வித் திறமைக்குப் பரிசிலாகப் பெறும் பொற்கங்கணம்; gold bracelet, as a reward of merit.

**தோடாப்போடு-தல்** *tōḍā-p-pōḍu-,* 20 செ.குன்றாவி. (v.t.) புலவர் முதலியவர்க்கு அவர் திறமையறிந்து பொற்கங்கணம் பூட்டுதல்; to present tōḍa, as to scholars in recognition of their merit (செஅக.).

[தோடா + போடு. தோடா = பொற்கங்கணம்]

**தோடாழ்குளம்** *tōḍāḻ-kuḷam,* பெ. (n.) கையைக் கூப்பி மூழ்கி நீர்நிலை காட்டுங்காலத்துக் கையமிழக் கூடிய ஆழமுள்ள குளம்; a tank deep enough to immerse a person standing with outstrecthed hands. "தோடாழ் குளத்த கோடுகாத் திருக்கும்" (பெரும்பாண். 273).

[தோடு + ஆழ் + குளம்]

**தோடி** *tōḍi,* பெ. (n.) ஒரு பண் (சிலப். 8: 35, உரை); a specific melody type.

**தோடு**[1] *tōḍu,* பெ. (n.) 1. ஓலை; palm leaf. 'வண்டோட்டுத் தெங்கின்' (பெரும்பாண். 353). 2. காதோலைச் சுருள் (வின்.); ōlā roll worn in the perforation of the ear. 3. காதணி; ear jewel. "வெள்ளி வெண்டோட்டு" (மணிமே. 3:118). 4. பூவிதழ்; flower petal. "தோடேறு மலர்க் கடுக்கை" (தேவா. 885, 4) 5. பூ; flower. "தோட்டார் கதுப்பினா டோள்" (குறள், 1105). 6. கதிர்த்தாள் (அகநா.13,18,உரை); sheath of grain. 7. பழத்தினோடு (வின்); shell of a fruit, as of a wood-apple. 8. தொகுதி (திவா.); collection, assemblage, crowd, cluster, bunch. "தோடு கொண்ட முரசுங் கிழிந்தன கண்ணே" (புறநா. 238). 9. கறிக்காக அரியப்பட்ட காயின் வட்டப் பகுதி (யாழ்ப்.); round slice of fruits used for curry. 10. வட்டத்திரணை (யாழ்ப்.); round moulding.

[தொள் → தோள் → தோடு]



**தோடு**[2] *tōḍu,* பெ. (n.) தாழை; fragrant screw pine.

[தொள் → தோள் → தோடு]

**தோடு**[3] *tōḍu,* பெ. (n.) 1. தோல்; skin. தோட்டை நீ பூணியோ (நீலகேசி, 273). 2. இலை (புறநா. 120); leaf.

[தொள் → தோள் → தோடு]

**தோடுமொக்கு** *tōḍu-mokku,* பெ. (n.) மராட்டிய மொக்கு; Marattiya buds (சாஅக.).

[தோடு + மொக்கு]

**தோடுவாய்ப்பிலை** *tōḍu-vāyppilai,* பெ. (n.) வள்ளைக் கொடிமாலை; leaf of creeping bindiweed (சாஅக.).

**தோடை**[1] *tōḍai,* பெ. (n.) முத்துக் குளியலில் ஒரு முழுக்கிற் கிடைக்கும் சிப்பிகள் (வின்.); produce of a single dive at a pearl-fishery.

**தோடை**[2] *tōḍai,* பெ. (n.) ஒரு மருந்துச் செடி, ஆடாதோடை (மூஅ.); Malabar nut tree.



**தோடை**[3] *tōḍai*, பெ. (n.) *1. கிச்சிலி வகை;* different kinds of citrus, as lemons, citrons, oranges.

**தோடை**[4] *tōḍai*, பெ. (n.) *சங்கு குளிப்பவர் களுக்குத் துணையாயிருப்பவர் (நெல்லை. மீனவ.);* one who helps the pearl-fishers.

**தோடையம்** *tōḍaiyam*, பெ. (n.) *தோடயம் பார்க்க;* see *tōḍayam*.

**தோடையன்** *tōḍaiyaṉ*, பெ. (n.) *தோடை*[2] *பார்க்க;* see *tōḍai*.

**தோண்டல்** *tōṇḍal*, பெ. (n.) *ஊற்று (திவ். பெரியாழ். 4-3-6);* spring.

*[துல் → துள் → தொள் → தோள் → தோண் → தோண்டு]*

**தோண்டவம்** *tōṇḍavam*, பெ. (n.) *பிச்சிப்பூ;* large flowered jasmine. spanish jasmine *(சா.அக.).*

**தோண்டா** *tōṇḍā*, பெ. (n.) *கரைவலையிற் கட்டப் பெறும் மிதப்புக் கட்டை (மீனவ.);* float of a fishing line, net, etc.

**தோண்டான்** *tōṇḍāṉ*, பெ. (n.) *ஓநாய் (சது.);* wolf.

தெ. தோடேலு



**தோண்டி**[1] *tōṇḍi*, பெ. (n.) *நீர் சேந்தும் கல வகை;* pot of earth or metal, used for drawing water *(செ.அக.). 2. சிறுகுடம்;* small pot

ம. தோண்டி

*[துல் → துள் → தோள் → தோண்டு → தோண்டி]*



**தோண்டி**[2] *tōṇḍi*, பெ. (n.) *1. சுண்டி வகை;* a species of sensitive plant. *2. கொட்டைக் கரந்தை (சங்.அக.);* globe thistle.

**தோண்டி**[3] *tōṇḍi*, பெ. (n.) *64 சேர் கொண்ட முகத்தலளவை (இவ.);* a liquid measure of 64 seers.

**தோண்டிக்கூடை** *tōṇḍi-k-kūḍai*, பெ. (n.) *வலைப்பு மீனை அள்ளுதற்குரிய கூடை (தஞ்சை.மீனவ.);* basket helps to scoop the fishes from the net.

*[தோண்டி + கூடை]*

**தோண்டியும்கயிறும்** *tōṇḍiyum-kayiṟum*, பெ. (n.) *ஒருவருக்கொருவர் உறுதுணையாக இருப்பவர்;* good support to each others like pot and the rope. *அவர்களிருவரும் தோண்டியும் கயிறும் ஆனவர்.*

*[தோண்டியும் + கயிறும்]*

*நீர்முகக்கத் தோண்டியும் அதிற் கட்டுங் கயிறும் இணைந்திருத்தல் போல, ஒரு வினை நிகழ ஒருவருக்கொருவர் உறுதுணையா யிருப்போர்.*

**தோண்டு-தல்** *tōṇḍu-*, 5 செ.குன்றாவி. (v.t.) *1. அகழ்தல்;* to dig, hollow, excavate. *2. குடைதல்;* to scoop out, bore. *3. முகத்தல்;* to draw or fetch water from a well. *"நெடுங் கிணற்று வல்லூற்றுவரி தோண்டி" (பெரும்பாண்.*

98). 4. செய்தியை உசாவியறிதல்; to drawout details of. ஏன் அச்செய்தியைத் தோண்டுகிறாய்? 5. பண்ட மிறக்குதல்; to unload, as a ship. "மிசைப்பரந் தோண்டாது புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்" (புறநா. 30).

ம. தோண்டுக; க., தெ. தோடு; து. தோடுணி; குட., கோத. தோட்; துட. த்விட்

[துல் → துள் → தோள் → தோண்டு]

**தோண்டுச்சால்** *tōṇḍu-c-cāl*, பெ. (n.) நாற்றங்காலில் தேங்கின நீரை வடிக்கத் தோண்டும் சிறுகால் (இவ.); a small channel to drain the excess water in a seed-bed.

[தோண்டு + சால்]



**தோண்ணாரு** *tōṇṇāru*, பெ. (n.) வழக்காடு; to dispute (நெல்லை).

**தோண்மாற்று**[1]**-தல்** *tōṇ-māṟṟu-*, 5 செ. குன்றாவி. (v.t.) சுமையை ஒரு தோளினின்று மற்றொரு தோளுக்கு மாற்றிக் கொள்ளுதல்; to change from one shoulder to another shoulder, as a load.

[தோள் + மாற்று]

**தோண்மாற்று**[2]**-தல்** *tōṇ-māṟṟu-*, 5 செ.குவி. (v.i.) மணப்பெண்ணும் மாப்பிள்ளையும், தத்தம் தாய் மாமன் தோளேறிக் கொண்டு மாலை மாற்றிக் கொள்ளும் மணவினை; to exchange garlands, as bridegroom and bride.

[தோள் + மாற்று-.]

**தோண்முதல்** *tōṇmudal*, பெ. (n.) தோண்மை பார்க்க; see *tōṇmai*. "மாண்முடி மன்னன் றோண்முதல் வினவி" (பெருங்.இலாவாண. 9, 30).

[தோள் + முதல்]

**தோண்மேல்** *tōṇmēl*, பெ. (n.) பிடரி (திவா.); nape of the neck.

[தோள் + மேல்]

**தோண்மை** *tōṇmai*, பெ. (n.) தோள்வலிமை; strength of one's arm. "தோண்மையா லமர் தொலைத்து" (பாரத. படை. 10).

[தோள் + வலிமை → தோண்மை]

**தோணாமுகம்** *tōṇāmugam*, பெ. (n.) அகழி சூழ்ந்ததும் 400 சிற்றூர்களுக்குத் தலைமையானதுமான நகரம் (பிங்.); a town surrounded with a moat, being the chief of 400 villages.

**தோணி**[1] *tōṇi*, பெ. (n.) 1. ஓடம்; boat, dhoney. "புனைகலம் பெய்த தோணி" (சீவக. 967). தோணிபோகும், துறை கிடக்கும் (பழ.). 2. கப்பல்; ship. "கடன்மண்டு தோணியில்" (புறநா. 299: 3). 3. மிதவை (பிங்.); float, raft, canoe. 4. நீர்த் தொட்டி; water trough. "தாழிகடோணி கடாரங்கள்" (அரிச்.பு. விவாக. 293).

ம. தோணி; க., து. தோணி; தெ. தோனி; கோண். தொங்கா; கட. தொன; த. தோணி; Pali. doṇi; Sinh. doṇa; Skt. drōṇi

[துல் → துள் → தொள் → தோள் → தோண் → தோணி. குடையப்பட்ட மரக்கலம், அதுபோற் பலகைகளாற் பொருத்திச் செய்த கலம் (தி.ம. 746)]



**தோணி**[2] *tōṇi*, பெ. (n.) 1. மதிலுறுப்பு (பிங்.); projections, bastons in a fortress wall. 2. அம்பு (திவா.); arrow. "தொண்டமதனைக் கொடு நிமிர்ந்த சில தோணி" (இரகு. திக்குவி. 103) 3. சேறு (சூடா.); mud, mire. 4. நீர் (அக.நி.); water. 5. சிறு வழுதுணைச் செடி வகை

(தைலவ.தைல.); Indian nightshade. 6. மருதோன்றி; fragrant nail dye.

**தோணி**[3] *tōṇi*, பெ. (n.) ஓட்டுக் கூரையின் மீது விழும் மழைநீர் வெளியே செல்ல அமைந்த அமைப்பு; slope made on the roof of the house likes for the rain water to drain.



**தோணிக்கடமை** *tōṇi-k-kaḍamai*, பெ. (n.) தோணிக்கு வாங்கும் வரி; a tax on boats (செ.அக.).

[தோணி + கடமை]

**தோணிக்காரன்** *tōṇi-k-kāraṉ*, பெ. (n.) படகோட்டி; boatman (செ.அக.).

ம. தோணிக்காரன்

[தோணி + காரன்]

**தோணிக்குத்தகை** *tōṇi-k-kuttagai*, பெ. (n.) தோணியைப் பயன்படுத்தற்கு மொத்தமாகப் பேசும் ஒப்பந்தம் (இ.வ.); contract for a whole tōṇi without reference to the number of trips or weight of cargo (செ.அக.).

[தோணி + குத்தகை]

**தோணிகாவு-தல்** *tōṇi-kāvu-*, 5 செ.கு.வி. (v.i.) மீன்பிடி தொழிலுக்குப் புறப்படும் பொழுது துண்டு தடிகளில் கயிற்றைக் கட்டி அதனூடே தோணி மரங்களைத் தூக்கிச் சென்று கரையோரம் வைத்தல்; to keep the small boat on the shore by tying it with the help of the rod tied with the rope while going for fishing.

[தோணி + காவு]

**தோணித்துறை** *tōṇi-t-tuṟai*, பெ. (n.) துறைமுகம் (இ.வ.); port, harbour (செ.அக.).

[தோணி + துறை]

**தோணிதள்ளு-தல்** *tōṇi-t-taḷḷu-*, 15 செ.கு.வி. (v.i.) ஓடத்தை நீரில்விடுதல் (வின்.); to launch a boat (செ.அக.).

[தோணி + தள்ளு-.]

**தோணிதாங்கு-தல்** *tōṇi-tāṅgu-*, 5 செ.கு.வி. (v.i.) படகைக் கழையாற்றள்ளுதல்; to punt a boat (செ.அக.).

[தோணி + தாங்கு-.]

**தோணிப்பாலம்** *tōṇi-pālam*, பெ. (n.) தோணி போல் அமைக்கப்படும் கற்பாலம் (இ.வ.); Irish bridge, as scooped like a boat.

[தோணி + பாலம்]

**தோணிபுரம்** *tōṇi-puram*, பெ. (n.) சீகாழி (தேவா.); Shiyali.

இவ்வூர் கோயிலில் எழுந்தருளியிருக்கும் இறைவனின் பெயர் தோணியப்பர். திருஞான சம்பந்தர் திருவருள் பெற்ற இடம். ஊழிப் பெருவெள்ளத்தில் உலகப்பந்து நீரில் மூழ்கிய ஞான்று இவ்வூர் தோணியாக நின்றதாகவும் சிவனும் சிவையும் ஆண்டிருந்து அருள் புரிந்ததாகவும் தொன்மம் கூறும்.

**தோணிமீன்** *tōṇi-mīṉ*, பெ. (n.) தோணி வலைப்பிற் கிடைத்த மீன் (முகவை. மீனவ.); fish gained in boat fishing (மீனவ.).

[தோணி + மீன்]

**தோணியப்பர்** *tōṇi-appar*, பெ. (n.) சீகாழி சிவத்தலத்தில் எழுந்தருளியிருக்கும் இறைவர்; Šivaṉ worshipped at Šhiyali.

[தோணி + அப்பர்]

தோணிபுரம் பார்க்க

**தோணியம்** *tōṇiyam*, பெ. (n.) அம்பு; arrow.

**தோணியுழுந்து** *tōṇi-y-uḻundu*, பெ. (n.) கப்பல் வழியாய் இறக்குமதியாகும் உழுந்து (இ.வ.); imported black gram, as brought by boat.

[தோணி + உழுந்து, தோணி = கப்பல்]

**தோணியோடு** *tōṇi-y-ōḍu,* பெ. (n.) கூடல் வாயோடு (இவ.); gutter tiles.

*[தோணி + ஓடு]*



**தோணிவயிறு** *tōṇi-vayiṟu,* பெ. (n.) தோணியைப் போன்ற வயிறு; boat shaped abdomen (சா.அக.).

*[தோணி + வயிறு]*

**தோணிவரி** *tōṇi-vari,* பெ. (n.) தோணியின் தலத்திலிருந்து மேல்வரும் மரப்பலகை (நெல்லை. மீனவ.); wooden rod comes up from the bottom of a boat.

*[தோணி + வரி]*

**தோணிவலைப்பு** *tōṇi-valaippu,* பெ. (n.) பெரியவலை வலைப்பு (முகவை. மீனவ.); fishing with a big size net.

*[தோணி + வலைப்பு]*

**தோணு-தல்** *tōṇu-,* 5 செ.கு.வி. (v.i.) தோன்று-தல் பார்க்க: see *tōṉṟu-*. "வேதை தோணாமல்" (இராமநா. பாலகா. 1).

*[தோன்று → தோணு (கொ.வ.)]*

**தோணை** *tōṇai,* பெ. (n.) வெள்ளைத் தொழு நோய்; white leprosy, leucoderma.

*[தோல்நோய் → தொழுநோய் → தோனோய் → தோணை]*

**தோணோக்கம்** *tōṇōkkam,* பெ. (n.) மகளிர் விளையாட்டு வகை; a game played by girls "குழலினீர் தோணோக்க மாடாமோ" (திருவாச. 15,2). 2. காதினடித்தண்டு; ear-lobe.

*[தோள் + நோக்கம். தோள் → தோண்]*

**தோத்தி** *tōtti,* பெ. (n.) விளையாட்டில் தோற்றவர் (நெல்லை.); one who is defeated in a game.

மறுவ. தோற்றாங்கொள்ளி

*[தோல்வி → தோல் → தோத்தி]*

**தோத்தை** *tōttai,* பெ. (n.) சிறங்கையளவு; small quantity - as can be held in the hollow of the hand.

மறுவ. உள்ளங் கையளவு

க. தோதே; தெ. தோதெமு

**தோதகத்தி**[1] *tōdagatti,* பெ. (n.) 1. நூக்கமரம் அல்லது ஈட்டி மரம்; Indian rosewood. 2. புங்கு; Indian beech (சா.அக.).

**தோதகத்தி**[2] *tōdagatti,* பெ. (n.) 1. வஞ்சகி; deceitful woman. 2. கற்பொழுக்கமற்றவள் (யாழ்.அக); immodest woman (செ.அக.).

**தோதகம்** *tōdagam,* பெ. (n.) 1. வருத்தம்; vexation, pain. "தோதகமாக வெங்கும்" (சீவக. 463). 2. வஞ்சகம்; guilt, fraud, deceit. "தோதகத்துட னென்னையோ சகுனிதன் சூதினுக் கெதிரென்றான்" (பாரத. சூது. 6). 3. சாலவித்தை; sleight of hand, jugglery. "தோதகம் பலகாட்டி" (திருவாலவா. 17). 4. கற்பொழுக்கமின்மை; immodesty, lewdness (செ.அக.).

**தோதகமாடு-தல்** *tōdagam-āḍu-,* 5 செ.குன்றாவி. (v.t.) 1. இடையூறு பண்ணுதல்; to tease, annoy, bother. 2. ஒழுக்கமற்றிருத்தல்; to be immodest, as a woman (சா.அக.).

*[தோதகம் + ஆடு-.]*

**தோதகன்** *tōdagaṉ,* பெ. (n.) 1. ஒழுக்க மற்றவன்; quarrelsome, immodest person. 2. வஞ்சகன்; deceiver. 3. கடுகடுப்புள்ளவன்; unhappy, vexed person (செ.அக.).

**தோதகி** *tōdagi,* பெ. (n.) சவுட்டு மண்; fuller's earth (சா.அக.).

**தோதம்** *tōdam,* பெ. (n.) ஆவின் கன்று; cow calf (சா.அக.).

**தோதவத்தி** *tōdavatti,* பெ. (n.) தூய ஆடை; clean clothes. "தோதவத்தித் தூமறையோர்" (திவ். பெரியாழ். 4, 8,1).

**தோதலி-த்தல்** *tōdali-,* 4 செ.கு.வி. (v.i.) *முரணுதல்;* to be perverse. "மெத்த மெத்தத் தோதலித்துப் பேசுஞ் சுணைகெட்ட மூளி" *(பஞ்ச. திருமுக. 1509).*

**தோதனா** *tōdanā,* பெ. (n.) **சிறுகீரை;** field spinach *(சா.அக.).*

**தோதானநேரம்** *tōtāna-nēram,* பெ. (n.) **ஏந்தான** *நேரம்;* suitable time.

*[ஏது → தோது]*

**தோதிகம்** *tōdigam,* பெ. (n.) **பேராமுட்டி;** fragrant sticky *(சா.அக.).*

**தோதிபேலா** *tōdipēlā,* பெ. (n.) **செடி வகை** *(மலை);* pink-tinged white sticky mallow *(செ.அக.).*

**தோது** *tōdu,* பெ. (n.) *1.* **தொடர்பு;** connection. நீ சொல்வதற்குமிதற்கும் என்ன தோது? *2.* **பொருத்தம்;** affinity, suitability. பெண்ணுக்கும் மாப்பிள்ளைக்கும் தோதில்லை. *3.* **ஒப்பு;** equality, similitude, paralled. அவனுக்குத் தோது ஒருவருமில்லை. *4.* **போட்டி;** rivalry, dispute. அவனோடு உனக்கென்ன தோது? *5.* **நலம் வாய்ப்பு;** convenience. அவரைச் சந்திக்க எப்பொழுது தோதுபடும். *6.* **விழுக்காடு (வீதம்);** established rate. தோதுப்படி கொடுப்பேன். *7.* **வழி வகை;** device, means. அந்தச் செயல் முடிய ஒரு தோது சொல் *(செ.அக.).*

க. தோது; தெ. தோது

*[தொது → தோது]*

**தோதுவாது** *tōtu-vādu,* பெ. (n.) **நேரங்காலம்;** time and opportunity. அவரிடம் தோதுவாது பார்த்துப் பேசு *(நெல்லை)*

*[தோது + வாது]*

**தோப்பணம்** *tōppaṇam,* பெ. (n.) **தொப்பணம்** *பார்க்க;* see *toppaṇam.* (திருப்புகழ். தொகுதி. 1, பக். 4, கீழ்க்குறிப்பு).

**தோப்பாடி** *tōppādi,* பெ. (n.) **கொடியவன் (வின்.);** wicked, base person *(செ.அக.).*

தெ. த்ரோபரி

**தோப்பாண்டி** *tōppāṇḍi,* பெ. (n.) **சிவன் கோயில், மலர்ச்சோலையிற் பணி செய்யும் இரவலன்** *(நாஞ்);* saiva devotee who waters the flower-garden of a temple *(சா.அக.).*

மறுவ. பண்டாரம்

*[தோப்பு + ஆண்டி]*

**தோப்பாதாயம்** *tōppādāyam,* பெ. (n.) **தோட்ட** *வருவாய்;* income from a grove of trees *(செ.அக.).*

*[தோப்பு + ஆதாயம்]*

**தோப்பாமீன்** *tōppāmīṉ,* பெ. (n.) **ஒரு வகைக் கடல் மீன்;** a sea fish (catta calta).

**தோப்பி**[1] *tōppi,* பெ. (n.) *1.* **நெல்லாற் சமைத்த கள்;** beer. "பாப்புக்கடுப்பன்ன தோப்பி பருகி" *(அகநா. 348)* *2.* **கள் (திவா.);** toddy.

**தோப்பி**[2] *tōppi,* பெ. (n.) **நெல்லி;** Indian gooseberry *(சா.அக.).*

**தோப்பிக்கரணம்** *tōppi-k-karaṇam,* பெ. (n.) **தொப்பணம்** *பார்க்க;* see *toppaṇam.*

**தோப்பிக்கள்** *tōppi-k-kaḷ,* பெ. (n.) **தோப்பி**[1] *பார்க்க;* see *tōppi.* "தோப்பிக்கள்ளொடு துரூஉப்பலி கொடுக்கும் போக்கருங் கவலைய" *(அகநா. 35).*

*[தோப்பி + கள்]*

**தோப்பு** *tōppu,* பெ. (n.) **சோலை** *(பிங்.);* tope. தனிமரம் தோப்பாகுமா *(பழ.).*

ம. தோப்பு; க., தெ., து. தோபு

*[தொகுப்பு → தோப்பு]*

**தோப்புக்கண்டம்** *tōppu-k-kaṇḍam,* பெ. (n.) **தொப்பணம்** *பார்க்க;* see *toppaṇam (செ.அக.).*

*[தோப்பிக்கரணம் → தோப்புக்கரணம் → தோப்புகண்டம் (கொ.வ.)]*

**தோப்புக்கரணம்** *tōppu-k-karaṇam,* பெ. (n.) **தொப்பணம்** *பார்க்க;* see *toppaṇam.*

**தோப்புக்கரணம்போடு**[1]**-தல்** *tōppu-k-karaṇam-pōḍu-,* 20 செ.கு.வி. (v.i.) **பிறர் சொன்னபடி யெல்லாம் நடத்தல்;** to be submissive *(செ.அக.).* பொண்டாட்டி தோப்புக்கரணம் போடு என்றால் எண்ணிக் கொள் என்பான் *(உ.வ.).*

**தோப்புக்கரணம்போடு**[2]**-தல்** *tōppu-k-karaṇam pōḍu-*, 20 செகுவி. (v.i.) தொப்பணம்போடு-தல் பார்க்க; see *toppaṇam-pōḍu-*.

மறுவ. உக்கி போடுதல்

**தோப்புநெல்லி** *tōppu-nelli*, பெ. (n.) தோப்பி[2] பார்க்க; see *tōppi* (சா.அக.).

*[தோப்பு + நெல்லி]*

**தோப்புமரம்** *tōppu-maram*, பெ. (n.) தோப்புகளில் கூட்டமாகவும், பல இன, தன் இன மரங்களுடன் வளரும் மரம்; tree which grows in the tope in single or in group with other kinds of trees.

*[தோப்பு + மரம்]*

**தோப்புறா** *tōppuṟā*, பெ. (n.) நிலவரி; land tax. தோப்புறா பணத்திற்கு அண்ணே நம்மை தொந்தரை செய் தொற்றைக் காலில் நிற்க வைப்பா னண்ணே. *(நாட்.பா.)*

**தோப்புக்குடிகள்** *tōppu-k-kuḍigaḷ*, பெ. (n.) வழிபாடு, திருப்படையல் ஆகியவற்றிற்குரிய காய்கள், பழங்கள் ஆகியவற்றைக் கோயிலார் விட்ட நிலத்திலேயே பயிர் செய்து, அங்கேயே குடியிருக்கும் கோயிற் பணியாளர்; people who live in the temple land, and render service by cultivating fruit trees to yield fruits for worship.

*விக்கிரம சிங்கபுரத்து மேற் புறத்தில் செய்வித்த ஆளியார் திருத்தோப்பில், பலாக்காய், வாழைக்காய், பழங்கள் உள்ளிட்டவை திருமடைப் பள்ளி பண்டாரத்துக்கு முதலாக எடுக்கவும், தோப்புக் குடிகளாக ஐம்பது ஆள் முதல் கொள்ளவும்"* (தெ.க.தொ.8.கல்52).

*[தோப்பு + குடிகள்]*

**தோப்பை** *tōppai*, பெ. (n.) தொங்குதசை; anything which is flabby, as a leather bag (செ.அக.). "விரல் தோப்பையாய்க் கழன்று போயிற்று"

*[தோற்பை → தோப்பை]*

**தோப்பைமுலை** *tōppai-mulai*, பெ. (n.) சரிந்த முலை; loose breast *(சா.அக.)*.

*[தோப்பை + முலை. தோப்பை = தொங்கும் தசை]*

**தோபனி** *tōpaṉi*, பெ. (n.) *1.* மிகுபனி; excess dew. *2.* உறைந்த பனி; snow, ice.

மறுவ. மூடுபனி

*[தோல் + பனி]*

**தோம்** *tōm*, பெ. (n.) *1.* குற்றம்; fault, defect, blemish. "தோமறு கடிஞையும்" *(சிலப். 10; 98)*. *2.* தீமை; moral evil, vice. *3.* துன்பம்; trouble. "தீச்சொல்லிறுத்தனர் தோமும்" *(கல்லா. 74:24)* (செ.அக.).

**தோம்பு**[1] *tōmbu*, பெ. (n.) சிவப்பு; redness, red dye.

**தோம்பு**[2] *tōmbu*, பெ. (n.) ஊடும், பாவும் ஒரே நிறமுடைய வண்ண வேட்டி (லுங்கி); tartan with the same colour warp and the woof (உழ.நெ.க.சொ.).

**தோம்பு**[3] *tōmbu*, பெ. (n.) நிலவிவரக் கணக்கு (வின்.); public register of lands.

**தோம்புச்சீலை** *tōmbu-c-cīlai*, பெ. (n.) சிவப்புச் சீலை; red cloth.

*[தோம்பு + சீலை]*

**தோமக்காரன்** *tōma-k-kāraṉ*, பெ. (n.) மாப்பிள்ளைத் தோழன் (தமி.சொ.); bridegroom's companion.

*[தோமம் + காரன்]*

**தோமம்** *tōmam*, பெ. (n.) தடித்த நாடி; selerosis.

**தோமரம்** *tōmaram*, பெ. (n.) *1.* தண்டாயுதம்; large club. "தோமரவலத்தர்" *(பதிற்றுப். 54, 14)*. *2.* கைவேல் (பிங்.); lance, javelin, dart. *3.* வாச்சியம் (அக.நி.); drum. *4.* இருப்பு உலக்கை; iron pestle.

**தோய்**[1] *tōy*, பெ. (n.) உவமச் சொல்; similie word.

**தோய்**[1]**-தல்** *tōy*, 3 செ.குன்றா.வி. (v.i.) *1.* முழுகுதல்; to bathe, commonly in cold water. "மங்கையர் தோய்தலால் *(கம்பரா. நீர்விளை. 19)*. *2.* நனைதல்; to become wet, soaked. "தோயுங் கதழ் குருதி" *(பு.வெ. 4:16)*. *3.* நிலத்துப் படிதல் (வின்.); to trial, as a long garment. *4.* உறைதல்; to be curdled, as milk; to be thickened, clotted, coagulated, as blood. "தோயும் வெண்டயிர்" *(கம்பரா. நாட்டுப். 28)*. *5.* செறிதல்; to be dense, crowded. "தோய்ந்த

விசும் பென்னுந் தொன்னாட்டகம்" (சீவக. 290). 6. அகப்பட்டுக் கொள்ளுதல்; to commit oneself in speaking, used in the negative. அவன் தோயாமல் பேசுகிறான்.

ம. தோயுக; க. தோய், துய், தொய்யு, தொய், தோ; தெ. தோகு, தோகு; து. தொய்புனி, தொயிபுனி, தோயிபுனி; கோத. தோய்; துட. த்விய்

[தொய் → தோய்]

**தோய்²-தல்** *tōy-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. பொருந்துதல்; to come in contact with, reach, touch. "தாடோய் தடக்கை" (புறநா. 14). 2. அணைதல்; to unite, embrace, copulate. "நிறைநெஞ்ச மில்லவர் தோய்வர்" (குறள், 917). 3. முகத்தல்; take in, as water. "கருங்கலந் தோய்விலாக் காமர் பூந்துறை" (சீவக. 97). 4. கலத்தல்; to mix, blend, mingle, associate with, keep company. "தோய்ந்தும் பொருளனைத்துந் தோயாது" (கம்பரா. சரபங்.27). 5. நட்டல்; to be in friendship with. "தோய்ந்தாருட்டோய்ந்தா ரெனப்படுதல்" (திரிகடு. 81). 6. கிட்டுதல்; to approach. "விண்டோயு மிளை கடந்து" (புவெ. 6: 16). 7. ஒத்தல்; to resemble. விசும்புதோ யுள்ளமொடு (மலைபடு. 558). 8. துவைச்சலிடுதல்; to temper by dipping in water, as heated metal (சாஅக.).

க. தோ

**தோய்³-த்தல்** *tōy-*, 2 செ.குன்றாவி. (v.t.) 1. நனைத்தல்; to dip, soak. 2. துவைச்சலிடுதல்; to temper, as iron. "இரும்பைக் கருமகக் கம்மியன் றோய்த்த தண்புனல்" (கம்பரா. பம்பைப். 37). 3. உறையச் செய்தல்; to thicken, curdle. "தோய்த்த தண்டயிர்" (திவ். பெருமாள். 2,4). 4. சாய மேற்றுதல்; to dye, tinge, stain, imbue. 5. ஆடை துவைத்தல்; to wash, cleanse. துணி தோய்க்கிறான்.

ம. தோய்க்குக

[துவை → தோய்]

**தோய்ச்சல்** *tōyccal*, பெ. (n.) 1. உறைகை; curdling as milk. 2. இரும்பைத் துவைச்ச விடுகை; tempering heated metal.

[தோய் → தோய்ச்சல்]

**தோய்தலை** *tōy-talai*, பெ. (n.) பொடுதலை; creeping vervain (சாஅக.).

**தோய்ந்தார்** *tōyndār*, பெ. (n.) நட்பினர்; friends. "தோய்ந்தாருட் டோய்ந்தா ரெனப் படுதல்" (திரிகடு. 81).

[தோய் → தோய்ந்தார்]

**தோய்ந்துபோ-தல்** *tōyndu-pō-*, 8 செ.கு.வி. (v.i.) உறைந்து போகுதல்; to coagulate (சாஅக.).

[தோய்ந்து + போ-.]

**தோய்ந்தூட்டு-தல்** *tōyndūṭṭu-*, 12 செ.குன்றாவி. (v.t.) தண்ணீர் அல்லது எண்ணெயில் சுவறும்படி அடிக்கடி நனைத்தல்; to dip frequently in water juice or oil (சாஅக.).

[தோய்ந்து + ஊட்டு-.]

**தோய்ப்பன்** *tōyppaṉ*, பெ. (n.) ஒரு வகை இனிப்புப் பணியாரம்; a kind of sweet pastry ball (செஅக.).

**தோய்ப்பாடி** *tōy-p-pāḍi*, பெ. (n.) தோப்பாடி பார்க்க; see *tō-p-paḍi*. "தோய்ப்பாடி கூனியும்" (இராமநா. அயோத். 4).

தெ. த்ரோபரி

[தோப்பாடி → தோய்பாடி]

**தோய்ப்பான்** *tōyppāṉ*, பெ. (n.) பணியாரமா; mixed flour for making cakes (செஅக.).

**தோய்ப்பு** *tōyppu*, பெ. (n.) தோய்ச்சல் பார்க்க; see *tōyccal* (செஅக.).

[தோய் → தோய்ப்பு]

**தோய்பனி** *tōy-paṉi*, பெ. (n.) மிகுபனி; heavy dew(செஅக.).

[தோய் + பனி. தோய் = செறிந்த]

**தோய்பிழி** *tōy-piḻi*, பெ. (n.) செறிந்த மது; rich wine.

[தோய் + பிழி. பிழி = சாறு, நறவு, கள்]

**தோய்வு¹** *tōyvu*, பெ. (n.) 1. ஏற்றபடி கலத்தல்; mixing or combining in due proportions. 2. கலப்பு; mixture, the act of mixing. 3. எண்ணெய் தேய்த்துக் கொள்ளாது

குளித்தல்; ordinary bath without anoiting oil (சா.அக.).

[தோய் → தோய்வு]

**தோய்வு**[2] *tōyvu,* பெ. (n.) தோயல்; unite (சுழ.தமி.அக.).

**தோய்வுறு-த்தல்** *tōyvuṟu-,* 4 செ.குன்றாவி. (v.t.) முழுமையான, ஒரே சீரான ஊடுபரவல் ஏற்படும் வரை எஃகை ஒரு குறிப்பிட்ட வெப்பநிலையில் வைத்திருத்தல்; to soake iron in a particular heat.

[தோய் → தோய்வுறு]

**தோயக்கல-த்தல்** *tōya-k-kala-,* 3 செ.குன்றாவி. (v.t.) நனையும்படி ஊற்றிக் கலத்தல்; to mix after fully wetting (சா.அக.).

[தோய்வு + கல-.]

**தோயடம்** *tōyaḍam,* பெ. (n.) சடாமாஞ்சி; Indian spilenand (சா.அக.)

**தோயதி** *tōyadi,* பெ. (n.) கடல்; sea (செ.அக.).

**தோயப்பகை** *tōya-p-pagai,* பெ. (n.) நீர் உடம்புக்கு ஒவ்வாமை; disagreeableness of water of a plce to one's health due to climate difference from the native one (சா.அக.).

**தோயப்பண்ணு-தல்** *tōya-p-paṇṇu-,* 12 செ.குன்றாவி. (v.t.) நீரில் மூழ்கும்படி செய்தல்; to immerse.

[தோய் + பண்ணு-.]

**தோயப்பம்** *tōyappam,* பெ. (n.) தோசை (வின்.); rice cake (செ.அக.).

[தோய் → தோயை + அப்பம்.]

**தோயபாணம்** *tōyapāṇam,* பெ. (n.) பொடுதலை (தைலவ. தைல.) பார்க்க; see *poḍutalai* (செ.அக.).

**தோயம்** *tōyam,* பெ. (n.) 1. நீர் (பிங்.); water. "தோய மெதிர்வழங்கு கொண்மூ" (பு.வெ. 8:28). 2. கடல் (பிங்.); sea. "தோயமுஞ் சுவறப் பொரும் வேலா" (திருப்பு. 101).

ம. தோய

[தொள் → தோள் → தோய் → தோயம். ஒ.நோ. புள் → பொள் → பொய் → பொய்கை (மு.தா. 268)]

த. தோயம் → Skt. tōyā

**தோயல்** *tōyal,* பெ. (n.) 1. இரும்பைக் காயச்சித் தோய்த்தல்; dipping of a heated red hot iron or instrument into water. 2. குளித்தல்; bathing commonly in cold water (சா.அக.).

[தோய் → தோயல்]

**தோயல்வாய்த்தல்** *tōyal-vāittal,* பெ. (n.) நேரம் வாய்க்கை (யாழ்ப்.); occuring of a good opportunity.

[தோயல் + வாய்த்தல்]

**தோயாஞ்சுபத்திரம்** *tōyañju-pattiram,* பெ. (n.) காட்டாத்தி; holy mountain (சா.அக.).

**தோயாப்பூ** *tōyā-p-pū,* பெ. (n.) அகவை யடைந்தும் பூப்படையாத பெண்; woman not attained puberty though aged enough.

[தோயா + பூ. 'தோயா' – ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்]

**தோயாப்பூப்பு** *tōyā-p-pūppu,* பெ. (n.) பூப்படையாமை; not matured (சா.அக.).

[தோயா + பூப்பு. 'தோயா' ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்]

**தோர்-த்தல்** *tōr-,* 4 செ.கு.வி. (v.i) தோல் பார்க்க; see *tōl.* "தோராத தனிவீரன் தொழுத கோயில்" (தேசிகப் பிரபந்தம்).

ம. தோல்க; க. சோல்

[தோல் (தோல்வி) → தோர்]

**தோர்த்தண்டன்** *tōr-t-taṇḍaṉ,* பெ. (n.) திண்டோளன் (கொண்டல்விடு.); person strong in his arm (செ.அக.).

[தோர் + தண்டன்

தோள் → தோர்]

**தோர்ப்பாடி** *tōr-p-pāḍi,* பெ. (n.) தன்மான மற்றவன் (இ.வ.); a shameless loafer.

[தோப்பாடி → தோர்ப்பாடி]

**தோர்மூலம்** *tōr-mūlam,* பெ. (n.) அக்குள்; arm pit (சா.அக.).

[தோள் + மூலம்]

**தோர்வி** *tōrvi,* பெ. (n.) பின்னிடல்; flinch.

[தோல்வி → தோர்வி (கொ.வ.)]

**தோர்வை** *tōrvai,* பெ. (n.) தோல்வி (வின்.); defeat.

*[தோல்வி → தோர்வை (கொ.வ.)]*

**தோரக்கால்** *tōra-k-kāl,* பெ. (n.) வளைவைத் தாங்கும் தூண்; pillar bears the roof.

**தோரணக்கந்து** *tōraṇa-k-kandu,* பெ. (n.) தோரணகம்பம் பார்க்க; see *toraṇa-kambam.* "தோரணக் கந்தின் றாண் முதற் பொருந்தி" (பெருங்.உஞ்சைக். 47:6).

*[தோரணம் + கந்து]*

**தோரணக்கல்** *tōraṇa-k-kal,* பெ. (n.) நீராழமறியுங் கல் (வின்.); stone pillar erected in a large tank to show the depth of water (செ.அக.).

*[தோரணம் + கல்]*

**தோரணக்கால்** *tōraṇa-k-kāl,* பெ. (n.) 1. தோரணகம்பம் பார்க்க; see *tōraṇa-kambam.* 2. ஒப்பனைத் தொங்கல் கட்டுங்கால்; pole supporting ornamental arches of twigs or leaves. 3. திருவாசிக்கால்; pillar of the aureola over the idol. "தேவரையும் . . . கவித்த தோரணக் காலிரண்டும்" (S.I.I.ii, 179).

*[தோரணம் + கால்]*

**தோரணகம்பம்** *tōraṇa-kambam,* பெ. (n.) கோயில் முதலியவற்றின் முன்வாயிலில் ஒப்பனை வளைவைத் தாங்கி நிற்கும் கம்பம்; posts at the entrance, as of a temple surmounted by an arch. "தோரண கம்பத்தெஞ் ஞான்றும் வீற்றிருக்கும் பெருமானை" (தணிகைப்பு. காப்பு.2). 2. தோரணக்கால்,2 பார்க்க; see *tōraṇa-k-kāl.*

*[தோரணம் + கம்பம்]*

**தோரணகாணிக்கை** *tōṟaṇa-kāṇikkai,* பெ. (n.) வீதிகளில் தோரணமிட்டு, ஒப்பனை செய்தற்கு, ஊரவையார் பெறும் வரி; tax collected by the village committee for festoons of leaves, and flowers suspended across streets and entrances.

*[தோரணம் + காணிக்கை]*

**தோரணதீபம்** *tōraṇa-tībam,* பெ. (n.) தோரணவிளக்கு பார்க்க; see *tōraṇa-viḷakku.*

**தோரணப்பலகை** *tōraṇa-p-palagai,* பெ. (n.) குத்துக் கல்லில் அல்லது குத்துக் காலில் பொருத்தப்பட்டிருக்கும் மரப்பலகை; a wooden rod attached to the, up right stand of a frame.

*[தோரணம் + பலகை]*

**தோரணம்**[1] *tōraṇam,* பெ. (n.) 1. தெருவிற் குறுக்காகக் கட்டும் ஒப்பனைத் தொங்கல்; festoons of leaves and flowers suspended across streets and entrances an auspicious occasions. "புரமெங்குந் தோரணநாட்டக் கனாக்கண்டேன்" (திவ். நாய்ச். 6:1). 2. ஒப்பனை வளைவுள்ள வாயில்; ornamented gateway surmounted with an arch. "தோரணத்தி ஞும்பரிருந்த தோர் நீதியானை" (கம்பரா. அட்ச. 21). 3. நீராட்டுமிடத்திற் கட்டும் வரம்பு; mound raised near a bathing place for a mark. 4. துலை தாங்கி; beam of a balance (செ.அக.).

ம. தோரணம்

*[துருவு → தூர் → தோர் → தோரணம். தூர்தல் = புகுதல், துருவுதல், குறுக்காகச் செல்லுதல்]*

**தோரணம்**[2] *tōṟaṇam,* பெ. (n.) 1. குரங்கு (பிங்.); monkey. 2. போக்குவரத்திற்குரிய வண்டி (யாழ்.அக.); conveyance (செ.அக.).

**தோரணம்**[3] *tōṟaṇam,* பெ. (n.) முன்காலை வைத்த சுவட்டிடத்தே பின்காலை வைத்து நடக்கும் யானை நடைத்தோரணை; gait of an elephant in which it places its hind foot in the track of its forefoot. "முன்ன ரூன்றிய காற்குறி தன்னிற் பின்னர்ப் பதமிடுவது தோரண மென்ப" (பன்னிருபா. 276).

**தோரணரேகை** *tōraṇa-rēgai,* பெ. (n.) தோரணவரிகை பார்க்க; see *tōraṇa-varigai.*

**தோரணவரிகை** *tōraṇa-varigai,* பெ. (n.) கையிற் காணப்படுவதொரு வரைவகை; a kind of mark in the palm (செ.அக.).

*[தோரணம் + ரேகை]*

**தோரணவாசல்** *tōraṇa-vāšal,* பெ. (n.) தோரணம்[1],2 பார்க்க; see *tōraṇam*[1]*-2.*

*[தோரணம் + வாசல்]*

**தோரணவாயில்** *tōraṇa-vāyil,* பெ. (n.) தோரணம்[1], 2 பார்க்க ; see *tōraṇam*[1],2. "கொடித் தோன்றுந் தோரணவாயில் காப்பானே" *(திவ். திருப்பா. 16).*

*[தோரணம் + வாயில்]*

**தோரணவிளக்கு** *tōraṇa-viḷakku,* பெ. (n.) தோரணமாகப் பந்தங்களைக் கட்டி திருவிழாக் காலங்களில் தூக்கிச் செல்லும் தீப்பந்தம்; rod carried overhead, supporting a row of lights to grace procession (செ.அக.).

*[தோரணம் + விளக்கு]*

**தோரணவீதி** *tōraṇa-vīdi,* பெ. (n.) தோரணங்களால் ஒப்பனை செய்யப்பட்ட தெரு; streets decorated with festoons. "தோரண வீதியுந் தோமறு கோட்டியும்" *(மணிமே. 1:43).*

*[தோரணம் + வீதி]*

**தோரணன்** *tōraṇaṉ,* பெ. (n.) யானைப் பாகன் (நாமதீப. 167); elephant's driver (செ.அக.).

**தோரணி**[1] *tōraṇi,* பெ. (n.) தோரணை (யாழ்.அக.) பார்க்க; see *tōraṇai.*

**தோரணி**[2] *tōraṇi,* பெ. (n.) ஓர் எடுத்துக்காட்டு வார்ப்பு; pattern.

*[தூர் → தோர் → தோரணி. தூர்தல் - புகுதல்]*

முன் மாதிரியாகக் கொண்டு ஒரே மாதிரியான பொருட்களை வார்ப்படம் மூலம் செய்வதற்கான படிவம்

**தோரணிக்கம்** *tōraṇikkam,* பெ. (n.) தோரணை பார்க்க; see *tōraṇai.*

**தோரணிப்பட்டறை** *tōraṇi-p-paṭṭarai,* பெ. (n.) வார்ப்படங்கள் உண்டாக்கப் பயன் படுத்துவதற்கான மரத்தோரணிகளை உருவாக்கும் பட்டறை; pattern shop.

*[தோரணி + பட்டறை]*

**தோரணிவார்ப்படம்** *tōraṇivār-p-paḍam,* பெ. (n.) வார்ப்படத் தொழிலில் பல்வேறு மாதிரிகளை அல்லது உருவரைகளை உண்டாக்கப் பயன்படும் வார்ப்படம்; pattern making.

*[தோரணி + வார்ப்படம்]*

**தோரணை**[1] *tōraṇai,* பெ. (n.) 1. துடித்தல்; palpitate. 2. நடை; style (கழ.அக.).

**தோரணை**[2] *tōraṇai,* பெ. (n.) முறை; order, arrangements, method, plan as of discourse. அவன் பேசுகின்ற தோரணையே சரியில்லை (உ.வ.).

*[தோர் → தோரணை = கோவை, கோவையாகச் சொல்லும் முறை]*

**தோரம்** *tōram,* பெ. (n.) இரண்டு கையும் பதாகையாக்கி அகம்புறமொன்றி முன் தாழ்ந்து நிற்கும் இணைக்கை வகை (சிலப். 3: 18, உரை); a gesture with both hands in their padāgai pose, in which they are stretched out and lowered a little in the front (செ.அக.).

**தோரமல்லி** *tōra-malli,* பெ. (n.) ஒருவகை மணி; tourmaline (திருவாலவா. 25, 22. அரும்.).

**தோராமல்லி** *tōrā-malli,* பெ. (n.) தோரமல்லி பார்க்க; see *tōra-malli.*

*[தோரமல்லி → தோராமல்லி]*

**தோராயம்** *tōrāyam,* பெ. (n.) ஏறத்தாழ; approximate, estimate, guess. தோரயமாக இந்த நகை எவ்வளவு இருக்கும் (உ.வ.).

**தோராவல்லி** *tōrā-valli,* பெ. (n.) தோரமல்லி பார்க்க; see *tōra-malli.* கனகதோராவல்லி' (திருவாலவா. 25, 22).

*[தோரமல்லி → தோராமல்லி → தோராவல்லி]*

**தோராவழக்கு** *tōrā-vaḻakku,* பெ. (n.) ஓயாத வழக்கு; endless wrangle. "தோரா வழக்கிட்டால் வகை வாராவழக் கிடுவேன்" *(தனிப்பா. 1, 271:11).*

*[(தோல்வி) தோல் → தோர் + ஆ + வழக்கு. 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தோரி** *tōri,* பெ. (n.) சோறு (அக.நி.); boiled rice.

**தோரியம்** *tōriyam,* பெ. (n.) 1. கூத்து; dancing. 2. இசைக்கருவி; musical instrument (செ.அக.).

**தோரியமகள்** *tōriya-magaḷ,* பெ. (n.) 1. ஆடி முதிர்ந்த பெண்; expert dancing girl. "தொன்னெறி யியற்கைத் . . . தோரிய மகளிரும்" *(சிலப். 3:134).* 2. பின்பாட்டுப் பாடுவோர்; playback singers. வாரம் பாடும் தோரிய மகளிரும் *(சிலப். 14:15).*

*[தோரியம் + மகள்]*

**தோரை** *tōrai,* பெ. (n.) 1. ஒருவகை மலைநெல்; a kind of paddy raised in hilly tracts. "கோட்டின் வித்திய குறுங்கதிர்த் தோரை" *(மதுரைக். 287).* 2. மூங்கிலரிசி (திவா.); bamboo seed, as resembling rice. 3. கைவரை (சூடா.); lines on the palm and the fingers of the hand. 4. மயிற்பீலி விசிறி; bunch of peacock's feathers, used as a fan. "கவரியினிரை தோரை" *(கோயிற்பு. திருவிழா. 29).* 5. அணிவடம்; strings of jewels. "பொற்றோரை மின்ன" *(சீவக. 2132).* 6. நான்கு விரற்கிடை அளவுள்ள நீட்டலளவை வகை; a standard linear measure, of four fingers, breath. இரண்டு தோரை உசரத்து . . . பத்மம் *(S.I.I.ii, 135).* 7. மங்கல நிறம்; pale reddish colour. 8. செங்காய் கொண்ட பனை வகை (யாழ்ப்.); a palmyra tree producing reddish fruit. 9. குருதி (வின்.); blood (செஅக.).

தெ. தோர

*[துவர் → தோரை]*

**தோரையம்** *tōraiyam,* பெ. (n.) புல்லாமணக்கு; creeping castor plant.

**தோல்[1]-தல் (தோற்றல்)** *tōl-,* 13 செ.குவி. (v.i.) 1. தோல்வியுறுதல்; to be defeated, discomfited, vanquished, as in battle, game, dispute etc., "தோற்பதறியார்" *(நாலடி. 313).* 2. ஒப்பிற்றாழ்தல்; to fail in comparison. "பரவலருங் கொடைக்கு . . நெடும்பண்பு தோற்ற . . : கற்பகமும்" *(கம்பரா. சடாயுகாண். 21).* 3. இணங்குதல்; to yield, flinch, give way voluntarily.

**தோல்[2]-தல் (தோற்றல்)** *tōl-,* 12 செகுன்றாவி. (v.t.) இழத்தல்; to lose. "தோற்றோமடநெஞ்ச மெம்பெருமான் நாரணற்கு" *(திவ். திருவாய். 2. 1:7).*

ம. தோல்க்குக; க. சோல், சோலு; து. தோல்புனி, சோபுனி, தோலுனி; குட., கோத. சோல்; துட. த்வில்; பட. சோலு

**தோல்[3]** *tōl,* பெ. (n.) 1. தோல்வி (பிங்.); defeat, discomfiture. 2. அல்லூழ் (வின்.); misfortune, ill-luck (செஅக.).

**தோல்[4]** *tōl,* பெ. (n.) 1. தோல்; skin, leather, hide. "தோற்பையு ணின்று" *(நாலடி. 26).* 2. புறணி; bark, rind, peel, scales or coats of onion and other bulbous roots. தோலிருக்கச் சுளைவிழுங்கி *(பழ.).* 3. விதையின் மேற்றோல்; pod, husk of seeds. 4. உடம்பு (குறள், 1043, உரை); body. 5. தோலினாலியன்ற கேடகம்; leathern buckler, shield. "தோலின் பெருக்கமும்" *(தொல்.பொருள். 67).* 6. துருத்தி; bellows. "மென்றோன் மிதியுலைக் கொல்லன்" *(பெரும்பாண். 206).* 7. சேணம், பக்கரை; saddle. "தோறுமிபு வைந்நுனைப் பகழி மூழ்கலின்" *(முல்லைப். 72).* 8. மூங்கில் (மலை); bamboo.

ம. தோல், தோலு; க. தோல், தெரவன்; தெ., பட. தோலு; து. தோலிகெ; நா., கொலா., பர். தோல்; குட. தொலி; கோண். தோல்; குவி. தோலு, தோலூ

**தோல்[4]** *tōl,* பெ. (n.) 1. பழையதொரு பொருண்மேல் மெல்லென்ற சொல்லான் அறம் பொருளின்பம் வீடு என்ற விழுமிய பொருள் பயப்பச் செய்யப்படும் நூல்; poem narrating an ancient story and inculcating the purusarthas in a felicitous diction. "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும் பரந்த மொழியான் அடிநிமிர்ந்து ஒழுகினும் தோலென மொழிப தொன்மொழிப் புலவர்" *(தொல். பொருள். 551).* 2. அழகு (பிங்.); beauty. 3. யானை; elephant. "புரைத்தோல் வரைப்பின்" (மலைபடு. 88). 4. புகழ்; fame. "தொல்வரவுந் தோலுங் கெடுக்கும்" *(குறள், 1043).* 5. பேச்சு (சூடா.); speech, utterance.

*[தொல் → தோல் = பழைமை, பழம் பொருள் பற்றிய நூல், பழைமையான புகழ் (மு.தா. 274)]*

**தோல்கச்சை** *tōl-kaccai,* பெ. (n.) வார்ப்படத் தொழிலில் வார்ப்படங்களின் வலிமையை அதிகரிக்கவும், வார்ப்பட மணலில் கூர் முனைகளை நீக்கவும் பயன்படும் தோலினாலான பட்டை; leather filler.

*[தோல் [4] + கச்சை]*

**தோல்காய்ப்பு** *tōl-kāyppu,* பெ. (n.) சதை காய்த்துக் கெட்டிப்படுதல்; any thickened or hardened part on the surface of the human body or animal (சா.அக.).

[தோல் + காய்ப்பு]

**தோல்கீழ்ப்பீச்சி** *tōl-kīḻ-p-pīcci,* பெ. (n.) உடம்புத் தோலின் கீழாகப் பீச்சுவதற்குப் பயன்படும் கருவி; a syringe for injecting substances beneath the skin (சா.அக.).

[தோல் + கீழ் + பீச்சி]

**தோல்சிலிர்-த்தல்** *tōl-šilir-,* 4 செ.கு.வி. (v.i.) நீண்ட நேரம் தண்ணீரிற் கிடப்பதால் உடம்பின் சதை சுருங்கி வெளுத்தல்; to erect of the papillae of the skin as from remaining in water for a long time (சா.அக.).

[தோல் + சிலிர்-.]

**தோல்சீவல்** *tōl-šīval,* பெ. (n.) மேற்றோல் கழித்தல்; scarpping of or removing the skin by rubbing (சா.அக.)

[தோல் + சீவல்]

**தோல்சுத்தி** *tōlšutti,* பெ. (n.) பதனிடப்படாத தோல் கொண்டையையுடைய கைச்சுத்தி; raw hide hammer.

[தோல் + சுத்தி]

மாழை உறுப்புகளில் இச்சுத்தியைப் பயன்படுத்தும் போது சிறல்கள் ஏற்படாமல் இருக்கும் (அறி.கலை.களஞ்).

**தோல்தனம்** *tōltaṉam,* பெ. (n.) அறிவுக் குறைவு (யாழ்ப்.); imprudence (செ.அக.).

[தோல்³ + தனம். தோல்வியுறுதற்குக் காரணமாதலால் அறிவுக்குறைவு தோல்தனம் எனப்பட்டது]

**தோல்தீய்ச்சி** *tōl-tīycci,* பெ. (n.) தோலைச் சுடுதல்; burning the skin with caustic (சா.அக.).

[தோல் + தீய்ச்சி]

**தோல்நாய்** *tōl-nāy,* பெ. (n.) வேட்டை நாய் வகை (யாழ்.அக.); hunting dog, greyhound (செ.அக.).

[தோல் + நாய்]

**தோல்நோய்** *tōl-nōy,* பெ. (n.) 1. தோல் தொடர்பான நோய்; skin disease in general. 2. சொறி, சிரங்கு, புண், தேமல், படை, கொப்புளம், புற்று முதலிய நோய்கள்; pruritus itch, sore macula, ringworm boil, ulcer, cancer etc., 3. முறையற்ற உடலுறவு கொள்வதால் ஏற்படும் நோய்; skin affection arising from veneral and syphlitic causes (சா.அக.).

[தோல் + நோய்]

**தோல்நோய்க்காரம்** *tōl-nōy-k-kāram,* பெ. (n.) உணர்ச்சி உண்டாகும்படி தோல் நோயில் மேற்பூச்சாக தடவும் மருந்து; any stimulant application in skin diseases (செ.அக.).

[தோல் + நோய் + காரம்]

**தோல்பட்டினச்சுட்டான்** *tōl-paṭṭiṉa-c-cuṭṭāṉ,* பெ. (n.) தோல் போலும் மெல்லியதாகக் காணப்படும் மீன் (தஞ்சை.மீனவ.); a fish which has a soft skin.

[தோல் + பட்டினச்சுட்டான்]

இம்மீனைப் பட்டினவர் சுட்டுத் தின்பர்.

**தோல்பல்லிணை** *tōlpalliṇai,* பெ. (n.) இறுக்கமாக அழுத்தப்பட்டுப் பதனிடப் படாத தோல் வட்டுக்களினாலான ஓசை எழுப்பாத பல்லிணை; rawhide gears. (அறி.கலை.களஞ்)

[தோல் + பல் + இணை]

**தோல்பாரை** *tōlpārai,* பெ. (n.) மீன் வகை; butter fish.

[தோல் + பாரை]

**தோல்பாறை** *tōlpāṟai,* பெ. (n.) ஒரு வகைப் பாறை மீன்; kind of pāṟai fish. உடம்பு சப்பையாகவும் தோல் கனமாகவும் இருக்கும்.

[தோல் + பாறை]



**தோல்புரை-தல்** *tōlpurai-,* 3 செ.குன்றாவி. (v.t.) *தோலால் தைத்தல்;* to sew or fasten with thongs *(செ.அக.).*

*[தோல் + புரை-.]*

**தோல்புளி** *tōl-puḷi,* பெ. (n.) சதைக் குறைந்த புளி; tamarind with very little pulp *(சா.அக.).*

*[தோல் + புளி]*

**தோல்போக்கு-தல்** *tōl-pōkku-,* 5 செ.குன்றாவி. (v.t.) தோலுரி-த்தல் *பார்க்க;* see *tōl-uṛi-* *(சா.அக.).*

*[தோல் + போக்கு-.]*

**தோல்போலாகு-தல்** *tōlpōl-āgu-,* 5 செ.கு.வி. (v.i.) இளைத்தல்; to emaciate *(சா.அக.).*

*[தோல் + போல் + ஆகு-.]*

**தோல்மட்டம்** *tōl-maṭṭam,* பெ. (n.) தோல் ஆழம்; skin deep *(சா.அக.).*

*[தோல் + மட்டம்]*

**தோல்மாடு**[1] *tōl-māḍu,* பெ. (n.) சல்லிக்கட்டு மாடு; baiting bull *(செ.அக.).*

*[தோல் + மாடு]*

**தோல்மாடு**[2] *tōlmāḍu,* பெ. (n.) எலும்பும் தோலுமாய் இருக்கும் மாடு; emaciated cattles.

*மறுவ.* தொத்தல் மாடு

*[தோல் + மாடு]*

**தோல்முட்டை** *tōl-muṭṭai,* பெ. (n.) *1.* கருவில்லாத முட்டை; empty shell of egg. *2.* தோடு கடினமாதற்கு முன்பு இடப்பட்ட முட்டை (வின்.); egg laid before the shell is hard *(செ.அக.).*

ம. தோல்முட்ட; பட. தோலுமொட்டெ

*[தோல் + முட்டை]*

**தோல்மூடு-தல்** *tōl-mūḍu-,* 5 செ.குவி. (v.i.) பக்கு கட்டுதல்; to form a coat of skin over a sore or healing as scab *(சா.அக.).*

*[தோல் + மூடு-.]*

**தோல்மெருகு** *tōl-merugu,* பெ. (n.) தோல் பதனிடும் முறைகளுளொன்று; ooze leather *(அறி.கலை.களஞ்.).*

*[தோல் + மெருகு]*

தோலுக்கு வெல்வெட்டு போன்ற மென்மையான தன்மை அளிப்பதற்கு இம்முறை பயன்படும்

**தோல்மேலேறுதல்** *tōl-mēlēṟudal,* பெ. (n.) குழந்தை யாண் குறியின் நுனித்தோல் மேலேயேறிக் கீழிறங்காமற் போகும் நிலை; paraphimosis, condition of the private part in male children in which the foreskin is permanantly retracted *(செ.அக.).*

*[தோல் + மேல் + ஏறுதல்]*

**தோல்வழலுகை** *tōlvaḻalugai,* பெ. (n.) தோல் நோய் வகை; abrasian, susperficial excriation with loss of substance in the form of small shreds *(செ.அக.).*

**தோல்வறட்சி** *tōlvaṟaṭci,* பெ. (n.) *1.* உடம்பின் தோல் பசையற்று உலருதல்; abnormal dryness of the skin. *2.* சொறியால் மேற்றோல் சொரசொரத்து வறண்டு காணும் ஒரு நோய்; a disease marked by roughness and dryness of the skin especially in icththyosis *(செ.அக.).*

*[தோல் + வறட்சி]*

**தோல்வி** *tōlvi,* பெ. (n.) வெற்றியின்மை; discomfiture, loss, defeat. *"சால்பிற்குக் கட்டளையாதெனில் தோல்வி துலையல்லார் கண்ணுங் கொளல்" (குறள், 986).*

ம. தோன்ம, தோல்ம, தோல்வி

*[துல் → தொல் → தொலை. தொலைதல் = தளர்தல், தோற்றல். தொலை → தொலைவு = தோல்வி. தொல் → தோல் → தோல்வி (மு.தா. 286)]*

**தோல்வித்தானம்** *tōlvi-t-tāṉam,* பெ. (n.) தோல்வியுறுதற் கேதுவாகிய நிலை *(தருக்கசங். 36, நீலகண். 215);* weak point in an argument or fault in a syllogism *(செ.அக.).*

*[தோல்வி + தானம்]*

**தோல்வியாதி** *tōl-viyādi,* பெ. (n.) தோல்நோய் *பார்க்க;* see *tōl-nōy (சா.அக.).*

*[தோல் + வியாதி]*

Skt. vyādi → த. வியாதி

**தோல்விலாங்கு** *tōl-vilāṅgu*, பெ. (n.) விலாங்கு மீன் வகையுள் ஒன்று; kind of eel fish (மீனவ.).

*[தோல் + விலாங்கு]*

**தோல்வினைஞர்** *tōl-viṉaiñar*, பெ. (n.) தோல் வினைமாக்கள் (பிங்.) பார்க்க; see *tōl-viṉai-mākkaḷ* (செ.அக.).

*[தோல் + வினைஞர்]*

**தோல்வினைமாக்கள்** *tōl-viṉai-mākkaḷ*, பெ. (n.) செம்மார்; workers in leather (செ.அக.).

*[தோல் + வினை + மாக்கள்]*

**தோல்வீக்கம்** *tōl-vīkkam*, பெ. (n.) ஆண்குறியின் நுனித்தோல் மடங்குவதாலுண்டாகும் வீக்கம்; swelling of the penis due to paraphimsos (செ.அக.).

*[தோல் + வீக்கம்]*

**தோல்வு** *tōlvu*, பெ. (n.) தோல்வி (பிங்.) பார்க்க; see *tōlvi*. "சாலங்காயனைத் தோல்வினையேற்றி" (பெருங்.நரவாண. 7, 103).

*[தோல்வி → தோல்வு]*

**தோல்வேலைப்பாடு** *tōl-vēlai-p-pāḍu*, பெ. (n.) கருவிகளைக் கொண்டு தோலில் செய்யப் படும் ஒப்பனை வேலைப்பாடு; leather craft.

*[தோல் + வேலைப்பாடு]*

**தோல்வை-த்தல்** *tōl-vai-*, 4 செ.குன்றாவி. (v.i.) ஆறின புண்ணில் புதுத்தோல் உண்டாதல் (யாழ்ப்.); to form a new skin as a healing sore.

ம. தோலுவய்க்குக

*[தோல் + வை-.]*

**தோலடிப்பறவை** *tōlaḍi-p-paṟavai*, பெ. (n.) தோலாலிணைக்கப்பட்ட காலுள்ள பறவை (இக்வ.); web footed bird (செ.அக.)

*[தோல் + அடி + பறவை]*

**தோலம்** *tōlam*, பெ. (n.) 1. அசைவு; movement. 2. ஒரு நிறை; a scale.

**தோலறச்சீவல்** *tōlaṟa-c-cīval*, பெ. (n.) மேற்றோல் முழுவதும் நீங்கும்படி கத்தியால் சீவுதல்; removing the outer skin as in the purification of dry ginger or of a fruit with a knife (சா.அக.).

*[தோல் + அற + சீவல்]*

**தோலன்** *tōlaṉ*, பெ. (n.) எளியவன் (வின்.); mean, insignificant man (செ.அக.).

*[தோல் → தோலன். தோல் = மேற்றோல், மெலிது, எளிது, எளியவன்]*

**தோலன்செம்மீன்** *tōlaṉ-šemmīṉ*, பெ. (n.) தோல் போலும் மென்மையாக இருக்கும் ஒரு சிவந்த கடல் மீன் (தஞ்சை. மீனவ.); red fish which has soft skin.

*[தோலன் + செம்மீன்]*

**தோலனம்** *tōlaṉam*, பெ. (n.) நிறுக்கை (யாழ்.அக.); weighing (செ.அக.).

*[துலை → தோல் → தோலம் → தோலனம்]*

**தோலா** *tōlā*, பெ. (n.) 1. கொக்குமீன்; stork pipe-long nosed fish. 2. கோனாய்; Indian wolf. 3. வெட்டுக்கிளி; locust. 4. ஐந்து தோலா கொண்ட சிற்றாழாக்கு; small half ollock. 5. 150 குன்றிமணி எடை; weight 180 grams. 6. ஓர் உருபா எடை; one tola weight. 7. 3 1/3 வராகனெடை; weight consisting of 3 1/3 pagoda weight (சா.அக.).

**தோலாசை** *tōlāšai*, பெ. (n.) பெண் மேலிச்சை; desire or craving for woman (சா.அக.).

*[தோல் + ஆசை. தோல் = மேற்றோல், அழகு, பெண்ணழகு]*

**தோலாட்டம்** *tōl-āṭṭam*, பெ. (n.) பொருட்டின்மை (யாழ்.அக.); meanness (செ.அக.).

*[தோல்³ + ஆட்டம்]*

தோல் = மேற்றோல், மெலிது, எளிது.

ஆட்டம் = உவமவுருபு எ-டு. மலையாட்டம் குவிந்திருக்கிறது.

அண் - அட்டு = நெருங்கியிருத்தல், ஒத்திருத்தல், ஒத்திருக்கும் தன்மை. அட்டு - ஆட்டு - ஆட்டம் = போன்றிருத்தல்

**தோலாண்டி** *tōlāṇḍi*, பெ. (n.) தோலன் (வின்.) பார்க்க; see *tōlaṉ* (செ.அக.).

*[தோல் + ஆண்டி]*

**தோலாந்திரக்கிரியை** *tōlāndira-k-kiriyai*, பெ. (n.) தோலாந்திரங்கட்டல் பார்க்க; see *tōlāndiraṅ-kaṭṭal* (சா.அக.).

**தோலாந்திரங்கட்டல்** *tōlāndiraṅ-kaṭṭal,* பெ. (n.) *கிழிக்கட்டி எரித்தல்;* applying heat to the bundle, of medicine consisting of small flowers, flours, minute seeds, and other substances floating in water for the purpose of extracting the essence *(சாஅக.).*

**தோலாந்துருத்தி** *tōlānturutti,* பெ. (n.) ஒன்றுக்கும் உதவாமல் காற்றடைத்த தோல் பையாக மூச்சுவிட்டுக் கொண்டிருப்பவன்; useless people, who respire like a air balloon.

*[தோலா(லான) + துருத்தி]*

**தோலாநாவினர்** *tōlānāviṉar,* பெ. (n.) நா்வன்மையுடையார்; orator, eloquent speaker, as tongue-doughty *(செஅக.).*

*[தோல் + ஆ + நாவினர். தோல் + ஆ + தோல்வியுறாத நாவினர் = சொல்வளம் உடையவர். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தோலாமை** *tōlāmai,* பெ. (n.) *ஈடழியாமை;* keep the fitness.

*[தோல் → தோலாமை]*

**தோலாமொழித்தேவர்** *tōlā-moḻi-t-tēvar,* பெ. (n.) சூளாமணி இயற்றிய சமணவாசிரியர்; the jaina author of Cūlāmaṇi *(செஅக.).*

**தோலாயந்திரம்** *tōlāyandiram,* பெ. (n.) மருந்துகளின் சத்து இறங்கும்படி அவற்றை ஒரு துணியில் முடிந்து எரிக்கும் ஏனத்திற்குள் தொங்க விடும்படி அமைக்கப்பட்ட எந்திரம்; an apparatus employed for purposes of obtained the soluble consitutents of a drug by the descent or suspension of a solvent through it *(சாஅக.).*

**தோலாயா** *tōlāyā,* பெ. (n.) இலவு (மலை); red flowered silk cotton *(செஅக.).*

**தோலாவழக்கு** *tōlā-vaḻakku,* பெ. (n.) *முடிவுறாப் பேச்சு;* never-ending dispute *(செஅக.).*

மறுவ. தோரா வழக்கு, தீரா வழக்கு

*[தோல் + ஆ + வழக்கு]*

**தோலாள்** *tōlāḷ,* பெ. (n.) பயன்பாடிலாள் (வின்.); good-for nothing woman *(செஅக.).*

*[தோல் - தோலாள். தோல் = மீந்தோல், உமி போன்று பயனற்றது. அதுபோல் பயனற்றவள். தோற்பை போல உள்ளீடற்றவள் எனினுமாம்]*

**தோலான்** *tōlāṉ,* பெ. (n.) தோலன் (வி.) பார்க்க; see *tōlaṉ (செஅக.).*

*[தோலன் → தோலான்]*

**தோலான்துருத்தி** *tōlāṉturutti,* பெ. (n.) தோலாந்துருத்தி பார்க்க; see *tōlānturutti.*

**தோலி**[1] *tōli,* பெ. (n.) *1. பழத்தோல்;* rind, peel. *2. மீன்வகை;* a fresh water fish. *3.* தோலான் (யாழ்.அக.) பார்க்க; see *tōlāṉ.*

*[தோல் → தோலி]*

**தோலி**[2] *tōli,* பெ. (n.) *1. அரக்கு (வின்.);* gum lac. *2. அவுரி;* indigo plant *(செஅக.).*

*[தோல் → தோலி. தோல் = மீந்தோல், மூடுவது]*

**தோலிக்கருவாடு** *tōli-karuvāḍu,* பெ. (n.) உலர்ந்த சிறுமீன்; dried silurus *(சாஅக.).*

**தோலிகை**[1] *tōligai,* பெ. (n.) *1. காது;* ear. *2.* ஒட்டிய விரல்கள்; finger united by webs or folds of skin.

**தோலிகை**[2] *tōligai,* பெ. (n.) *1. ஊஞ்சல்;* swing, cradle. *2. காது;* ear *(செஅக.).*

**தோலியாய்ப்போ-தல்** *tōliyāi-p-pō-,* 8 செ.கு.வி. (v.i.) *1.* தோல் போலாதல்; to be reduced to skin and bone. *2.* இளைத்தல்; to be emaciated *(சாஅக.).*

*[தோல் → தோலி + ஆய் + போ-.]*

**தோலிலேயூட்டு-தல்** *tōlilē-y-ūṭṭu-,* 12 செகுன்றாவி. (v.t.) *1.* தோலிற் சுத்தி வைத்தல்; to wrap in a skin as a process in absorption. *2.* தோலுக்குள் ஊசியால் குத்திப் புகும்படி செய்தல்; to inject in surgery introduction of medicine into the substance of skin, injection

intra dermic injection as opposed subcutaneous injection (சாஅக.).

*[தோல் + இல் + ஊட்டு-.]*

**தோலின்றுன்னர்** *tōliṉ-ṟuṉṉar*, பெ. (n.) தோல்வேலை செய்வோர்; leather workers. "துன்னகாரருந் தோலின்றுன்னரும்" *(சிலப். 5:32).*

*[தோல் + இன் + துன்னர். 'இன்' சாரியை துல் → துன் → துன்னர்]*

**தோலுண்ணி** *tōluṇṇi*, பெ. (n.) ஒருவகை யுண்ணி; stiutich (சாஅக.).

*[தோல் + உண்ணி]*

**தோலுணி** *tōluṇi*, பெ. (n.) தோலன் (யாழ்.அக.) பார்க்க; see *tōlaṉ* (செஅக.).

**தோலுந்துருத்தியுமாதல்** *tōlun-turuttiyum-ādal*, பெ. (n.) சதையும் எலும்புமாதல்; being reduced to skin and bone said of an emaciated person (சாஅக.).

*[தோலும் + துருத்தியும் + ஆதல்]*

**தோலுரி[1]-தல்** *tōl-uri*, 3 செ.கு.வி. (v.i.) மேற்றோலுரிதல்; to exfolicate of the epidermis to peel off skin (சாஅக.).

ம. தோலுரியுக

*[தோல் + உரி]*

**தோலுரி[2]-த்தல்** *tōluri-*, 4 செ.குன்றாவி. (v.t.) மேற்றோலைப் போக்கல்; to peel off, as skin of fruits. 2. உடம்பின் தோலையுரித்தல்; to flay as skin of body, escoriating. 3. தோல் போக்கல்; to husk, as grains or pulse. to decoritcate. 4. சட்டை கழற்றல்; to cast away the outer skin as snakes do (சாஅக.).

*[தோல் + உரி-.]*

**தோலுரித்தோன்** *tōluritōṉ*, பெ. (n.) 1. குப்பை மேனி; rubbish plant. 2. கற்ப முறையால் சட்டை கழட்டியவன்; one who causes the wrinkled outer skin to shed or thrown off as in rejuvenation so as to look young (சாஅக.).

*[தோல் + உரித்தோன்]*

**தோலுழிஞை** *tōl-uḻiñjai*, பெ. (n.) கிடுகு படையைச் சிறப்பித்துக் கூறும் புறத்துறை (பு.வெ. 6,12); theme in praise of a shield (செஅக.).

*[தோல்[3] + உழிஞை]*

**தோலுள்** *tōluḷ*, பெ. (n.) 1. உள் தோல்; inner skin. 2. தோலுக்குள்; inside of the skin (சாஅக.).

*[தோல் + உள்]*

**தோலொட்டு** *tōloṭṭu*, பெ. (n.) வரி வகை; a tax (செஅக.).

**தோலோதோல்[1]** *tōlō-tōl*, இடை. (part.) உடம் படாமைக் குறிப்பு (பஞ்சதந்.); expr. signifying disagreement (செஅக.).

**தோலோதோல்[2]** *tōlō-tōl*, கு.வி.எ. (adv.) எவ்வகையிலும் (வின்.); afterall, howbeit.

**தோவத்தி[1]** *tōvatti*, பெ. (n.) ஆண்மக்களின் அரையாடை; a cloth worn arround the waist by men (செஅக.).

தெ. தோவதி

**தோவத்தி[2]** *tōvatti*, பெ. (n.) புடவை; saree.

**தோவம்** *tōvam*, பெ. (n.) ஒரு காலவளவு; a measure of time. "கணம்வளி யுயிர்ப்புத் தோவம்" *(மேருமந். 94).*

**தோவனம்** *tōvaṉam*, பெ. (n.) தோவாளம் பார்க்க; see *tōvāḷam.*

*[தோவாளம் → தோவளம் → தோவனம்]*

**தோவாளம்** *tōvāḷam*, பெ. (n.) கிணற்றைச் சுற்றி எழுப்பிய சுவர் (நெல்லை.); parapet wall of a well (செஅக.).

மறுவ. தோவனம்



**தோவை** *tõvai,* பெ. (n.) நெத்திலியைப் போல் ஒரு கடல் மீன் *(தஞ்சை.மீனவ.);* kind of sea fish like anchovy fish.

**தோழ்** *tõḻ,* பெ. (n.) *மாட்டுக் கொட்டில்;* cattle stall. 'ஊழிதொ றாவுந் தோழும் போன்று" *(சீவக. 487).*

மறுவ. தொழுவம்

*[துல் → துள் → தொள் → தொழு → தோழ்]*

**தோழ்ப்பாடி** *tõḻ-p-pāḍi,* பெ. (n.) *தீயவன்;* போக்கிலி (போக்கிரி); wiked person. "தூர்த்தத் தனம் பேசுந் தோழ்ப்பாடி வித்தையில்" *(தெய்வச். விறலிவிடு. 476).*

*[தோல் → தோழ் + பாடி]*

**தோழப்பர்**[1] *tõḻappar,* பெ. (n.) *மிருதி (ஸ்மிருதி) நிபந்தனை என்னும் நூலின் ஆசிரியர்களுள் ஒருவர்;* a writer on the smrtis.

**தோழப்பர்**[2] *tõḻappar,* பெ. (n.) *நாய்;* dog, an man's friend.

*[தோழமை → தோழப்பர்]*

**தோழம்**[1] *tõḻam,* பெ. (n.) *மாட்டுத் தொழுவம்;* cattle-stall. "தோழத்திடைப் புகுந்தாள்" *(பிரமோத். 3, 14).*

ம. தோழம்

*[துள் → தொள் → தொழு → தொழுவம் → தோழம்]*

**தோழம்**[2] *tõḻam,* பெ. (n.) *1. கடல்;* sea. "முதிர்திரை யடிக்கும் பரிதியந் தோழம்" *(கல்லா. 88, 23). 2.* பேரெண்; a large number. "ஒரு தோழந் தேவர் விண்ணிற் பொலிய" *(தேவா. 102, 7).*

தெ. தோயமு

*[தோயம் → தோழம்]*

**தோழம்**[3] *tõḻam,* பெ. (n.) *தோழமை பார்க்க;* see *tõḻamai.*

*[துள் → தொள் → தொழு → தொழுவம் → தோழம்]*

த. தோழம் → Skt. tõṣa

**தோழமை** *tõḻamai,* பெ. (n.) *நட்பு;* friendship, companionship. "தோழமை யென்றவர் சொல்லிய சொல்லொரு சொல்லன்றோ" *(கம்பரா. குகப். 15).* தோழமையோடும் ஏழைமை பேசேல் *(பழ.).*

ம. தோழம

*[துள் → தொள் → தொழு → தொழுவம் → தோழம் → தோழமை]*

**தோழர்** *tõḻar,* பெ. (n.) *1.* தோழன் பார்க்க; see *tõḻan. 2.* அரசியல் இயக்கங்கள் சிலவற்றில் ஓர் உறுப்பினர் மற்றொரு உறுப்பினரையோ, சார்பாளரையோ அழைக்கும் விளிச்சொல்; comrade, a calling word in certain political movements. நம் தோழர்கள் அனைவரும் வென்று விட்டனர்.

*[தோழன் → தோழர். 'அர்' உயர்வுப் பன்மையீறு]*

**தோழன்** *tõḻan,* பெ. (n.) *வினைவலபாங்கன், பாங்கன்;* friend, companion, intimate acquaintance, camrade. "யானே தந்தை தோழன்" *(புறநா. 201).* தோழனாவது துலங்கிய கல்வி *(பழ.).*

ம. தோழன்; க., தெ. தோடு; து. தோழ; கொலா. தோரென் (தம்பி); நா. தோரென்; (உடன்பிறந்த); பர். தொளெய (உடன் பிறந்தவன்); கட. தோரென் (தம்பி); கோண். தொர் (உதவி); கூ. தோஞ்சு; குவி. தோனெசி

*[துள் → தொள் → தொழு → தோழம் → தோழன்]*

**தோழா** *tõḻā,* பெ. (n.) *விளிச்சொல்;* calling word.

*[தோழன் → தோழா (விளி) (சு.வி. 35)]*

**தோழி**[1] *tõḻi,* பெ. (n.) *1. பாங்கி;* a lady's maid. "நல்லவென் றோழீ" *(திவ். நாய்ச். 10,10). 2.* செவிலித் தாயின் மகள்; heroine confidante, being the daughter of her fostermother. "தோழிதானே செவிலிமகளே" *(தொல். பொருள். 125). 3.* மனைவி; wife. "பொற்றொடிப் பணைத்தோட் டோழியர்" *(பெருங்.வத்தவ. 12,19). 4.* பணிப்பெண் *(இலக்.வி. 207, உரை);* maidservant.

*[தோழன் (ஆ.பா.) → தோழி (பெ.பா.)]*

**தோழி**[2] *tõḻi,* பெ. (n.) *அரக்கு (அக.நி.);* gum lac.

*[தோலி → தோழி]*

**தோழி**[3] *tõḻi,* பெ. (n.) *கற்பூரவல்லி;* country borage *(சா.அக.).*

**தோழிச்சி** *tōḻicci,* பெ. (n.) தோழி 1,2,3 பார்க்க; see *tōḻi, 1,2,3.* "தோழரெல்லாந் தோழிச்சியாக" (பெருங்மகத. 22, 39).

*[தோழி → தோழிச்சி]*

**தோழிப்பொங்கல்** *tōḻi-p-poṅgal,* பெ. (n.) (பிராமண) திருமணத்தின் நான்காம்நாள் அம்மானது செலவில் மணமகட்கு மட்டும் நடத்தப் படும் ஊர்வலம்; bride procession on the fourth day of marriage, conducted by her maternal uncle (செ.அக.).

*[தோழி + பொங்கல்]*

**தோள்(ளு)[1]-தல்** *tōḷḷu-,* 10 செ.குன்றாவி. (v.t.) 1. துளைத்தல்; to perforate bore through. "கேட்பினும் கேளாத் தகையவே கேள்வியாற் றோட்கப்படாத செவி" (குறள், 418). 2. தோண்டுதல்; to dig out, scoop. "தோணீர்க் கடலுள்" (சீவக. 2097). "தெவ்வேந்த ருடறோட்ட நெடு வேலாய் . . . கடறோட்டா ரெனின்" (கம்பரா. குலமுறை. 8). 3. நீக்குதல்; to remove. "கடிதோட்ட களவகத்தே" (திருக்கோ. 8).

க. தோடு

*[துல் → துள் → தொள் → தோள்]*

**தோள்[2]** *tōḷ,* பெ. (n.) துளை (அகநி.); perforation (செ.அக.).

*[துல் → துள் → தொள் → தோள்]*

**தோள்[3]** *tōḷ,* பெ. (n.) 1. கையின் திரண்ட மேற்பகுதி (புயம்); shoulder. "சிலைநவி லெறுழ்த்தோ ளோச்சி" (பெரும்பாண். 145). "தம்நலம் பாரிப்பார் தோயார் தகைசெருக்கிப் புன்னலம் பாரிப்பார் தோள்" (குறள், 916). தோளிலமர்ந்து காதைக் கடிக்காதே (பழ.). 2. கை; arm. "தோளுற்றொரர் தெய்வந் துணையாய்" (சீவக. 10).

ம. தோளு; க. தோள், தோளு; து. தோளு; கோத. தோள்; துட. த்விள்பொதி (தோள்வளை); த. தோள்; Skt. tōs

*[தொள் → தோள் (முதா. 208)]*

**தோள்காய்த்தல்** *tōḷ-kāyttal,* பெ. (n.) .தோள் காய்ப்பு; shoulder becoming callous (சா.அக.).

*[தோள் + காய்த்தல்]*

**தோள்கொட்டு-தல்** *tōḷ-koṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) வீரத்தின் அடையாளமாய்த் தோளைத் தட்டுதல்; to clap one's shoulders, as in difiance. "தடுத்தானைத் தான்முனிந்து தன்றோள் கொட்டி" (தேவா. 689, 10).

*[தோள் + கொட்டு-.]*

**தோள்கொடு-த்தல்** *tōḷ-koḍu-,* 4 செ.கு.வி. (v.i.) 1. சுமையைத் தாங்குதல்; to take on one's shoulders, the as the pole of a palanquin. தாங்க முடியவில்லை, கொஞ்சம் தோள் கொடு (உ.வ.). 2. உதவி செய்தல்; to offer help in an emergency (செ.அக.).

*[தோள் + கொடு-.]*

**தோள்சந்து** *tōḷ-šandu,* பெ. (n.) அக்குள்; arm pit (சா.அக.).

*[தோள் + சந்து]*

**தோள்சேர்-தல்** *tōḷ-šēr-,* 3 செ.குன்றாவி. (v.t.) தழுவுதல்; to embrace (செ.அக.).

*[தோள் + சேர்-.]*

**தோள்சேலை** *tōḷ-šēlai,* பெ. (n.) மார்பை மறைக்கும் பகுதியையுடைய சேலை; a saree which has the portion that is drawn over the breast.

*[தோள் + சேலை. சீரை → சீலை → சேலை]*

**தோள்சேலைப்போராட்டம்** *tōḷ-šēlai-p-pōrāṭṭam,* பெ. (n.) பெண்கள் மாராப்பு சேலை உடுத்தும் உரிமைக்கோரி செய்த போராட்டம்; the struggle to have the right to wear the saree that is drawn over the breast.

*[தோள்சேலை + போராட்டம்]*

**தோள்தட்டு[1]-தல்** *tōḷ-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) தோள்கொட்டு-தல், பார்க்க; see *tōḷ-koṭṭu-,* (செ.அக.).

*[தோள் + தட்டு-.]*

**தோள்தட்டு[2]-தல்** *tōḷ-taṭṭu-,* 5 செ.கு.வி. (v.i.) ஒருவரை ஊக்கப்படுத்துவதற்காகத் தோளில் தட்டிக் கொடுத்தல்; to pat one, on shoulder to encourage.

*[தோள் + தட்டு]*

**தோள்தீண்டி** *tōḷ-tīṇḍi,* பெ. (n.) நெருங்கி வருத்துவது; that which comes close and destroys, as touching one's shoulders. "மரணமன்றோ தோள்தீண்டியாக வந்து நிற்கிறது." (திவ்.திருமாலை, 6, வியா. பக். 34).

*[தோள் + தீண்டி]*

**தோள்தூக்குதல்** *tōḷ-tūkkūdal,* பெ. (n.) தோளெடுத்தல் பார்க்க; see *tōḷ-eḍuttal* (செ.அக.).

*[தோள் + தூக்குதல்]*

**தோள்நாடி** *tōḷ-nāḍi,* பெ. (n.) தோட் பக்கத்துள்ள தூய அரத்தக் குழாய்; subclavian artery (செ.அக.).

*[தோள் + நாடி]*

**தோள்நாப்பை** *tōḷnā-p-pai,* பெ. (n.) தோள்பை பார்க்க; see *tōḷ-pai.*

*[தோள் + நாலு + பை]*

தோளில் நாலும் (தொங்கும்) பை. இது வட புல மொழிகளில் ஜோல்னாப்பை என வழங்குகிறது.

**தோள்நாளம்** *tōḷ-nāḷam,* பெ. (n.) தோட் பக்கத்துள்ள தூய்மையிலா அரத்தக் குழாய்; subclavian vein (செ.அக.).

*[தோள் + நாளம்]*

**தோள்பட்டை** *tōḷ-paṭṭai,* பெ. (n.) தோள் பலகை; shoulder blade (சா.அக.).

*[தோள் + பட்டை]*

**தோள்படிகொள்(ளு)-தல்** *tōḷ-paḍi-koḷ(ḷu)-,* 7 செ.குன்றாவி. (v.t.) ஒன்றைப் பற்றாகக் கொள்ளுதல்; to go a step further, proceed further. "கீழ்நின்ற நிலைமையமைத்து மேலே தோள்படி கொள்ளுகிறார்." (ஈடு. 1,1,1, பக்.2).

**தோள்பை** *tōḷ-pai,* பெ. (n.) தோளில் தொங்கவிடும்படி பட்டை வைத்துத் தைத்த பை; shoulder bag.

*[தோள் + பை]*

**தோள்பொருத்து** *tōḷ-poruttu,* பெ. (n.) தோள் மூட்டு; shoulder joint (சா.அக.).

*[தோள் + பொருத்து]*

**தோள்பொருத்துவாதம்** *tōḷ-poruttu-vādam,* பெ. (n.) தோள் வலி நோய்; inflammation of the shoulder joint (சா.அக.).

*[தோல் + பொருத்து + வாதம்]*

**தோள்மாற்று-தல்** *tōl-māṟṟu-,* 5 செ.குவி. (v.t.) 1. சுமையை ஒரு தோளின்று மற்றொரு தோளுக்கு மாற்றுதல்; to change one shoulder to another, as a load. 2. பிறன் சுமையைத் தான் தூக்கி உதவிபுரிதல்; to relieve another in bearing a load (செ.அக.).

*[தோள் + மாற்று-.]*

**தோள்மாறு-தல்** *tōḷ-māṟu-,* 5 செ.குவி. (v.i.) மனம் வேறுபடுதல்; to change one's mind, as changing shoulders. "கிட்டினவாறே நீரே அதிலே தோள்மாறுகிறீர்" (திவ். திருமாலை, 2, வியா. 18).

*[தோள் + மாறு-.]*

**தோள்மூட்டு** *tōḷ-mūṭṭu,* பெ. (n.) தோட் பொருத்து; shoulder joint (செ.அக.).

*[தோள் + மூட்டு]*

**தோள்வந்தி** *tōḷvandi,* பெ. (n.) தோள்வளை பார்க்க; see *tōḷ-vaḷai.* "அத்தோள்கடோறும் தோள்வந்தியை உடையராயிராநின்றார்" (திவ். பெரியதி. 9, 2,4, வியா.).

*[தோள் + வந்தி. வங்கி → வந்தி. வங்கி = வளைந்தது]*

**தோள்வலி** *tōḷ-vali,* பெ. (n.) தோள் வலிமை; strength or power of the arm. "இராமன் றோள்வலி கூறுவோர்க்கே" (கம்பரா. தனியன்). 2. தோள் நோவு; pain in the shoulder (செ.அக.).

*[தோள் + வலி]*

**தோள்வளை** *tōḷ-vaḷai,* பெ. (n.) தோளில் அணியும் வளைவகை; ring worn on the upper arm. "நெடுந்தோள் வளையுங் கடுங்கதிர்க் கடகமும்" (பெருங். இலாவாண. 5,114).

*[தோள் + வளை]*



**தோள்வாதம்** *tōḷ-vādam,* பெ. (n.) 1. தோள் வீங்கிக் கண்டம், பிடரி வலிப்புற்று கழுத்து நோகும் ஒருவகை நரம்பு நோய்; a kind of neuralgic pain of the shoulder's marked by swelling and pain in the neck and nape. 2. வளிக் குற்றத்தினால் (தோஷத்தினால்) தோள் மூட்டு பசையற வற்றல்; the vayu about the shoulder joint becomes excited dries up the kapa which substains the shoulder joint. 3. வளிக் கோளாறினால் தோள் மூட்டில் விறைப் புண்டாகி அசைக்க முடியாமற் செய்யும் ஒரு ஊதை; stiffness of the shoulder joint in which the excited vayu causes the contraction of the muscles of the shoulder. 4. தோள்பிடிப்பு; rheumatism of the shoulder (சா.அக.).

**தோளணி** *tōḷaṇi,* பெ. (n.) தோட்பக்கத்தில் அணியப்படும் அணிகலவகை; ornaments worn on the upper arm. "தோளணி தோடு சுடரிழை நித்திலம்" (பரிபா. 10, 115).

*[தோள் + அணி]*

**தோளாச்செவியர்** *tōḷā-c-ceviyar,* பெ. (n.) ஒரு வகைக் குலத்தினர்; a section of people (S.I.I.iii, 268).

*[தோள் + ஆ + செவியர். 'ஆ' எதிர்மறை இடைநிலை]*

**தோளாமணி** *tōḷā-maṇi,* பெ. (n.) துளையிடப் படாத மணி; uncut gem. "தோளா மணியே பிணையையே பலசொல்லி யென்னை" (திருக்கோ. 47)

*[துல் → துள் → தொள். துல் - துளைத்தற் கருத்துவேர். தோள் + ஆ + மணி]*

**தோளி** *tōḷi,* பெ. (n.) 1. நன்னீர் மீன்வகை; fresh-water fish. 2. நீலிச்செடி; common indigo. 3. அரக்கு (சங்.அக.); lac (செ.அக.).

*[தோலி → தோளி]*

**தோளிற்கொள்(ளு)-தல்** *tōḷiṟ-koḷ(ḷu)-,* 7 செ.குன்றாவி. (v.t.) மணந்து கொள்ளுதல்; to marry. "நின்கோதையை யார்கொலோ தோளிற் கொள்பவர்" (பிரபுலிங். மாயையினுற். 69).

*[தோளில் + கொள்-.]*

**தோளுக்கினியான்** *tōḷu-k-kiṉiyāṉ,* பெ. (n.) கோயிற் கடவுள்திருமேனியை எளிதில் தூக்கிச் செல்லக் கூடிய ஊர்தி வகை; a light frame for carrying in procession the idol of a temple, as easy for the shoulder (செ.அக.).

*[தோளுக்கு + இனியான்]*

**தோளு-தல்** *tōḷu-,* 5 செ.குன்றாவி. (v.t.) துளைத்தல்; to perforate.

*[துல் → துள் → தொள் → தோள் → தோளு]*

**தோளெடுத்தல்** *tōḷ-eḍuttal,* பெ. (n.) மாலை மாற்றும் பொருட்டு மணமக்களை அவ்வவர் மாமன்மார் தோளிற்றூக்குகை; the ceremony in which bride and the bride-groom are carried upon the shoulder of their respective maternal uncles to enabled them to exchange garlands (செ.அக.).

*[தோள் + எடுத்தல்]*

**தோளோச்சல்** *tōḷōccal,* பெ. (n.) தோளை எடுத்தல்; raise the shoulders.

*[தோள் + ஓச்சல்]*

**தோற்கட்டடம்** *tōṟ-kaṭṭaḍam,* பெ. (n.) பொத்தகத்திற்குத் தோலாற் செய்த மேற்கட்டு; leather binding for books (செ.அக.).

*[தோல் + கட்டடம். கட்டு → கட்டடம்]*

**தோற்கட்டு**[1] *tōṟ-kaṭṭu,* பெ. (n.) முன்கைத் தோற்கவசம்; armour for the fore arm; usually of leather (செ.அக.).

*[தோள் + கட்டு]*

**தோற்கட்டு**[2] *tōṟ-kaṭṭu,* பெ. (n.) வல்லமை; strength of the shoulder (சா.அக.).

*[தோல் + கட்டு. கட்டு = இளமை, வலிமை, வல்லமை]*

**தோற்கடகு** *tōṟ-kaḍagu,* பெ. (n.) தோற்கேடகம்; leather shield. "தான் அம்புபடில் தளராது பிறர்க்கு அரணமாகும் தோற்கடகு போன்ற பண்பு" (பதிற்றுப். 45, 16, உரை).

*[தோள் + கடகு. கிடுகு → கடுகு → கடகு]*

**தோற்கடி-த்தல்** *tōṟ-kaḍi-,* 4 செ.குன்றாவி. (v.t.) தோல்வியுறச் செய்தல்; to defeat (செ.அக.).

*[தோல் → தோல்வி. தோற்க + அடி-.]*

**தோற்கருவி** *tōr-karuvi,* பெ. (n.) ஐவகை இசைக் கருவிகளுள், தோலாற் செய்யப்பட்ட இசைக் கருவிவகை (சிலப். 3:27, உரை); musical instrument made of leather, as drum, tabor, one of five isai-k-karuvi (செஅக.).

*[தோல் + கருவி]*

ஐவகை இசைக் கருவிகள்

1. தோற்கருவி. 2. துளைக் கருவி. 3. நரம்புக் கருவி. 4. கஞ்சக் கருவி. 5. மிடற்றுக் கருவி.

**தோற்கருவியாளர்**[1] *tōr-karuvi-y-āḷar,* பெ. (n.) வாச்சியக்காரர் (பிங்.); drummers (செஅக.).

*[தோல் + கருவி + ஆளர். ஆள்பவர் → ஆளர்]*

**தோற்கருவியாளர்**[2] *tōr-k-karuvi-y-āḷar,* பெ. (n.) தோல் பொருட்களைச் செய்யும் தொழிலாளர்; one who mends and do leather works (கழ.தமி.அக.).

*[தோல் + கருவியாளர்]*

**தோற்கவசம்** *tōr-kavašam,* பெ. (n.) தோலாலான சட்டை (வின்.); leather jacket (செஅக.).

*[தோல் + கவசம்]*

**தோற்காது** *tōr-kādu,* பெ. (n.) தோற்செவி பார்க்க; see *tōrcevi* (செஅக.).

*[தோல் + காது]*

**தோற்காற்பறவை** *tōr-kār-paravai,* பெ. (n.) தோலடிப்பறவை பார்க்க; see *tōlaḍi-p-paravai* (செஅக.).

*[தோல் + கால் + பறவை]*

**தோற்கிடங்கு** *tōr-kiḍaṅgu,* பெ. (n.) தோல் பதனிடுமிடம்; tannery (செஅக.).

*[தோல் + கிடங்கு. கிழ் → கிழ → கிட → கிடங்கு]*

**தோற்குடைச்சல்** *tōr-kuḍaiccal,* பெ. (n.) தோள் வாதம் பார்க்க; see *tōḷ-vādam* (சாஅக.).

*[தோல் + குடைச்சல்]*

**தோற்குல்லாய்** *tōr-kullāy,* பெ. (n.) தோலாற் செய்த கவிப்பு வகை; a leather cap (செஅக.).

*[தோல் + குல்லாய்]*

**தோற்கைத்தளம்** *tōr-kai-t-taḷam,* பெ. (n.) முன்கையி லணியுந் தோற்கவசம் (சிலப். 14, 170, அரும்.); armour for the fore-arm, made of leather (செஅக.).

*[தோல் + கை + தளம்]*

**தோற்கொதிப்பு** *tōr-kodippu,* பெ. (n.) தோலுக் கடியிலுள்ள தசைக்கொதிப்பால் வரும் நோய் வகை; inflammation of the cellular tissue immediately beneath the skin (செஅக.).

*[தோல் + கொதிப்பு]*

**தோற்கொம்பு** *tōr-kombu,* பெ. (n.) 1. விலங்கின் கட்டுக்கொம்பு; movable horn fixed in the skin. 2. கொம்பு ஆடுதலாகிய மாட்டுக் குற்றவகை (மாட்டுவா. 16); a defect in cattle in which the horns are not firm (செஅக.).

ம. தோல்கொம்பு

*[தோல் + கொம்பு]*

**தோற்சட்டையுரித்தோன்** *tōr-caṭṭai-urittōṉ,* பெ. (n.) காயகற்பம் சாப்பிட்டு அதனால் திரை நீங்கி, அதாவது உடம்பிலுள்ள சுருங்கிய தோல் கழன்று காய சித்தியடைந்த சித்தர்களில் ஒருவன்; one of those Siddhars who rejuvenated their system and restored to youth by casting off the wrinkled skin on consuming the rejuvenation drug (சாஅக.).

*[தோல் + சட்டை + உரித்தோன்]*

**தோற்சித்தை** *tōr-cittai,* பெ. (n.) எண்ணெய் வைக்க உதவுந் தோற்பை வகை (யாழ்அக.); leathern bottle or vessel for oil.

*[தோல் + சித்தை]*

**தோற்செருப்பு** *tōr-ceruppu,* பெ. (n.) செருப்பு வகை; a kind of shoe. "தோற் செருப் பார்த்த பேரடியன்" (கம்பரா. கங்கை. 29).

*[தோல் + செருப்பு]*

**தோற்செவி** *tōr-cevi,* பெ. (n.) 1. புறச்செவி; auricle of the ear. "அந்தோற் செவியிலுண் மந்திரமாக" (பெருங். உஞ்சைக். 45, 47), (சீவக. 2718, உரை, அடிக்குறிப்பு). 2. புறச்செவியுள்ள விலங்குகள் (வின்.); creatures having external ears (செஅக.).

*[தோல் + செவி]*

**தோற்பரம்** *tōṟ-param,* பெ. (n.) தோற்கேடகம்; buckler, leathern shield. "போர் மயிர்க் கேடகம் புளகத் தோற்பரம்' (சீவக. 2218). 2. நெடுஞ் செருப்பு (வின்.); boots.

*[தோல் + பரம்]*

**தோற்பலகை** *tōṟ-palagai,* பெ. (n.) தோற்பரம் (பிங்.) பார்க்க; see *tōṟ-param* (செஅக.).

*[தோல் + பலகை]*

**தோற்பறை**[1] *tōṟ-paṟai,* பெ. (n.) தோற்கருவி வகை; durm, a musical instrument.

*[தோல் + பறை]*

**தோற்பறை**[2] *tōṟ-paṟai,* பெ. (n.) 1. குதிரைக்குக் கொள் வைக்கும் பை; leather bag used in feeding horses. 2. நீரிறைக்கும் கருவி வகை; leather bucklet for drawing water.

ம. தோல்பற

*[தோல் + பறை]*

**தோற்பனாட்டு** *tōṟ-paṉāṭṭu,* பெ. (n.) பனம் பழத்தின் மெல்லிய உள்ளீடு; thin layer of the juicy substance of palmyra fruit (செஅக.).

**தோற்பாடி** *tōṟpāḍi,* பெ. (n.) 1. விலை மாது (வின்.); strumpet. 2. இழிந்தோன்; mean, worthless, shameless person (செஅக.).

*[தோல் + பாடி]*

**தோற்பாய்** *tōṟ-pāy,* பெ. (n.) தோலால் அமைந்த இருக்கை (தவிசு) (சூடா.); undressed skin used as a seat (செஅக.).

*[தோல் + பாய்]*

**தோற்பாரை** *tōṟ-pārai,* பெ. (n.) 1. மூன்றடி நீளம் வளரும் கடல்மீன்வகை; sea-fish, attaining 3 feet in length, as having a thick-skin. 2. நீலங் கலந்த பச்சைநிறங் கொண்டதும் 18 விரலம் வளர்வதுமான கடல்மீன் வகை; sea-fish, greenish, shot with blue, attaining 18 inch in length (செஅக.).

*[தோல் + பாரை]*

**தோற்பாவை** *tōṟ-pāvai,* பெ. (n.) 1. தோலாற் செய்து ஆட்டும் பாவை; leathern puppet marionette. "தோற்பாவைக் கூத்தும்" (சிசி. 4, 24, நிரம்ப). 2. தோற்பாவைக்கூத்து (சிலப். 3, 12, உரை) பார்க்க; see *tōṟpāvai-k-kūttu.*

*[தோல் + பாவை]*

**தோற்பாவைக்கூத்து** *tōṟ-pāvai-k-kūttu,* பெ. (n.) தோற்பாவையைக் கொண்டு ஆட்டுங் கூத்து; show with leathern puppets. "தோற்பாவைக் கூத்துந் தொல்லைமரப் பாவை யியக்கமும்" (சிசி. 4, 24).

*[தோல் + பாவை + கூத்து]*

**தோற்பிரண்டல்** *tōṟ-piraṇḍal,* பெ. (n.) தோல்மேலேறுதல் பார்க்க; see *tōl-mēl-ēṟudal.*

*[தோல் + பிரள்தல். புரள் → பிரள்]*

**தோற்பு** *tōṟpu,* பெ. (n.) தோல்வி; defeat, discomfiture, loss. "தோற்பு வெல்வது சொல்பவர் யார்" (உபதேசகா. சிவவிரத. 342).

**தோற்புடை**[1]**-த்தல்** *tōṟ-puḍai-,* 4 செ.குன்றாவி. (v.t.) மேற்றோல் போகும்படி முறத்தில் தேய்த்துப் புடைத்தல்; to winnow by fan (சாஅக.).

*[தோல் + புடை-.]*

**தோற்புடை**[2]**-த்தல்** *tōṟ-puḍai-,* 4 செ.குன்றாவி. (v.t.) தோள்கொட்டு-தல் பார்க்க; see *tōḷ-koṭṭu-*

*[தோல் + புடை]*

**தோற்புரட்டல்** *tōṟ-puraṭṭal,* பெ. (n.) தோல்மேலேறுதல் பார்க்க; see *tōl-mēl-ēṟudal.*

**தோற்புரை** *tōṟ-purai,* பெ. (n.) 1. தோலின் துளை; pores of the skin. 2. மேற்றோல்; cuticle. "தோற்புரை போமதன்றிக்கே பிராணனிலே தைப்பதுமாயிருந்தது" (ஈடு.அவ.ஜீ.). 3. சவ்வுள்ள உடலிடம் (யாழ்.அக.); membrance (செஅக.).

*[தோல் + புரை]*

**தோற்புலவு** *tōṟ-pulavu,* பெ. (n.) ஒரு வகைப் பிலா மரம்; lance wood (சாஅக.).

*[தோல் + புலவு. பிலா → புலா → புலாவு → புலவு]*

**தோற்புழு** *tōṟ-puḻu,* பெ. (n.) சதையின் அடியிலுண்டாகும் கயிற்றைப் போன்ற புழு, நரம்புச் சிலந்தி; guinea worm (சாஅக.).

*[தோல் + புழு]*

**தோற்பெட்டி** *tōṟ-peṭṭi,* பெ. (n.) *1. தோலாற் செய்த பேழை (வின்.);* leather bag. *2. சாதிக் காய் மரப்பெட்டி;* dealwood case covered with thick brown paper *(செ.அக.).*

*[தோல் + பெட்டி]*

**தோற்பை** *tōṟ-pai,* பெ. (n.) *1.* தோலாற் செய்த *பை;* leathern bag. *2. துளையுள்ள தோற் கவிப்பு (குல்லா) (தைலவ.தைல.);* perforated leathern cap. *3. உடம்பு;* body. "தோற்பை யுணின்று தொழிலறச் செய்தூட்டுங் கூத்தன்" *(நாலடி, 26).*

*[தோல் + பை]*

**தோற்றக்கவி** *tōṟṟa-k-kavi,* பெ. (n.) நாடகத்திற் *கட்டியங்காரன் பாடும் பாட்டு* (வின்.); verse sung announcing the appearance of a person on the stage *(செ.அக.).*

*[தோற்றம் + கவி]*

**தோற்றத்தரு** *tōṟṟa-t-taru,* பெ. (n.) நாடக நடிகர் தோன்றும் பொழுது ஆடிப்பாடும் பாட்டு; a kind of song sung by an actor while appearing on the stage *(செ.அக.).*

*[தோற்றம் + தரு]*

**தோற்றப்பட்டவன்** *tōṟṟa-p-paṭṭavaṉ,* பெ. (n.) தோற்றமானவன் (வின்.) பார்க்க; see *tōṟṟam-āṉavaṉ* (செ.அக.).

*[தோற்றம் + பட்டவன்]*

**தோற்றம்** *tōṟṟam,* பெ. (n.) *1. காட்சி;* appearance. "இலக்குவன் றோன்றிய தோற்றம்" *(கம்பரா. கும்பகருண. 231)* "தோற்றஞ்சான் ஞாயிறு" *(நாலடி, 7).* 2. பார்வை; vision, sight, perceptibility. என்னுடைய தோற்றத்தில் அது மரமாக உள்ளது. *3.* **உயர்ச்சி;** conspicuosness, prominence, distinctness in appearance. "நிலையிற் றிரியா தடங்கியான் றோற்றம் மலையினும் மானப்பெரிது" *(குறள், 124).* *4.* **விளக்கம்;** splendour, brightness. *5.* தொடக்கம்; origin, rise, beginning, source. "தோற்றமு நிலையுங் கேடும்" *(மணிமே. 27:181).* *6.* **பிறப்பு** *(பிங்.);* birth, avatar. "நாயகன் றோற்றத்தின் *(கம்பரா. சிறப்.11).* *7.* **வகுப்பு;** class. "வேறுபட வந்த வுவமத் தோற்றம்" *(தொல்.பொருள். 307).* *8.* **படைப்பு;** creation. "எவ்வகைப் பொருளுந் தோற்ற நிலையிறுதி" *(திருக்கோ. 1, உரையகவல்).* *9.* **சாயை;** reflection, semblance. அவனுக்குத் தந்தையின் தோற்றமிருக்கிறது. *10.* **புகழ்;** fame, reputation. "ஈவார்க ணென்னுண்டாந் தோற்றம் இரந்து கோள் மேவார் இலாஅக்கடை" *(குறள், 1059).* *11.* வலிமை *(பிங்.);* vigour, strength, power, force. *12.* **புனைவு** *(வேடம்);* costume, guise. "வானுயர் தோற்றம் எவன்செய்யும் தன்னெஞ்சம் தானறி குற்றப் படின்" *(குறள், 272).* *13.* **உருவம்;** form. "நாற்றத் தோற்றச் சுவையொளி யுறலாகி நின்ற" *(திவ். திருவாய். 3, 6).* *14.* **சொன்மாலை** *(பிங்.);* panegyric. *15.* **உறுப்பு;** member, limb, part. "எம்மென வருஉங் கிழமைத் தோற்றம்" *(தொல். பொருள். 221).* *16.* **தன்மை;** nature. "அறத்து வழிப்படூஉந் தோற்றம் போல" *(புறநா. 31).* *17.* **எண்ணம்;** idea. "தோற்றனனேயினி யென்னுந் தோற்றத்தால்" *(கம்பரா. இராவணன் வதை, 78).* *18.* **உய்த்துணர்வு, ஊகம்;** guess, estimate. "பதினைந்தாம் பக்கல் என்றொரு தோற்றம்". *19.* நாடக முன்னிகழ்வு; entrance on the stage; debut. *20.* எழுந்தருளுகை *(உதயம்);* rising, as of a heavenely body. *21.* **மாயை** *(வின்.);* phantom, apparition; illusion. *22.* **அசையும் சொத்து அசையாச் சொத்து என்ற இருவகைத் திணை** *(பிங்.);* phenomenon, of two classes, viz., movable and immovable properties. *23.* **உயிர்த் தோன்றல்;** genesis of life *(செ.அக.).*

ம. தோற்றம்; க. தோறிகெ

*[தோன்று → தோற்று → தோற்றம்]*

**தோற்றமா-தல்** *tōṟṟam-ā-,* 6 செ.கு.வி. (v.i.) *1.* **காணப்படுதல்;** to come into existence. *2.* **அரங்கில் நாடகமாந்தர் தோன்றல்;** to appear on the stage *(செ.அக.).*

*[தோற்றம் + ஆ-.]*

**தோற்றமானவன்** *tōṟṟa-māṉavaṉ,* பெ. (n.) **பல்லோர் அறிந்தவன்** (வின்.); conspicuous, celebrated man *(செ.அக.).*

*[தோற்றம் + ஆனவன்]*

**தோற்றரவு** *tōṟṟaravu,* பெ. (n.) *1.* **காட்சி;** appearance. *2.* உருவாதல் *(உற்பத்தி);* coming into existence. "துன்பக் கதியிற் றோற் றரவின்றி" *(மணிமே. 26:56).* *3.* **அறிகை** (வின்.);

conspicuousness, emineance, dignity. 4. தோற்றம் (அவதாரம்); incarnation. 'ஒரு தோற்றரவு தோற்றியே யாகிலும் உதவவேணும்" (ஈடு. 3, 2,5). 5. பொய்த் தோற்றம்; phantom, apparition spectre (செ.அக.).

*[தோற்றம் + அரவு. 'அரவு' தொழிற் பெயரீறு]*

**தோற்றல்**[1] *tōṟṟal,* பெ. (n.) 1. தோன்றுகை; appearance. 2. புகழ்; praise. 3. வலிமை; vigour, strength.

**தோற்றல்**[2] *tōṟṟal,* பெ. (n.) 1. தோல்வி (பிங்.); defeat. 2. வீண் எண்ணம் (யாழ்.அக.); vain idea (செ.அக.).

*[தோல் → தோற்றல்]*

**தோற்றல்**[3] *tōṟṟal,* பெ. (n.) 1. புலப்படல்; being perceived by the senses. 2. பார்வை தெளிதல்; recovering eye sight. 3. தோன்றல் பார்க்க; see *tōṉṟal* (சா.அக.).

*[தோன்றல் → தோற்றல்]*

**தோற்றவொடுக்கம்** *tōṟṟa-v-oḍukkam,* பெ. (n.) விளைச்சல் அழிவுகள் (உற்பத்தி விநாசங்கள்); periodical appearance, and dispapearance, creation and dissolution.

*[தோற்றம் + ஒடுக்கம்]*

**தோற்றன்** *tōṟṟaṉ,* பெ. (n.) துருசு; sub acetate of copper blue vitriol (சா.அக.).

**தோற்றனம்** *tōṟṟaṉam,* பெ. (n.) சுணைக்கேடு (யாழ்.அக.); blunted sensibility (செ.அக.).

*[தோல் + தனம்]*

**தோற்றாங்கிருமி** *tōṟṟāṅ-k-kirumi,* பெ. (n.) குருதி நரம்புகளில் உலாவும் அணுவகைப் பூச்சிகளில் ஒன்று; one of the six rudimentary or embryo form of an organism in the blood vessels (சா.அக.).

*[தோற்றம் → தோற்றாம் + கிருமி]*

**தோற்றாங்கொள்ளி** *tōṟṟāṅ-koḷḷi,* பெ. (n.) அடிக்கடி தோற்றோடுபவன் (உ.வ.); one who constantly suffers defeat, as in a game (செ.அக.).

*[தோல் → தோற்றான் + கொள்ளி. 'கொள்ளி' சொல்லாக்க ஈறு. ஒ.நோ. பயந்தாங்கொள்ளி]*

**தோற்றாணி** *tōṟṟāṇi,* பெ. (n.) தோற்றாங் கொள்ளி பார்க்க; see *tōṟṟāṅ-koḷḷi* (செ.அக.).

**தோற்றாமை** *tōṟṟāmai,* பெ. (n.) வெளிப் படாமை; not exist.

*[தோன்று → தோன்றாமை → தோற்றாமை]*

**தோற்றான்** *tōṟṟāṉ,* பெ. (n.) மயில் துத்தம்; blue vitriol (செ.அக.).

**தோற்றானம்** *tōṟṟāṉam,* பெ. (n.) 1. தோற்கலம் (யாழ்.அக.); leather vessel. 2. வெடி மருந்துப்பை (வின்.); cartridge bag (செ.அக.).

*[தோய் + தானம்]*

**தோற்று**[1]**-தல்** *tōṟṟu-,* 5 செ.கு.வி. (v.i.) தோன்று-தல் பார்க்க; see *tōṉṟu-.* "நீற்றோடு தோற்றவல்லோன் போற்றி" (திருவாச. 3, 108).

ம. தோற்று; க. தோறிசு

*[தோன்று → தோற்று-.]*

**தோற்று**[2]**-தல்** *tōṟṟu-,* 5 செகுவி. (v.i.) 1. தோன்றச் செய்தல்; to cause to appear; to show; to produce. 2. பிறப்பித்தல் (பிங்.); to create (செ.அக.).

*[தோன்று → தோற்று-.]*

**தோற்று**[3] *tōṟṟu,* பெ. (n.) தோன்றுகை; appearacne. "தோற்றவன் கேடவன்' (தேவா. 448,2).

*[தோன்று → தோற்று]*

**தோற்றுருத்தி** *tōṟṟurutti,* பெ. (n.) 1. உலைத் துருத்தி; leather bellows. "நிறைந்த தோற்றுருத்தி தன்னை" (சீவக. 1585). 2. உடம்பு; body (செ.அக.).

*[தோல் + துருத்தி]*



**தோற்றுவாய்** *tōṟṟu-vāy,* பெ. (n.) பின்வருவதை முன்னர்க்கூறும் குறிப்பு; introduction to a topic, indication. "அறத்தொடு நிற்பாளாக முன்றோற்றுவாய் செய்து" (திருக்கோ. 290).

**தோற்றுவி-த்தல்** *tōṟṟuvi-,* பி.வி. (caus.v.) 1. கண்ணொளி உண்டாக்கல்; to make the vision clear. 2. உண்டாக்கல்; to bring to existence. 3. பிழைக்க வைத்தல்; to restore to life. 4. தோன்றும்படிச் செய்தல்; to cause to appear (சாஅக.).

[தோற்று → தோற்றுவி]

**தோற்றுன்னர்** *tōṟṟuṉṉar,* பெ. (n.) செம்மார் (சூடா.); shoe makers, leather workers (செஅக.).

மறுவ. சக்கிலியர்

[தோல்[1] + துன்னர்]

**தோற்றேங்காய்** *tōṟṟeṅgāy,* பெ. (n.) உரிக்காத தேங்காய்; unhusked coconut (செஅக.).

[தோல் + தேங்காய்]

**தோறு** *tōṟu,* இடை (part.) தோறும் பார்க்க; see *tōṟum.* குன்றுதோறாடு குமரன்.

**தோறும்** *tōṟum,* இடை (part.) ஒவ்வொன்றும், ஒவ்வொரு பொழுதும் என்ற பொருளில் வரும் இடைச்சொல்; each, every, whenever, a distributive suffix. "காண்டோறும் பேசுந் தோறும்" (திருவாச. 10, 3).

**தோன்றக்கொடு-த்தல்** *tōṉṟa-k-koḍu-,* 4 செ.குன்றாவி. (v.t.) போதுமானபடி கொடுத்தல் (வின்.); to give sufficiently.

**தோன்றல்[1]** *tōṉṟal,* பெ. (n.) 1. தோற்றம்; appearance. "வரைமருளு முயர்தோன்றல் வினைநவின்ற பேர் யானை" (மதுரைக். 46). 2. தோன்றல் வேறுபாடு (நன். 154) பார்க்க; see *tōṉṟal-vēṟupāḍu.* 3. தலைமை; superiority, greatness. "பூவினுட் பிறந்த தோன்றல் புண்ணியன்" (சீவக. 316). 4. உயர்ச்சி; height, loftiness. "வரைகண்டன்ன தோன்றல்" (நெடுநல். 108). 5. விளக்கம்; splendour. "இருஞ்சுற வுயர்த்த தோன்ற லேத்தருங் குருசி றான்கொல்" (சீவக. 1261). 6. தலைவன்; chief, great person. "புலவரை யிறந்த புகழ்சா றோன்றல்" (புறநா. 21). 7. முல்லை நிலத் தலைவன் (பிங்.); chief of a jungle tract. 8. வேந்தன் (அரசன்) (யாழ்அக.); king. 9. மகன் (பிங்.); son. 10. தமையன் (பிங்.); elder brother.

ம. தோன்னல்

[தோன்று → தோன்றல்]

**தோன்றல்விகாரம்** *tōṉṟal-vigāram,* பெ. (n.) தோன்றல்வேறுபாடு பார்க்க; see *tōṉṟal-vēṟupāḍu* (செஅக.).

[தோன்றல் + விகாரம்]

**தோன்றல்வேறுபாடு** *tōṉṟal-vēṟupāḍu,* பெ. (n.) புணர்ச்சிவேறுபாடு மூன்றுள் புதிதாக எழுத்து, சாரியை முதலியன தோன்றுகை (நன். 154, உரை.); insertion of a letter, particle etc., in sandi one of three vikāram.

[தோன்றல் + வேறுபாடு]

**தோன்றாத்துணை** *tōṉṟā-t-tuṇai,* பெ. (n.) பிறரறியாமல் உதவுவோன்; unseen helper, as God. "தோன்றாத் துணையா யிருந்தனன் றன்னடி யோங் களுக்கே" (தேவா. 1011, 1).

[தோன்று + ஆ + துணை. 'ஆ' எதிர்மறை இடைநிலை]

**தோன்றாமற்பேசு-தல்** *tōṉṟāmaṟ-pēsu-,* 6 செகுன்றாவி. (v.t.) குறிப்பிற் கூறுதல்; to speak darkly, indicate in a subtle manner (செஅக.).

**தோன்றாவெழுவாய்** *tōṉṟā-v-eḻuvāy,* பெ. (n.) வெளிப்படச் சொல்லப்படாத எழுவாய் (சீவக. 1, உரை); subject not expressed but understood.

[தோன்று + ஆ + எழுவாய். 'ஆ' எதிர்மறை இடைநிலை]

**தோன்றி[1]** *tōṉṟi,* பெ. (n.) 1. மருதோன்றி; fragrant nail dye. 2. ஆனைத் தோன்றி, குடைத் தோன்றி; heart leaved or dure tree.

**தோன்றி[2]** *tōṉṟi,* பெ. (n.) 1. செங்காந்தள்; Malabar glory lily. "தொய்ம்மலர தோன்றிபோற் சூட்டுடைய சேவலும்" (சீவக. 73). 2. வெண் காந்தள் (பிங்.); the white species of gloriosa superba. 3. குருதி; blood. 4. ஒரு மலை; ancient

name of a hill. "வான்றோ யுயர்சிமைத் தோன்றிக் கோவே" (புறநா. 399).

**தோன்றிகர்** *tōṉṟigar,* பெ. (n.) **வணிகர்** (அக.நி.); chetti merchants.

**தோன்றியடி** *tōṉṟi-y-aḍi,* பெ. (n.) **காந்தள் கிழங்கு;** plough shaped bulbous root of November flower (சா.அக.).

*[தோன்றி + அடி. அடி = வேர், கிழங்கு]*

**தோன்று[1]-தல்** *tōṉṟu-,* 5 செ.கு.வி. (v.i.) 1. **கட்புலனாதல்;** to be visible. "துறை திறம்பாமற் காக்கத் தோன்றினான் வந்து தோன்ற" (கம்பரா. வாலிவதை. 74). 2. **அறியப்படுதல்;** to come to mind. 3. **உண்டாதல்;** to appear, seem, spiring up, come into existence. "பெருஞ் செல்வந் தோன்றியக் கால்" (நாலடி., 2). 4. **பிறத்தல்;** to be born. "தோன்றிற் புகழொடு தோன்றுக" (குறள், 236). 5. **நிலைகொள்ளுதல்;** to exist. "புணரிய னிலையிடை யுணரத் தோன்றா" (தொல்.எழுத்து. 482). 6. **வருதல்;** to come, turn up. "நிறுதர் தோன்றியுள ரென்றால்" (கம்பரா. அகத்திய. 52). 7. **சாரியை முதலியன சொற்களிடையே வருதல்;** to be inserted, as cariyai. "வற்றென் சாரியை முற்றத் தொன்றும்" (தொல்.எழுத்து. 189) (நன்.).

ம. தோன்னுக; க., கோத. தோர்; தெ. தோசு; து. தோசுனி, சோ சுனி; பட. தோரு; துட. த்வீன், த்வீற்; பர். தோந்த்; கட. தோன்ட்; மா. துண்ட், தொண்ட்

*[துல் → துன்று → தோன்று. தோன்றுதல் = கண்ணொடு பொருந்துதல், தெரிதல், உருக்கொளல், உதித்தல், பிறத்தல் (மு.தா. 188)]*

**தோன்று[2]-தல்** *tōṉṟu-,* 5 செ.கு.வி. (v.i.) **விளங்குதல்;** to be clear, explicit. "மதுரகவி தோன்றக் காட்டுந் தொல் வழியே நல்வழி" (ரஹஸ்ய. 26).

**தோனாய்** *tōṉāy,* பெ. (n.) **ஒரு வகை நாய்;** a kind of dog.

*[தோல் + நாய்]*

**தோனிறம்** *tōṉiṟam,* பெ. (n.) **உடம்பின் தோல் நிறம்;** colour of skin or body (செ.அக.).

*[தோல் + நிறம்]*

# தௌ

**தௌ** *tau*, *'த்' என்ற மெய்யும் 'ஔ' என்ற உயிரும் கூடிய உயிர்மெய்க் கூட்டெழுத்து;* the compound of t and au.

**தௌவல்[1]** *tauval*, பெ. (n.) கேடு *(அகநி.)*; ruin, destruction *(செஅக.)*.

*[தவ்வு → தௌவல்]*

**தௌவல்[2]** *tauval*, பெ. (n.) *1.* இளம் பருவம்; young age. *2.* கெடுதல்; destroy.

*[தாவு → தவ்வு → தௌவல்]*

**தௌவல்[3]** *tauval*, பெ. (n.) குந்தி நடத்தல்; stumble while walking.

*[தாவு → தௌவல்]*



